ஸ்ரீ அருணகிரிநாத சுவாமிகள் அருளிச்செய்த

# கந்தரலங்காரம்

(உரையுடன்)



உரையாசிரியர் :
கிருபானந்தவாரி






திருப்புகழமிர்தம் காரியாலயம்
சிந்தாதிரிப்பேட்டை, சென்னை-2.

உ

முருகா

ஸ்ரீ அருணகிரிநாத சுவாமிகள் அருளிச்செய்த

# கந்தரலங்காரம்

(உரையுடன்)




உரையாசிரியர் :

**கிருபானந்தவாரி**



**திருப்புகழமிர்தம் காரியாலயம்**
89, சிங்கண்ண செட்டித்தெரு,
சிந்தாதிரிப்பேட்டை, : : சென்னை-2.




உ

முருகா

# முன்னுரை

கந்தரலங்காரம் என்பது கந்தப் பெருமானுடைய அலங்காரங்களைக் கூறுவது எனப் பொருள்படும். கந்தவேளுடைய பாதாதிகேச வடிவ நலன்களையும், அவர் ஊர்தி படை கொடி நாமவிசேடம் முதலியவைகளின் பெருமைகளையும் விளக்குவது ஆகும். இந்நூல் அருணகிரிநாத சுவாமிகள் திருவாய் மலர்ந்தருளிய பிரபந்தங்களில் ஒன்று; இது முருகவேளுக்கு மிகவும் உகந்த பாமாலை; இந்நூலில் பற்பல அரிய பெரிய கருத்துக்கள் பொதிந்து கிடக்கின்றன. அருணகிரிநாதர் அறஞ் செய்தலின் அவசியத்தையும், யமபயத்தையும், யாக்கை நிலையாமையையும், செல்வ நிலையாமையையும், சிவயோகத்தையும், இன்னோரன்ன பிற விஷயங்களையும் உடல் கம்பிக்க, உள்ளம் உருக, அன்பு பெருக எடுத்து உபதேசிக்கின்றார். இத் திருவருட்பாக்களை நாள்தோறும் பாராயணஞ் செய்வோர் துன்பங்கள் பலவும் நீங்கி இன்புற்று எந்தை கந்தவேள் தண்ணருளைப் பெற்று நலம் பெறுவர். அலங்காரத்துள் நூற்று ளொருகவிதான் கற்று அறிந்தவர், வேந்தர் தமக்கும் அஞ்சார்; இயமனுக்கும் அஞ்சார்; நரகிற் புகுதார்; நோய் வாய்ப்படார்; துன்புறார்; விலங்குகளாலும் விடப்பிராணிகளாலும் தீங்கடையார் என்பவை இந்நூலின் இறுதியிலுள்ள நூற்பயன் செய்யுளால் இனிது விளங்குகின்றன. இத்தகைய அருள் நூலை எல்லோரும் அன்புடன் கருத்தறிந்து நாள்தோறும் பாராயணஞ் செய்து இம்மை மறுமை நலன்களை எளிதிற் பெற்று இன்புறுவார்களாக.

கிருபானந்தவாரி

உ

முருகா

# கந்தரலங்காரம்

## காப்பு

கட்டளைக் கலித்துறை

அடலரு ணைத்திருக் கோபுரத் தேயந்த வாயிலுக்கு
வடவரு கிற்சென்று கண்டுகொண் டேன்வரு வார்தலையிற்
றடபடெ னப்படு குட்டுடன் சர்க்கரை மொக்கியகைக்
கடதட கும்பக் களிற்றுக் கிளைய களிற்றினையே.

### பதவுரை

அடல்=(தன்னை நினைந்தார்க்கு முத்தி நல்கும்) வலிமை பொருந்திய, அருணை=திருவண்ணமலை என்னுந் திருத்தலத்திலுள்ள, திருக்கோபுரத்தே=அழகிய கோபுரத்தினில், அந்த வாயிலுக்கு=வனப்பு மிக்க வாசலுக்கு, வட:அருகில் சென்று= வடதிசையின் பக்கத்திற் போய், வருவார் தலையில்=அக்கோபுர வாயில் வழியாய் வழிபாடு செய்ய வருகின்றவர்கள் சென்னிகளில், தடபட என படு குட்டுடன்=தடபட என்று ஒலியுடனிடுகின்ற குட்டுகளுடனே, சர்க்கரை மொக்கிய=சர்க்கரை முதலிய சிற்றுணவுகளை உண்ணுகின்ற, கை=துதிக்கையினையும், கடம்= மதத்தையும், தட கும்பம்=விசாலம் பொருந்திய கும்பத்தலங்களையும் கொண்டிருக்கின்ற, களிற்றுக்கு=யானைமுகக் கடவுளாகிய விநாயக மூர்த்திக்கு, இளைய களிற்றினை=இளைய ஞான வேழமாகிய முருகப் பெருமானை, கண்டு கொண்டேன்=சேவித்துக் கொண்டேன்.

### விரிவுரை

அடல் :—

உலகமழியும் காலத்தும் அழியாத ஆற்றலுடையது; இறந்தால் முத்தி, பிறந்தால் முத்தி, தெரிசித்தால் முத்தி,

என்னும் தலங்களைப்போலன்றி, நினைத்த மாத்திரத்திலேயே நினைந்தாரது பாவ மலங்களைத் தேய்த்து முத்தியை வழங்கும் பேராற்றலுடையது; ஆதல்பற்றித் திருவருணையை அடல் என்னும் அடை கொடுத்துக் கூறுவாராயினர்.

அருணை:—

அருணம்—சிவப்பு; திருமாலும் திசைமுகனும் "யான் பரம்", "யான் பரம்" என்று மலைந்தவழி, அன்னார் நடுவில், ஆதியந்தமறியப்படமாட்டாத அழற்பெரும் பிழம் புருவாய் நின்றதனால் சிவந்தமலை எனப்பட்டது.

அந்த:—

அந்த என்பதைச் சுட்டுப் பொருளாகவும் கொள்ளலாம்.

சர்க்கரை:—

இனம்பற்றி சர்க்கரை முதலிய சிற்றுணவுகள் எனக் கொள்க. ஆன்மாக்களினது ஜீவபோதம் எனப்படும்.

மொக்குதல்:—

வாய் நிரம்ப உண்ணுதல்.

கட:—

கடம்—மதம்; விநாயகர் இச்சை, கிரியை, ஞான மென்னும் மும்மதங்களையுடையவர் என்பது.

களிறு:—ஆண் யானை.

இளைய களிறு:—

யானைமுகப் பெருமானுக்குத் தம்பியாகவும், யானை வளர்த்த தெய்வயானையின் கணவனாகவும், யானையுரித் தாரது திருப்புதல்வராகவும் இருத்தல்பற்றி முருக பிரானை யானையாக உருவகம் செய்தனர். ஞானவேழம்.

ஏற்புடைக் கடவுளாம் கந்தக் கடவுளை வணங்கும்போது விக்கின விநாயகரை நினைவுக்குக் கொண்டுவந்து வணங்கு கின்றார்.

## கருத்துரை

திருவருணைக் கோபுரத்தின் வடபுறத்திற் சென்று விநாயகமூர்த்தியின் இளையநாயகராகிய முருகப்பெருமானைக் கண்டுகொண்டேன்.

(திருவண்ணுமலையில் வல்லாளன் கோபுரத்தின் தென்புறத்தில் விநாயகரும், வடபுறத்தில் முருகரும் எழுந்தருளியுள்ளனர்.)

## நூல்

### 1

**பேற்றைத் தவஞ்சற்று மில்லாத வென்னை ப்ரபஞ்சமென்னுஞ்**
**சேற்றைக் கழிய வழிவிட்ட வாசெஞ் சடாடவிமேல்**
**ஆற்றைப் பணியை யிதழியைத் தும்பையை யம்புலியின்**
**கீற்றைப் புனைந்த பெருமான் குமாரன்க்ரு பாகரனே.**

## பதவுரை

பேற்றை=முத்திப்பயனைப் பெறுவதற்கு, தவம் சற்றும்= நல்லதவம் சிறிதும், இல்லாத=செய்யாத, என்னை=அடியேனை; செம்=சிவந்த, சடா அடவி மேல்=சடையாகிய காட்டின் மீது, ஆற்றை=கங்கா நதியையும், பணியை=பாம்பையும், இதழியை= கொன்றை மலரையும், தும்பையை—தும்பை மலரையும், அம்புலியின் கீற்றை=சந்திரனது பிளவையும் (பிறைமதி), புனைந்த பெருமான்=சூடிக்கொண்டுள்ள பெருமையுடையவராகிய சிவ பெருமானின், குமாரன்=புதல்வரே!, க்ருபாகரனே=கருணைக்கு உறைவிடமானவரே!, ப்ரபஞ்சம் என்னும் = உலகமாயை என்கின்ற, சேற்றை=சேற்றினை, கழிய வழிவிட்டவா=அகன்று உய்யுமாறு மெய்வழியைக் காட்டிய தேவரீரது திருவருளின் எளிமை இருந்தவாறு என்னேயோ?

## விரிவுரை

**பேற்றை:—**

ஆன்மாக்களால் தவமிருந்து பெறப்படுவது பேறு; அது இனிப் பிறவாப் பெற்றியாம் முத்தி நலமேயாம். புலன்களை

யடக்கித் துன்பங்களைப் பொறுத்துச் செய்யும் தவத்தினர்க்கே அம் முத்தி கிட்டும்.

தவம்:—

தவம் என்பது ஆன்மாக்கள் அவசியம் செய்தற்பாலதாம். தவம் செய்வோர்க்குப் பெறுதற்கரிய முத்தி நலம் தானே வரும். தவத்திற்குச் சிறந்த அங்கங்கள் இரண்டு; அவை—

(1) பசி முதலியவற்ருல் வரும் துன்பங்களைப் பொறுத்தல்.

(2) பிற உயிர்கட்குத் துன்பம் செய்யாமை.

''உற்றநோய் நோன்ற லுயிர்க்குறுகண் செய்யாமை
அற்றே தவத்திற் குரு'' —பொதுமறை.

ப்ரபஞ்சம்:—உலகம்; உலகமாயை எனப் பொருள் கொள்க.

சேறு:—

வழுக்கி விழச் செய்து அசுத்தப்படுத்துவது சேறு. அதுபோல், உலகமாயை நரகில் விழச்செய்து அசுத்தப் படுத்தும் தன்மையுடையது.

''மயலின் சேற்றி லுழல்வேனே''
''கலவியளறிடை துவளுறும் வெளிறனே'' —திருப்புகழ்.

குமாரன்:—

(1) ஸதா பாலத்வாத் குமார:—எப்பொழுதும் இளமைப் பருவத்தை யுடையவர்.

(2) குத்ஸிதான் மாரயதீதிவா குமார:— குத்ஸிதானைக் கொல்லுகின்றவர்.

(3) கௌ – ப்ருதிவ்யாம், மாரயதி – மன்மதவத் ஆசர தீதிவா குமார:— பூமியில் மன்மதனைப்போல் அழகாக இருக்கின்றவர்.

(4) கௌ-ப்ருதிவ்யாம், மாம்-லக்ஷ்மீம், ராதி–ததாதீதி வா குமார:—பூமியில் சம்பத்தைத் தருகின்றவர்.

(5) ஸதா ப்ரஹ்மசாரித்வாத்வா குமார:
—எப்பொழுதும் பிரமசாரியாக இருக்கின்றவர்.

க்ருபாகரன்:—

கிருபைக்கு உறைவிடமானவர் முருகப் பெருமானேயாம்.

“கின்னங் களேயுங் க்ருபைசூழ் சுடரே”

தவப்பேறு சிறிதும் இல்லாத அடியேனை தவப்பேறுடையார்க்கே கிடைக்கும் ஞான மெய்வழியைக் காட்டிய கிருபை வேறு யாவர்க்குளது? என்று இறும்பூதுறுகின்றனர்.

### கருத்துரை

சிவகுமாரரே! கிருபாகரரே! சிறிதும் தவஞ் செய்யாத அடியேனை உலக பசுபாச தொந்தத்தினின்று நீக்கி நல்வழி காட்டிய தேவரீரது திருவருளை என்னென்று வியப்பேன்?

### 2

**அழித்துப் பிறக்கவொட் டாஅயில் வேலன் கவியையன்பால்**
**எழுத்துப் பிழையறக் கற்கின்றி லீரெரி மூண்டதென்ன**
**விழித்துப் புகையெழப் பொங்குவெங்கூற்றன்விடுங்கயிற்ருற்**
**கழுத்திற் சுருக்கிட் டிழுக்குமன் ருேகவி கற்கின்றதே.**

### பதவுரை

அழித்து=தீவினைகளை அழித்து, பிறக்கவொட்டா=இன்னெரு தாய் வயிற்றிற் சென்று பிறக்கவொட்டாமல் தகைந்து பேரின்ப வீட்டை வழங்க வல்ல, அயில் வேலன்=கூர்மை பொருந்திய வேற்படையைத் தாங்கிய முருகப் பெருமானுடைய, கவியை=தோத்திரப்பாடல்களாகிய திருப்புகழை, அன்பால்=இடையருத மெய்யன்புடன், எழுத்து பிழை அற=எழுத்துக் குற்றங்கள் சிறிதுமின்றி, கற்கின்றிலீர்=கற்றுக் கொள்ளாமல் இருக்கின்றீர்களே? எரி மூண்டது என்ன=நெருப்பு மூண்டு எரிவதுபோல், விழித்து=கண்களை உருட்டிப் பார்த்து, புகை எழ=புகை எழுமாறு, பொங்கு வெம் கூற்றன்=சீறுகின்ற கொடிய இயமன், விடும் கயிற்ருல்=வீசுகின்ற பாசக் கயிற்றினுல், கழுத்தில் சுருக்கிட்டு=கழுத்திலே சுருக்குப்போட்டு, இழுக்கும்=உயிரைப் பற்றி இழுக்

கின்ற, அன்றே=அந்நாளிலோ, கவி கற்கின்றது=தெய்வத் திருப்புகழைக் கற்கப் புகுவது. (அந்நாளில் பொறிபுலன்கள் நெறி கலங்கிவிடுமாதலால் முடியாது).

## விரிவுரை

அழித்து:—

பிறவிக்கு வித்தாயிருக்கின்ற வினைகளை அழிக்குந் திற முடையது வேற்படை ஒன்றேயாம்.

"வினையோடவிடுங் கதிர்வேல் மறவேன்" —கந்தரநுபூதி.
"தீவினை யெலா மடிய நீடுதனிவேல்விடுமடங்கல் வேலா"
--திருப்புகழ்.

அழித்து என்பதை முருகப்பிரானுக்கே அடையாக்கி, இந்தப் பிறப்பில் பிரமனுடைய எழுத்தை அழித்து பிராரத்வ வலியைக் கெடுத்தும், மீண்டும் பிறவிக்குக் காரணமாக இருக்கின்ற மூல வினையை அழிக்குந் திறமுடையவர் என்று கூறினும் பொருந்தும். அயன் கையெழுத்தைக் காலாலழிக்குந் திறனுடைத் திருவடிக் கமலமுடையோன் அப் பெருமான் ஒருவரே யாதலால்,

"அவன் கால்பட் டழிந்ததிங் கென்தலை மேலயன்
கையெழுத்தே."

என்ற அருமைத் திருவாக்கும் எழுந்தது.

கவி:— திருப்புகழ்.

எழுத்துப் பிழையறக் கற்கின்றிலிர்:—

திருப்புகழை அன்புடனும் பிழையின்றியும் கற்றுக் கொண்டு பாடவேண்டும்.

எரி மூண்டதென்ன...கூற்றன்:—

பிறவியெடுத்து, அப்பிறவிப் பயனை நாடாது அவமே திரிந்துழன்று, பிறவிப் பிணியை நீக்கும் பேரமிர்தமாந் திருப் புகழை ஓதாமையால் இயமன் மிகவும் சினங் கொண்டு கண்களில் கனலும் புகையும் எழப் பொங்கி வருகின்றான்; வருவான்.

அன்றே கவி கற்கின்றதே:—

பாசக்கயிற்ருல் கழுத்தில் சுருக்கிட்டு உயிரைப்பற்றி இழுக்கும் அந் நாளில் உயிருக்கு உறுதி பயக்கும் உறு துணையும் இயம பயத்திற்கு மருந்துமாகிய திருப்புகழை எவ்வாறு கற்றுக்கொள்ள முடியும்? வெள்ளம் வந்த பின் அணைபோடுவதும், பசித்தபின் உழவு செய்யப் போவதும், விடாய் கொண்டபின் கிணறு வெட்டப் புகுவதும், அறிவுடைமையாகா. ஆதலால் கூற்றுவன் வருமுன்னரே திருப்புகழை அன்புடனும் பிழையின்றியும் கற்றுக்கொள்ளு மாறு, உலகம் உய்யு நெறியை உபதேசிக்க வந்த கருணைப் பெருந்தகையாம் அருணகிரிப் பெருமான் வற்புறுத்தி உலகினரை விளித்து அறைகூவியழைக்கின்ருர். பரம குரு மூர்த்தியின் கருணையின் திறத்தை என்னென்று வியப்பது?

கருத்துரை

உலகினரே! பிறவிப்பிணியை நீக்கும் வேற்படை யண்ணலாரது திருப்புகழைக் கற்றுக்கொள்ளாமல் இருக்கின்றீர்; இயமன் சினந்து வந்து உயிரைப் பற்றும் போது பொறி புலன்களெல்லாம் நெறிமயங்கி நிற்குமாத லால், அந்நாள் கற்க முடியாது. இயமபயம் நேரு முன்னரே திருப்புகழை அன்பாகப் பிழையின்றி ஓதி உய்யுங்கள்.

3

தேரணி யிட்டுப் புரமெரித் தான்மகன் செங்கையில்வேற்
கூரணி யிட்டணு வாகிக் கிரௌஞ்சங் குலைந்தரக்கர்
நேரணி யிட்டு வளைந்த கடக நெளிந்தது சூர்ப்
பேரணி கெட்டது தேவேந்த்ர லோகம் பிழைத்ததுவே.

பதவுரை

தேர்=பூமி, சக்ரவாளகிரி, சூரிய சந்திரர் முதலியவைகளால் செய்யப்பெற்ற தேரை, அணி இட்டு=அலங்கரித்துச் செலுத்தி, புரம் எரித்தான்=திரிபுரத்தைப் பார்வையினுலேயே எரித்தருளிய

சிவபிரானுடைய, மகன்=திருக்குமாரராகிய முருகக் கடவுள், செம் கையில் வேல்=சிவந்த திருக்கரத்திலுள்ள வெற்றி வேலாயுத மானது, கூர் அணி இட்டு=கூர்மையுடன் தைத்து, கிரௌஞ்சம் =கிரௌஞ்ச மலையானது, அணுவாகி குலைந்து=அணு அணுவாகத் துகள்பட்டு அழிந்து, நேர் அணி இட்டு வளைந்த=நேர்மையாக அணிவகுத்து வந்து வளைந்துகொண்ட, அரக்கர் கடகம் நெளிந்தது=அசுரர்களுடைய வட்டவடிவாக நின்ற சேனை தளர்ந்து ஓடியது, சூர்=சூரபன்மனுடைய, பேரணி கெட்டது= நடுச்சேனை அழிந்தது, தேவேந்திரலோகம் பிழைத்தது= தேவேந்திரனுடைய உலகமாகிய அமராவதி அசுர பயத்தினின்று நீங்கி உய்வு பெற்றது.

விரிவுரை

நேரணியிட்டுப் புரமெரித்தான்:—

கமலாக்ஷன், தாரகாக்ஷன், வித்யுன்மாலி என்னும் மூன்று அசுரர்கள் பிரமதேவரிடம் தவப்பெருக்கால் பல வரங் களைப் பெற்றுத் தருக்குற்று அமரர்களை அலக்கழித்தனர். அமரர்கள் அனைவரும் அலமரலுற்று ஆலமுண்ட நீலகண்ட நிமலனிடம் வந்து முறையிட்டு நின்றனர். தேவதேவன் "போருக்குப் புறப்படுவோம்" என்று அருளிச் செய்தனர். தேவர்கள் தேர் சிங்காரித்தனர்.

"வண்டி இரு சுடராக வையகந்தேராக மாவாக நாலுமறையும்
வானவர்க ளனைவரும் பரிவார மாகமலர் வாழ்பவன் பாகனாக
கொண்டுமலை சிலையாக அரவுநா ணாகமால் கோலாக
அழலாகவாய்
கோலிறகு நாலாகவெந்து முப்புரமெரி கொளுந்த வெய்தவர்
குமரனே"

—திருவிரிஞ்சை முருகன் பிள்ளைத்தமிழ்.

இவ்வாறு தேவர்கள் மந்தர கேசரி மலைகள் அச்சாக வும், சூரிய சந்திரர்கள் சக்கரங்களாகவும், இருதுக்கள் சந்திகளாகவும், பதினான்கு லோகங்கள் பதினான்கு தட்டுக

ளாகவும், உதயாஸ்த கிரிகள் கொடிஞ்சியாகவும், நதிகளும் நதங்களும் கொடிகளாகவும் உடுக்கள் விதானமாகவும், மோட்ச லோகம் மேல்விரிவாகவும், யாகங்கள் சட்டவிதான மாகவும், நாள் முதலியன எண்ணெயூற்றும் இடுக்கு மரமாக வும், எட்டுமலைகளும் தூண்களாகவும், எழு கடல்களும் சீலைகளாகவும், பிற பொருள்கள் பிற அங்கங்களுமாக பெருந்தேரை அலங்கரித்துத் தந்தனர்.

இத்தகைய தேர் மீதூர்ந்து சிவபெருமான் தேர், .வில், அம்பு முதலியவற்றை உபயோகிக்காமலே சிறிது புன் முறுவல் செய்து முப்புரத்தையும் எரித்து அருளினர்.

முப்புரமாவது - ஆணவம், மாயை, கன்மம் என்ற மும்மலங்களாம். தீப்பொறி–ஞானக்கினியாம்.

அப்பணி செஞ்சடை யாதி புராதனன்
முப்புரஞ் செற்றன னென்பர்கள் மூடர்கள்
முப்புர மாவது மும்மல காரியம்
அப்புர மெய்தமை யாரறி வாறே. —திருமந்திரம்.

வேல்:—

வெல்லுந் தன்மையுடையது. ஆன்மாக்களுடைய வெல்லற்கரிய வினைகளை வெல்வது என்பதாம். ‘‘வினை யோடவிடுங் கதிர் வேல்’’ என்ற அநுபூதி அமுத வாக்காலறிக.

பேரணி:—

கூழை-நடுச்சேனை, ‘‘கூழை என்பது பேரணியாகும்’’ பிங்கல நிகண்டு.

கிரௌஞ்சம்-மாயை; கடகம்–சேனை, கன்மம்; சூர்- ஆணவம். மும்மலமாகிய முப்புரமெரித்த முக்கட் பிரானது திருக்குமாரராகிய முருகப்பெருமானும் ஞானசக்தியால் மும்மலங்களை அழித்தனர் என்னும் நயம் மிகவும் பாராட்டற் பாலது.

### கருத்துரை

புரிராரியின் புதல்வராகிய கந்தப் பெருமானுடைய கை வேல் படுதலால், கிரௌஞ்ச மலையும் அரக்கர் சேனையும் சூரனும் அழிந்து, இந்திரலோகம் உய்வுபெற்று இன்புற்றது.

## 4

ஓரவொட்டா ரொன்றை யுன்னவொட்டார் மலரிட் டுனதாள்
சேரவொட்டா ரைவர் செய்வதென் யான்சென்று தேவருய்யச்
சோரநிட் டூரனைச் சூரனைக் காருடல் சோரிகக்கக்
கூரகட் டாரியிட் டோரிமைப் போதினிற் கொன்றவனே.

### பதவுரை

தேவர் உய்ய=அயனரியாதி அமரர்கள் அல்லல் நீங்கிப் பிழைக்க, சென்று=படை வீரருடன் புறப்பட்டுப் போய், சோர= திருட்டுத்தனமுடைய, நிட்டூரனை = கொடுமையைச் செய்பவனாகிய, சூரனை=சூரபன்மனை, கார் உடல்=கரிய உடம்பிலிருந்து, சோரி கக்க=இரத்தம் கக்குமாறு, கூர கட்டாரி இட்டு=கூர்மை பொருந்திய வேற்படையைச் செலுத்தி, ஓர் இமைப்போதினில்= ஒரு கண நேரத்திற்குள், கொன்றவனே=சங்கரித்தவரே! ஐவர்= மெய் வாய் கண் நாசி செவி என்ற புலன்களாகிய ஐவர், ஓரவொட்டார்=தேவரீரது திருவடிப்பெருமைகளை ஆராயவிடார்; ஒன்றை உன்ன ஒட்டார்=ஒரு பொருளாகிய ஓமெனும் எழுத்தை நினைக்க விடார்; மலர் இட்டு உனதாள் சேரவொட்டார்=நறு மலர்களால் அர்ச்சித்து தேவரீருடைய திருவடித் தாமரைகளை அடையவிடார்; யான் செய்வது என்=அடியேன் (இதற்கு) என்ன செய்வது?

### விரிவுரை

ஒன்று:—

ஒன்று என்பது ஒரு பரம்பொருளாகிய இறைவன் என்றும் பொருள்படும். மேலும் ஒன்று என்பது, ஓரவொட்டார் என்பதற்கும் உன்னவொட்டார் என்பதற்கும்

சேர்ந்து பொருள்படும். 'ஒன்றை ஓரவொட்டார்' 'ஒன்றை உன்ன ஒட்டார்' என வரும். ஓர்தலும் உன்னுதலும் மனத் தாற் செய்யுந் தொண்டு. உன்னுதல்-புலன்கள் ஒரு வழிப் பட்டுத் தியானித்தல்.

மலரிட்டு:—

இறைவனுடைய திருவடியில் மலரிட்டு வணங்குதல் காயத்தாற் செய்யுந் தொண்டு.

"உண்பதன்முன் மலர்பறித்திட் டுண்ணுராகில்
... ... ... ... ...
அளியற்ருர் பிறந்தவா றேதோவென்னில்
பெருநோய்கள் மிகநலியப் பெயர்த்துஞ் செத்துப்
பிறப்பதற்கே தொழிலாகி யிறக்கின்ருரே."

—அப்பர்.

உனதாள் சேரவொட்டார்:—

ஆன்மாவாகிய கொடிக்கு இறைவனுடைய திருவடித் தாமரையே கொழுகொம்பாகும். இறைவனடி சேர்ந் தார்க்கே துன்ப நீக்கமும் இன்ப ஆக்கமும் உண்டாகும். இறைவனடி சேர்ந்தாரே பிறவிப் பெருங்கடல் நீந்துவர். இறைவனடி சேர்ந்தார்க்கு யாண்டும் இடரெய்தாது.

"பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவனடி சேராதார்"

"வேண்டுதல் வேண்டாமை யிலானடி சேர்ந்தார்க்
கியாண்டு மிடும்பை யில"

—பொதுமறை.

ஐவர் செய்வதென் யான்:—

ஐம்புலன்களாகிய அறிவிலிகள் தேவரீருடைய புகழை ஆராயவும், தேவரீரது திருவடியை நினைக்கவும், மலரிட்டு வணங்கி உமது திருவடியைச் சந்திக்கவுமொட்டாமல்,

தடைசெய்து அடியேனைக் கெடுக்கின்றனர். இந்தக் கொடுமைக்கு அடியேன் என்செய்வது? என்று ஏங்குகின்றனர்.

"இவ்வரும் பிறவிப் பௌவநீர் நீந்தும்
ஏழையேற் கென்னுடன் பிறந்த ஐவரும் பகையே"
—திருவிசைப்பா.

தீவினை புரிந்து கொடுமையுடன் தீங்கிழைக்கும் வேடர் போல் ஐம்புலன்களும் பலவழிப்படுத்தி இறைவனுடைய திருவடியைச் சாரவொட்டாது அல்லற்படுத்துகின்றன. புலன்களை வேடர் என்பதற்குச் சான்று வருமாறு.

ஐம்புல வேடரி னயர்ந்தனை வளர்ந்தெனத்
தம்முதல் குருவுமாய் தவத்தினி லுணர்த்தவிட்
டன்னிய மின்மையி னரன்கழல் செலுமே.
—சிவஞானபோதம் 8-ஆம் சூத்திரம்

அரிச்சி ராப்பக லைவரா லாட்டுண்டு
சுரிச்சி ராது நெஞ்சே யொன்று சொல்லக்கேள்
திரிச்சி ராப்பள்ளி என்னலுந் தீவினை
நரிச்சி ராது நடக்கு நடக்குமே. —அப்பர் தேவாரம்.

"கொடிய ஐவர் பராக்கறல் வேண்டும்" —அலங்காரம்.

சூரனைக் காருடல் சோரிகக்க:—

நெடுங்காலந் தவமிருந்து வச்சிரப் பேருடம்புபெற்ற சூரபன்மனை வேலாயுதம் பிளந்தபோது, அவனுடைய வச்சிரயாக்கையினின்று குபீர் குபீர் என்று உதிர வெள்ளம் பெருகியோடியது; சூரனது உடலை வேற்படையே யன்றிப் பிளக்கும் ஆற்றல் படைத்த படைக்கலமும் வேறுளதோ? இல்லை.

"போர்மி குத்த சூரன் விடோம் விடோமென
நேரெ திர்க்க வேலை படீர் படீரென
போய றுத்த போது குபீர் குபீரென வெகுசோரி
பூமி யுக்க வீசு குகா குகா" —திருப்புகழ்

### கருத்துரை

தேவருய்யுமாறு கணப்போதில் சூரபன்மனை அழித்த வேலாயுதரே! புலன்களாகிய ஐவர் தேவரீருடைய புகழை ஆராயவும் நினைக்கவும் மலர்கொடு உமது திருவடியைச்சேரவும் விடாமல் என்னை அவமாக்குகின்றனர். இதற்கு அடியேன் என் செய்வது? (கூறியருள்வீர்.)

**5**

திருந்தப் புவனங்க ளீன்றபொற் பாவை திருமுலைப்பால்
அருந்திச் சரவணப் பூந்தொட்டி லேறி யறுவர்கொங்கை
விரும்பிக் கடலழக் குன்றழச் சூரழ விம்மியழுங்
குருந்தைக் குறிஞ்சிக் கிழவனென் றோதுங் குவலயமே.

### பதவுரை

திருந்த = ஆன்மாக்கள் ஆணவமலத்தினின்று நீங்கித் திருந்தியுய்யுமாறு, புவனங்கள் ஈன்ற = உலகங்கள் யாவையும் பெற்றருளிய, பொன் பாவை = பொன்னாற் செய்த பதுமையைப் போன்ற உமாதேவியாரது, திருமுலைப்பால் = தெய்வீகமான தனத்திலிருந்து பெருகிய ஞானப்பாலை, அருந்தி = பருகி, சரவணம் = சரவண தடாகத்திலுள்ள, பூந்தொட்டில் ஏறி = தாமரை மலராகிய தொட்டிலின் மீது ஏறி, அறுவர் கொங்கை விரும்பி = கார்த்திகைப் பெண்களாகிய ஆறு தாய்மார்களுடைய திருமுலைப்பாலை உண்ண விழைவுகொண்டு, கடல் அழ = சமுத்திரம் அழவும், குன்று அழ = கிரௌஞ்சமலை அழவும், சூர் அழ = சூரபன்மன் அழவும், விம்மி அழும் = தானும் விம்மி விம்மி அழுத, குருந்தை = இளங்குழந்தையை, குறிஞ்சி கிழவன் என்று ஓதும் குவலயம் = உலகமானது குறிஞ்சி நிலத்திற்குத் தலைவன் என்று சொல்லும்.

### விரிவுரை

**திருந்தப் புவனங்களீன்ற பொற்பாவை:—**

"காருற்ற ஆணவக் கருவறையில் அறிவற்ற கண்ணிலாக் குழவியே போல்" அஞ்ஞானத்தில்—துன்பத்தில்—

இருளில் கிடந்த ஆன்மாக்களுக்கு ஆணவமலம் கருமத்தில் விருப்பத்தை உண்டாக்க, அவ்வான்மாக்களின் துன்பத்தைக் கண்டு தமது திருவருட் பேரிரக்கத்தால் அவைகளை உய்விக்கும் பொருட்டு சிவ சத்தியாகிய பரமேசுவரியார் தநு கரண புவன போகங்களை வழங்கி, கன்மங்களைப் புசிக்கச் செய்து, இருவினையொப்பு மலபரிபாகம் வரும் காலத்தில் சிவத்துடன் கலக்கச்செய்து அத்துவிதப் பேரின்பப் பெருவாழ்வை நல்குவர், என்ற நற்கருத்தை நம்மனோர் நினைவுக்குக் கொண்டுவரும் பொருட்டு "திருந்தப் புவனங்கள்" என்று அருளிச் செய்தார்.

திருமுலைப்பால் அருந்தி:—

சரவணப்பொய்கையில் ஆறு திருமேனியுடன் எந்தை கந்தவேள் திருவிளையாடல் செய்துகொண்டிருந்தபோது, உமையம்மையார் கண்ணுதற் கடவுளுடன் சென்று, "அவ்வுருவம் ஆறினையும் தன்னிரண்டு கையால் எடுத்தணைத்துக் கந்தன் எனப் பேர் புனைந்து மெய்யாறும் ஒன்றாக மேவுவித்துச் செய்ய முகத்தில் அணைத்துச்சி மோந்து முலைப்பால் அகத்துண் மகிழ் பூத்து" அளிக்க, அந்த சிவஞானத் தீம்பாலை எம்பெருமான் அருந்தியருளினர்.

ஆதி நாயகன் கருணையா யமலமாய்ப் பரம
போத நீரதா யிருந்ததன் கொங்கையிற் பொழிபா
லேதி லாததோர் குருமணி வள்ளமீ தேற்றுக்
காதன் மாமகற் கன்பினு லருத்தினுள் கௌரி.

—கந்தபுராணம்.

கடலழக் குன்றழச் சூரழ:—

குகப்பெருமான் திருவவதாரம் செய்தவுடனே அவருடைய வேல்பட்டு இனி அழியப்போகும் கடலும், கிரௌஞ்ச மலையும், சூரபன்மனும் அழுதார்கள்.

கடல்—கன்மம், குன்று—மாயை, சூர்—ஆணவம். ஞான பண்டிதன் ஞானப்பாலுண்டு அழுதலும், மும்மலங்களும்

தமது வலியிழந்து வருந்தியழுதன என்ற குறிப்பை உன்னுவோர்க்கு உள்ளம் உருகும்.

விம்மியழும் குருந்து:—

அழுதால் என்னை அடையலாம் என்று உயிர்களுக்கு உணர்த்தும்பொருட்டு எம்பிரான் அழுதனர் போலும்.

எள்ளத் தனைவந் துறுபசிக்கும்
இரங்கிப் பரந்து சிறுபண்டி
எக்கிக் குழைந்து மணித் துவர்வாய்
இதழைக் குவித்து விரித்தழுது
துள்ளித் துடித்துப் புடை பெயர்ந்து
தொட்டில் உதைந்து பெருவிரலைச்
சுவைத்துக் கடைவாய் நீர் ஒழுகத்
தோளில் மகரக் குழைதவழ
மெள்ளத் தவழ்ந்து குறுமூரல்
விளைத்து மடியின் மீதிருந்து
விம்மிப் பொருமி முகம் பார்த்து
வேண்டும் உமையாள் களபமுலை
வள்ளத் தமுதுண் டகமகிழ்ந்த
மழலைச் சிறுவா வருகவே
வளருங் களபக் குரும்பைமுலை
வள்ளி கணவா வருகவே.

—திருச்செந்தூர் முருகன் பிள்ளைத் தமிழ்.

குருந்து:—குருத்து என்பது எதுகை நோக்கி மென்மை விகாரம் பெற்றது.

குறிஞ்சிக் கிழவன்:— கிழவன்—உரியவன்.

குமாரக் கடவுள் குறிஞ்சி நிலக் கடவுள். "சேயோன்மேய மைவரையுலகம்" என்கின்றார் தொல்காப்பியனார். "மலைக்கு நாயக" "கிரிராஜ" என்கின்றார் அருணகிரிநாதர். கிழவன் என்பதை முதியவன் என்ற பொருளுக்கும் உரியதாக்கி,

குழந்தையைக் கிழவன் என்று உலகம் கூறுகின்றது என்ற சிலேடை மிகவும் பாராட்டற்பாலது.

குவலயம்:—

"உலகம் என்பது உயர்ந்தோர் மாட்டே" என்றபடி, நக்கீர தேவர் "பழமுதிர் சோலை மலைகிழவோனே" என்று அருளிச் செய்ததையும் ஈண்டு நினைத்து நெஞ்சம் மகிழக் குறிப்பிடுகின்றார்.

## கருத்துரை

உமையம்மையின் ஞானப்பாலுண்டு கார்த்திகை மாதருடைய பாலமுதையும் உண்ணுதற் பொருட்டு அழுத குழந்தையைக் "குறிஞ்சிக் கிழவன்" என்று உலகம் கூறும்.

## 6

பெரும்பைம் புனத்தினுட் சிற்றேனல் காக்கின்ற பேதைகொங்கை
விரும்பும் குமரனை மெய்யன்பினுன் மெல்ல மெல்லவுள்ள
அரும்புந் தனிப்பர மானந்தந் தித்தித் தறிந்தவன்றே
கரும்புந் துவர்த்துச்செந்தேனும் புளித்தறக் கைத்ததுவே.

## பதவுரை

பெரும்பைம் புனத்தினுள்=பெரிய பசுமை தங்கிய தினைப் புனத்தின் கண்; சிறு ஏனல் காக்கின்ற பேதை=சிறிய தினைக் கொல்லையைக் காவல் புரிகின்ற வள்ளியம்மையாரின், கொங்கை விரும்பும் குமரனை=தனபாரங்களை விரும்புகின்ற குமரக் கடவுளை, மெய் அன்பினால்=உண்மையான அன்புடன், மெல்ல மெல்ல உள்ள=பையப்பைய நினைக்க (அந்த நினைப்பினால்), தனி பரம ஆநந்தம் அரும்பும்=ஒப்பற்ற பெரிய இன்பமானது தோன்றும், தித்தித்து அறிந்த அன்றே=அப் பேரின்பத்தை அடியேன் துய்த்து அதன் இனிமையை உணர்ந்தபொழுதே, கரும்பும் துவர்த்து=(இனி

மையில் மிக்க) கரும்பும் துவராகி, செம் தேனும் புளித்து= செவ்விய தேனும் புளித்து, அறக் கைத்தது=மிகவும் கசந்து விட்டது. (ஏ–அசை).

## விரிவுரை

பெரும் பைம்புனம்:— புனமென்பது உலகம்.

சிற்றேனல்:— ஏனல் –தினைக்கொல்லை; ஞானப்பயிர் விளையும் இடம்.

பேதை:—வள்ளி; வள்ளி என்பது ஜீவான்மா.

கொங்கை:— கொங்கை என்பது ஜீவான்மாவினது பக்குவம்.

ஆன்மாக்களுடைய பக்குவகாலத்தை விரும்பி வந்து இறைவன் அருள்புரிவான்.

கரும்பு, தேன்:— கரும்பு தேன் என்பன உலக இன்பங்கள்.

மெய்ஞ்ஞானக் குருநாதாகிய குமரக்கடவுளை மெய்யன்பினால் மெல்ல மெல்ல நினைக்க அதனால் இணையற்ற பரமானந்தம் உண்டாகும். அப் பேரானந்தத்தைப் பருகி அதன் இனிமையை அறிந்தபின் உலக இன்பமாகிய கரும்பும் தேனும் துவர்த்தும் புளித்தும் கசந்துவிடும். இறைவனை நினைந்து அவனது திருநாமங்களைக் கூறும்போது நாவினில் இன்பச் சிவ அமுது ஊறும்; பசியாறும்.

“குகனெ குருபர னேஎன நெஞ்சிற்
புகழ அருள்கொடு நாவினி லின்பக்
குமுளி சிவஅமு தூறுக உந்திப் பசியாறி” —திருப்புகழ்.

இதே கருத்தையமைத்து கற்புணைக் கொண்டு கரையேறிய திருநாவுக்கரசர்,

“அருப்புப் போன்முலை யாரல்லல் வாழ்க்கைமேல்
விருப்புச் சேர்நிலை விட்டுநல் லிட்டமாய்த்
திருப்புத் தூரனைச் சிந்தை செயச்செயக்
கருப்புச் சாற்றிலு மண்ணிக்குங் காண்மினே.”

என்று அருளிச் செய்தார்.

தேனும் கரும்பும் உண்டமாத்திரத்தில் நாவிற்கு மட்டும் சிறிது இனிமையை நல்கும். நினைக்குந்தோறும் காணுந் தோறும் பேசுந்தோறும் பரிசிக்குந்தோறும் எப்பொழுதும் அனைத்தென்பு உள்நெக ஆனந்தத்தேன் சொரியுங் குகக் கடவுளை எண்ணுந்தோறும் உண்டாகும் பேரானந்தம் மாறு இன்பத்தை நல்கும்.

"விரும்பியே யுள்ளம் வெளியுறக் கண்டபின்
கரும்புங் கைத்தது தேனும் புளித்ததே." —திருமந்திரம்.

### கருத்துரை

வள்ளிமணவாளராம் வடிவேலிறையை மெல்ல மெல்ல நினைக்க அதனால் உண்டாகும் பேரானந்தத்தை யுண்டு அதன் இன்பத்தை அநுபவித்தபின் உலக இன்பம் கசப்புற்றுவிட்டது.

## 7

சளத்திற் பிணிபட் டசட்டுக் ரியைக்குட் டவிக்குமென்ற
னுளத்திற் ப்ரமத்தைத் தவிர்ப்பா யவுண ருரத்துதிரக்
குளத்திற் குதித்துக் குளித்துக் களித்துக் குடித்துவெற்றிக்
களத்திற் செருக்கிக் கழுதாட வேல்தொட்ட காவலனே.

### பதவுரை

கழுது = பேய்கள், அவுணர் உரத்து உதிரக்குளத்தில் குதித்து=இராக்கதர்களுடைய மார்பினின்றும் பெருகிய இரத்தக் குளத்தில் குதித்து, குளித்து=முழுகி, களித்து குடித்து= சந்தோஷித்து அந்த உதிரத்தைக் குடித்து, வெற்றி களத்தில் செருக்கி ஆட=வெற்றியையடைந்த போர்க்களத்தில் அகங் கரித்து (அப்பேய்கள்) நர்த்தனம் செய்யும்படி, வேல் தொட்ட காவலனே=வேலாயுதத்தை ஏவிய இறைவரே! சளத்தில் பிணி பட்டு=துன்பமாகிய கயிற்றினால் கட்டுப்பட்டு, அசட்டு க்ரியைக் குள் தவிக்கும்=மூடத்தனமான தொழில்களைச் செய்து அத்தொழி லினால் மீண்டும் ஆகாமியத்தைத் தேடிக்கொண்டு வினை வயத்த னாகிப் பரதவிக்கின்ற, என்றன்=அடியேனுடைய, உள்ளத்தில்

ப்ரமத்தை தவிர்ப்பாய்=மனத்தில் உள்ள மயக்கத்தை நீக்கி அருள்வீர்.

## விரிவுரை

**சளத்திற் பிணிபட்டு:—**

'ஆதிதைவிகம், ஆதிபௌதிகம், ஆதியாத்மிகம் என்ற மூவகைத் துன்பங்களாகிய கயிற்றினுற் கட்டுப்பட்டு, அத் துன்பத்தினின்றுந் தப்பி உய்யுநெறியறியாமல் மயங்கிக் கிடக்கின்றேன்' என்ருர்.

**அசட்டுக்ரியை:—**

பயனில்லாத உலக சம்பந்தமான மூடத்தொழில்கள்;

களியாடல், பொருளீட்டுதல், ஆசாபாசத்திற் சிக்கி ஆசையை நிரப்ப உழலுதல் முதலியன.

**அவுணர் உரத்துதிர......கழுதாட:—**

"பசித்தலகை முசித்தழுது முறைப்படுத
லொழித்தவுண ருரத்துதிர நிணத்தசைகள்
புசிக்க அருள் நேரும்." —வேல்வகுப்பு.

"தித்தித் தெய வொத்தப் பரிபுர
நிர்த்தப் பதம் வைத்துப் பயிரவி
திக்கொக்க நடிக்கக் கழுகொடு கழுதாட"—திருப்புகழ்.

**வேல்தொட்ட காவலனே:—**

முருகவேள் சூரபன்மனுகிய ஆணவமலத்தின் பரிவாரங்களாகிய அசுரசேனைகளென்னும் காமக்ரோதாதிகள் அறவே அழிந்தொழிய சிவஞானம் என்னும் வேற்படையை விட்டருளினுர். "சமதமாதிகளாகிய தேவர்களது பாசவினை விலங்கை நீக்கியதுபோல் வினைக்கயிற்றையும் அறுத்து அருள்புரிவீர்" என்று குறிப்பிடுகின்ருர். "அசுரரது மாயையை நீக்கியதுபோல் அடியேனது உளமயக்கத்தையும் நீக்கியருள்வீர்" என்பதும் இதில் தொனிக்கின்றவாறு காண்க.

காவலன்—காப்பவன். எல்லா உலகங்களேயும் உயிர் களேயுங் காப்பாற்றுபவர். காப்பதில் வல்லவன் காவலன்.

"தொழுதுவழிபடு மடியர் காவற்காரப் பெருமாளே"

—திருப்புகழ்.

## கருத்துரை

அலகைகள் நடமிட அசுரர்மீது வேல் தொட்ட வீரரே! துன்பத்தளேப்பட்டு அவத்தொழில் பூண்டு தவிக்கும் அடியேனுடைய மனமயலே நீக்கி யருள்வீர்.

## 8

ஒளியில் விளேந்த வுயர்ஞான பூதரத் துச்சியின்மேல்
அளியில் விளேந்ததொ ராநந்தத் தேனே யநாதியிலே
வெளியில் விளேந்த வெறும்பாழைப் பெற்ற வெறுந்தனியைத்
தெளிய விளம்பிய வாமுக மாறுடைத் தேசிகனே!

## பதவுரை

ஒளியில் விளேந்த=அருட்பெருஞ் ஜோதியில் உண்டாகிய, உயர்ஞான பூதரத்து உச்சியின் மேல்=உயர்ந்த ஞானமாகிய மலேயின் முடியிலே, அளியில் விளேந்தது=தனிப்பெருங் கருணே யால் உண்டாகிய, ஓர் ஆனந்தத் தேனே=ஒப்பற்ற சிவாநந்தத் தேனே, அநாதியிலே=மிகவும் பழையகாலத்திலேயே, வெளியில் விளேந்த=கட்டு நீங்கிய வெட்டவெளியில் உண்டாகிய, வெறும் பாழை=ஒன்றுமில்லாத ஒன்றை, பெற்ற வெறும் தனியை= தன்னிடத்திற்பெற்றுள்ள தன்னந் தனிமையான நிலேயை, தெளிய =அடியேன் தெளிவடைந்து உய்யுமாறு, முகம் ஆறு உடை தேசிகன்=ஆறு திருமுகங்களேயுடைய குமரகுருபரன், விளம்பி யவா=உபதேசித்தருளியது என்ன வியப்புடைத்து!

## விரிவுரை

ஒளியில்:—

என்றும் ஒரு படித்தாகத் தானேயொளிரும் தனிச்சுடர்; இச்சுடர் அக இருளே நீக்கும் இயல்புடைத்து; அருள்

வெளியில் விளங்குவது; பசுஞான பாசஞானம் உடையோரால் காண ஒண்ணுதது. கூர்த்த மெய்ஞ்ஞான முடையோர் தம் அறிவுக் கண்ணுல் நுணுகியறியத்தக்கது. ஓராதாருள்ளத்தில் ஒளிந்திருப்பது.

''காக்குமெங் காவலனே காண்பரிய பேரொளியே''
''ஓராதா ருள்ளத்துள் ஒளிக்கு மொளியானே''

ஞானபூதரம்:—

மேற் கூறிய சிவஜோதியில் விளைவது சிவஞானம். பூதரம்—மலை; ஞானத்தின் திரட்சி மலையாக விளங்குகின்றது.

ஆநந்தத் தேன்:—

தேன் மலைக்கொம்புகளில் விளைகின்றது. பருகினூர்க்கு மட்டும் இன்பத்தை நல்குவது; தெவிட்டும் இயல்புடையது.

இந்த சிவாநந்தத்தேன், ஞானமலையின் உச்சியில் தனிப்பெருங் கருணைக் கொம்பில் பெருகுவது; இது நினைக்குந்தொறும், பேசுந்தொறும், காணுந்தொறும், பரிசிக்குந் தொறும், பருகுந்தொறும், இன்பத்தை வழங்குவது. பவப் பிணியைக் கெடுக்கும் இயல்புடையது. தெவிட்டாத முத்தி இன்பத்தை நல்குவது; கெடுதலில்லாதது.

அநாதி:—

ஆதியில்லாதது. இது உரையாலும் எழுத்தாலும் பேசவும் எழுதவும் ஒண்ணுதது; மனவாக்கற்ற இடத்தில் தன்னந் தனியாய் நின்று எல்லாம் அற்ற தனி நிலையில் சுகித்தின்புறுவது.

வெளியில் விளைந்த வெறும்பாழ்:—

ஒன்றுமில்லாத வெட்டவெளியில் விளைந்த வெறும் பாழ்; பொறிகளும் புலன்களும் கரணங்களும் ஜீவபோதமும் பாழாகிய இடம்.

''முப்பாழும் பாழாய் முடிவிலொரு சூனியமாய்
அப்பாழும் பாழா யறும்''

அந்த ஒன்றுமற்ற இடத்தை ஈனுகின்ற தன்னந்தனி நிலையில் விளையும் ஒப்பற்ற பேரின்பத்தின் இனிமையை என்னென்றெழுதுவது? அதனை எந்த எழுத்தால் எந்த மொழியால் கூறுவது? அருணகிரிநாதரையன்றி அதனை அநுபவித்து உரைக்கவல்லார் யாவர்?

"தன்னந்தனி நின்றது தானறிய
இன்னம் ஒருவர்க் கிசைவிப்பதுவோ" —அநுபூதி.

"உருவிலாத பாழில் வெட்ட வெளியிலாடு நாதநிர்த்த
உனது ஞான பாத பத்ம முறுவேனே" —திருப்புகழ்.

"இருளறு சிற் பிரகாச மயமாம் சுத்த
ஏகாந்தப் பெருவெளிக்குள் இருந்த வாழ்வே"—அருட்பா.

முகமாறுடைத் தேசிகன்:—

சிவபரம்பொருளுக்கும் சிந்மய வியோம நிலையை உபதேசித்தவராதலால், ஆறுமுகக் குருபரன் என்றார். அவரே குருபரன்; ஆதி குருப்புகழை மேவுகின்ற கொற்றவனும் அப் பெருமானைக் குருவாகக் கொண்டாலன்றி மெய்ப்பொருளை உணரமுடியாது.

"முருகன் தனிவேல் முனிநங் குருவென்
றருள்கொண் டறியா ரறியுந்தரமோ" —அநுபூதி.

அருணகிரிநாதர் அறுமுகக் குருபரன் தனக்கு உபதேசித்த ஒப்பற்ற ஒரு நிலையை அதியற்புதமென வியந்து விளம்புகின்றார்.

கருத்துரை

ஆறுமுகக் குருபரன் அடியேனுக்குத் தன்னந்தனி நிலையைத் தெளிய உபதேசித்தது என்ன வியப்பு!

9

**தேனென்று பாகென்றுவமிக்கொ ணுமொழித்தெய்வவள்ளி
கோனன் றெனக்குப தேசித்த தொன்றுண்டு கூறவற்றோ
வானன்று காலன்று தீயன்று நீரன்று மண்ணுமன்று
தானன்று நானன் றசரீரியன்று சரீரியன்றே.**

## பதவுரை

தேன் என்று பாகு என்று=தேன் என்றும் கற்கண்டுப்பாகு என்றும், உவமிக்க ஒண்ணுமொழி=ஒப்பு சொல்லுதற்கு முடியாத இனிய சொற்களையுடைய, தெய்வ வள்ளி கோன்=தெய்வ மடந்தையாகிய வள்ளி நாயகியாரது கணவராகிய முருகப் பெருமான், அன்று=அந்நாளில், எனக்கு=அடியேனுக்கு, உபதேசித்தது ஒன்று உண்டு=குருவாக வந்து உபதேசித்தருளிய மெய்ப்பொருள் ஒன்று உளது, கூறவற்றோ=அது இத் தன்மைய தென்று சொல்லவல்ல தன்மையை யுடையதோ? வான் அன்று=ஆகாயமன்று, கால் அன்று=காற்று அன்று, தீ அன்று=நெருப்பன்று, நீர் அன்று=தண்ணீரன்று, மண்ணும் அன்று=மண்ணும் அன்று, தான் அன்று=தான் அன்று, அசரீரி அன்று=உருவ மில்லாதது அன்று. சரீரி அன்று=உருவத்தையுடையதுமன்று. (ஒன்றுமற்ற ஒன்று).

## விரிவுரை

தேனென்று.........மொழித் தெய்வ வள்ளி:—

வள்ளியம்மையாரது தேமொழிக்கு உவமை கூற வொண்ணாது; தேனும் பாலும் தெவிட்டவும் புளிக்கவும் செய்யும். அம்மையாருடைய இனியமொழி தெவிட்டாத தெய்வ வாக்கு.

"தேமொழிபாளித கோமள இன்பக் கிரிதோய்வாய்"—திருப்புகழ்.
"தெய்வ வள்ளி சேவக மன்னவதனும்புய" —கந்தர் அந்தாதி

வள்ளியம்மையார் தமிழ்நாட்டிலே, தமிழ்க்குடியிலே தமிழ்மகளாகத் திருவவதாரம் புரிந்தருளினர். அந்த அன்னை பேசுவது செந்தமிழ் மொழி.

"இனிமையும் நீர்மையும் தமிழெனலாகும்" —நிகண்டு

இனிய மொழி தமிழ்.

"பாகு கனிமொழி மாது குறமகள்
பாதம் வருடிய மணவாளா" —திருப்புகழ்.

**கோனன்று எனக்கு உபதேசித்தது ஒன்று உண்டு:—**

அருணகிரிநாதருக்கு மூவர் முதல்வனுகிய முருகப் பெருமானே முன் தோன்றி உபதேசித்தருளினுர்.

"சுகஞானக்கடல் மூழ்கத்தந்
தடியேனுக்கருள் பாலிக்குஞ்
சுடர் பாதக்குக னேமுத்தின் கழல்வீர"

"எட்டிரண்டு மறியாத என்செவியில்
எட்டிரண்டு மிதுவா மிலிங்கமென
எட்டிரண்டும் வெளியா மொழிந்தகுரு" —திருப்புகழ்.

**கூறவற்ரே:—**

முருகப் பெருமான் உபதேசித்த உபதேசப் பொருள் கூறவல்ல தகையதோ? என்று வியந்தோதுகின்ருர்.

'செவ்வா னுருவிற் றிகழ்வே லவனன்
றெவ்வாத தென உணர்வித் ததுதான்
அவ்வா றறிவா றறிகின் றதலால்
எவ்வா றெருவர்க் கிசைவிப் பதுவே" —அநுபூதி.

**வானன்று......சரிரமன்று:—**

உபதேசப் பொருள், பூதமுங் கரணமும் பொறிகளும் புலன்களும் குணங்களுங் கடந்து அப்பாலைக்கு அப்பாலாய் நின்ற வான் பொருள்.

அறுமுகப் பெருமான் உபதேசித்த அருள் திறத்தை இனிது எடுத்துப் பாராட்டுகின்றனர். அது,

"எல்லாமற என்னை இழந்த நலம்"

## கருத்துரை

வள்ளி மகிணராகிய வடிவேற் பெருமான் அடியேனுக்கு உபதேசித்தருளிய பொருள் ஒன்றுண்டு; அது பஞ்சபூதங்களுமன்று; பிறவு மன்று; எல்லாங் கடந்த இடத்தில் இலங்குவது.

## 10

சொல்லுகைக் கில்லையென் றெல்லாமிழந்து சும்மாவிருக்கும்
எல்லையுட் செல்ல வெனைவிட்ட வாஇகல் வேலனல்ல
கொல்லியைச் சேர்க்கின்ற சொல்லியைக் கல்வரைக்
கொவ்வைச் செவ்வாய்
வல்லியைப் புல்கின்ற மால்வரைத் தோளண்ணல் வல்லபமே.

### பதவுரை

இகல்வேலன்=போர் புரியும் வேற்படையை யுடைய குமாரக் கடவுள், நல்ல கொல்லியை=நலம் பொருந்திய கொல்லிப் பண்ணை, சேர்க்கின்ற=பொருந்தச் செய்கின்ற, சொல்லியை= இனிய மொழிகளையுடையவரும், கல்வரை=கல்மலையில் வசிக் கின்றவரும், கொவ்வை செவ்வாய்=கோவைப் பழத்தை யொத்த சிவந்த இதழை உடையவருமாகிய, வல்லியை=வள்ளி நாயகியை, புல்கின்ற=மருவுகின்ற, மால்வரை தோள் அண்ணல்=பெருமை தங்கிய மலைபோன்ற புயங்களை யுடைய முருகப் பெருமானுடைய, வல்லபம்=ஆற்றலின் தன்மையை, சொல்லுகைக்கு இல்லை என்று=இத் தன்மைத் தென்று அளவிட்டுக் கூறுதற்கு இயலா தென்று, எல்லாம் இழந்து=மனம் வாக்கு முதலிய கருவிகரணங் களை யெல்லாம் இழந்து, சும்மா இருக்கும்=பேசா அநுபூதியில் அசைவற்றிருக்கும், எல்லை உள் செல்ல=எல்லைக்குள்ளே புகுமாறு, என்னை விட்டவா=அடியேனைச் செலுத்தின கருணை யின் தன்மை என்ன ஆச்சரியம்!

### விரிவுரை

சொல்லுகைக் கில்லை:—

மூவர் தேவாதிகள் தம்பிரானாகிய முருகப் பெருமா னுடைய திருவருட் பிரபாவத்தை இத்தன்மையதென்று அளவிட்டுக் கூறுதற்கு முடியாது.

சிவபெருமான் உமாதேவியாரிடத்து முருகப்பிரான் பெருமையைக் கூறி முடிவில், "புவனேச்வரி! இங்ஙனஞ் சுருங்கச் சொன்னேன்; விரித்து விளம்பத் துணியின்

நூறுகோடி வருடகாலத்தும் முடிவு பெருதே'' என்று புகழ்ந் திருப்பதை உன்னுக.

''நசக்யம் விஸ்தராத்வக்தும் வர்ஷகோடி சதைரபி''
—மஹாஸ்காந்தம், சம்பவகாண்டம்.

''மக்கட்குக் கூறரிதானது''
''காணொணுதது உருவோடருவது
பேசொணுதது'' —திருப்புகழ்.

பேராய அண்டங்கள் பலவும் பிண்ட
பேதங்கள் பற்பலவும் பிண்டாண் டத்தின்
வாராய பலபொருளுங் கடலு மண்ணு
மலையளவுங் கடலளவு மணலும் வானும்
ஊராத வான்மீனு மணுவு மற்றை
உள்ளனவு மளந்திடலா மோகோ வுன்னை
யாராலு மளப்பரிதென் றனந்த வேதம்
அறைந்திளைக்க அதிதூர மாகுந் தேவே.—திருஅருட்பா.

எல்லாமிழந்து சும்மா விருக்கும்:—

உரையும் உளமும் உணர்வும் ஏனைய கரணங்களுங் கழன்று தன்னந் தனியாக நிற்கும் நிலை.

''எல்லாமற என்னையிழந்த நலஞ்
சொல்லாய் முருகா சுர பூபதியே'' —அநுபூதி.

'சொல்லொழியப் பொருளொழியக் கரண மெல்லாஞ்
சேர்ந்தொழிய வுணர்வொழியத் துளங்கா நின்ற
அல்லொழியப் பகலொழிய நடுவே நின்ற
ஆநந்த அநுபவமே அதீத வாழ்வே' —திருஅருட்பா.

கொல்லி—கொல்லிப்பண்; ஒருவகைத் தமிழ்ப்பண்.

மால்வரைத் தோள்:—

அலகிலா அவுணரை அழித்து அயிற்படையைத் தாங்கி அண்டர் ஊரைப் புரந்த அறுமுக வள்ளலுடைய தோளின் பெருமையை என்னென்று எழுதுவது; இசைப்பது.

''வசைதவிர் ககன சரசிவ கரண மகாவ்ருத
சீலசால வரமுநி சித்தரை
அஞ்ச லஞ்ச லென்று வாழ்வித்து நின்றன

..............................................................................

வரைபக நிருதர் முடிபக மகர மகோததி
தீயின் வாயின் மறுக விதிர்த்தயில்
வென்றி தங்கு துங்க வேலைப்புனைந்தன

..............................................................................

அசைவற நினையு மவர்பவ மகலவெ மேல்வரு
கால தூதரை யுடையு மப்படி
யங்கு மிங்கு மெங்கு மோடத்துரந்தன

..............................................................................

அநுபவ னநக னனனிய னமல னமோகன
நேக னேக னபினவ னித்திய
னஞ்ச லென்ப்ரசண்ட வாகைப் புயங்களே'' —புயவகுப்பு

*கருத்துரை*

குமாரக் கடவுளின் ஆற்றலை அளவிட்டுரைக்க இயலாதென்று சும்மாவிருக்கும் மௌனநிலையில் அடியேனை விடுத்தருளிய தன்மை என்ன அற்புதம்!

**11**

குசைநெகிழா வெற்றிவேலோ னவுணர் குடர் குழம்பக்
கசையிடு வாசி விசைகொண்ட வாகனப் பீலியின்கொத்
தசைபடு கால்பட் டசைந்தது மேரு அடியிடவெண்
டிசைவரை தூள்பட்ட அத்தூளின் வாரி திடர்பட்டதே.

*பதவுரை*

வெற்றி வேலோன்=வெற்றியையுடைய வேற்படையை ஏந்திய குமாரக் கடவுள், அவுணர் குடர் குழம்ப=அசுரர்களுடைய குடல்கள் கலங்குமாறு செலுத்தி, குசைநெகிழா=கடிவாளமானது தளராமல் பிடித்து, கசையிடு=சவுக்கினாலடித்து விரட்ட, வாசி விசை கொண்ட வாகனம்=குதிரையின் வேகத்தினும் மிக்க

வேகத்தைக் கொண்ட மயில்வாகனத்தினது, பீலியின் கொத்து= தோகைகளின் தொகுதி, அசைபடு கால்பட்டு=அசைதலினுல் உண்டாகின்ற காற்று பட்டு, மேரு அசைந்தது=மகா மேருகிரி அசைவுபட்டது, அடியிட=அம்மயிற்பரி அடியெடுத்து வைக்க, எண் திசைவரை=எட்டுத்திக்குகளிலுமுள்ள மலைகள், தூள்பட்ட= துகள்பட்டழிந்தன, அத்தூளின்=அந்தத் துகளினுல், வாரி திடர் பட்டது=கடலானது மேடாகிவிட்டது.

## விரிவுரை

வெற்றிவேல்:—

வெல் என்னும் முதனிலை நீண்டு வேல் என்ருயிற்று. யாவற்றையும் வெல்லுந் தன்மையுடையது வேலாகும். அதனுல் வெற்றிவேல் என்றனர். வெற்றியை விரும்பும் ஒவ்வொருவரும் ''வெற்றிவேலுற்றதுணை'' ''வேலுமயிலுந் துணை'' என்று தொடக்கத்தில் எழுதுவதை நோக்குக. வேற்படையை எண்ணி ஒரு கருமத்தைத் தொடங்கினுல் அது முட்டின்றி இனிது முடிவு பெறும்.

''வேலுந் திருக்கையுமுண்டே நமக்கொரு மெய்த்துணையே''
—கந்தரலங்காரம்.

வாசி விசை கொண்ட வாகனம்:—

மயிலைக் குதிரையென்று நம் சுவாமிகள் பல இடங்களில் உருவகம் புரிகின்றனர்.

''பக்ஷியெனும் உக்ரதுரகமும்''

''திருகுசி கண்டிப்பொற் குதிரை விடுஞ்செட்டி''

''ஒகார பரியின்மிசை வரவேணும்''

''ஆடும்பரி''

மயில் என்பது திரோதானசத்தி; அதன் சத்தியால் மகா மேருகிரியும் குலமலைகளும் உலகங்களும் அசைகின்றன.

மயிலினது வேகத்தை,

"............................மயிலேறி
நவநதிகள் குமுகுமென வெற்புத் திரட்சுழல
அதலமுத லெழுபுவன மெத்தத் திடுக்கிடவும்
நவமணிகள் உரகனுடல் கக்கத் துரத்திவரு
முருகோனே"

'யுககோடி முடிவின் மண்டிய சண்ட மாருத
முதித்ததென் றயனஞ்சவே
ஒருகோடி யண்டரண்டங்களும் பாதாள
லோகமும் பொற்குவடுறும்
வெகுகோடி மலைகளு மடியினி றகர்ந்திரு
விசும்பிற் பறக்க விரிநீர்
வேலைசுவறச் சுரர் நடுக்கங் கொளச்சிறகை
வீசிப்பறக்கு மயிலாம்''

என்று சுவாமிகள் பிற இடங்களிலும் வியந்திருப்பதை உன்னி உளமகிழ்க.

**பீலியின் கொத்து அசைபடு கால்பட்டு அசைந்தது மேரு:—**

மயில் வாகனத்தின் தோகை யசைந்ததனுல் ஏற்பட்ட பிரசண்ட மாருதத்தால் மகாமேருகிரி அசைந்தது. அத்துணை ஆற்றலுடைய காற்று தோகையிலிருந்து உண்டாகின்றது.

**அடியிட எண்திசைவரை தூள்பட்ட:—**

மயில் தனது அடியை நிலத்தில் வைத்து நடந்தது; அதனுல் எட்டு குலமலைகளும் துகள்பட்டன. அதன் அடியின் வலிமை அத்துணைப் பெரிது.

**அத்தூளின் வாரி திடர்பட்டது:—**

எட்டு மலைகளும் பொடிபட, அப்பொடியினுல், கடல்வற்றி மேடுபட்டது.

இதனுல் மயிலின் பெருமை நன்கு எடுத்துப் பேசப் படுகின்றது.

பன்னெடுங்காலம் அரும் பெருந் தவம் புரிந்து சிவ பரம் பொருளிடம் உயர்ந்த வரம்பெற்று, ஆயிரத்தெட்டு அண்டங் களையும், நூற்றெட்டு யுகங்கள் ஒப்பாரும் மிக்காருமின்றி அரசு புரிந்த, வஜ்ரயாக்கை படைத்த சூரபன்மனே, பண்டைத் தவ வலிமையால் மயிலாக ஆயினன்; ஆதலின் தவ வலியும் முருகனருள் வலியுஞ் சேர்ந்து இத்துணைப் பெருமையுற்றது.

## கருத்துரை

அறுமுகப் பெருமான் அவுணரை வெல்லும்பொருட் டுச் செலுத்திய போது அம்மயில் வாகனத்தின் தோகை சிறிது அசைய, அதனாலுண்டாகிய காற்றினால் மேரு அசைந்தது; அது அடி வைக்க, குலாசலங்கள் துகள்பட்டன; அத்துகளால் கடல் மேடாயிற்று.

## 12

படைபட்ட வேலவன் பால்வந்த வாகைப் பதாகை யென்னுந்
தடைபட்ட சேவல் சிறகடிக் கொள்ளச் சலதிகிழிந்
துடைபட்ட தண்ட கடாக முதிர்ந்த துடுபடலம்
இடைபட்ட குன்றமு மாமேரு வெற்பு மிடிபட்டவே.

## பதவுரை

படைபட்ட=படைகளையழிக்குந் திறலுடைய, வேலவன் பால் வந்த=முருகப் பெருமானிடத்திலே அடங்கி அருள்வயப் பட்டு வந்து சேர்ந்த, வாகை பதாகை என்னும்=வெற்றியைத் தெரிவிக் கும் கொடி என்று சொல்லப்படுகின்ற, தடைபட்ட சேவல்=கந்தக் கடவுளால் வலிமை தடைபட்டு நின்ற சேவலானது, சிறகு அடிக் கொள்ள=சிறகை அடித்துக்கொள்ள, சலதி கிழிந்து=சமுத்திர மானது கிழிபட்டு, உடைபட்டது=உடைந்து போயிற்று, அண்ட கடாகம் உதிர்ந்தது=அண்ட முகடுகள் இடிந்து உதிர்ந்தன. உடு படலம் இடைபட்ட=நட்சத்திரக் கூட்டங்கள் தடுமாற்றத்தை யடைந்தன, குன்றமும் மாமேரு வெற்பும் இடிபட்ட=ஏனைய மலைகளும் மகாமேரு கிரியும் தாள்பட்டு இடிந்துவிட்டன.

## விரிவுரை

**படைபட்ட வேலவன்:—**

படை—படுத்தல்; அழிக்குந் தொழிலுடைய ஆயுதங் களுக்கும், சேனைக்கும் பெயராயிற்று. ஏனைய படைகளை யெல்லாம் அழிக்குந் திறலுடையது வேற்படை யாதலால் அதற்குப் "படைக்கல நாயகம்" என்னும் பெயருண்டா யிற்று.

**வாகைப்பதாகை:—**

வீரர்கள் தம் வெற்றியைத் தெரிவிக்கும் பொருட்டு தூக்கிக் கட்டுவது கொடியாதலால் "வாகைப்பதாகை" என்றார். மற்றவர் கொடி வெறும் படமாக இருந்து வெற் றியைத் தெரிவிக்கும். எம்பெருமானுடைய சேவற்கொடி படமன்று; உள்ளவாறே சேவல். அது நாதம். ஓங்கார மந்திரத்தை ஒலிவடிவால் உலகிற்கு உணர்த்துவது. இருளை நீக்கும் சூரியன் வரவை யுணர்த்துவது.

"வாளகிரியைத் தனது தாளிலிடியப் பொருது
வாகைபுனை குக்குடப தாகைக்காரனும்" —வகுப்பு.

**தடைபட்ட சேவல்:—**

சூரபன்மனை வேற்படை இரு பிளவாகப் பிளக்க அவ்விரு பிளவும் சேவலும் மயிலுமாகி பெருமானை எதிர்க்க, எந்தை கந்தவேள் பறவைகளைக் கொல்லுதல் கூடாதென்று தண்ண ருள் பொழிய, அவைகள் அருள் வயப்பட்டு அறுமுக வள்ள லுக்கு ஆட்பட்டன.

மயில் ஊர்தியாக, சேவல் துவஜமாகி கந்தவேளுடைய வெற்றியை உலகெலா முணரக் கூவி நின்றது.

**சிறகடிக்கொள்ள....,.....இடிபட்ட:—**

செவ்வேட் பரமனது கொடியாகிய சேவல் சிறகடித்த மாத்திரத்தில் கடல் கிழிந்து உடைபட்டது; அண்டச் சுவர் இடிந்தது; உடுபடலம் உதிர்ந்தன; மேருகிரி முதலிய மலைகள் தூள்பட்டன.

எண்ணுதற்கரிய எம்பிரானது சேவற் கொடியின் பெருமையை என்னென்றுரைப்பேம். அம்மம்ம! அது அளவிடற்கரியது. அருணகிரி சுவாமிகளையன்றி அத்திறலை உரைக்கவல்லார் யாவர்?

"திக்கது மதிக்கவரு குக்குடமும்"

"உலகேழும் அதிர அரற்று கோழி"

"பருப்பதச் செருக்கறத் துகைக்கு முட் பதத்தினைப்
படைத்த குக்குடக் கொடிக் குமரேசா"

"சீறுபட மேருவெற்பை நீறுபடவே சினத்த
சேவலவ நீபமொய்த்த திரள்தோளா"

"அடியேன் செல்லுமிடங்களில் இடையூறு நேருங்கால், "கந்தா!" என்று அழைத்தால் தேவரீர் உடனே சேவற் கொடியுடன் வரவேணும்" என்று சுவாமிகள் மற்ருேரிடத்து நெஞ்சம் நெகிழுமாறு திருவாய் மலர்ந் தருளியுள்ளார்.

"சென்றே யிடங்கள் கந்தா வெனும்பொ
செஞ்சேவல் கொண்டு வரவேணும்"

மற்ருெரு இடத்தில் "சேவல் எங்குந் தழைத்தருள" என்று சுவாமிகள் கூறுகின்ருர்.

"அரிய குருகுகொடி எங்குந் தழைத்தருள"

கோழிக்கொடி வாழவேண்டுமென்று அரமகளிர் வாழ்த்து வதாக திருமுருகாற்றுப்படையிலும் இனிது நக்கீரதேவர் கூறுகின்ருர்.

"கோழி யோங்கிய வென்றடு விறற்கொடி
வாழிய பெரிதென் றேத்திப் ;பலருடன்
சீர்திகழ் சிலம்பகஞ் சிலம்பப்பாடிச்
சூரரமகளிர் ஆடுஞ்சோலை" —திருமுருகாற்றுப்படை

"அணிசேவ லெனப்
பாடும் பணியே பணியா அருள்வாய்" —கந்தரநுபூதி

"தாரை வடிவேலைச் சேவல்தனை ஏனற்
சாரல் மறமானைச் சிந்தியேனே" —திருப்புகழ்

என்று அருணகிரிநாதர் சேவலைப் பாடவும் தியானிக்கவும் அருள் புரியுமாறு ஆண்டவனிடம் விண்ணப்பம் புரிகின்றார். என்னே சேவலின் பெருமை! அன்பர்கள் உய்த்துணர்க. இத்தகைய கோழியைக் கண்டவுடன் முருகவேளுடைய கொடியென்று எண்ணி வணங்குதல் வேண்டும். அங்ஙனம் வணங்குவார்க்கு அறுமுகவள்ளல் திருவருள் துணைசெய்யும்.

வந்திப்பேன் அநுதினமும் வாழ்த்துவேன்
உனதுதிரு வடியை நாளும்
சிந்திப்பேன் முப்பொழுதுஞ் சேவிப்பேன்
செஞ்சூட்டுச் சேவலே கேள்
பந்திப்பேன் எனதுவலி பாரென்னும்
ஆணவமாம் பகைவிண் டோட
கொந்திற்றேன் பொழிசாரற் றணிகைவரை
யான்வரநீ கூவுவாயே.

*கருத்துரை*

கந்தப்பெருமானுடைய வெற்றிக் கொடியாகிய சேவல் சிறகடித்தவுடன், கடல் கிழிந்தது; அண்ட முகடுகள் உடைந்தன; உடுபடலம் உதிர்ந்தன; மேரு பருவதமும் ஏனைய மலைகளும் துகள்பட்டன.

## 13

ஒருவரைப் பங்கி லுடையாள் குமார னுடைமணிசேர்
திருவரைக் கிண்கிணி யோசை படத்திடுக் கிட்டரக்கர்
வெருவரத் திக்குச் செவிடுபட் டெட்டுவெற் புங்கனகப்
பருவரைக் குன்று மதிர்ந்தன தேவர் பயங்கெட்டதே.

*பதவுரை*

ஒருவரை = தனிப்பெருந் தலைவராகிய சிவபெருமானை, பங்கில் உடையாள்=தமது வலப்பக்கத்தில் உடையவராகிய உமாதேவியாரது, குமாரன்=திருப்புதல்வராகிய முருகப் பெரு

மானுடைய, உடைமணிசேர்=உடைக்குமேல் கட்டும் மணிகள் பொருந்திய, திருஅரை=அழகிய இடையில் விளங்குகின்ற, கிண் கிணி ஓசைபட=கிண்கிணியினது ஒலிபட்ட மாத்திரத்தில், அரக்கர் திடுக்கிட்டு=அசுரர்கள் துணுக்கமுற்று, வெருவர=அஞ்சி நடுங்க, திக்கு செவிடுபட்டு=எட்டுத்திசைகளிலுள்ளோரும் செவிடுபட்டு, எட்டுவெற்பும்=குலமலைகள்எட்டும், பருவரை=பெரியமலையாகிய, கனக குன்றும் அதிர்ந்தன=பொன்மலையாகிய மேருபருவதமும் அடிபெயர்ந்து அதிர்ந்து போயின, தேவர் பயம் கெட்டது=தேவர் களுக்கு அசுரரிடமிருந்த பயம் அழிந்துவிட்டது. (ஏ-அசை)

## விரிவுரை

ஒருவர்:—

ஒப்பற்றவர். சிவபெருமான் ஒருவரே சமானமில்லா தவர்; தனிப்பெருந் தலைவர்; முழுமுதற் கடவுள்; மூவர் தேவாதிகளால் வணங்கப்படும் முக்கட் பரம்பொருள். "தனக் குவமையில்லாதான்" என்ற பொதுமறைக்கு இலக்கானவர்.

"ஸ சிவ ஏகோ தேவ:" (சிவமூர்த்தி ஒருவரே தெய்வம்)
"ஏக ஏவ சிவோ நித்ய:" (சிவபெருமான் ஒருவரே நித்தியர்)
"ஏக ஏவ ருத்ரோ நத்விதீயாய தஸ்தே"
(உருத்திரமூர்த்தி ஒருவரே யுள்ளவர்; இரண்டாவது பொருளில்லை)

என்ற சுருதி வசனங்கள் சிவபெருமானை ஒருவன் என்ற சப்தத்தால் புகழ்கின்றன.

"ஒருவனு யுலகேத்த நின்ற நாளோ"
ஒருவனாகி நின்றானிவ் வுலகெலாம்
இருவ ராகிநின் றார்கட் கறிகிலான்
அருவராவரை யார்த்தவ னார்கழல்
பரவு வாரவர் பாவம் பறையுமே. —அப்பர்.

உடைமணி:—

உடைமணி என்பது, இடையில் கட்டும் ஒருவகை ஆபரணம்; அரை நாண்மணியுடன் புனைவது.

உடைக்கு மேலுங் கட்டுவர். பிறவிடங்களிலும் இந்த ஆபரணத்தைப் பற்றி அடிகள் கூறி இருப்பதைக் காண்க.

"மொழிபுகழு முடைமணியு மரைவடமு மடியிணையு
முத்தச் சதங்கையுஞ் சித்ரச்சிகண்டியுஞ் செங்கைவேலும்"
—திருப்புகழ்.

"இறைமகிழ உடைமணியொ டணிசகல மணிகலென
இமயமயில் தழுவுமொரு திருமார்பி லாடுவதும்"—திருவகுப்பு.

திருவரைக் கிண்கிணி ஓசைபட—

குழந்தை வேலப்பரது திருவிடையிற் கட்டியுள்ள செஞ்சிறு சதங்கை சிறிது அசைய அதனுலுண்டாகிய ஒலி பட்ட மாத்திரத்தில், அவுணர்கள் திடுக்கிட்டு இடியேறுண்ட நாகம்போல் நடுங்கிப் பயந்தனர்.

திக்கு செவிடுபட்டு:—

இடவாகு பெயரால் திக்கு என்பது திக்கிலுள்ளவரைக் கூறப்பட்டது. எண்டிசையிலுள்ள்வர்கள் செவிடுபட்டனர்.

எட்டு வெற்புங் கனகப் பருவரைக் குன்றுமதிர்ந்தன:—

அஷ்டகுலாசலங்களாகிய கைலே, இமயம், மந்தரம், விந்தம், நிடதம், ஏமகூடம், நீலகிரி, கந்தமாதனம் என்ற எட்டு மலேகளும் பொன் மேருகிரியும் அடி பெயர்ந்து கிடு கிடு என்று அதிர்ந்தன.

தேவர் பயம் கெட்டதே:—

பெருமானுடைய திருவரைச் சதங்கையொலியின் பெருமையைக் கேட்ட தேவர்கள், இனி அசுரரழிந்தனர் என்று தேறி பன்னுளாகக் கொண்டிருந்த அச்சத்தையறவே நீக்கிக்கொண்டனர்.

முருகக்கடவுளுடைய அரைநாண்மணியின் ஓசையின் பெருமையை வியந்துரைத்தனர். வேறு ஒரு கந்தரலங்காரப் பாடலாலும் அறிக.

மண்கம ழுந்தித் திருமால் வலம்புரி யோசையந்த
விண்கமழ் சோலேயும் வாவியுங் கேட்டது வேலெடுத்துத்
திண்கிரி சிந்த விளேயாடும் பிள்ளேத் திருவரையிற்
கிண்கிணி யோசை பதிஞ லுலகமுங் கேட்டதுவே.

*கருத்துரை*

குழந்தை முருகன் திருவரைச் சதங்கையொலியால் அரக்கர் துணுக்குற்றஞ்சினர்; உலகஞ் செவிடுபட்டது; மலைகளதிர்ந்தன; தேவர் பயம் கெட்டது.

**14**

குப்பாச வாழ்க்கையிற் கூத்தாடு மைவரிற் கொட்படைந்த
இப்பாச நெஞ்சனை யீடேற்று வாயிரு நான்குவெற்பும்
அப்பாதி யாய்விழ மேருங் குலுங்கவிண் ணாருமுய்யச்
சப்பாணி கொட்டிய கையா றிரண்டுடைச் சண்முகனே.

*பதவுரை*

இருநான்கு வெற்பும்=எட்டு குலமலைகளும், அ பாதியாய் விழ=சரிபாதிகளாய்ப் பிளந்து விழவும், மேரும் குலுங்க=மேரு மலையும் நிலைகுலைந்து குலுங்கவும், விண்ணாரும் உய்ய=தேவர்கள் சிறைநீங்கிப் பிழைக்கவும், சப்பாணி கொட்டிய=சப்பாணி கொட்டின, ஆறு இரண்டு கை உடை=பன்னிரண்டு திருக்கரங் களையுடைய, சண்முகனே=ஆறுமுகப் பெருமானே, கு பாச வாழ்க்கையுள்=மண்ணுலக மாய வாழ்க்கையில் நின்று இதுவே நிலைபேறுடையதென்று, கூத்தாடும் ஐவரின்=களித்துக் கூத்தாடு கின்ற ஐம்புலன்களினால், கொட்பு அடைந்த=சுழற்சியையுற்ற, இ பாச நெஞ்சனை=இந்த பாசத்தோடு கூடிய மனத்தையுடைய அடியேனை, ஈடேற்றுவாய்=திருவருள் நெறிகாட்டி உய்யும்படிச் செய்வீர்.

*விரிவுரை*

குப்பாச வாழ்க்கை:—

கு—உலகம். பாசம்—கட்டுப்படுத்துவது. உலகசுகமே நிலைபேறுனது என்று கட்டுப்படுத்தும் மாயவாழ்வு.

நில்லா தவற்றை நிலையின வென்றுணரும்
புல்லறி வாண்மை கடை. —திருவள்ளுவர்.

கூத்தாடுமைவர்:—

உலக வாழ்விலேயே மயங்கி அதனையே மெய்யின்பமென்று கருதி மிகவும் களித்து, அதனாலுண்டாகிய தருக்கு என்னும் வெறியால் கூத்தாடுகின்ற மெய், வாய், கண், மூக்கு, செவி என்ற ஐம்புலன்கள்.

ஐம்புலன்கள் உயிரில்லாத அஃறிணைப் பொருள்களாயினும் உயிர் அதனுடன் தொடர்புகொண்டு, அவை தம்மினின்றும் வேறென்றுணராது அவைகளைத் தன்னுடன் கூட்டி மயங்கி உயர்திணை போல் கொண்டு அவைகட்கு உட்பட்டிருப்பதால் உயர்திணையாக உருவகம் புரிந்து கூறினார். இதுபோல் அப்பர் சுவாமிகளும் கூறுமாறு காண்க.

பழியுடை யாக்கை தன்னிற் பாழுக்கே நீரிறைத்து
வழியிடை வாழமாட்டேன் மாயமுந் தெளியகில்லேன்
அழிவுடைத் தாயவாழ்க்கை ஐவரா லலைக்கப் பட்டுக்
கழியிடைத் தோணி போன்றேன் கடவூர் வீரட்டனாரே.

கொட்பு:—கொட்பு–சுழற்சி.

உண்மையறிவில்லாமையால், உயிர் மயக்க அறிவால் திகைப்புற்றுப் பற்பலவாறு சுழன்றுகொண்டிருக்கிறது.

''பிணி எருதென மயல் எனும் நரகினிற் சுழல்வேனோ''
—திருப்புகழ்

கொட்பு-என்றதற்கு சுழற்சி என்ற பொருளில் ''கொட்புறு கலினப் பாய்மா'' என்று கம்பருங் கூறுமாறு காண்க.

பாச நெஞ்சன்:—

உயிர்களுக்கு செம்பிற் களிம்புபோல் அநாதியே யுள்ளது பாசம். அப்பாசம் இறைவனருளால் நீங்க வேண்டும். பாசத்தை நாசஞ் செய்வதால் முருகவேளுக்குப் பாசநாசன் என்று ஒரு பேருண்டு.

''இணையடிகள் பரவுமுன தடியவர்கள் பெறுவதுவும்
ஏசிடார்களோ பாசநாசனே''
—திருப்புகழ்

இருநான்கு வெற்பும்.........சண்முகனே ! :—

இளங் குழவியாயுள்ளபோது எட்டுக் குலமலைகள் இடிந்து விழவும், மேருமலை நடுங்கவும், தேவர்கள் துன்பம் நீங்கியுய்ய வும் சப்பாணி கொட்டிய பன்னிருகரமுடைப் பெருந்தகை யாகிய தேவரீருக்கு அடியேனுடைய பாசத்தை நீக்குவது ஒரு பொருளன்று என்பது உள்ளீடாயுள்ள குறிப்பு.

சப்பாணி=கைசேர்த்துக் கொட்டுதல்.

அண்டர்தந் துயரொழித் தனமென்று கொண்டாடி
ஆவலங் கொட்ட மன்னும்
அயிராணி கலவியமு துண்டன மெனத்தேவர்
அரசிரு கரங்கள் கொட்ட
துண்டவெண் பிறைபுரை யெயிற்றுவெஞ் சூருளந்
துண்ணெனப் பறைகொட்ட நீள்
சுருதியந் தணரிடந் தொறுமங்கலப் பெருந்
தூரியங் கொட்ட முட்டப்
பண்டரு பெருங்கவிப் புலமைக்கு நீசொன்ன
படிதிண்டி மங்கொட்ட வெம்
பகைநிசா சரர்வளம் பதிமுழுது நெய்தலம்
பறைகொட்ட வெள்வளை தருந்
தண்டரள மலைமொண்டு கொட்டுநக ராதிபா
சப்பாணி கொட்டியருளே
சமரமுக ரணவீர பரசமய திமிராரி
சப்பாணி கொட்டியருளே.

என்றார் பகழிக்கூத்தர்.

*கருத்துரை*

குலகிரிகள் பிளந்து விழவும், மேருமலை குலுங்கவும், தேவர்கள் உய்பவும் சப்பாணிகொட்டிய குமாரக் கடவுளே! ஐம்புலனால் மயங்கும் அடியேனைக் காத்தருள்வீர்.

## 15

தாவடி யோட்டு மயிலிலுந் தேவர் தலையிலுமென்
பாவடி யேட்டிலும் பட்டதன் ரேபடி மாவலிபால்
மூவடி கேட்டன்று மூதண்ட கூட முகடுமுட்டச்
சேவடி நீட்டும் பெருமான் மருகன்றன் சிற்றடியே.

### *பதவுரை*

அன்று=அந்நாளில், மாவலிபால்=மகாபலிச் சக்கரவர்த்தியினிடம், மூவடி படி கேட்டு=மூன்றடி பூமியை யாசித்து, மூது அண்டகூட=பெரிய அண்டகூடத்தின், முகடுமுட்ட=உச்சியில் முட்டும்படி, சேவடி நீட்டும்=சிவந்த திருவடியை நீட்டியளந்த, பெருமான் மருகன் தன்=பெருமையுடைய விட்டுணு மூர்த்தியினது மருகராகிய முருகப்பெருமானது, சிற்றடி=சிறிய திருவடியானது, தாவடி ஓட்டு மயிலிலும்=பிரயாணத்திற்கெனச் செலுத்துகின்ற மயில்வாகனத்தின் மீதும், தேவர் தலையிலும்=தேவர்களுடைய சென்னியின்மீதும், என் பா அடி ஏட்டிலும்=அடியேன் திருவருள் துணைகொண்டு பாடிய பாக்களது அடிகளையுடைய ஏட்டின் மீதும், பட்டது அன்றே=பட்டது அன்றே? (இது என்ன ஆச்சரியம்!)

### *விரிவுரை*

தாவடி:—தாவடி–பிரயாணம்.

"கடிதுல கெங்கணும் தா(வ)டி இட்டுவந்த
மயிலு மிலங்கலங் காரபொற் சதங்கை
கழலொலி தண்டையங் காலு மொக்கவந்து
வரமெனக் கருள்கூர்வாய்"—திருப்புகழ்.

மயிலிலும்:—

எம்பிரானுடைய திருவடித்தாமரை படுமாறு அளப்பறு காலம் தவஞ்செய்ததால் அப்பாதம் படும் பெரும் பேற்றை மயில் பெற்றது.

முருக நாயகன் சீறடி முளரியிற் சிறுதூள்
பொருவின் முக்கணன் புயங்களு முமைமுலைப் பொருப்பு

மருவி வாழ்ந்தன சிறிதுநாள் மாமயிற் பெருமான்
ஒருவில் வைகலும் பொறுத்தன னென்னிலென் னுரைக்கேன்.
—உபதேசகாண்டம்.

தேவர் தலையிலும்:—

மூவர் முதல்வராகிய முருகக்கடவுளை தேவர்கள் நாள்தோறும் அன்புடன் வழிபட்டு வணங்குபவராதலால் அவர்களுடைய சென்னிமீதும் அப் பரமபதியின் பாததாமரை பட்டது.

"இமையவர் முடித்தொகையும் வனசரர் பொருப்பு மென
திதயமு மணக்கு மிரு பாதச் சரோருகனும்"—திருவகுப்பு.
"ஃ ஃ ஃ ஃ ஃ மயிலேறு மையன்
காலுக்கணிகலம் வானோர் முடியுங் கடம்பும்" —அலங்காரம்.
"வேதாமுதல் விண்ணவர் சூடுமலர்ப்
பாதா" —அநுபூதி.

என் பாவடி ஏடு:—

பாவடி என்பதனை பா வடி என்றே கொண்டு பாக்களை எழுதியுள்ள என்றும் பொருள் கொள்வர். அடிகளோடு கூடிய பா என்றும் கொள்ளலாம்.

திருப்புகழை எழுதியுள்ள ஏட்டில் எம்பிரானுடைய திருவடி பட்டது என்பதனல் அதன் ஏற்றம் இனிது புலனுகின்றது. அரசனுடைய முத்திரை பெற்ற (நோட்) நாணயம்போல் திருப்புகழ் எங்கும் செல்வாக்கைத் தரும்.

சேவடி நீட்டும் பெருமான்:—

திருமால் மாவலியிடம் மூவடி மண்ணை யாசித்து திரிவிக்ரம வடிவத்தைக் கொண்டு மண்ணுலகையும் விண்ணுலகையும் திருவடியை அளவு கோல்போல் நீட்டி யளந்ததை விளக்குகின்றனர்.

சிற்றடி:—

முருகவேள் என்றுமகலாத இளமையுடையவராதலால் சிறிய அடி என்றனர்.

### கருத்துரை

உலகமளந்த திருமால் மருகராகிய செவ்வேட்பரமனது திருவடித்தாமரையானது மயில்மீதும், தேவர்களது சென்னி மீதும், அடியேனுடைய திருப்புகழை எழுதியுள்ள ஏட்டிலும் பட்டது.

## 16

தடுங்கோள் மனத்தை விடுங்கோள் வெகுளியைத் தானமென்றும்
இடுங்கோள் இருந்த படிஇருங் கோள்எழு பாருமுய்யக்
கொடுங்கோபச்சூருடன் குன்றந்திறக்கத் தொளைக்கவைவேல்
விடுங்கோ னருள்வந்து தானே யுமக்கு வெளிப்படுமே.

### பதவுரை

மனத்தை தடுங்கோள்=(அன்பர்களே) உங்கள் மனத்தைப் பொறி புலன்களின் வழியே செல்ல விடாமல் தடை செய்யுங்கள்; வெகுளியை விடுங்கோள்=கோபத்தை அறவே விட்டுவிடுங்கள், என்றும் தானம் இடுங்கோள்=எப்போதும் ஏழைகட்குத் தானத்தைக் கொடுத்துக்கொண்டிருங்கள்; இருந்தபடி இருங்கோள்= இருந்தவண்ணமே அசைவற்று இருங்கள்; (இவ்வண்ணம் செய்வீர்களானுல்) எழு பாரும் உய்ய=ஏழு உலகங்களும் பிழைக்குமாறு, கொடும் கோப சூருடன்=கொடிய கோபத்துடன் கூடிய சூரபன்மனுடன், குன்றம்=கிரௌஞ்சமலேயும், திறக்க=பிளந்து அழியும் படியும், தொளேக்க=துளேபடும்படியும், வைவேல் விடும் கோன்= கூர்மை பொருந்திய வேற்படையை விடுத்தருளிய தனிப்பெருந் தலேவராகிய முருகக் கடவுளது, அருள்=திருவருளானது, தானே உமக்கு வெளிப்படும்=தானுகவே வந்து உமக்கு வெளிப்பட்டு ஆட்கொள்ளும்.

### விரிவுரை

இப் பாடலில் நமது அடிகள், கற்பகோடிகாலந் தவங் கிடக்கினும் கிடைக்கப்பெருத முருகப் பெருமானுடைய திருவருள் எளிதில் கிடைப்பதற்குரிய நான்கு வழிகளே உபதேசிக்கின்றனர்; இதனே அன்பர்கள் நன்கு படித்து

நினைவில் இருத்தி நடைமுறையிற் கொண்டுவரவேண்டியது மிகமிக அவசியம்.

தடுங்கோள் மனத்தை:—

மனமானது எந்த நேரமும் ஓய்வின்றிச் சலித்துக் கொண்டே யிருக்கின்றது. அதனை இறைவனுடைய திருவடி தியானத்தால் ஒருமுகப்படுத்தவேண்டும்.

"காடுங் கரையு மனக்குரங்கு கால்விட்டோட அதன்பிறகே
ஓடுந் தொழிலாற் பயனுளதோ" —தாயுமானுர்.

மனமானது ஓடித் திரிவதால் பல துன்பங்கள் ஏற்படு கின்றன. அதனை அடக்குவதனுலேயே சுகம் உண்டா கின்றது. கோயில் வழிபாடு, பூசை, யோகம் முதலிய எல்லா வகையான கிரியைகளும் மனதை ஒருவழிப்படுத்தும் பொருட்டேயாம். மனமடங்காவிடில் ஏனையவைகளால் பயன் யாதுமில்லை.

"சினமிறக்கக் கற்றுலும் சித்தியெலாம் பெற்றுலும்
மனமிறக்கக் கல்லார்க்கு வாயேன் பராபரமே"
—தாயுமானுர்.

"ஐங்கரனை யொத்தமன மைம்புல மகற்றிவள
ரந்திபக லற்றநினை வருள்வாயே" —திருப்புகழ்.

சலனமற்ற தண்ணீரில் சந்திர சூரிய பிரதிபிம்பந் தோன்றுவதுபோல், சலனமற்ற உள்ளத்தில் இறைவ னுடைய அருட்காட்சி தோன்றும்.

"தணியா மனத்தைத் தடுத்த நிறை
தவத்தோர் காணுந் தயாபரியே"
—அங்கயற்கண்ணம்மை பதிகம்.

விடுங்கோள் வெகுளியை:—

மனிதனுக்குக் கோபம் பெரும் பகையாகும். ஒருவன் தன்னைக் காத்துக்கொள்ள வேண்டுமானுல் சினத்தை விடவேண்டும். கோபத்தை விட்டவர்க்கே மனம் சாந்தி யடையும்.

"தன்னைத் தான் காக்கிற் சினங்காக்க; காவாக்கால்
தன்னையே கொல்லுஞ் சினம்" —திருக்குறள்.

"கஸ்ய ந சோகோ ய:ஸ்யா தக்ரோத:"
விஞ:–யாருக்குத் துக்கமில்லை?
விடை:-கோபமற்றவனுக்கு.
—பிரச்னோத்தர ரத்னமாலிகா.

கோபம் பாபத்திற்கு அஞ்சாது. கோபம் வந்தபோது உடம்பில் உதிரங் கொதிப்புற்று, நரம்புகள் முறுக்கேறி, அதனுல் உடல் நலங் கெடுகின்றது. தகாதவை செய்து உயிர்நலமுங் கெடுகின்றது. கோபத்தினுல் தவத்தைக் கொட்டி விசுவாமித்திரர் நலமிழந்தனர்.

சினத்தை விட்ட சாந்த சீலர்கள் தொழுகின்றபோது மயிலேறும் ஐயன் மகிழ்கின்றனன்.

"சினத்தை நிந்தனை செயுமுநிவரர் தொழ மகிழ்வோனே"
—திருப்புகழ்.

தானமென்றும் இடுங்கோள்:—

அறமொன்றே மனிதனை அரண்செய்வதாம். அதனை என்றும் ஒல்லும் வகையால் செய்யவேண்டும். மறுமைக்கு வந்து உதவுவது அறவழியில் கொடுத்த பொருள் ஒன்றே யாம்.

"எங்காயினும் வரும் ஏற்றவர்க்கிட்டது"
"நொய்யிற் பிளவளவேனும் பகிர்மின்கள்" —அலங்காரம்.
"பகிர நினைவொரு தினையளவிலுமிலி" —திருப்புகழ்.
"தானமுந் தவமுந் தான்செய்வ ராயின்
வானவர் நாடு வழிதிறந்திடுமே." —ஔவையார்.

இருந்தபடி இருங்கோள்:—

இருந்தபடி இருத்தலாவது மநோலயமுற்று, சொல்லற சும்மா இருக்கும் நிலையாம். மனதைத் தடுத்து, வெகுளி விடுத்து, உயிர்களின் மீது கருணை செய்து அன்பு வடிவாக நாளும் நல்லறம் புரியும் நல்லன்பர்கட்கு இந்நிலை வந்து

சேரும். கல்லாலின் கீழிருந்து கல்வி கேள்விகளில் வல்லார் களாகிய நால்வருக்கும், வாக்கிறந்த பூரணமாய், மறைக்கு அப்பாலாய், எல்லாமாய், அல்லவுமாய் இருந்ததனை இருந்த படி இருந்து காட்டி, எம்பெருமான் சொல்லாமற் சொல்லிய நிலையாகிய இதனை அநுபவத்தாலேயே அறிய முடியும்.

**திறக்க தொளைக்க:—**

திறக்க என்பதனை, சூரபன்மனுடல் திறக்க என்றும், தொளைக்க என்பதனை, குன்றந் தொளைக்க என்றும் கூட்டிப் பொருள் கொள்க.

**தானேயுமக்கு வெளிப்படுமே:—**

மேற்கூறியபடி, மனதைத் தீயவழியிற் செல்லவிடாமல் தடுத்தும், சினத்தை அறவே விடுத்தும், என்றும் தானத்தைக் கொடுத்தும், சும்மா இருக்கும் நிலையை அடுத்தும் இருப் போமேயானல், பல்கோடி காலம் தவம் புரியினும் பெற முடியாத எந்தை கந்தவேளின் திருவருள் தானே நம்மைத் தேடிவரும்.

### *கருத்துரை*

உலகினரே! மனத்தைத் தடுங்கள்; சினத்தை விடுங்கள்; அறஞ் செய்யுங்கள்; சும்மா இருங்கள். இங்ஙனஞ் செய்வீரேல் சூராதிகளையழித்த செவ்வேட்பரமனது திருவருள் தானே உமக்கு வெளிப்பட்டுத் துணை செய்யும்.

## 17

**வேதா கமசித்ர வேலா யுதன்வெட்சி பூத்ததண்டைப்**
**பாதார விந்த மரணாக அல்லும் பகலுமில்லாச்**
**சூதான தற்ற வெளிக்கே யொளித்துச்சும் மாவிருக்கப்**
**போதா யினிமன மே!தெரி யாதொரு பூதர்க்குமே.**

### *பதவுரை*

**மனமே=ஓ மனமே! வேத=வேதங்களும், ஆகம=ஆகமங்க ளும் துதிக்கின்ற, சித்ர=அழகிய, வேல்ஆயுதன்=வேற்படையை**

யுடைய குமாரக்கடவுளின், வெட்சி பூத்த=வெட்சி மலர் மாலை மலர்ந்துள்ளதும், தண்டை=தண்டையென்னும் கலனை யுடையது மாகிய, பாத அரவிந்தம்=தாமரை மலர் போன்ற திருவடிகளை, அரண் ஆக=நமக்குக் காவலாகக் கொண்டு, அல்லும் பகலும் இல்லா=மறப்பும் நினைப்பும் (கேவல சகலம்) அற்ற, சூதானது அற்ற வெளிக்கு=வஞ்சகமற்ற பரவெளியில், ஒளித்து=(உலக பசுபாச தொந்தரவுகட்கு அகப்படாமல்) மறைந்து, சும்மா இருக்க=உரையற்ற நிலையாகிய பேசா அநுபூதியில் நிலைத்து நிற்கும்பொருட்டு, இனி போதாய்=சென்ற நாள் ஒழியினும் இனி யாவது வருவாயாக; ஒரு பூதர்க்கும் தெரியாது=இந்த நன்னெறி ஒருவர்க்கும் தெரியாத ஒன்றாகும்.

## *விரிவுரை*

**வேதாகம:—**

அறுமுக வள்ளல் அறிவு நூல்களாகிய வேதங்களா லும் ஆகமங்களாலும் பரவப்பெற்ற திருவடியை யுடை யவர்.

> ''ஆலமுண்ட கோனகண்ட லோகமுண்ட மால்விரிஞ்சன்
> ஆரணங்க ளாகமங்கள் புகழ்தாளும்''
> —திருப்புகழ்.

**வெட்சிபூத்த:—**

வெட்சி மலர் வேற்பெருமானுக்குகந்த மலர்களில் ஒன்று. அதனைப் பின்வருந் திருவாக்குகளால் உணர்க.

> ''செங்கால் வெட்சிச் சீறித ழிடையிடுபு''
> —திருமுருகாற்றுப்படை.
>
> ''வெட்சிமலர் சூழ்ந்த நின்னிரு கழற்கால்'' —கல்லாடம்.
>
> ''வெட்சித் தண்டைக் காலென்கிலை'' —அலங்காரம்.

**பாதாரவிந்தமரண்:—**

'முதலவினைமுடிவில் இருபிறை யெயிறு கயிறுகொடு முதுவடவை விழி சுழல வரு கால தூதர்கெட' முடுகுகின்ற முருகவேளுடைய முளரியந்தாள் ஆன்மாக்களுக்குக் காவ

லாக இருந்து உய்விக்கும் பெருங் கருணையுடையது. ஆதலால் அப் பரமபதியின் பாத கமலமே ஆன்மகோடிகட்குத் தஞ்சம் புகத் தக்கதாம். வேலனடியார்க்குக் காலபயங் கிடையாது.

**அல்லும் பகலுமில்லா:—**

அல்லும் பகலும் என்பது மறப்பு நினைப்பு; இதனை வட நூலார் கேவல சகல மென்பர்.

''கங்குல் பகலற நின்ற எல்லையுளதெது'' —தாயுமானுர்.

''இராப்பகலற்ற இடத்தே இருக்கை எளிதல்லவே''

—அலங்காரம்.

''அந்திபக லற்றவிடம்'' —திருப்புகழ்.

**சூதானதற்ற வெளி:—**

வஞ்சகமற்ருர் அடையும் பரவெளி; வெளியில் என்ற ஏழாம் வேற்றுமை வெளிக்கு என நான்காம் வேற்றுமையாக மாறி நின்றது.

**ஒளித்து:—**

மலமாயா கன்மங்கட்கும், புறப்பகை உட்பகைவர் கட்கும் ஒளித்து இருப்பது. வெளியில் ஒளிப்பது என்பது ஒரு விநோதம். உலகில் ஒரு மறைவிடத்தில் ஒளிவது வழக்கம். வெட்டவெளியில் ஒளிந்துகொள்வது என்பது ஒரு பெரிய ஆச்சரியம்.

''அநாதியிலே

வெளியில் விளைந்த வெறும்பாழைப் பெற்ற வெறுந்தனியை''

—அலங்காரம்.

**சும்மா இருக்கப் போதாய்:—**

காடுங் கரையுங் கால்விட்டு ஓடும் மனக்குரங்கே! உலக விஷயத்தினின்று நீங்கிசொல்லறச் சும்மாவிருக்க வருவாயாக. சும்மா இருத்தலினுலேயே சுகம் பெறலாம். அது ஆறுமுக வேள் உபதேசித்ததாம்.

''சும்மா விரு சொல்லற என்றலுமே
அம்மா பொருளொன்று மறிந்திலனே''

—அநுபூதி.

இந்த நிலையைக் காட்டுமாறு நமது சிதம்பர சுவாமிகள் செவ்வேளை வேண்டி இரந்து நிற்கின்றனர்.

சும்மா இருவெனநீ சொல்லப் பொருளொன்றும்
அம்மா அறிந்திலமென் றன்றுரைத்த—எம்மான்
அருணகிரி நாதர் அநுபவம் நாயேற்குக்
கருணைபுரி போரூரா காட்டு.

சும்மா இருக்குஞ் சுகத்தைப் பெற ஒவ்வொருவரும் விரைந்து முயற்சிக்க வேண்டும். பெருமானிடம் விண்ணப்பிக்க வேண்டும். குருமூர்த்தியிடம் குறையிரந்து யாசிக்க வேண்டும். அதனைப் பெறவேண்டுமென்ற தாகமும் வேகமும் இருத்தல் வேண்டும். நமது இராமலிங்க அடிகள் அது குறித்துத் திருவாய்மலர்ந்ததையும் உன்னுக.

இன்றுவரு மோநாளைக் கேவருமோ அல்லதுமற்
றென்றுவரு மோஅறியேன் எங்கோவே—துன்றுமல
வெம்மாயை யற்று வெளிக்குள் வெளிகடந்து
சும்மா இருக்குஞ் சுகம்.

தெரியாதொரு பூதர்க்குமே:—

''மதயானையை வசமாக்குதலும், கரடி வெம்புலி வாயைக் கட்டுதலும், சிங்கத்தின் முதுகின் மேலூர்தலும், அரவினையாட்டுதலும், பஞ்சலோகத்தை வேதித்தலும், ஒருவர் கண்ணுக்கும் புலப்படாமலிருத்தலும், தேவரை ஏவல் கொள்ளுதலும், இளமையோடு எந்நாளுமிருத்தலும், கூடுவிட்டுக் கூடு பாய்தலும், நீர்மேல் நடத்தலும், நெருப்பின் மேல் நிற்றலும், ஒப்பற்ற சித்தி பெறுதலும் ஆகிய எல்லாம் எளிமையான செயல்களேயாம். சிந்தையை அடக்கிச் சும்மா இருக்கின்ற திறம் ஒன்றே அரிது! அரிது!!'' என்றார் நம் தாயுமான அடிகள். ஆதலால் வெளியில் ஒளித்துச் சும்மா இருக்குந் திறனை ஒருவரும் உணரார்.

### கருத்துரை

ஓ மனமே! வேதாகமங்களால் துதிக்கப்படுகின்ற வேற்பெருமானுடைய வெட்சித் தண்டைத் திருவடித் தாமரையையே தஞ்சமாக அடைந்து, நினைப்பு மறப்பு அற்ற பரவெளியில் ஒளித்து, சும்மா இருப்பதற்கு இனி யாவது வருவாய்; இது ஒருவர்க்குந் தெரியாத ஒன்றாகும்.

## 18

வையிற் கதிர்வடி வேலோனை வாழ்த்தி வறிஞர்க்கென்றும்
நொய்யிற் பிளவள வேனும் பகிர்மின்க ளுங்கட்கிங்ஙன்
வெய்யிற் கொதுங்க வுதவா வுடம்பின் வெறுநிழல்போல்
கையிற் பொருளு முதவாது காணுங் கடைவழிக்கே.

### பதவுரை

நுங்கட்கு = (உலகினரே!) உங்களுக்கு, இங்ஙன் = இவ் விடத்து, வெய்யிற்கு = வெய்யிலுக்கு, ஒதுங்க உதவா = ஒதுங்கி நிற்க உதவாத, உடம்பின்=இந்த யாக்கையின், வெறு நிழல் போல்=பயனற்ற நிழலைப்போல், கடைவழிக்கு=மரண காலத்தில் ஆன்மா புறப்பட்டுச் செல்லும் இறுதி வழிக்கு, கையில் பொருளும்=உங்கள் கையிலுள்ள பொருளும், உதவாது காணும் =துணை செய்ய மாட்டாது என்றதை உணர்ந்துகொள்ளுங்கள் (ஆதலால்), வையின்=கூர்மை மிகுந்து, கதிர்=ஒளிசெய்கின்ற, வடிவேலோனை=வடித்தெடுத்த வேற்படையையுடைய முருகப் பெருமானை, வாழ்த்தி=துதித்து, வறிஞர்க்கு=ஏழைகளுக்கு, என்றும்=எக்காலமும், நொய்யின் பிளவு அளவேனும்=நொய்யிற் பாதியளவாயினும், பகிர்மின்கள்=பங்கிட்டுக்கொடுங்கள்.

### விரிவுரை

வையிற் கதிர்வடிவேல்:—

வேல் என்பது ஞானம். ஞானம் கூர்மையுடையது ஆகும். இதனைப் புலப்படுத்தவே நம் பரமாசிரியராகிய மணிவாசகனார்,

"கூர்த்த மெய்ஞ் ஞானத்தால் கொண்டுணர்வார் தங்கருத்தில்
நோக்கரிய நோக்கே நுணுக்கரிய நுண்ணுணர்வே"

என்பாராயினர்.

அன்றியும் ஞானம் ஒளிர்வது ஆகும். அறியாமையாகிய இருளை நீக்கும் தன்மையுடையதாம். இதனை உணர்த்தவே சுவாமிகள் 'வையிற்கதிர்' என்று வேலைச் சிறப்பித்தார். அன்றியும், வடிவேல் என்றது ஏனைய வேல் போல் உலைக் களத்தில் காய்ச்சி வடித்ததன்று. பாசஞான பசுஞானங் களினின்றும் வடித்தெடுத்த பதிஞானம் என்பதனைப் புலப் படுத்துகின்றது.

வேலோனை வாழ்த்தி:—

ஒரு பொருளை ஒருவருக்குத் தருமஞ் செய்யும்போது "நான் தருகிறேன்" என்ற எண்ணம் இருத்தலாகாது. அங்ஙனமிருக்கின் அது இராஜஸ தருமமாம். அங்ஙனமின்றி சத்துவகுணத்துடன் தருமஞ் செய்யினும் அத்தருமத்தினுல் வரும் புண்ணியத்தை அனுபவிக்க மீண்டும் பிறக்கவே நேர்கின்றது. பாவம் இருப்பு விலங்கையும், புண்ணியம் பொன் விலங்கையும் ஒக்கும். ஆதலால் தருமஞ் செய்யும் போது, "இப்பொருள் குமரக்கடவுள் கொடுத்தது" என் றும், "அவனுடைய பொருளை அவனடியார்க்குத் தரு கின்றேன்" என்றும் எண்ணிக் கொடுத்து, தருமத் தால் வரும் புண்ணியத்தையும் குகார்ப்பணஞ் செய்தல் வேண்டும். அதனுல் ஆகாமியம் விளையாது. அதன் பயனுக இருவினையொப்பு மலபரிபாகம் உண்டாகும். அத னுல், அறஞ்செய்யும்போது வேலோனை வாழ்த்துமாறு உபதேசித்தனர்.

வறிஞர்க்கு என்றும்:—

தருமம் ஏழைகட்கே செய்தல் வேண்டும். அது எப் போதும் செய்ய வேண்டும். ஏழைகட்கு ஈவதையே ஈகை என்ருர் ஆசிரியர் திருவள்ளுவர்;

வறியார்க்கொன் றீவதே யீகைமற் றெல்லாம்
குறியெதிர்ப்பை நீர துடைத்து.

பொருளுடையார்க்கு ஈவது ஈகையாகாது. ஆதலால், வறியோர்க்கு இயன்றவரை எந்நாளும் தருமஞ் செய்ய வேண்டும்.

**நொய்யில் பிளவளவேனும் பகிர்மின்கள்:—**

தருமஞ் செய்தற்கு இயல்பில்லாதவர்கள் இயன்றவரை நொய்யிற் பாதியளவாயினும் ஏழைகட்குப் பகிர்ந்து கொடுத்தல் வேண்டும். நற்சிந்தையும், நற்சொல்லும், நற்செயலும் என்று மூவகைப்பட்ட அறத்தை முறையே மனத்தாலும் வாக்காலும் காயத்தாலும் இயலுந் திறத்தான் ஓவாது செய்தல் வேண்டும்.

ஒல்லும் வகையா னறவினை யோவாதே
செல்லும்வா யெல்லாஞ் செயல். —திருக்குறள்.

இக்கருத்தையே சுவாமிகள் திருச்செந்தூர்த் திருப்புகழிலுந் தெரிவிக்குமாறு காண்க.

"எனது பொருளெனுமருளை யின்றிக் குன்றிப்
பிளவளவு தினையளவு பங்கிட் டுண்கைக்
கிளையமுது வசைதவிர இன்றைக் கன்றைக் கெனநாடா
திடுக கடிது"

**வெய்யிற் கொதுங்க உதவா உடம்பின் வெறுநிழல்:—**

நமக்கு மிகவும் உரித்தென்று கருதப்படுகின்ற உடம்பின் நிழல் வெய்யிற்கு ஒதுங்கத் தனக்கு உதவாதவாறு போல், நாம் அரிதிற்றேடிய கைப்பொருள் ஒன்றும், இறுதி நாளில் மரணயாத்திரை செல்லும்போது உடன் வராது. நாம் செய்த அறத்தினுலாய புண்ணியமே உடன் வந்து உதவும். "எங்காயினும் வரும் ஏற்பவர்க்கிட்டது" என்ற கந்தரலங்கார வாக்கையும் உன்னுக.

அன்றறிவா மென்னு தறஞ்செய்க மற்றது
பொன்றுங்கால் பொன்றுத் துணை. —திருக்குறள்.

கையிற் பொருளு முதவாது காணுங் கடைவழிக்கே:—

பொருளும் என்ற எச்சஉம்மையால், மனைவி, மைந்தர், மாடு, வீடு, முதலியவை யாவும் நம்முடன் மறுமைக்குத் தொடர்ந்து வாரா; ''பற்றித் தொடரும் இருவினை புண்ணிய பாவமுமே''.

வாதுற்ற திண்புய ரண்ணாமலையார் மலர்ப்பதத்தைப்
போதுற் றெப்போதும் புகலு நெஞ்சே இந்தப் பூதலத்தில்
தீதுற்ற செல்வமென் தேடிப்புதைத்த திரவியமென்
காதற்ற ஊசியும் வாராது காணுங் கடைவழிக்கே.

என்ற திருவெண்காட்டடிகள் திருவாக்கை இதனோடு கூட்டிச் சிந்திக்கவும். கடைவழி என்பது இறுதியில் உயிர் உடம்பை விட்டுச் செல்லும் மரணயாத்திரையைக் குறிக்கும்.

### கருத்துரை

உலகினரே! வெய்யிற் கொதுங்க உதவா உடலின் வெறு நிழல்போல் இறுதியில் உயிர் பிரியுங்கால் கைப் பொருள் முதலிய யாவும் பயன்படமாட்டா. ஆதலால், வடிவேற் பெருமானை வாழ்த்தி இயன்ற வரை ஏழை கட்கு என்றும் உதவி செய்மின்கள்.

## 19

சொன்ன கிரௌஞ்ச கிரியூ டுருவத் தொளைத்தவைவேல்
மன்ன கடம்பின் மலர்மாலை மார்பமௌ னத்தையுற்று
நின்னை யுணர்ந்துணர்ந் தெல்லாமொருங்கிய நிர்க்குணம்பூண்
டென்னை மறந்திருந் தேனிறந் தேவிட்ட திவ்வுடம்பே.

### பதவுரை

சொன்ன = பொன்னிறமான, கிரௌஞ்சகிரி=கிரவுஞ்ச மலையை, ஊடுருவ=நடுவே நுழைந்து செல்லும்படி, தொளைத்த= தொளைசெய்த, வை வேல்=கூர்மை பொருந்திய வேற்படை யைத் தாங்கிய, மன்ன=தலைவரே! கடம்பின் மலர் மாலை=கடப்ப மரத்தில் மலர்கின்ற நறுமலர் மாலையைச் சூடிக்கொண்டுள்ள, மார்ப=திருமார்பையுடையவரே! மௌனத்தை உற்று=மௌன

நிலையையடைந்து, நின்னை=தேவரீரை, உணர்ந்து உணர்ந்து=மெய்யறிவால் அறிந்து அறிந்து, எல்லாம் ஒருங்கிய=ஏனைய பாசகரணங்களும் பசுகரணங்களும் அடங்கிய, நிர்க்குணம் பூண்டு=முக்குணரகிதத்தை யடைந்து, என்னை மறந்து இருந்தேன்=ஜீவனாகிய என்னையும் மறந்து சிவோகம் பாவனையில் நிலைத்திருந்தேன், இவ்வுடம்பு இறந்தே விட்டது=இந்தச் சரீர வாசனை முற்றிலும் அழிந்தேவிட்டது.

## விரிவுரை

**சொன்ன:—**

சுவர்ன என்ற சொல் தமிழில் சொன்ன என மருவியது. சொன்ன என்பதற்குக் கூறிய என்று பொருள் கொள்வாரு முளர்; அது சிறப்புடைத்தாகாது. நம் சுவாமிகள் பல இடங்களில் கிரவுஞ்சமலையைப் பற்றிச் சொல்லும்போது பொன்மயமான மலை என்றருளிச் செய்துள்ளார். அவ் வாக்குகளால் மேற்கூறிய கருத்து நன்கு வலியுறுமாறு காண்க.

"கனகக் கிரியைப் பொரும்வேலா" —திருப்புகழ்.

"குருகுபெயர் பெற்ற கனவட சிகரி" —வகுப்பு.

கனம்—பொன்.

"பொன்னஞ் சிலம்பு புலம்பவரு மெங்கோன்"

—அலங்காரம்.

மாயைக்கு உறைவிடமாகித் தாரகனுக்குத் துணை செய்த கிரவுஞ்சமலையைப் பிளந்தெறிந்து, அதனில் மயங்கிக் கிடந்த இலக்கத் தொன்பான் வீரர்களையும், பூதத் தலைவர்களையும் பெருமான் காப்பாற்றியருளினர்.

**கடம்பின் மலர்மாலை மார்ப:—**

முருகக் கடவுளுக்கு கடப்பமலர் மிகவும் உகந்தது. அதனாலேயே பெருமானுக்குக் கடம்பன் என்ற திருநாமமும் வழங்குமாறு காண்க

"பூக்குங் கடம்பா முருகா கதிர்வேலா"

—நக்கீரர்.

''கடிமாமலர்க்கு ளின்ப முளவேரி கக்கு நண்பு
தருமா கடப்பமைந்த தொடைமாலை
கனமேரு வொத்திடும்ப னிருமாபுயத் தணிந்த
கருணாகர ப்ரசண்ட கதிர்வேலா''

''பரிமள மிஞ்சக் கடப்ப மாலையு மணிவோனே''
—திருப்புகழ்.

மௌனத்தை யுற்று:—

''மோனமென்பது ஞானவரம்பு'' என்ற ஞானக் கிழவியின் திருவாக்கின்படி ஞானத்திற்கு எல்லையாக இருப்பது மௌனம். பேசா அநுபூதி பிறந்தவர்க்கே பெருஞ்சுகங் கிடைக்கும். எல்லாவிதமான சாதனங்களும் முடிவில் மௌனத்தையே யடைவிக்கின்றன. ''கண்மூடி மௌனியாகித் தனியே இருப்பதற்கெண்ணினேன்'' என்ற நம் தாயுமான அடிகளின் அநுபவ வாக்கை உன்னுக.

அருணகிரிநாதருக்கு ஆறுமுகப்பெருமான் தாமே குருமூர்த்தியாக எழுந்தருளி வந்து மௌனோபதேசம் புரிந்தனர்.

''அருணை நகர்மிசை கருணையொ டருளிய
பரம வொருவச னமுமிரு சரணமு மறவேனே''
--திருப்புகழ்.

இந்த மௌனநிலை எளிதில் கிடைப்பதன்று. பல காலுஞ் செய்த சிவபூசையினாலும், ஆலய வழிபாட்டாலும், சித்த சுத்தியாலுமே கிடைப்பதாம். அதனை ஆண்டவனிடம் யாசித்துப் பெறுவது எளிய வழியாம். அருணகிரிநாதர் அறுமுகவள்ளலிடம் விண்ணப்பித்த திருவாக்கையும் உய்த்துணர்க.

''சலில லிபியன சனனமு மலமலம்
இனியு னடியரொ டொருவழி படஇரு
தமர பரிபுர சரணமு மவுனமு மருள்வாயே''
—திருப்புகழ்.

**நின்னை யுணர்ந்துணர்ந்து:—**

பரமபதியாகிய குமாரக்கடவுளை மெய்யறிவினுல் அறிதல்.

"கந்தனை யறிந்தறிந் தறிவினில்
சென்று செருகுந்தடந் தெளிதர" —திருப்புகழ்.

**எல்லாமொருங்கிய:—**

கருவி கரணங்கள் கழன்று தனித்து நிற்கு நிலை.

"எல்லாமற என்னை யிழந்த நலஞ்
சொல்லாய் முருகா சுரபூபதியே" —அநுபூதி

"உரையவிழ உணர்வவிழ உளமவிழ உயிரவிழ
உளபடியை உணருமவ ரநுபூதி யானதுவும்"—வகுப்பு

**நிர்க்குணம் பூண்டு:—**

சத்துவ ராஜஸ தாமஸமென்ற முக்குணங்களும் நீங்கப்பெற்று, இறைவனது அருட்குணங்களை யடைந்து நிற்கும்நிலை. நிர்க்குணமென்பதற்கு முக்குணமற்ற நிலை என்பதுதான் பொருள். அருட்குணங்களை யடைதல் வேண்டும்.

"அரிவையர்க் கன்புருகு சங்கதந் தவிர முக்குண மாள"
—திருப்புகழ்.

**என்னை மறந்திருந்தேன்:—**

ஜீவபோதங் கழன்ற இடம். சிவோகம் பாவனையால் ஜீவன் தன்னை மறந்து சிவத்தை நினைந்து நிற்கும்.

"யானாகிய என்னை விழுங்கி வெறுந்
தானாய் நிலை நின்றது தற்பரமே" —அநுபூதி.

**இறந்தேவிட்ட திவ்வுடம்பே:—**

உடம்பின் வாசனையற்ற நிலை. இந்த நிலை வரப்பெற்ற ஞானிகட்கு பிராரப்தமனுபவிக்கினும் அதனால் வரும் இன்ப துன்பந் தோன்றாது. அதன் வாசனையுந் தொடராது.

"யான்வேறு என் உடல்வேறு
செகத்தியாவும் வேருக நிகழ்ச்சியா மஞேதீத
சிவச்சொருப மாயோகி யென ஆள்வாய்"
—திருப்புகழ்.

### கருத்துரை

கிரவுஞ்சத்தைப் பிளந்த வேலாயுதரே! கடப்பமலர் மாலை மார்பரே! மௌனத்தையுற்று தேவரீரைப் பதியறிவா லறிந்து கருவி கரணங்களை யிழந்து, நிர்க்குணமுற்று ஜீவ போதங் கெட்டு சிவபோதமுற்றிருந்தேன்; அப்போது உட லின் வாசனை அறவே ஒழிந்தது.

## 20

**கோழிக் கொடிய னடிபணி யாமற் குவலயத்தே**
**வாழக் கருது மதியிலி காளுங்கள் வல்வினைநோய்**
**ஊழிற் பெருவலி யுண்ணவொட் டாதுங்க ளத்தமெல்லாம்**
**ஆழப் புதைத்துவைத் தால்வரு மோநும் மடிப்பிறகே.**

### பதவுரை

கோழிக் கொடியன்=சேவலைக் கொடியாக உயர்த்திய செவ் வேட் பரமனது, அடி பணியாமல்=திருவடிக் கமலங்களை வணங்காமல், குவலயத்தே=இப் பூதலத்தின்கண்ணே, வாழக் கருது=வாழ்வதற்கு நினைக்கின்ற, மதி இலிகாள்=அறிவில்லாத வர்களே! உங்கள்=உங்களுடைய, வல்வினை நோய்=வலிய தீவினையாலுண்டாகும் நோயாகிய, ஊழின் பெருவலி=ஊழினது பெரிய வலிமையானது, உண்ணவொட்டாது=செல்வத்தை அநு பவிக்க விடுவதில்லை, உங்கள் அத்தம் எல்லாம்=உங்களுடைய செல்வம் முழுவதையும், ஆழப் புதைத்து வைத்தால்=ஆழமாக மண்ணில் புதைத்து வைத்தீர்களாஞல், நும் அடிப்பிறகே வரு மோ=நீங்கள் உடலை விட்டு நீங்கும்போது உங்கள் காலடியின் பிறகே தொடர்ந்து வருமோ? (ஒரு போதும் வரமாட்டாது).

## விரிவுரை

**கோழிக் கொடியன்:—**

புறத்திருளை நீக்கப் புணரியில் எழும் சூரியனது வர வுணர்த்தி சேவல் இன்பத்தை நல்கும். அகத்திருளை நீக்க அருளாழியில் எழும் குகப் பிரமமாம் ஞான சூரியனைக் கூவி யழைத்து அச் சுர ஞானபானுவின் வரவு உணர்த்தி பேரின் பத்தை வழங்கும் நாத சொரூபியாக எம்பிரான் கொடியி லுள்ள சேவல் விளங்குகின்றது.

**அடிபணியாமல் குவலயத்தே வாழக் கருது மதியிலிகாள்:—**

முருகப் பெருமானது திருவடித் தாமரையை வணங்கு வதே அறிவுடைமையாகும். அறிவு பெற்றதற்குப் பயன் இறைவனை வழிபடுவதே. இறைவனை யறியும் அறிவே மெய்யறிவு. அவ்வறிவு பெருதவர்கள் அறிவிலிகளே.

''அவனுடைய அறிவெல்லாம் எமையறியும் அறிவே''

என்ற சிவபிரான் திருவாக்கையும் உன்னுக.

பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னுஞ்
செம்பொருள் காண்ப தறிவு. —திருக்குறள்.

**ஊழில் பெருவலி:—**

பொருள் ஈட்டுவதற்கு ஒரு ஊழ்; அதனைத் துய்ப் பதற்கு ஒரு ஊழ். சிலர் ஓயாமல் உழைத்துப் பொருளை யிட்டி அதனைச் சிறிதும் அநுபவிக்காமல் பொருள் காக் கும் பூதம்போல் காத்திருந்து வீணே விளிவர். பனியால் வாடுபவன் ஓயாமல் சருகு தேடிக் குளிர் காயாமல் உழல் வது போலாகும். ஊழின் வலி உண்ணவொட்டாமல் தகைக்கின்றது.

''ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினுந் தான்முந் துறும். —திருக்குறள்.

**ஆழப் புதைத்து வைத்தால்:—**

பண்டைக் காலத்தில் காகித நாணயம் இன்மையாலும் சேம நிதி நிலையங்கள் (Banks) இன்மையாலும் செல்வங் களைப் புதைத்து வைப்பது வழக்கமாயிருந்தது.

"பாடுபட்டுத் தேடிப் பணத்தைப் புதைத்து வைத்துக்
கேடுகேட்ட மானிடரே கேளுங்கள்"

—ஔவை.

"தீதுற்ற செல்வமென் தேடிப் புதைத்த திரவியமென்"

—பட்டினத்தடிகள்.

"தேடிப் புதைத்துத் திருட்டிற் கொடுத்துத் திகைத்திளைத்து
வாடிக் கிலேசித்து வாழ்நாளை வீணுக்கு மாய்ப்பவரே"

—அருணகிரிநாதர்.

என்ற வாக்குகளால் விளங்குமாறு காண்க.

வருமோ நும் அடிப்பிறகே:—

மரண யாத்திரை போகுங்கால் தேடிப் புதைத்த செல்வம் உடன் தொடர்ந்து செல்வதில்லை.

"அத்தமும் வாழ்வும் அகத்துமட் டேவிழி யம்பொழுக
மெத்திய மாதரும் வீதிமட்டே"

என்ற பட்டினத்தடிகள் திருவாக்கையும் நோக்குக. நாம் செய்த தருமமே தொடர்ந்து வந்து மறுபிறப்பில் உதவி செய்யும்.

பொங்கார வேலையில் வேலைவிட் டோனருள் போலுதவ
எங்கா யினும்வரும் ஏற்பவர்க் கிட்ட(து) இடாமல் வைத்த
வங்கா ரமுமுங்கள் சிங்கார வீடு மடந்தையருஞ்
சங்காத மோகெடு வீர்உயிர் போமத் தனிவழிக்கே.

—அலங்காரம்.

## கருத்துரை

குமாரக் கடவுளை வணங்காமல் வாழக் கருதும் அறிவிலிகளே! உங்கள் செல்வத்தை நீங்கள் செய்த ஊழ் உண்ண வொட்டாது; அவைகளை ஆழப் புதைத்து வைத்தால் உம்முடன் மறுபிறப்புக்குத் தொடர்ந்து வராது.

## 21

மரணப்ர மாத நமக்கில்லை யாமென்றும் வாய்த்ததுணை
கிரணக் கலாபியும் வேலுமுண் டேகிண் கிணிமுகுள
சரணப்ர தாப சசிதேவி மங்கல்ய தந்துரக்ஷா
பரணக்ரு பாகர ஞான கரசுர பாஸ்கரனே.

*பதவுரை*

கிண்கிணிமுகுள=கிண்கிணிகள் ஒலிக்கும்படியான, சரணப்ரதாப=திருவடியையுடைய வீரரே! சசிதேவி=இந்திராணியின், மாங்கல்ய தந்து=மங்கல நாணினை, ரக்ஷ ஆபரண=காப்பாற்றித் தாங்கியவரே! க்ருபை ஆகர=கருணைக்கு உறைவிடமானவரே! ஞான ஆகர=அறிவு வடிவினரே! சுர பாஸ்கரனே=தேவ சூரியனே! என்றும் வாய்த்த துணை=எந்நாளும் இனிது வாய்த்த துணையாக, கிரண கலாபியும்=ஒளியுள்ள மயிலும், வேலும்=வேற்படையும், உண்டு=அடியேங்களுக்கு உள; (ஏ - அசை)(ஆதலால்,) மரணப்ரமாதம்=இறப்பு என்ற அபாயமானது, நமக்கு=அடியார்களாகிய எங்களுக்கு, இல்லை ஆம்=இல்லை ஆகும்.

*விரிவுரை*

**மரணப்ரமாதம்:—**

மரணமென்பது ஒரு பெரிய அபாயம். அது தடுக்க முடியாத ஒன்றும். எத்துணைச் செல்வமுடையோராலும், எத்துணைச் சிறந்த வீரர்களாலும், இணையற்ற பேராற்றலுடையோராலும், வெண்கொற்றக் குடையின் கீழிருந்து தனிச் செங்கோல் தாங்கி உலகெலாம் அரசு புரியும் வாள் வேந்தராலும், ஐயந்திரிபறக் கற்ற நல்லிசைப் புலவராலும், மரணத்தைத் தடுக்க முடியாதென்பது கண்கூடு.

உடம்பினின்றும் உயிர் பிரியும்போது அளவற்ற துன்பத்தை உயிர் அடைகின்றது. பயங்களுக்கெல்லாந் தலையாயது மரணபயமேயாம். ‘‘யானேதும் பிறப்பஞ்சேன் இறப்பதனுக் கென்கடவேன்’’ என்ற மணிவாசகத்தையும் உய்த்துணர்க.

நமக்கில்லையாம்:—

மேற் கூறிய பெரிய மரணபயம் காலனையுதைத்த கண்ணுதற் கடவுளுடைய கனல் விழியினின்றும் பரஞ் சுடருருவாய்த் தோன்றிய கந்தக் கடவுளின் அடியார்கட் கில்லை.

''நாமார்க்குங் குடியல்லோம் நமனை யஞ்சோம்''

—அப்பர்.

''வாராதக லந்தகா வந்தபோதுயிர் வாங்குவனே''

''திருமுகம் ஆறுங் கண்ட
தமராகி வைகுந் தனியான ஞான தபோதனர்க் கிங்கு
எமராஜன் விட்ட கடையேடு வந்தினி யென்செயுமே''

—அலங்காரம்.

கிரணக்கலாபி:—

கிரணம் – ஒளி, கலாபம் - தோகை; ஒளியையுடைய தோகை; சினையாகு பெயராய் தோகையையுடைய மயிலைக் குறித்தது.

வேலும் உண்டே:—

உயர்வுபற்றி அடை ஒன்றும் கூறினாரில்லை.

கிண்கிணிமுகுள சரணப்ரதாப:—

முருகவேள் என்றுமகலாத இளம்பூரணனாதலால் அவருடைய திருவடியில் கிண்கிணி ஒலித்துக்கொண்டிருக் கின்றது.

''இனியநாத சிலம்பு புலம்பிடும்
அருண ஆடக கிண்கிணி தங்கிய அடிதாராய்''

—திருப்புகழ்.

சகல ஆன்மாக்களும் சரணம் புகுந்து உய்வுபெற நிற்பது இறைவன் திருவடியேயாகலான், சரணமெனப் பட்டது.

''குமரா சரணம் சரணமென் றண்டர் குழாந்துதிக்கும்
அமராவதியிற் பெருமாள்''

சசிதேவி மாங்கல்ய தந்து ரக்ஷாபரண:—

சூரபன்மனால் இந்திரன் மாண்டிருப்பனேல் இந்திராணி மங்கலநாணிழந்திருப்பள். அங்ஙனம் இழக்கா வண்ணம் எந்தை கந்தவேள் அயிராணியின் மங்கல நாணைக் காத்து அருள்புரிந்தனர்.

"வெள்ளி மலையெனவே
கால் வாங்கி நிற்குங் களிற்றான் கிழத்தி கழுத்திற்கட்டு
நூல் வாங்கிடாதன்று வேல்வாங்கி பூங்கழல் நோக்குநெஞ்சே"
—அலங்காரம்.

"இந்த்ராணி மங்கல்ய தந்து ரக்ஷாபரண
இகல்வேல் விநோதன்" —மயில் விருத்தம்.

ஞானகரசுர பாஸ்கரனே:—

ஞானமே முருகவேட்கு வடிவம். ஞானத்திற்குப் பிறப்பிடமும் அவரே; உறைவிடமும் அவரே. "ஞானந் தானுருவாகிய நாயகன்" என்ற முதல்வன் புராண வசனத்தாலும், "ஞானபிராமதாப வடிவமும்", "ஞானபண்டித ஸ்வாமி" என்ற தமிழ் வேதத் திருவாக்குகளாலும் தேர்ந்து தெளிக. முருகனை வழிபட்டார்க்கே மெய்ஞ்ஞானம் உண்டாகும்.

அகத்திருளை நீக்கும் ஞானசூரியனாகிய கந்தப் பெருமான் தேவர்களுக்குள்ள அகற்றற்கரிய அந்தகாரத்தையும் நீக்குகின்றார்.

கருத்துரை

ஞானபண்டிதரே! தேவாதித்தரே! தேவரீரது வேலும் மயிலும் எமக்குத் துணையாயிருப்பதால், இனி எமக்கு மரணபயம் இல்லை.

**22**

மொய்தா ரணிகுழல் வள்ளியை வேட்டவன் முத்தமிழால்
வைதா ரையுமங்கு வாழவைப் போன்வெய்ய வாரணம்போற்
கைதா னிருப துடையான் தலைபத்துங் கத்தரிக்க
எய்தான் மருகன் உமையாள் பயந்த இலஞ்சியமே,

## பதவுரை

மொய்=வண்டுகளுடன் கூடிய, தார் அணி குழல்=பூமாலைகளைச் சூடிக்கொண்டுள்ள கூந்தலையுடைய, வள்ளியை=வள்ளியம்மையை,வேட்டவன்=மணஞ்செய்து கொண்டவரும், வெய்ய வாரணம் போல்=கொடிய மதயானை போன்ற, கைதான் இருபது உடையான்=இருபது கரங்களையுடைய இராவணனது, தலை பத்துங் கத்தரிக்க=பத்துத் தலைகளும் வெட்டுண்டு வீழ, எய்தான்=கணைவிட்டருளிய திருமாலினது, மருகன்=திருமருகரும், உமையாள் பயந்த=உமாதேவியார் பெற்றருளிய, இலஞ்சியம்=சரவணபவரும் ஆகிய முருகப் பெருமான், முத்தமிழால்=மூன்று வகையான செந்தமிழைக் கொண்டு, வைதாரையும்=வசை சொல்லியவரையும், அங்கு=அவ்விடத்திலேயே, வாழ வைப்போன்=இன்ப வாழ்வில் இனிது திளைக்குமாறு அருள் புரிபவராகும்.

## விரிவுரை

**மொய்தார் அணிகுழல் வள்ளியை வேட்டவன்:—**

செந்தமிழ் நாட்டில் தமிழ் பேசுவோருடைய குலத்தில் திருவவதாரஞ் செய்த எம்பிராட்டியாராகிய வள்ளியம்மையை மணந்தவர் என்பதனாலும், முருகன் செந்தமிழ்ப் பிரியன் என்பது தெளிவாகின்றது.

"தேனூறு கிளவிக்கு வாயூறி நின்றவன்" —குமரகுருபரர்

**முத்தமிழால் வைதாரையும் அங்கு வாழ வைப்போன்:—**

செந்தில்வாழ் செந்தமிழ்க் கடவுளாகிய செவ்வேட் பரமன், தமிழ்த் தெய்வம்; தமிழ் விருப்பர்; தமிழ்மாலையர்.

நக்கீரர், பொய்யாமொழி, அருணைநாதர், சிதம்பர அடிகள், குமரகுருபரர், இராமலிங்க அடிகள், பாம்பனடிகள் முதலிய அடியார்கள் துதி செய்து அருள் பெற்றனரேயன்றி, வைது அருள் பெற்றிலரே? அங்ஙனம் பெற்றவர் யாவர் எனின், கூறுதும்.

"அப்பன் இரந்துண்ணி ஆத்தாள் மலைநீலி
ஒப்பரிய மாமன் உறிதிருடி—சப்பைக்கால்
அண்ணன் பெருவயிறன் ஆறுமுகத் தானுக்கிங்
கெண்ணும் பெருமை யிலை.

மருவிருக்கும் வேளூரின் வயித்திமகன் குறமகளை
[மணந்தானென்றே
உருகியரன் நஞ்சுண்டான் உமையவளும் தவம்புரிந்தாள்
[உயர்மான்மேனி
கருகிமுகம் மண்தின்றான் கமலன்முகம் நாலானான் கடவுளோர்கள்
இருவிழியும் இமையாமல் இரவு பகல் உறங்காமல்
[இருக்கின்றாரே."

[இப்பாடல் தற்குறிப்பேற்றணி]

என்று பாடிய தமிழ்ப் புலவருக்கும் அருள் புரிந்தார். அருணகிரிநாதரும்,

"சேணுழையிடு மிதண்மே லரிவையை
மேவியேமயல் கொளலீலைகள் செய்து
சேர நாடிய திருடா"

என்று வைது அருள் பெற்றதைக் காண்க. அங்கு-எங்கே வைகின்றனரோ அங்கேயே அவருக்கு அருள் புரிபவன். அங்கு - அந்த உலகில் (புண்ணிய உலகில்) வாழவைப்போன் என்றும் பொருள் கொள்க.

முத்தமிழால் வைதாரையும் அப்பால் வாழவைப்பவன்:

இயற்றமிழ், இசைத்தமிழ், நாடகத்தமிழ். வைதாரையும் என்ற எச்ச உம்மையால், வாழ்த்தினவரை இயல்பாகவே வாழவைப்பார் என்பது தெளிவாகின்றது. "அங்கு" என்ற பதம் மிக அருமையானது. ஒருவனை ஒருவன் வையப்பட்ட இடத்தில் மிக்க சீற்றம் எழும். நம் கந்தவேள் எங்கே தமிழால் வைவார்களோ அவர்களை அங்கேயே வாழவைப்பாராம். என்ன அருமை! என்ன அருள்! அப்பனுக்குத் தமிழிலுள்ள ஆர்வந்தான் என்னே!

கந்தவேளுக்குத் தந்தையாகிய அந்திவண்ணரும் அங்ஙனமே தமிழ் வேட்கையராவர். மதுரையில் நாற்பத்தொன்பது புலவரில் தாமொருவராயிருந்து தமிழாராய்ந்ததும், மதுரவாசகமாகிய திருவாசகங் கேட்கும் பொருட்டு மண் சுமந்து அடிபட்டதும், இரவில் ஒரு காலன்று இரு கால் பரவை வீட்டிற்குத் தம் வேதங் காணுத வித்தகத் திருவடி சிவக்கத் தூது சென்றதும் இத் தமிழின் பொருட்டன்றோ?

"பித்தா" என்று வைத சுந்தரருக்கு ஐராவண மனுப்பிய அருட்டகைமையை உன்னுந்தொறும் உள்ளத்தில் உவகை ஊற்றெடுக்கின்றதே.

இந்திரன் மால்பிரம னெழிலார்மிகு தேவரெல்லாம்
வந்தெதிர் கொள்ளவென்னை மத்தயானை யருள்புரிந்து
மந்திரமா முனிவரிவ னாரென எம்பெருமான்
நந்தம ரூரனென்றான் நொடித்தான்மலை யுத்தமனே.

—சுந்தரர் தேவாரம்.

"பித்தனென்றொருகால் பேசுவரேனும்
பிழைத்தவை பொறுத்தருள் செய்யும்" —திருவிசைப்பா.

முருகப்பெருமான் தமிழால் வைதாலும் வாழவைப்பாரென்று விளங்குவதால், வாழ்த்தினர்க்கு அவர் எத்தகைய அருள் புரிவார் என்பது கருதற்பாலது. அப் பரமபதியை அடையும் நெறிகளில் தலைசிறந்தது, அரிய பெரிய தமிழால் அவரை வாழ்த்தி வணங்குதலாம்.

"கனத்த செந்தமிழால் நினையேதினம்
நினைக்கவும் தருவாய்"

"வண்டமிழ் விநோதம் அருள்வாயே"

என்று சுவாமிகளே பிற இடங்களில் விண்ணப்பிக்குமாறு காண்க. அன்பர்கள் தமிழால் அவரைத் துதித்து இகபர நலன்களை எளிதிற் பெறுவார்களாக.

இலஞ்சியமே:—

இலஞ்சி-குளம். சரவணப் பொய்கையில் வெளிப்பட்டவர். இலஞ்சி என்ற திருத்தலத்தில் வாழ்பவர் என்று கூறினும் அமையும்.

### கருத்துரை

வள்ளி கணவரும், மால்மருகரும், பார்வதி பாலருமாகிய முருகவேள் முத்தமிழால் வைதாரையும் அங்கு வாழவைப்பார். ஆதலால் தமிழால் அவரை வாழ்த்தி உய்வு பெறுவீர்கள்.

## 23

தெய்வத் திருமலைச் செங்கோட்டில் வாழுஞ் செழுஞ்சுடரே
வைவைத்த வேற்படை வானவ னேமற வேனுனைநான்
ஐவர்க் கிடம்பெறக் காலிரண் டோட்டி யதிலிரண்டு
கைவைத்த விடு குலையுமுன் னேவந்து காத்தருளே.

### பதவுரை

தெய்வத் திருமலை=தெய்வீகம் பொருந்தியதும் அழகிய மலையுமாகிய, செங்கோட்டில்=திருச்செங்கோட்டில், வாழும்=உறைகின்ற, செழும் சுடரே=செழுமையைத் தரும் ஜோதியே ! வை வைத்த=கூர்மை பொருந்திய, வேல்படை=வேலை ஆயுதமாகக் கொண்ட, வானவனே=தெய்வமே! நான் உனை மறவேன்= அடியேன் தேவரீரை ஒரு போதும் மறக்கமாட்டேன், ஐவர்க்கு இடம்பெற=ஐம்புலன்களுக்கு இடமுண்டாகும்படி, கால் இரண்டு ஓட்டி=இரண்டுகால்களை நிறுத்தி, அதில்=அதனிடத்து, இரண்டு கை வைத்த=இரண்டு கைகளை அமைத்து வைத்துள்ள, வீடு= வீடுபோன்ற இந்த உடம்பு, குலையு முன்னே=அழிவதற்கு முன் பாகவே, வந்து=தேவரீர் அடியேனுக்கு முன் தோன்றி வந்து, காத்தருள்=காப்பாற்றியருள்வீர்.

### விரிவுரை

**தெய்வத் திருமலைச் செங்கோடு:—**

திருச்செங்கோடு என்னும் அழகிய மலை முருகப் பெருமானுடைய திருத்தலம்; இது சேலம் மாவட்டத்திலுள்ளது. இங்கு சிவபெருமான் அர்த்தநாரீஸ்வர வடிவமாக விளங்குகின்றார். இத்தலத்தில் முருகப்பெருமான் கண்ணுக்குங் கருத்துக்கும் அடங்காத கவினுடன் விளங்குகின்றார்.

"சேலார் வயற்பொழில் செங்கோடனைச் சென்று கண்டுதொழ நாலாயிரங்கண் படைத்தில னேயந்த நான்முகனே"

அருணகிரிநாத சுவாமிகளுக்குச் செங்கோட்டு ஆண்டவனிடம் அளவிறந்த காதல் உண்டு என்பதற்கு அவர் அடிக்கடி செங்கோடனை நினைப்பதே சான்று.

(1) ஃ ஃ ஃ "கரிக்கோட்டு முத்தைக்
கொழித் தோடுகாவிரிச் செங்கோட னென்கிலை"

(2) ஃ ஃ ஃ ஃ ஃ "பயந்ததனி
வழிக்குத் துணைவடி வேலுஞ் செங்கோடன் மயூரமுமே".

(3) "சேந்தனைக் கந்தனைச் செங்கோட்டு வெற்பனை"

(4) ஃ ஃ ஃ ஃ "கன்னிப் பூகமுடன்
தருமா மருவு செங்கோடனை வாழ்த்துகை சாலநன்றே"

(5) "சேலிற் றிகழ்வயல் செங்கோடை வெற்பன்"

என்ற கந்தரலங்கார வாக்குகளையும், "நாகாசல வேலவ" என்ற கந்தரநுபூதி வாக்கினையும் நோக்குக.

**செழுஞ்சுடரே:—**

ஏனைய ஜோதிகள் வெப்பத்தை நல்கும். ஆறுமுகமாகிய அருட்பெருஞ்ஜோதி தட்பத்தை நல்கும்; 'தழைந்த சிவசுடர்' என்ற திருவாக்கை இதனோடு ஒத்து உன்னுக.

**வை வைத்த வேற்படை:—**

வை-கூர்மை; வெல் என்ற வினையடியாகப் பிறந்தது வேல் என்ற சொல்; படு என்ற பகுதியிலிருந்து படையென்று வந்தது. பகைவரைப் படுப்பது. வேல் என்பது ஞானம்; ஞானம் கூர்மையாக உள்ளது. ஆதலால் வைவைத்த வேற்படையென்றார்.

"கூர்த்த மெய்ஞ் ஞானத்தாற் கொண்டுணர்வார் தங்கருத்தின்
நோக்கரிய நோக்கே" —மணிவாசகர்.

**மறவேனுனை நான்:—**

முருகவேள் திருவருள் முழுவதும் பெற்ற அருணையடிகள் தன்னையாண்ட தலைவனைக் கணமேனும் மறப்பரோ?

"வயலி நகரியி லருள்பெற மயில்மிசை
உதவு பரிமள மதுகர வெகுவித
வனச மலரடி கனவிலு நனவிலும் மறவேனே"

"கருணை யடியரொ டருணையி லொருவிசை
சுருதி புடைதர வருமிரு பரிபுர
கமல மலரடி கனவிலு நனவிலும் மறவேனே"

"வாழினும் வறுமை கூரினு நினது
வார்கழ லொழிய மொழியேனே"

ஐவர்:—

மெய், வாய், கண், நாசி, செவி என்னும் ஐம்புலன்கள். புலன்கள் ஐந்தும் உயிரில்லாத அஃறிணைப் பொருள்களாயினும் உயிர் அவைகளைத் தன்னினின்றும் வேருகப் பிரித்து உயிரில் பொருள் என்று அறியாது உயிர்ப்பொருள்கள் போலக் கருதி அவைகளுக்குள் அடங்கி ஒழுகலால் உயர்திணையாகக் கூறிவைத்தார்.

"புள்ளுவர் ஐவர் கள்வர் புனத்திடைப் புகுந்துநின்று
துள்ளுவர் சூறைகொள்வர் தூனெறி விளையவொட்டார்"
"அழிவுடைத் தாய வாழ்க்கை ஐவரா லலைக்கப்பட்டுக்
கழியிடைத் தோணிபோன்றேன் கடவூர் வீரட்டனுரே"
—அப்பர்.

கைவைத்த விடு:—

உடம்பை வீடாக உருவகம் புரிகின்றனர். காலிரண் டோட்டி என்றதனுல் கால்கள் தூண்களாகும். கைகள் கொடுங்கையாகும்.

கால்கொடுத் திருகையேற்றிக் கழிநிரைத் திறைச்சிமேய்ந்து
தோல்படுத் துதிரநீராற் சுவரெடுத் திரண்டுவாசல்
ஏல்வுடைத் தாவமைத்தங் கேழுசா லேகம்பண்ணி
மால்கொடுத் தாவிவைத்தார் மாமறைக் காடனுரே. —அப்பர்.

இத்தகைய நிலையற்ற உடம்பு அழிவதற்கு முன் காத்தருளுமாறு கந்தவேளை சுவாமிகள் வேண்டுகின்ருர்.

### கருத்துரை

திருச்செங்கோடரே! வேலரே! உடல் அழிவதற்குமுன் அடியேனைக் காத்தருள்வீர்.

(குறிப்பு:—இப்பாடல் நாள்தோறும் பாராயணஞ் செய்தற் குரியது. அன்பர்கள் அநுதினமும் அவசியம் இதனை ஓதி உய்வார்களாக)

### 24

கின்னங் குறித்தடி யேன்செவி நீயன்று கேட்கச்சொன்ன
குன்னங் குறிச்சி வெளியாக்கி விட்டது கோடுகுழல்
சின்னங் குறிக்கக் குறிஞ்சிக் கிழவர் சிறுமிதனை
முன்னங் குறிச்சியிற் சென்றுகல் யாண முயன்றவனே.

கோடு=ஊதுகொம்பும், குழல்=புல்லாங்குழலும், சின்னம்= திருச்சின்னங்களும், குறிக்க=ஒலிக்க, குறிஞ்சி கிழவர்=குறிஞ்சி நிலத்திற்கு உரியவர்களாகிய வேடர்களின், சிறுமிதனை=திருப் புதல்வியாராகிய வள்ளியம்மையாரை, முன்னம்=முற்காலத்தில், குறிச்சியில் சென்று=குறிஞ்சி நிலத்து ஊரில் (சிற்றூர்) போய், கல்யாணம் முயன்றவனே=திருமணஞ் செய்து கொள்ள முயன்றவரே! கின்னம் குறித்து=அடியேனுடைய துன்பத்தைத் தேவரீர் திருவுளத்தே குறிக்கொண்டு, அடியேன் செவி=அத்துய ரத்தை நீக்கும் பொருட்டு அடியேனுடைய காதில், கேட்க= கேட்குமாறு, நீ அன்று சொன்ன=தேவரீர் அந்த நாளில் உபதேசித்தருளிய, குன்னம்=இரகசியம், குறிச்சி=மெய்ஞ்ஞான மலைமேலுள்ள அருளூரிலே, வெளியாக்கிவிட்டது=அடியேனைச் சுத்த பரவெளியாக ஆகிவிட்டது.

கின்னம் குறித்து:—

அருணகிரிநாத சுவாமிகள் திருவருணையில் உள்ளம் உடைந்து, "இனி உயிர் துறப்பேன்" என்று வல்லாளன் புதுக்கிய கோபுரத்தினின்றும் கீழே விழ, அத் துன்பத் தைக் கண்ட கருணைக் கடலாகிய கந்தப் பெருமான், குரு வாக வெளிப்பட்டு, சுவாமிகளைத் தாங்கி, மௌனோபதேசம்

புரிந்தனர். இவ் வரலாற்றை இப்பாடல் உணர்த்துகின்றது. கின்னம்—துன்பம்.

“கின்னங் களேயுங் க்ருபைசூழ் சுடரே —அநுபூதி.

அடியேன் செவி நீயன்று கேட்கச்சொன்ன குன்னம்:—

தனக்கு ஆறுமுகப் பெருமான் உபதேசித்த தன்மையைப் பல இடங்களில் அடிகள் விளக்கியிருக்கின்றனர்.

“எட்டிரண்டுமறி யாத என்செவியில்
எட்டிரண்டு மிதுவா மிலிங்கமென
எட்டிரண்டும் வெளியா மொழிந்தகுரு முருகோனே”

“வள்ளி கோனன் றெனக்குபதேசித்த தொன்றுண்டு”

“அரிதாகிய மெய்ப்பொருளுக் கடியேன்
உரிதா வுபதேச முணர்த்தியவா!”

குன்னம்:—இரகசியம். குருநாதன் மாணவன் காதில் இரகசியமாகக் கூறுவது.

குறிச்சி:—

குறிச்சி—குறிஞ்சிநில ஊர். இங்கே ஞானமலையைச் சார்ந்த திருவருளூரை யுணர்த்தியது (வெளியாக்கி விட்டது). ஆன்மாவைச் சுத்த வெளியில் கலக்க வைத்துவிட்டது.

“யானகிய என்னே விழுங்கி வெறுந்
தானய் நிலே நின்றது தற்பரமே” —அநுபூதி.

“மெய்யுணர்ந்த வாதவூர் மலேயைச் சுத்த
வெளியாக்கிக் கலந்து கொண்ட வெளியே”—திருஅருட்பா.

வெளியாக்கிவிட்டது என்பதற்கு வெளிப்படுத்தி விட்டது என்று பொருள் கூறுவாருமுளர்.

கோடுகுழல்.........கிழவர்:—

குறிஞ்சி நிலத்தில் வேடுவர்கள், ஊது கொம்பு, வேய்ங் குழல், சின்னம், உடுக்கை முதலிய வாத்தியங்களே ஒலிப்பர்.

கிழவர் — உரியவர். குறிஞ்சி நிலத்திற்கு உரியவர்; வேடர்.

குறிச்சியிற் சென்று கல்யாண முயன்றவனே:—

திருப்பரங்குன்றத்திலே, திருமாலும் திசை முகனும் தேவர் தலைவனும் தர, தேவகுஞ்சரியை மணந்து, எமது கந்தப்பெருமான், கற்பொழுக்கத்தைக் காட்டியருளினர்.

பின்னர், குறிஞ்சியிற்போய் வேடர் செழுந்தினை காத்திருந்த பிராட்டி விலோசன அம்புக்கு இலக்காகி அவரைக் களவிற் புணர்ந்து, களவொழுக்கத்தையுங் காட்டியருளினர்.

### கருத்துரை

குறிஞ்சி நிலத்திற் சென்று குறவர் கொடியை மணந்த குமார மூர்த்தியே! தேவரீர் அடியேனுடைய துன்பத்தை நீக்கத் திருவுளங் கொண்டு, என் செவியில் உபதேசித்த இரகசியம், அடியேனை ஞான வெளியாக்கித் தன்மய மாக்கிக் கொண்டது.

## 25

தண்டா யுதமும் திரிசூல மும்விழத் தாக்கியுன்னைத்
திண்டாட வெட்டிவிழவிடு வேன்செந்தில் வேலனுக்குத்
தொண்டா கியவென் னவிரோத ஞானச் சுடர்வடிவாள்
கண்டா யடாவந்த கா!வந்து பார்சற்றென் கைக்கெட்டவே.

### பதவுரை

அந்தகா=கூற்றுவனே, செந்தில்=திருச்செந்தூர் என்னுந் தலத்தில் எழுந்தருளியுள்ள, வேலனுக்கு=வேற்படையையுடைய முருகக் கடவுளுக்கு, தொண்டு ஆகிய=அடிமையாகிய, என்= அடியேனுடைய, அவிரோத ஞானம்=விரோதமில்லாத ஞான மாகிய, சுடர்வடிவாள்=ஒளிபொருந்தியதும் கூர்மையுடையது மாகிய வாளாயுதத்தை, கண்டாயடா=பார்த்தாயடா, என் கைக்கு=எனது கரத்திற்கு, எட்ட=எட்டுகின்ற அளவில், சற்று வந்து பார்=சிறிது நீ வந்து பாராய், தண்டு ஆயுதமும்=(அப்படி

வந்தாயாயின்) உன்னுடைய கதாயுதமும், திரிசூலமும்=முத்தலைச் சூலமும், விழ=உன்கையிலிருந்து பொடிபட்டுச் சிந்த, உன்னை தாக்கி=உன்னை மோதி, திண்டாட=வலியழிந்து வருந்துமாறு, வெட்டி விழ விடுவேன்=துண்டித்து உன்னை வீழ்த்துவேன்.

விரிவுரை

**தண்டாயுதமும் திரிசூலமும்:—**

இயமனுடைய கரத்திலுள்ள ஆயுதங்களில் இவை சிறந்தவை. கூற்றுவன் புண்ணிய சீலர்கட்கு அருளுருவுடனும், பாவிகட்குத் தண்டு, சூலம், பாசக்கயிறு முதலியவை தாங்கிக் கொண்டு தழற்பொறி சிந்துங் கண்ணுடன் கோரவடிவுடனும் தோன்றுவன்.

**திண்டாட வெட்டி விழவிடுவேன்:—**

கந்தவேள் திருவருட்குரியார் இயமனை வெல்வர்; காலனுக்கு ஒருபோதும் அஞ்சார்.

வேண்டா மடாகாலா வேலா யுதப்பெருமான்
ஆண்டுகொண்ட தென்னை யறியாயோ—தீண்டாதே
அப்புறத்தே போடா அறுமுகவன் கண்டக்கால்
தப்பாமற் கொல்வான் க்ஷணம்.

'நாமார்க்குங் குடியல்லோம் நமனையஞ்சோம்'

என்ற திருவாக்குகளையுன்னுக.

**செந்தில் வேலவன்:—**

சூராதி யவுணர்களைக் கொல்லும் பொருட்டுத் திருச்செந்தூரில் எழுந்தருளியிருந்த வேலாயுதக் கடவுளுக்கு நான் தொண்டனுயிருப்பதால், மிகுந்த பேராற்றலுடையேன் என்பது குறிப்பு.

**அவிரோத ஞானச் சுடர்வடிவாள்:—**

ஞானம் அஞ்ஞானமாகின்ற காட்டை அழிக்கின்றது, ஆதலால் வாள் என்றனர். ஆணவ இருளை யழிப்பதால் சுடர்வாள் என்றும், கூர்மையாக இருப்பதால் வடிவாள்

என்றும் அழகாக உரைப்பாராயினர். ஞானம் கூர்மையாக இருக்கவேண்டும். ''கூர்த்த மெய்ஞ்ஞானத்தாற் கொண்டுணர்வார் தங்கருத்தின் நோக்கரிய நோக்கே'' என்பது மணிவாசகம். அவிரோதம் என்பது விரோதமில்லாமை. எல்லாந் தானுகவும், எனதும் யானும் வேருகவும் ஆகி நிற்கும் நிலையில் விரோதபாவம் இல்லாமல் அழிகின்றது. தான் என்பது தொலைந்தது. எல்லாம் தானுகி விட்டது. அந்த நிலையில் விரோதம் எங்கிருந்து வரும்? யாரை விரோதிப்பது? யாவரும் யாவும் தானுக நிற்கும் நிலையில் எவ்வளவு சாந்தம்; எவ்வளவு அமைதி; அன்பர்கள் சற்று ஆழ நினையுங்கள்; அது எத்துணை உயர்ந்த நிலை. அது மனத்தில் நினைப்பதற்குக் கூட முடியாத அத்துணைச் சிறந்த நிலை.

''எனதி யானும் வேருகி எவரும் யாதும் யானுகும்
இதய பாவனுதீதம் அருள்வாயே''
—திருப்புகழ்.

''எல்லாமற என்னையிழந்த நலம் சொல்லாய்''
''யானுகிய என்னை விழுங்கி வெறும்
தானய் நிலைநின்றது தற்பரமே'' —அநுபூதி.

இத்தகைய தடைபடாத ஞானமாகிய வாள் ஒன்றே இயமனை வெல்ல வல்லது.

**அந்தகா:—**

அந்தகன்—இயமன். மார்க்கண்டேயரைப் பற்ற வந்த காலத்து சிவாலயத்தைக் கண்டு வணங்காமையால் கூற்றுவனுக்கு இப் பெயருண்டாயிற்று. அந்தத்தைச் செய்கின்றவன் அந்தகன்.

**வந்துபார் சற்றென் கைக்கெட்டவே:—**

அருணகிரியார் இணையற்ற வீரராக இருப்பதனுல் யாவரையும் அடக்கவல்ல இயமனை, ''சிறிது கைக்கு எட்டுந் தொலையில் வந்து பார்; நின் கதி அதோகதியாக்கி விடுகின்றேன்'' என்று அறைகூவி யழைக்கின்ருர்,

"வாராதக லந்த்கா வந்தபோதுயிர் வாங்குவனே"
"சிந்தத் துணிப்பன் தணிப்பருங் கோபத்ரி சூலத்தையே"

செந்திற் பெருமானை மனமொழி மெய்களால் வழிபட்டு அவிரோத ஞானவாளைப் பெற்றோர்க்கு யாதும் பயமில்லை என்பது தேற்றம்.

### கருத்துரை

இயமனே! செந்திலாண்டவன் திருவடித் தொழும்பினாற் கிடைத்த அவிரோத ஞானச் சுடர் வடிவாள் என் கையிலுள்ளது. ஆதலால் என்னை அணுகாதே; அணுகினால், அழிகுவை.

## 26

நீலச் சிகண்டியி லேறும் பிரானெந்த நேரத்திலுங்
கோலக் குறத்தி யுடன்வரு வான்குரு நாதன்சொன்ன
சீலத்தை மெள்ளத் தெளிந்தறி வார்சிவயோகிகளே
காலத்தை வென்றிருப் பார்மரிப் பார்வெறுங்கர்மிகளே.

### பதவுரை

நீல சிகண்டியில்=நீலநிறமுள்ள மயில்வாகனத்தின் மேல், ஏறும் பிரான்=ஏறுகின்ற பெருமானாகிய குமாரக் கடவுளும், கோல=அழகு மிக்க, குறத்தியுடன்=வள்ளியம்மையாருடன், எந்த நேரத்திலும்=அடியேன் விரும்புகிற எந்த வேளையிலும், வருவான்=வந்து அருள் புரிபவரும், குருநாதன்=அடியேனுடைய குருமூர்த்தியுமாகிய எம்பெருமான், சொன்ன=உபதேசித்த, சீலத்தை=மெய்ப் பொருளின் தன்மையை, மெள்ள=மெல்ல, தெளிந்து=தேர்ந்து, அறிவார்=தெரிந்து கொள்பவர்களாகிய, சிவயோகிகளே=சிவயோகிகள் மாத்திரமே, காலத்தை வென்று இருப்பார்=காலதத்துவத்தை வென்று அதனைக் கடந்து காலாதீதராக இருப்பார்கள்; வெறும் கர்மிகள்=வெறுமையாகிய கர்மயோகிகள், மரிப்பார்=காலத்துக்கு உட்பட்டு மாய்ந்து போவார்கள்.

## விரிவுரை

**நீலச்சிகண்டி:—**

மயிலினுடைய கழுத்து நீலநிறத்தையுடையது. மயிலின் தோகைக்குச் ''சிகண்டம்'' என்று பெயர்; அதனையுடைய மயிலுக்கு ஆகு பெயராய் சிகண்டி என்ற பெயருண்டாயிற்று.

**பிரான்:—**

பிரான் என்பது பிரியான் என்பதன் மரூஉ. எப்பொருட் கண்ணும், யாண்டும் பிரியாதிருப்பவன் என்பது பொருள். இதன் பெண்பால் பிராட்டி. பிரான் என்பதற்குப் பெரியவன் என்று பொருள் கூறுவாருமுளர்.

**எந்த நேரத்திலும்:—**

முருகப் பெருமான் அழகிய வள்ளிநாயகியாருடன் அருணகிரிநாதர் நினைக்கும்போதெல்லாம் வந்து காட்சி தருவார் என்பது இதனுல் விளங்குகின்றது. எந்த நேரமாயினும் வருவார் என்பது மட்டுமன்று; எங்கே நினைக்கினும் அங்கெல்லாம் வந்து காட்சி தருவர் என்பதும் அடியிற் கண்ட திருவாக்கால் தெரிகின்றது.

செங்கே ழடுத்த சினவடி வேலுந் திருமுகமும்
பங்கே நிரைத்தநற் பன்னிரு தோளும் பதுமமலர்க்
கொங்கே தரளஞ் சொரியுஞ் செங்கோடைக் குமரனென
எங்கே நினைப்பினும் அங்கே என் முன்வந்து எதிர்நிற்பனே.

—அலங்காரம்.

எந்த நேரத்திலும் என்பதனை கோல என்ற சொல்லுடன் கூட்டி எப்போதும் அழகாக இருப்பவன் என்று பொருள் கொள்வாருமுளர்.

**கோலக்குறத்தி:—**

கோலம் - அழகு. சிறந்த அழகுடையவர் வள்ளியம்மையாரே யாவர்; மரகத மேனியும், பவளவாயும் உடையவர்.

''சுந்தர ஞான மென் குறமாது'' —திருப்புகழ்.

குருநாதன்:—

சிவபெருமானுக்கும் அகத்திய முனிவருக்கும் குரு மூர்த்தியாகிய கந்தக்கடவுள் அருணகிரியாருடைய செவி யிலும் ஞானேபதேசஞ் செய்தனர்; ஆதலின் அருணகிரி நாதர் தனக்குக் குருநாதன் முருகனே என்று உணர்த்து கின்ருர்.

"சுகஞானக் கடல் மூழ்கத்தந்
தடியே னுக்கருள் பாலிக்குஞ்
சுடர்பா தக்குக னேமுத்தின் கழல்வீரா" —திருப்புகழ்.

சீலம்:—முருகவேள் உபதேசித்த மெய்ப்பொருள்.

மெள்ளத் தெளிந்தறிவார்:—

அமைதியுடன் இருந்து ஆராய்ந்து அறிபவர்கள். மனம் சாந்தியடைந்தவர்கட்கு அது புலனுகும்.

சிவயோகிகள்:—

முருகவேள் அருணகிரிநாதருக்கு உபதேசித்ந அருள் உபதேசப் பொருளை அறிவதற்குரியவர் சிவயோகிகளே யாவர். (ஏ-பிரிநிலை)

சிவயோக லக்ஷணத்தை,

"செனித்த காரியோபாதி ஒழித்து ஞான ஆசார
சிரத்தை யாகி யான்வேறெ னுடல்வேறு
செகத்தியாவும் வேருக நிகழ்ச்சியா மனேதீத
சிவச்சொருப மாயோகி எனஆள்வாய்"

என்ற திருவானைக்காத் திருப்புகழாலும்,

"ஐந்து பூதமும் ஃ ஃ ஃ ஃ ஃ
அதன் சொருபமதாக உறைவது சிவயோகம்"

என்ற விராலிமலைத் திருப்புகழாலும் தேர்ந்து தெளிக,

**காலத்தை வென்றிருப்பார்:—**

காலம் என்ற ஒன்றுக்கு மாலயனுதி வானவரும் உட்பட்டவரே யாவர். மேற் கூறிய சிவயோகிகள், காலத்தை வென்று நித்தியத்துவத்தைப் பெறுவார்கள்; என்றும் ஒருபடித்தாயிருப்பர்.

**மரிப்பார் வெறுங் கர்மிகளே:—**

ஞானநெறியை நாடாது வெறுங் கன்மத்தை யநுசரிப்பவர் காலத்திற்குட்பட்டு மடிவர்.

*கருத்துரை*

குமாரக் கடவுள் கூறியருளிய மெய்ப்பொருளை உணர்ந்தவர் இறவார்; ஏனேயோர் இறப்பர்.

**27**

**ஓலேயுந் தூதருங் கண்டுதிண் டாட லொழித்தெனக்குக்**
**காலேயு மாலேயு முன்னிற்கு மேகந்த வேண்மருங்கிற்**
**சேலேயுங் கட்டிய சீராவுங் கையிற் சிவந்தசெச்சை**
**மாலேயுஞ் சேவற் பதாகையுந் தோகையும் வாகையுமே.**

*பதவுரை*

கந்தவேள்=முருகக் கடவுளின், மருங்கில்=திருவரையிற் பீதாம்பரத்தின் மீது கட்டும், சேலேயும்=கச்சையும், கட்டிய சீராவும்=அதில் கட்டிய சிறிய கூரிய உடைவாளும், கையில் சிவந்த செச்சை மாலேயும்=தோளிலணிந்த சிவந்த நிறமுடைய வெட்சிமலர்மாலேயும், சேவல் பதாகையும்=சேவற்கொடியும், தோகையும் = மயில்வாகனமும், வாகையும் = வெற்றித்திறமும் ஆகிய இவைகள், ஓலேயும் தூதரும் கண்டு=கூற்றுவனுடைய ஓலேயையும் அவனுடைய தூதரையும் கண்டு, திண்டாடல் ஒழித்து=அடியேன் கலங்குதலே ஒழித்து, காலேயும் மாலேயும்= காலேயிலும் மாலேயிலும், எனக்கு முன் நிற்கும்=அடியேனுடைய எதிரில் தோன்றி நின்றருளும்.

## விரிவுரை

இயமனுடைய கணக்கனுகிய சித்திரகுப்தன் எழுதித் தந்த ஆயுள் முடிவுக் கணக்கு ஒலையை எடுத்துக்கொண்டு இயமதூதுவர் வருவர். "வாரண்டு" கொண்டுவருபவர் கோர்ட்டு உத்தரவைக் கொண்டு வருவதுபோல் என்றுணர்க.

"சமனேலை அதுவருகு மளவில் உயிர் அங்கிட்டு"

—திருப்புகழ்.

அவ்வாறு இயமனேலையைக் கொண்டு தூதர் வந்து நடுக்கத்தைச் செய்யும் மரணபயத்தை அறவே நீக்கி அருணகிரியாருக்குக் காலையும் மாலையும், கந்தப் பெருமானுடைய கச்சையும், உடைவாளும் வெட்சிமாலையும் சேவற்கொடியும் மயிலும் முன்னே தோன்றி நின்று அருள் செய்யும். என்னே அவருடைய மாண்பு! அறுமுகவன் திருவருளை அவரைப்போல் பெற்ருர் ஆருளர்?

**கந்தவேள்:—**

கந்தன் என்ற சொல்லுக்கு, "தன் இணையற்ற ஆற்றலினுல் எல்லா உலகங்களிலுமுள்ள பகைவர்களை வற்றச் செய்கின்றவன்" என்று பொருள்.

ஸ்கந்தயதி சத்ருன் சோஷயதீதி ஸ்கந்த:—அமரகோச உரை.

வேள் என்ற சொல்லுக்கு, "உயிர்களுக்கு உபகாரத்தைச் செய்கின்றவன்" என்று பொருள். வேள் என்று மன்மதனைக் கூறும்போது ஆசையைச் செய்பவன் என்று பொருள்படும்.

**மருங்கிற் சேலையும்:—**

எம்பிரான் திருவரையிலுடுத்தியுள்ள பீதாம்பரத்தின்மீது கட்டுங்கச்சை. வீரர்கள் கச்சை கட்டுவது கண்கூடு. முருகநாயகன் வீரவீரவீராதிவீரப் பெருமாள் ஆதலால் கச்சை கட்டிக்கொள்வர். சேலையென்பதற்கு இப்பொருள் உண்டென்பதை கந்தரந்தாதி 89-ம் பாடலுரையிற் காண்க.

சீராவும்:—

சீரா என்பதற்குக் கவசம் என்ற பொருளும் உண்டு. எனினும், இங்கு உடைவாள் என்ற பொருளில் வந்துளது. சீரா—சிறிய கூரிய உடைவாள். இவ்வாறு பிற இடங்களிலும் வருமாறு காண்க.

'சூர் தூளாய் வீழச் சிறுதாரைச்
சீராவாலே வாளாலே வேலாலே சேதித் திடும்வீரா''
—திருப்புகழ்.

''அரையிற்கட்டுஞ் சீராவும்'' (கந்தரலங்காரம் 81)

''நிசாசரக் குலத்தை இப்படி
சீராவினுலறுத் தறுத் தொதுக்கிய பெருமாளே''
—திருப்புகழ்.

செச்சை மாலையும்:—

செச்சை - வெட்சி. வெட்சிமாலை சிறந்த வீரர்கள் தரிப்பது. அது முருகப் பெருமானுக்கு உகந்தது.

''ஃ ஃ வெட்சித் தண்டைக்
காலென்கிலை மனமே எங்ஙனே முத்தி காண்பதுவே''
—அலங்காரம்.

''கொற்றவா உற்பலச் செச்சை மாலைப்புயக்
கொச்சைவாழ் முத்தமிழ்ப் பெருமாளே''

''முச்சாலிச்சா லித்தாள் வெற்பாள்
முத்தார் வெட்சிப் புயவேளே''
—திருப்புகழ்.

சேவற்பதாகை:—

வெற்றியைத் தெரிவித்துக் கூவும் சேவல்.

''வாளகிரியைத் தனது தாளிலிடியப் பொருது
வாகைபுனை குக்குட பதாகைக் காரனும்'' —வகுப்பு.

தோகை:—

தோகை என்பது இறகுக்குப் பெயர்; அது சினையாகு பெயராய் மயிலை உணர்த்தியது.

**வாகை:—**

வெற்றிமாலை. ''வாகை சூடிய சிலையிராமன்'' என்ற கம்பர் வாக்கையு முன்னுக.

கருத்துரை

கந்தப் பெருமானுடைய கச்சை, சீரா, மாலை, சேவல், மயில், வெற்றி என்ற ஆறும் என் முன்னே எப்போதும் தோன்றி ஆறுதல் புரிவதால், இனி அடியேனுக்கு இயம பயமில்லை.

## 28

**வேலே விளங்குகையான் செய்ய தாளினில் வீழ்ந்திறைஞ்சி**
**மாலே கொளவிங்ஙன் காண்பதல் லான்மன வாக்குச்செய**
**லாலே யடைதற் கரிதா யருவுரு வாகியொன்று**
**போலே யிருக்கும் பொருளையெவ் வாறு புகல்வதுவே.**

பதவுரை

வேலே=வேலாயுதமே, விளங்கும் கையான்=விளங்கிக் கொண்டிருக்கும் திருக்கரத்தையுடைய குமாரக் கடவுளின், செய்ய தாளினில்=சிவந்த திருவடியில், வீழ்ந்து இறைஞ்சி= விழுந்து வணங்கி, மாலே கொள=அன்பையே கொண்டால், இங்ஙன்=இவ்வுலகத்திலேயே, காண்பது அல்லால்=காண்பது அல்லாமல், மனம் வாக்கு செயலாலே=மனம் வாக்கு காயம் என்ற முக்கரணங்களால், அடைதற்கு அரிது ஆய்=பெறுதற்கு அரியதாகி, அரு உரு ஆகி=அருவமும் உருவமும் ஆகி, ஒன்று போலே இருக்கும்=எப்போதும் ஒரு தன்மையாகவே மாறுபாடின் றித் திகழும், பொருளை=பொருளை, புகல்வது எவ்வாறு=எவ்வாறு எடுத்துச் சொல்வது? (ஏ—அசை).

விரிவுரை

**வேலே விளங்கு கையான்:—**

ஏகாரம் தேற்றப் பொருளில் வந்தது. படைக்கல நாயகமாகிய வேற்படை விளங்குகின்ற திருக்கரத்தை யுடையவர் என்பதனால் ஞானகரன் என்பது குறிப்பு.

மாலேகோள இங்ஙன் காண்பதல்லால்:—

ஓலமறைகளறைகின்ற ஒருவனும் மறைகளுங் கடந்த தோர் தலைவனும் ஆகிய முருகக் கடவுளை அன்பு நெறியி னாலேயே எளிதில் அடையலாம்; அன்பின்றி, வெற்றுக் கிரியைகளாலும் திரிகரணங்களால் செய்யும் தொழில்களாலும் அடைய முடியாது.

என்பே விறகா இறைச்சி யறுத்திட்டுப்
பொன்போற் கனலிற் பொரிய வறுப்பினும்
அன்போடுருகி யகங்குழைவார்க் கன்றி
என்போன் மணியினை யெய்த வொண்ணாதே. —திருமூலர்.

நெக்கு நெக்கு நினைபவர் நெஞ்சுளே
புக்கு நிற்கும்பொன் னார்சடைப் புண்ணியன்
பொக்க மிக்கவர் பூவு நீருங் கண்டு
நக்கு நிற்ப ரவர் தம்மை நாணியே. —அப்பர்.

மனவாக்கு செயலாலே அடைதற்கரிதாய்:—

"அருவு மாகுவன், உருவமு மாகுவன், அருவும் உருவு மற்றதோர் தன்மையுமாகுவன்" என்ற கந்தபுராண வசனப்படி, மனாதீதனாகியுள்ள குமாரக் கடவுளை மனத்தால் நினைக்கவும், வாக்கால் பேசவும், காயத்தால் அணுகவும் முடியாது. கரணங் கடந்த கடவுள்.

"வாய்விட்டுப் பேசொண்ணாதது" திருப்புகழ்.

ஒன்றுபோலே இருக்கும் பொருள்:—

இறைவன் என்றும் ஒருபடித்தா யிருக்கின்றவன். போக்கும் வரவும், வளர்வும் தேய்வும், இறப்பும் பிறப்பும், விருப்பும் வெறுப்பும், இன்பமும் துன்பமுமின்றி யுள்ள இயற்கைநிலை யுடையவன்.

எவ்வாறு புகல்வதுவே:—

இத்தகைய இறைவனது நிலையை அன்புநெறி சென்று காண்பதே யல்லாமல் வாய்விட்டு எவ்வாறு கூறுவது? என்று வியக்கின்றனர்.

மைப்படிந்த கண்ணாளுந் தானுங் கச்சி
மயானத்தான் வார்சடையான் என்னினல்லான்
ஒப்புடைய னல்லன் ஒருவனல்லன்
ஒரூரனல்லன் ஒருவமனில்லி
அப்படியும் அந்நிறமும் அவ்வண்ணமும்

அவனருளே கண்ணாகக் காணி னல்லால்
இப்படியன் இந்நிறத்தன் இவ்வண்ணத்தன்
இவனிறைவன் என்றெழுதிக் காட்டொணாதே. —அப்பர்

''அவ்வாறறிவா ரறிகின்றதலால்
எவ்வா றெருருவர்க் கிசைவிப்பதுவே'' —அநுபூதி

கருத்துரை

வேலாயுதக் கடவுளை வணங்கி அன்பு செய்தாலன்றி கரணங்கடந்த பொருளைக் காண முடியாது.

**29**

கடந்திற் குறத்தி பிரானரு ளாற்கலங் காதசித்தத்
திடத்திற் புணையென யான்கடந் தேன்சித்ர மாதரல்குற்
படத்திற் கழுத்திற் பழுத்தசெவ் வாயிற் பணையிலுந்தித்
தடத்திற் றனத்திற் கிடக்கும்வெங் காம சமுத்திரமே.

பதவுரை

சித்ரமாதர்=அழகிய பெண்களுடைய, அல்குல் படத்தில்= நிதம்பமாகிய பாம்பின் படத்திலும், கழுத்தில்=கழுத்திலும், பழுத்த செவ்வாயில்=அழகின் மிகுந்த சிவந்த வாயிலும்; பணையில்=மூங்கில்போன்ற தோள்களிலும், உந்தி தடத்தில்= நாபியாகிய தடாகத்திலும், தனத்தில்=கொங்கைகளிலும், கிடக்கும்=கிடக்கின்ற, வெம் காம சமுத்திரம்=வெப்பமாகிய கொடிய காமமென்னும் கடலை, கடத்தில்=குறிஞ்சி நிலத்தில் வாழ்கின்ற, குறத்தி பிரான்=வள்ளி நாயகியாரது கணவராகிய கந்தக் கடவுளின், அருளால்=திருவருளால், கலங்காத=சிறிது கூடக் கலக்கமடையாத, சித்தம் திடத்தின்=உள்ளத்தின் உறு

தியை, புணை என=தெப்பமாகக் கொண்டு, யான் கடந்தேன்= அடியேன் தாண்டிக் கரையேறினேன்.

விரிவுரை

கடம்:—

கடம்—குறிஞ்சி நிலம்; குமாரக் கடவுள் குறிஞ்சி நிலக் கடவுள். உலகில் உயர்ந்தவருக்கு உயர்ந்த இடந் தருவது வழக்கம்; முருகவேளே முழுமுதற் கடவுளாதலால் அவரை மலையில் வைத்து நம் பழந் தமிழர்கள் வணங்கினுர்கள். ஏனைய கடவுளர்க்கு இடம் கீழும் எந்தை கந்தவேளுக்கு இடம் மலையின் மேலும் என்று வைத்த பண்டையோர் அறிவின் திறம் நினைந்து நினைந்து நெஞ்சம் மகிழத்தக்கதாம்.

''சேயோன் மேய மைவரை யுலகும்'' —தொல்காப்பியம்.

''குருந்தைக் குறிஞ்சிக் கிழவனென் றேதுங் குவலயமே''
—அலங்காரம்.

இவற்றை யெல்லாம் நுணுகி ஆராய்ந்தவரும், ''என் கண்ணுங் கருத்தும் நுழையாத நூலில்லை'' என்று கூறும் பெருந்தகவுடையவரும், கலியிலும் முருகவேளை நேரே தெரிசித்த தவசீலரும் ஆகிய பாம்பன் சுவாமிகள்,

''எந்தக் கடவுளும் என்கோள் போழ்
கந்தக் கடவுளை மிஞ்சாதே''

என்று கூறியருளிய அமிர்த வாக்கையும் உய்த்துணர்க. ஓர்ந்து தெளிக.

குறத்திபிரானருளால்:—

மகமாயை களைந்திட வல்ல பிரானுகிய வள்ளிமணவாளன் திருவருளாலன்றி காமசமுத்திரத்தைக் கடக்க இயலாது. காசிபர், விசுவாமித்திராதி மகரிஷிகளும் அதில் வீழ்ந்து அலமருண்டனர். ஆதலால், நம் அருணையடிகள், காமக்கடலை கல்விப் பெருக்காலும், யோகமுதிர்ச்சியினுலும், அறிவின் மிகுதியாலும் கடப்பது மிகவும் அரிது என்பதையும், காமனை எரித்த கண்ணுதலில் வெளிப்பட்ட

கந்தவேளைப் பிரார்த்திப்பது மூலம் கடப்பது எளிது என்பதையும் உலகிற்கு உணர்த்தப் பல பாடல்களை ஓதியருளினார். அவற்றில் சிலவற்றை ஈண்டு தருகின்றோம்.

"மேல்வீழ்ந்து தோயுந் தூர்த்தன் மோகாந்த காரந்தீர்க்க
வேதாந்த தீபங்காட்டி அருள்வாயே"

"இன்ப சிங்கியில் வீணே வீழா தருள்வாயே"

"மங்கையர் சுகத்தை வெகு இங்கிதமெ னுற்றமனம்
உன்றனை நினைத்தமைய அருள்வாயே"

"சிங்கார மடந்தையர் தீ நெறிபோய்
மங்காமலெனக்கு வரந் தருவாய்"

கலங்காத சித்தத் திடத்தில் :—

திருவேலிறைவன் திருவருளால் உறுதியான உள்ளம் உண்டாகும். "கலக்கமில்லாத திடசித்தத்தைத் தெப்பமாகக் கொண்டு ஒருவருங் கடக்க முடியாத காமக் கடலைக் கடந்தேன்" என்று கூறும் வீறு மொழி எத்துணை விழுமியது? எத்துணை கெம்பீரம்? என்ன அழகு. அருணகிரியாரது கலங்காத உள்ளத்தின் உயர்வு இமயத்தினும் உயர்ந்த தன்றோ? அவருடைய உள்ளத்தின் உயர்வு இவ்வெழுது கோலுக்கு அடங்குமா?

பணை—மூங்கில்; ஆகு பெயராகத் தோளை உணர்த்திற்று.

வெங்காம சமுத்திரம் :—

காமம் மிகவும் வெம்மையானது. அது உடம்பையும், உணர்வையும், உயிரையுஞ் சுடவல்லது. தீயினால் வெதும்பினவர்கள் நீருள் முழுகி தட்பமுறுவார்கள். காமத் தீயினால் வெதும்பினவர்கள் நீருள் குளிப்பினும் உய்வு பெறார்.

ஊருளெழுந்த உருகெழு செந்தீக்கு
நீருட் குளித்து முயலாகும்—நீருட்
குளிப்பினுங் காமஞ் சுடுமே குன்றேறி
ஒளிப்பினுங் காமஞ் சுடும். —நாலடியார்

*தீ* தொட்டால் மட்டும் சுடும். காமம் விட்டகன்று விலகினும் சுடவல்லது.

தொடிற்சுடி னல்லது காமநோய் போல
விடிற்சுடல் ஆற்றுமோ தீ. —குறள்.

*தீ* விலகில் சுடாது ; நெருங்கினுல் சுடும். காமமாகிய *தீ* நீங்கில் சுடும் ; நெருங்கினுற் குளிரும். இது ஒரு அற்புதமான நெருப்பு.

நீங்கின் தெறூஉங் குறுகுங்கால் தண்ணென்னும்
தீயாண்டுப் பெற்ரு ளிவள். —குறள்.

காமம் மிகப் பெரிதாதலால் சமுத்திரம் என்ருர்.

### *கருத்துரை*

கொடுமையான காமக் கடலை முருகவேள் திருவருளால் கிடைத்த உள்ளத்தின் உறுதியென்ற தெப்பத்தால் கடந்து முத்தியென்ற கரையை அடைந்தேன்.

## 30

பாலென் பதுமொழி பஞ்சென் பதுபதம் பாவையர்கண்
சேலென் பதாகத் திரிகின்ற நீ செந்தி லோன்றிருக்கை
வேலென் கிலைகொற்ற மயூர மென்கிலை வெட்சித்தண்டைக்
காலென் கிலைமன மேயெங்ங னேமுத்தி காண்பதுவே.

### *பதவுரை*

மனமே=ஏ மனமே! பாவையர் மொழி=பெண்களுடைய சொல்லானது, பால் என்பது ஆக=பாலையொத்தது ஆகவும், பதம் பஞ்சு என்பது ஆக=பாதமானது பஞ்சையொத்ததாகவும், கண் சேல் என்பது ஆக=கண்கள் சேற்கெண்டையை யொத்த தாகவும் எண்ணி, திரிகின்ற நீ=மயங்கித் திரிகின்ற நீ, செந்திலோன்=திருச்செந்தூரில் எழுந்தருளியுள்ள குமாரக் கடவுளின், திருக்கை வேல் என்கிலை=அழகிய கரத்திலே விளங்கும் வேலாயுதமே! என்று சொல்லுகின்ருயில்லை, கொற்ற மயூரம் என்கிலை=வெற்றி பொருந்திய மயில் என்று சொல்லுகின்ருயில்லை, வெட்சி

தண்டைக்கால் என்கிலே=வெட்சி மலரையும் தண்டையையும் அணிந்த திருவடி என்கின்றுயில்லே, (ஆதலால்) முத்தி காண்பது எங்ஙன்=முத்திப் பேற்றை அடைவது எந்த விதமோ? (யான் அறிகிலேன்)

## விரிவுரை

**பாலென்பது..........திரிகின்ற நீ :—**

மாதர்களுடைய மொழியைப் பாலென்றும், பாதத்தைப் பஞ்சென்றும், கண்களைச் சேலென்றும் புகழ்ந்து அவைகளில் கருத்தை வைத்து அவமே திரிந்து அழிகின்றதை அடிகள் இத் திருப்பாடலில் கண்டிக்கின்றனர்.

காமுகர்க்குத் தாம் விரும்பிய மாதரது மொழி பால் போலவும், அவர் பாதம் பஞ்சினும் மென்மையுடையதாகவும், அவர் கண் சேற் கெண்டையை யொத்ததாகவும் தோன்றும்.

பாவையருடைய பாதாதி கேசங்களைப் பலப்பலவாறு புகழ்ந்தும் கவிபாடியும் அவமே திரிந்துழல்வர். தோலும் எலும்பும் நரம்பும் உதிரமும் சேர்ந்து உருண்டு மல மூத்திரங்கள் நிறைந்த உடம்பைக் கண்டு மால் கொண்டு, வந்தவரவை மறந்து, மதிநலத்தைத் துறந்து வருந்துவது வருந்தத் தக்கதன்றோ?

**வேலென்கிலே :—**

வேல் ஞானமாதலின், அஞ்ஞான இருள்நீங்க, "வேல்" "வேல்" என்று கூறுதல் வேண்டும்.

**கொற்ற மயூர மென்கிலே :—**

பிரணவமே மயில். ஆனபடியால் "வேலும் மயிலும்", "வேலும் மயிலும்" என்று எப்போதும் வாயார வழுத்துதல் வேண்டும்.

"வேலு மயிலுந்துணை" என்பது ஒரு ஒப்பற்ற மந்திரம். அஷ்டாவதானம் புரிவோர் இம்மந்திரத்தை ஓதியே அறிவாற்றல் பெறுவர்.

வேலையும் மயிலையுந் தியானிப்பவர்க்கு எல்லா இடர்களும் நீங்கும். இன்பம் ஓங்கும்.

"வேலு மயிலு நினைந்தவர் தந்துயர்
தீர அருள்தரு கந்த நிரந்தர
மேலை வயலி யுகந்து நின்றருள் பெருமாளே"
—திருப்புகழ்.

என்றும் வாய்த்த துணை கிரணக் கலாபியும் வேலும் உண்டு.

"வேலுண்டு வினையில்லை"

"மயிலுண்டு பயமில்லை"

வெட்சி பூத்த தண்டைக் காலென்கிலை:—

முத்தி பெறுவதற்கு வழி வேலையும் மயிலையும் வேலவன் காலையும் துதித்தலே; அங்ஙனம் துதியாதார் முத்தியை எவ்வாறு பெறுவர்? ஒருபோதும் பெறமாட்டார்.

மலைமுழையி லுற்ருலென் மாமருந் துண்டாலென்
கலைமுழுதுங் கற்ருலென் காணுர்—இலைநிலவு
வேல்பிடித்த கையான் வியன்போரு ரையனிரு
கால்பிடித்தார் காண்பார் கதி. —சிதம்பரசுவாமிகள்.

"காட்டிற் குறத்தி பிரான்பதத்தே கருத்தைப் புகட்டின்
வீட்டிற் புகுத மிகஎளிதே" —அலங்காரம்.

கருத்துரை

மனமே! முத்தியைத் தரும் வேலையும் மயிலையும் முருகன் காலையுந் துதியாமல், மயலைத் தரும் மாதரைத் துதித்தால் நீ எவ்வாறு உய்வாய்? ஆதலால் இனி மாதர் நலம் பேணுது முருகனைப் பேணியுய்வாய்.

## 31

பொக்கக் குடிலிற் புகுதா வகைபுண்ட ரீகத்தினுஞ்
செக்கச் சிவந்த கழல்விடு தந்தருள் சிந்துவெந்து
கொக்குத் தறிபட் டெறிபட் டுதிரங் குமுகுமெனக்
கக்கக் கிரியுரு வக்கதிர் வேல்தொட்ட காவலனே,

## பதவுரை

சிந்து வெந்து=கடலானது வெதும்பி, கொக்கு தறிபட்டு= மாமர வடிவாகி நின்ற சூரபன்மன் இருபிளவாக முறிந்து, எறி பட்டு=எறியப்பட்டு, குமுகுமுஎன உதிரம்கக்க=குமுகுமு என்று இரத்தத்தை உமிழவும், கிரி உருவ=கிரௌஞ்சமலையை ஊடுருவிச்செல்லவும், கதிர்வேல் தொட்ட=ஒளிபெற்ற வேலாயுதத்தைச் செலுத்திய, காவலனே=காப்பாற்றுபவரே! பொக்க குடிலில்= பொய்யாகிய இச் சரீரமாகிய குடிசையில், புகுதாவகை=இனி அடியேன் மீண்டும் புகாதபடி, புண்டரீகத்தினும்=செந்தாமரை மலரினும், செக்கச் சிவந்த=மிகவும் சிவந்த, கழல்=தேவரீரது திருவடியாகிய, வீடு = வீட்டை, தந்தருள் = அடியேனுக்குத் தந்தருள்வீர்.

## விரிவுரை

பொக்கக்குடில்:—

நீர்க்குமிழிபோல் விரைவில் அழியும் பொய்ம்மாயமாகிய சரீரம். பொக்கம்—பொய்; குடில்—குடிசை. உயிர் தங்கும் சிறுகுடிசை. "எண்ணில்லாத உடம்பை எடுத்து எடுத்து இளைத்துவிட்டேன். ஆதலால், எம்பெருமானே இனியும் இன்னொரு உடம்பிற் புகுந்து பிறவாத பெற்றியையடையுமாறு நின் திருவடிப் பேற்றைத் தந்தருள்வீர்" என்று சுவாமிகள் வேண்டுகின்றார்.

பிறவியின் பயன் இனிப் பிறவாமையே. அதனையே ஆன்றோர் அனைவரும் அவாவுகின்றனர். இவ் வுடம்பு அருவருப்பானது. மீண்டும் மீண்டும் இப் புன்புலால் யாக்கையைப் பெறுவது பேதைமை. "பிறப்பென்னும் பேதைமை" என்பர் பொய்யில் புலவர்.

"குரம்பை மலசலம் வழுவளு நிணமொடு
எலும்பு அணிசரி தசையிரல் குடல்நெதி
குலைந்த செயிர்மயிர் குருதியொ டிவைபல கசுமாலக் குடில்"
—திருப்புகழ்.

செக்கச் சிவந்த கழல்விடு:—

செம்மையைத் தரும் செம்மையுடையது செம்மேனி எம்மான் திருவடி.

"கையோ அயிலோ கழலோ முழுதும்
செய்யோய் மயிலேறிய சேவகனே" —அநுபூதி.

பொய்வைத்த புலால் உடம்பிலே வாழாது, மெய் வைத்த விமலன் திருவடி வீட்டிலே வாழவேண்டும். பிறவியாகிய வெய்யிலுக்கு எம்பெருமானுடைய திருவடியே நிழல் தரும். நிழலிலே சென்ருல் உடம்பின் நிழல் மறைவது போல், பிறவியாகிய நிழல் ஐயன் திருவடிநிழலிலே மறையும்.

வேல் தொட்ட காவலனே:—

மால் தொட்ட உயிர்களை வேல்தொட்ட வித்தகன் காத்தருள்வன். "பெம்மான் முருகன் பிறவானிறவான்" ஆதலின் பிறப்பிறப்பில்லாப் பெருந்தகை, கள்ளப்புலக் குரம்பைக் கட்டவிழ்த்து, மீட்டிங்கு வந்து வினைப்பிறவி சாராமல், ஞானமேயாய தமது திருவடியைத் தந்து அருள்புரிவன்.

கடலில் மாவறுத்த வேலோன் வேற்படையால் வினையையும் அறுத்து பிறவியின் வேரையும் அறுப்பான் என்பது குறிப்பு.

கடலை வற்றச் செய்ததுபோல் என் பிறவிக்கடலையும் வற்றச் செய்வீர் என்றும், கிரவுஞ்ச மலையைப் பிளந்தது போல், தீவினைக் குன்றையும் பிளந்து எறிவீர் என்றும், சூரனையட்டதுபோல் ஆணவமலத்தையும் அழித்தருள்வீர் என்றும் குறிப்பிடுகின்ருர்.

கருத்துரை

கடலும் சூர்மார்பும் கிரௌஞ்ச வெற்பும் ஊடுருவும்படி வேல்தொட்ட வித்தகரே! அடியேனுடைய பிறப்பறுத்து உமது தாள்மலரைத் தந்தருள்வீர்,

கிளைத்துப் புறப்பட்ட சூர்மார் புடன்கிரி யூடுருவத்
தொளைத்துப் புறப்பட்ட வேற்கந்த னேதுறந் தோருளத்தை
வளைத்துப் பிடித்துப் பதைக்கப் பதைக்க வதைக்குங்
கண்ணார்க்
கிளைத்துத் தவிக்கின்ற என்னை யெந்நாள்வந் திரட்சிப்பையே.

### பதவுரை

கிளைத்து புறப்பட்ட=கிளைகள் கொண்டு புறப்பட்டு வந்த, சூர்மார்பு உடன்=சூரபன்மனது மார்புடனே, கிரி ஊடு உருவ= கிரௌஞ்சமலையையும் நடுவில் வழியுண்டாக, தொளைத்து புறப்பட்ட=தொளைத்துக்கொண்டு வெளிப்பட்ட, வேல்=வேலா யுதத்தை யுடைய, கந்தனே=கந்தப்பெருமானே! துறந்தோர்= துறவிகளுடைய, உளத்தை=மனத்தை, வளைத்துப் பிடித்து= வளைத்துப் பற்றி, பதைக்க=துடிதுடிக்குமாறு, வதைக்கும்= வதை செய்யா நின்ற, கண்ணார்க்கு=கண்களையுடைய பெண்க ளுக்கு, இளைத்து=மெலிந்து, தவிக்கின்ற=தாகங்கொண்டு அலை கின்ற, என்னை=அடியேனை, எந்நாள் வந்து=எக்காலத்தில் அடியேன் முன் வந்தருளி, இரட்சிப்பையே=காத்தருள்வீரோ?

### விரிவுரை

**கிளைத்தல்:—**

சூரபன்மன் பல சுற்றத்தோடு வந்தான் என்றும், மாமரமாகக் கிளைத்துத் தோன்றினான் என்றும் பொருள் படும்.

**கிரி:—**

கிரௌஞ்சமலை; சூரன் மார்பையும் கிரௌஞ்சமலை யையும் வேல் தொளைத்தது என்றது, ஆணவமலத்தையும் வினைத் தொகுதியையும் ஞானம் கெடுத்தது என்றதன் குறிப்பு. சூரபன்மன் மிகுந்த வன்மையுடைய வச்சிர யாக்கையுடையவன்; அது கழிபெரும் வன்மையுடைய ஆணவமலமாம். கிரௌஞ்சமானது – மலைபோல் குவிந் திருக்கின்ற வினைக் கூட்டமாம். வேல் அடிப்பகுதி நீண்டும் நடுப்பகுதி அகன்றும் நுனிப்பகுதி கூர்ந்தும் விளங்கும்.

ஞானம் ஆழ்ந்தும் அகன்றும் நுணுகியுமிருக்கும். அது வினையாகிய மலையை எளிதில் துகள்படுத்த வல்லது.

"வினையோட விடுங் கதிர்வேல் மறவேன்"
"எனது தீவினை யெலாமடிய
நீடுதனி வேல்விடு மடங்கல்வேலா"

என்ற சுவாமிகளது திருவாக்குகளையும் உன்னுக.

**கந்தன்:—**

சரவணத்தில் ஆறு திருவுருவங்களையும் உமையம்மையாரால் ஒன்ருக்கப்பட்டது என்று தமிழில் பொருள் படும்.

தமது பராக்கிரமத்தால் மூன்று உலகங்களையும் (பகைவர்களையும்) வற்றச்செய்கின்றவர் என்று வடமொழியில் பொருள்படும்.

"அந்த மில்லதோர் மூவிரு வடிவுமொன் ருகிக்
கந்த னென்றுபேர் பெற்றனன் கவுரிதன் குமரன்"

—கந்தபுராணம்.

"ஸ்கந்தயதி சத்ருன் சோஷயதீதி ஸ்கந்த:"

—வடமொழி நிகண்டு.

**துறந்தோருளத்தை.........கண்ணுர்:—**

விலை மகளிரது கண்கள் எத்தகைய உறுதியையுடையோர் மனத்தையும் வளைத்துப் படித்து பதைபதைக்கச் செய்து ஆசை வலைப்பட்டுழலச் செய்யும் வன்மையுடையது என்பது இதனுல் போதரும். அது துறந்தோருளத்தையே இழுக்குந் திறமுடையதென்றதனுல், துறவாதார் தன்மையை ஆராயவேண்டாம்.

"விழையு மனிதரையு முனிவரையு மவருயிர் துணிய
வெட்டிப் பிளந்துளம் பிட்டுப் பறிந்திடுஞ் செங்கண் வேலும்"

—திருப்புகழ்.

இத்தகைய மாதர் மயக்கை "மகமாயை களைந்திட வல்லபிரா" னுகிய வேற்படை வீரனது திருவருளாலேயே

போக்க வேண்டுமென்று குறிப்பிடுவாராகி சுவாமிகள் அவ் வடிவேலிறையைப் பிரார்த்திக்கின்றனர்.

### கருத்துரை

சூரபன்மனையும் கிரௌஞ்சமலையையும் தொளைத்த வேற்படைவீரரே! தேவரீருடைய வேற்படையால், மாதர் களுடைய கண்வேல் பட்டு மயங்கும் மயலை யொழித்துக் காத்தருள்வீர்.

## 33

**முடியாப் பிறவிக் கடலிற் புகார் முழுதுங் கெடுக்கு**
**மிடியாற் படியில் விதனப் படார் வெற்றி வேற்பெருமாள்**
**அடியார்க்கு நல்ல பெருமாள் அவுணர் குலமடங்கப்**
**பொடியாக் கியபெரு மாள்திரு நாமம் புகல்வரே.**

### பதவுரை

வெற்றிவேல் பெருமாள்=வெற்றி பொருந்திய வேற்படையைத் தாங்கிய பெருமாள், அடியார்க்கு நல்ல பெருமாள்=தமது திருவடியை வணங்குகின்ற அடியவர்களுக்கு நன்மையைத் தருகின்ற பெருமாள், அவுணர் குலம் அடங்க=இராக்கதர்களுடைய கூட்டம் வற்றும்படி, பொடி ஆக்கிய பெருமாள்=தூள் செய்த பெருமாள், திருநாமம்=அவருடைய தெய்வீகமான பெயரை, புகல்பவர்=சொல்லுபவர், முடியா பிறவி கடலில் புகார்=தாண்ட முடியாத பிறவியாகிய பெருங்கடலில் முழுகமாட்டார்கள், முழுதும் கெடுக்கும்=எல்லா நலங்களையுங் கெடுக்கும், மிடியால்=வறுமைப்பிணியால், படியில்=பூவுலகில், விதனப்படார்=வேதனைப்படமாட்டார்கள்.

### விரிவுரை

**முடியாப் பிறவிக்கடல்:—**

முடியாத-கடக்க முடியாத, இதனாலன்றோ வள்ளுவர் பெருமானும், ''பிறவிப் பெருங்கடல்'' என்பாராயினர்,

''தரையினுழ்த்திரை ஏழே போலெழு
பிறவி மாக்கட லூடே நானுறு
சவலை தீர்த்து'' —திருப்புகழ்.

கடலில் ஓயாது அலைவீசுவது போல், ஓயாமல் புல் லாய் பூடாய் புழுவாய் மரமாய் கல்லாய் மனிதராய் பேயாய் கணங்களாய் மாறி மாறிப் பிறந்திறந்துழல்வதால், பிறவியை முடியாப் பிறவிக்கடல் என்று அடிகள் கூறு கின்றனர்.

இத்தகைய பிறவிப் பெருங்கடலைத் தாண்டுதற் குரிய தெப்பம் திருவேலிறைவன் திருநாமமே.

முழுதுங் கெடுக்கும் மிடி:— மிடி—தரித்திரம்.

தரித்திரமானது மனிதனுடைய வாழ்வை அடியோடு கெடுத்து விடும் வடிவு, தனம், மனம், குணம், குடி, குலம் முதலிய யாவும் வறுமையால் அடியோடு அழியும்.

''வடிவுந் தனமும் மனமுங் குனமுங்
குடியுங் குலமுங் குடிபோ கியவா
அடியந் தமிலா அயில்வே லரசே
மிடியென் றொருபாவி வெளிப் படினே''
—அநுபூதி.

வறுமையால் நல்ல சுகங்களைத் துய்த்தற்கு இன்மையால் இம்மை நலனும், அறஞ்செய்தற்கின்மையால் மறுமை நலனும் இன்றி வறுமையாளன் வாடுவான்.

இன்மை யெனவொரு பாவி மறுமையு
மிம்மையு மின்றி வரும். —திருக்குறள்.

ஒருவன் மந்திர மருந்துகளின் துணையால் நெருப்பின் மேலும் படுத்துக் கண்ணுறங்கலாம்; வறுமைக்கு நடுவில் இருந்து கண் துயில முடியாது என்றார் மீண்டும் பொய் யிற் புலவர்.

நெருப்பினுட் டுஞ்சலு மாகு நிரப்பினுள்
யாதொன்றுங் கண்பா டரிது.

இத்தகைய கொடிய மிடிப்பகை முருகவேள் திருநாமங் கூறுவோர்க்கு இல்லை. எனவே முருகவேள் திரு நாமத்தை ஓதுபவர்கள், இனிப் பிறவாத பெற்றியை யடைவதோடு, எடுத்த இப்பிறப்பில் வறுமை நோய்ப்பட்டு வருந்தாது இன்புறுவர்.

''இசைபயில் சடாக்ஷ ரமதாலே
இகபர சௌபாக்ய மருள்வாயே'' —திருப்புகழ்.

**வெற்றிவேற் பெருமாள்:—**

வேல் கடலைவற்றச் செய்தது; ஆதலின் வேலாயுத ரது திருநாமம் பிறவிக் கடலை வற்றச் செய்யும்.

**அடியார்க்கு நல்ல பெருமாள்:—**

அறுமுக வள்ளல் அடியார்க்கு யாண்டும் என்றும் நன்மையே செய்யும் பரம கருணாநிதியாதலின், அவர் திருநாமம் புகல்வோருக்கு மிடியின் துன்பம் இல்லை யாயிற்று.

''.....................................சீரும்
போதமும் அழிவில்வீடும் போற்றினர்க் கருள வல்லான்''

**அவுணர் குலமடங்கப் பொடியாக்கிய பெருமாள்:—**

அடங்க—முழுவதும் என்றும் பொருள்படும். பிற விக்கும் தரித்திரத்திற்கும் காரணமாக இருப்பது பாவங் களின் தொகுதியாகும். அசுரர்களாகிய பாவத் தொகு தியை முழுவதும் அழித்தோன் திருநாமம் கூறுவோர்க்கு, அப் பாவங்கள் யாவும் அழியும். பாவமழியப் பிறவியும் மிடியும் இல்லையாயின. என்னே எம்பெருமானுடைய திருநாமத்தின் பெருமை! எம்மால் அதனை ஆயவும் அறிய வும் அறையவும் எழுதவும் நினைக்கவுங் கூடுமோ? முருகன் நாமமே மொழிக்குத் துணை; அதுவே ஆருயிர்கட்கு அருமந்த செல்வம்.

## கருத்துரை

செவ்வேட்பரமன் திருநாமத்தை ஓதுபவர்கட்குப் பிறவித் துன்பமும் வறுமைத் துன்பமும் இல்லை,

## 34

**பொட்டாக வெற்பைப் பொருநகந்தா தப்பிப் போனதொன்றற்**
**கெட்டாத ஞான கலைதரு வாயிருங் காமவிடாய்ப்**
**பட்டா ருயிரைத் திருகிப் பருகிப் பசிதணிக்குங்**
**கட்டாரி வேல்விழி யார்வலைக் கேமனங் கட்டுண்டதே.**

### பதவுரை

வெற்பை=கிரௌஞ்சமலையை, பொட்டு ஆக=நுழை வழி யாகுமாறு, பொருத=அதனுடன் போர் செய்த, கந்தா=கந்தக் கடவுளே! இரு காமவிடாய் பட்டார்=பெரிய காமமாகிய தாகங் கொண்டவருடைய, உயிரை=அருமையான ஆவியை, திருகி= முறுக்கி எடுத்து, பருகி=குடித்து, பசிதணிக்கும்=தமது பசியைத் தணித்துக்கொள்ளும், கட்டாரி=வாளாயுதத்தையும், வேல்= வேலாயுதத்தையும் ஒத்த, விழியார்=கண்களையுடைய விலைமகளி ரது, வலைக்கே=வலையினிடத்து, மனம் கட்டுண்டது=அடியேனு டைய மனமானது அகப்பட்டு கொண்டுக் கட்டுப்பட்டுவிட்டது, (ஆதலால் அதனின்றும் மீண்டு உய்யுமாறு) தப்பி போனது= அடியேனை விட்டுத்தப்பிப்போனதாகிய, ஒன்றற்கும்= (அன்பையன்றி வேறு) எந்தஒன்றுக்கும், எட்டாத= எட்ட ஒண்ணாத, ஞானகலை= மெய்யறிவு வித்தையை, தருவாய்=தந்தருள்வீர்.

### விரிவுரை

**பொட்டாக வெற்பைப் பொருத கந்தா :—**

வீரவாகுதேவர் முதலிய இலக்கத்தொன்பான் வீரர்களைத் தன்னுள் புகச்செய்து மயங்குமாறு செய்து தாரகனுக்கு அனு கூலமாக நின்றது கிரவுஞ்சமலை. முருகவேள் அதனுடன் பொருது அதனையுந் தாரகனையும் அழித்தனர்.

தாரகன் மாயாமலம்; அவனுக்குத் துணை செய்த கிரௌஞ்சமலை அவித்தை; இவ்விரண்டினையும் அழித்த வேல் ஞானம்.

ஞானசத்திதரராகிய நம் கந்தக்கடவுள் ஞானமாகிய வேற்படையால் மாயாமலம் அவித்தையென்ற தாரகனையும்

கிரௌஞ்ச வெற்பினையும் அழித்து, அதில் மயங்கிக் கிடந்த பக்குவ ஆன்மாக்களாகிய வீரவாகு முதலியோரை உய்வித்த னர் என்பது இவ்வரலாற்றின் உள்ளீடு.

**ஞான கலை :—**

கலை—நூல் ; அது உலக நூல், உயிர் நூல், கருவி நூல், பொருள்நூல் முதலிய பலதிறப்படும். அவைகளை நீக்கும் பொருட்டு "ஞானகலை" என்றார். ஞான கலை—அறிவு நூல். அவ்வறிவு பதியையறியும் மெய்யறிவு. எனவே மெய்யறிவு நூலால் விளையும் அனுபவப் பயனை உபதேசிக்குமாறு அடிகள் வேண்டுகின்றனர்.

மேற்கூறிய அநுபவ அறிவு கருவி கரணங்கட்கு எட்டாத தாம் என்பதனை விளக்கும்பொருட்டு "ஒன்றற்கெட்டாத ஞானகலை" என்று அருளிச் செய்தார்.

**இருங்காம விடாய்ப் பட்டார் :—**

என்றுமகலாத இளம்பூரணனது திருவடி யின்பம் அநுபவிக்க அநுபவிக்கத் தெவிட்டாதது; மேன்மேலும் மாருத இன்பத்தை வழங்குவது; தூய்மையானது; அத் திருவடி இன்பம் அருள்தாகங் கொண்டார்க்கு எளிதில் கிடைக் கும். அந்த அருட்டாகங் கொள்ளாது, நோய் செய்வதும், அருவருக்கத் தக்கதும், கணப் போதில் மாறும் இயல்புடைய தும், அசுத்தமானதுமாகிய, மாதருடைய மோக தாகங் கொள்வோர் உய்யு நெறியறியார். அதனால் அவருயிர் அவமே கழியும்.

**உயிரைத் திருகிப் பருகிப் பசிதணிக்கும் கட்டாரி வேல் விழியார் :—**

விலைமகளிருடைய கண்கள் மோகதாகமுற்றார் உயிரைத் திருகிக் குடித்துப் பசிதணிக்கும் கொடுமையுள்ளது. அதனால் அவ்விழிக்கு கட்டாரியையும் வேலையும் உவமித்தனர்.

**வலைக்கே மனங் கட்டுண்டதே :—**

விலைமகளிர் தமது அளகபாரக் கூந்தலாகிய காட்டில் தமது கண்களாகிய வலையை வீசி இளைஞருடைய மனமாகிய பறவையைப் பிடித்துக்கொள்வர்.

"திண்ணிய நெஞ்சப் பறவை சிக்கக் குழற்காட்டில்
கண்ணிவைப்பார் மாயங் கடக்குநாள் எந்நாளோ"—தாயுமானுர்.

இந்தக் கண்வலை செய்யுங் கொடுமையை மணிவாசகரும் அடியிற் கண்டவாறு கூறுகின்றனர்.

"கருங்குழற் செவ்வாய் வெண்ணகைக் கார்மயில்
ஒருங்கிய சாயல் நெருங்கியுண் மதர்த்துக்
கச்சற நிமிர்ந்து கதிர்த்துமுன் பணைத்து
எய்த்திடை வருந்த எழுந்துபுடை பரந்து
ஈர்க்கிடைபோகா இளமுலை மாதர்தங்
கூர்த்த நயனக் கொள்ளையிற் பிழைத்தும்"

*கருத்துரை*

கந்தக் கடவுளே! விலைமகளிர் கண்வலைப்பட்டு அடியேன் அழியா வண்ணம் மெய்யறிவு பெறுமாறு உபதேசித்தருள்வீர்.

**35**

பத்தித் துறையிழிந் தாநந்த வாரி படிவதனுல்
புத்தித் தரங்கந் தெளிவதென் ருேபொங்கு வெங்குருதி
மெத்திக் குதிகொள்ள வெஞ்சூ ரனைவிட்ட சுட்டியிலே
குத்தித் தரங்கொண் டமரா வதிகொண்ட கொற்றவனே.

*பதவுரை*

பொங்கு வெம் குருதி=பெருகுகின்ற வெப்பமான இரத்தம், மெத்தி=நிறைந்து, குதிகொள்ள=அலையெறிய, வெம் சூரனை= வெய்ய சூரபன்மனை, விட்ட சுட்டியிலே=ஏவிய வேலாயுதத்தால், குத்தி=குத்தி, தரம் கொண்டு=மேன்மையைக் கொண்டு, அமராவதி கொண்ட =தேவலோகத்தை மீட்டுக் கொண்ட, கொற்றவனே=அரசே! பத்தி துறை இழிந்து=பத்தியாகிய வழியில் இறங்கி, ஆநந்தவாரி=இன்பமாகிய கடலில், படிவதனுல்= மூழ்குவதனுல், புத்தி தரங்கம்=அடியேனுடைய புத்தியின் அலை போன்ற அசைவுகள், தெளிவது என்ருே=தெளிவடைவது எக்காலமோ?

## விரிவுரை

**பந்தித்துறை யிழிந்து :—**

ஆனந்தமாகிய கடலில் மூழ்குவதற்கு பத்தி படித்துறை யாக விளங்குகின்றது. பத்தியாகிய வழியிற் சென்ருலன்றி இன்ப சமுத்திரத்தில் இறங்க ஒரு போதும் முடியாது. பத்தி என்பதும் அன்பு என்பதும் ஒன்றே. பக்தி என்ற வடசொல் பத்தி என வந்தது.

"முத்திநெறி யறியாத மூர்க்கரொடு முயல்வேனைப்
பத்திநெறி யறிவித்து" —மணிவாசகம்.

"திசைமுகன் சென்று தேடினர்க் கொளித்தும், மறைத் திறம் நோக்கி வருந்தினர்க் கொளித்தும், அருந்தவர் காட்சி யுள் திருந்த வொளித்தும் ஒன்றுண்டில்லை என்றவர்க் கொளித் தும்" உள்ள அத் தனிப்பெருந் தலைவன் தானே வந்து பத்தி வலையில் வீழ்ந்து அகப்பட்டுக்கொள்வன்.

**ஆனந்தவாரி :—**

இறைவன் இன்பக் கடலாக விளங்கி தன்னை யடைந்த ஆன்மாக்களுக்கு மாருத இன்பத்தை வழங்குகின்றனன்.

**புந்தி தரங்கம் தெளிவதென்றே :—**

தரங்கம்—அலை; புத்தியில் உண்டாகின்ற அலைகள். இதுவா? அதுவா? என்று பற்பல சந்தேக விபரீத மயக்கங் களாகிய அலைகள், இறைவனுடைய இன்பக் கடலில் படிவ தனுல் தெளிவடைந்துவிடும். தரங்கம்-கலக்கம் என்றும் பொருள் கொள்ளலாம்.

**சுட்டி :—**

கலங்கினுர் யாவர்க்கும் "இதுவே அச்சத்தைத் தவிர்க்க வல்லது" என்று ஆன்ருேரால் சுட்டிக் காட்டப்படுவதால், வேற்படையைச் சுட்டி யென்ருர்.

இனி, சூரபன்மன்—ஆணவமலம்; வேல்—ஞானம்; ஆணவ மலத்தை அடக்க வல்லது ஞானமொன்றேயாம்.

அந்த ஞானத்தையுடையானுடைய இன்பக் கடலில் மூழ்கியோர்க்கு அறியாமையால் உண்டாகின்ற கலக்கங்கள் இலவாயின.

அமராவதி :—

தேவருலகம், கற்பகம், காமதேனு, சிந்தாமணி முதலிய சிறப்புடைப் பொருள்களை யுடையது. இந்திரனைத் துரத்தி அமராவதியைச் சூரபன்மன் தன் வசப்படுத்திக்கொண்டான். இந்திரன் நாடிழந்து, நலனிழந்து, பலகாலம் பருவரலுற்று, "வால! குமர! குக! கந்த! குன்றெறி வேலா! மயில என வந்து கும்பிட" அவன் முறைக் கிரங்கிய முருகவேள் சூராதி யவுணரை மாய்த்து பொன்னுலகத்தை மீட்டு, நிர்ப்பயமாக ஆளுமாறு இந்திரனுக்கு முடிசூட்டினர்.

கொற்றவன்:—

கொற்றம் — வெற்றி. வெற்றியையுடையவன் கொற்றவன்.

## கருத்துரை

சூரனையட்டு பொன்னுலகைக் கொண்ட முருகக் கடவுளே! அடியேனுடைய கலக்கம் நீங்க பக்தி வழியிற் சென்று ஆநந்தக் கடலில் மூழ்கி இன்புறுவது எந்நாளோ?

## 36

சுழித்தோடு மாற்றிற் பெருக்கா னதுசெல்வந் துன்பமின்பங்
கழித்தோடு கின்றதெக் காலநெஞ்சே கரிக் கோட்டுமுத்தைக்
கொழித்தோடு காவிரிச் செங்கோடனென்கிலை குன்றமெட்டும்
கிழித்தோடு வேலென் கிலைஎங்ங னேமுத்தி கிட்டுவதே.

## பதவுரை

நெஞ்சே=ஓ மனமே! செல்வம்=செல்வமானது, சுழித்து ஓடும்=சுழித்துக்கொண்டு ஓடுகின்ற, ஆற்றில் பெருக்கு ஆனது= நதியின் வெள்ளத்திற்கு நிகராகும், துன்பம் இன்பம்=(அச்செல்

வத்தினுலுண்டாகும்) துன்பங்களையும் இன்பங்களையும், கழித்து= அறவே நீக்கி, ஓடுகின்றது எக்காலம்=பற்றற்று விரைந்து செல்வது எந்தக்காலமோ? கரி கோடு முத்தை=யானையின் தந்தத்தில் உண்டாகிய முத்துக்களை, கொழித்து ஓடும்=கொழித்துக்கொண்டு ஓடுகின்ற, காவிரி=காவிரிநதியாற் சூழப்பட்டுள்ள, செங்கோடன் =திருச்செங்கோட்டில் எழுந்தருளி யுள்ளவரே! என்கிலை=என்று துதிக்கின்ருயில்லை, குன்றம் எட்டும்=குலமலைகள் எட்டையும், கிழித்து ஓடும்=பிளந்து போகத் தக்க, வேல் என்கிலை=வேலாயுதமே! என்று துதிக்கின்ருயில்லை, முத்தி கிட்டுவது எங்ஙன்= இப்படிப்பட்ட உனக்கு மோக்ஷ இன்பம் கிடைப்பது எந்த விதம்?

## விரிவுரை

சுழித்து ஓடும் ஆற்றிற் பெருக்கானது செல்வம்:—

ஆற்றின் வெள்ளம் எவ்வாறு நிலையற்றதோ அதுபோல் செல்வமும் நிலையற்றது.

"அகடுற யார்மாட்டு நில்லாது செல்வஞ்
சகடக்கால் போல வரும்" —நாலடியார்.

"செல்வம்.........மின்போலுமென்பர்" —கந்தரலங்காரம்.

"அறுசுவை யுண்டி அமர்ந்தில்லா ளூட்ட
மறுசிகை நீக்கி யுண்டாரும்—வறிஞராய்ச்
சென்றிரப்பர் ஓரிடத்திற் கூழெனிற் செல்வமொன்
றுண்டாக வைக்கற்பாற் றன்று." —நாலடியார்.

ஆதலால், செல்வம் உள்ளபோதே அறத்தைச் செய்து அதன் பயனைப் பெற விரைந்து முயற்சி செய்யவேண்டும்.

துன்பமின்பங் கழித்து ஒடுகின்றது எக்காலம்:—

துன்பத்தையும் இன்பத்தையும் ஒன்ருகப் பாவித்து அதனை அறவே நீக்கித் துறந்து செல்வது எக்காலமோ? என்கின்றனர்.

துன்பம் வரும்போதும், இன்பம் வரும்போதும் மனம் கலங்காது 'ஒரே தன்மையாக இருக்கவேண்டும். ஸ்ரீராமர் அன்று காலை, "இப் பூமண்டலத்திற்கு மாப்பெருந் தலைவ

ளுகுதி'' என்ற போதும், அன்றிரவு, ''சடைமுடியுடன் பதினன்காண்டுகள் கானகம் செல்லுதி'' என்ற போதும் உவகையும் கவலேயுமின்றி ஒரே நிலேயில் இருந்த திறத்தை, அசோகவனத்தில் சிறையிருந்த தேவி நினேத்து நெஞ்சம் நெகிழ்ந்தாள் எனவரும் திருப்பாடலே ஓர்க.

மெய்த்தி ருப்பதம் மேவென்ற போதினும்
இத்தி ருத்துறந் தேகென்ற போதினும்
சித்தி ரத்தி னலர்ந்தசெந் தாமரை
ஒத்தி ருந்த முகத்தினே உன்னுவாள்.

**காவிரி:—**

காவிரி எல்லா நதிகளிலும் சிறப்புடையது. ''கங்கை யின் மீறிய காவிரி'' என்றதனுலுங் காண்க.

காவேரி ராஜன் என்ற அரசனுடைய புதல்வி ஆனதாலும், இந்திரன் சீகாழியில் வளர்த்த காவை விரியு மாறு செய்ததனுலும், விநாயகர் காகவடிவாகப் போய் அகத்திய முனிவருடைய கமண்டலத்தைக் கவிழ்த்து விரியச் செய்ததனுலும் காவிரி எனப் பெயர் பெற்றது.

**செங்கோடன்:—**

திருச்செங்கோடு என்னுந் தலம் மிகச் சிறந்தது. அருணகிரிநாத சுவாமிகள் ஆரா அன்புடன் பல பாடல் களில் பாராட்டுகின்றனர்.

**வேலென்கிலே:—**

வேலாயுதத்தைத் துதிப்பார்க்கு வினேயில்லே.

வீரவேல் தாரைவேல் விண்ணேர் சிறைமீட்ட
தீரவேல் செவ்வேள் திருக்கைவேல்—வாரி
குளித்தவேல் கொற்றவேல் சூர்மார்புங் குன்றுந்
தொளேத்தவேல் உண்டே துணே.

## கருத்துரை

மனமே! முத்திபெற வேண்டுதியேல், செல்வ நிலேயா மையை யுணர்ந்து, இன்ப துன்பமறப் பற்றற்று திருச்செங்

கோடனையும் அப் பரமபதியின் கை வேலையுந் துதிப்பாயாக.

### 37

கண்டுண்ட சொல்லியர் மெல்லியர் காமக் கலவிக்கள்ளை
மொண்டுண் டயர்கினும் வேன்மற வேன்முது கூளித்திரள்
டுண்டுண் டுடுடுடு டுடு டுடுடுடு டுண்டுடுண்டு
டிண்டிண் டெனக்கொட்டி யாடவெஞ் சூர்க்கொன்ற ராவுத்தனே.

*பதவுரை*

முது=முதிர்ந்த, கூளித் திரள்=பேய்க் கூட்டங்கள், டுண் டுண் டுடுடுடு டுடு டுடுடுடு டுண்டுடுண்டு டிண்டிண் டென= இவ்வித ஒலியை யுண்டாக்கிக் கொண்டு, கொட்டி=பறை யடித்துக் கொண்டு, ஆட=கூத்தாட, வெம்சூர் கொன்ற=வெய்ய சூரபன்மனைக் கொன்றருளிய, ராவுத்தனே=சேவகனே! கண்டு உண்ட=கற்கண்டை நிகர்த்த, சொல்லியர்=சொற்களை யுடையவரும், மெல்லியர்=மென்மை யுடையவருமாகிய பெண்களது, காமக்கலவி = காமப்புணர்ச்சியாகிய, கள்ளை= மதுவை, மொண்டு உண்டு அயர்கினும்=நிரம்பவும் மொண்டு குடித்து அவ்வெறியால் அறிவு மயங்கினும், வேல் மறவேன்= தேவரீருடைய வேற்படையை அடியேன் மறக்கமாட்டேன்.

*விரிவுரை*

**கண்டுண்ட சொல்லியர்:—**

கண்டு—கற்கண்டு; காமுற்றார்க்குப் பெண்கள் மொழி கற்கண்டினும் இனிமையாக இருக்கும்.

"கண்டுமொழி கொம்பு கொங்கை வஞ்சிஇடை அம்புநஞ்சு
கண்கள் குழல் கொண்ட லென்று" —திருப்புகழ்.

"கண்டுமொழி பேசிமனங் கண்டுகொண்டு கைவிலையாக்
கொண்டுவிடு மானார்பொய்க் கூத்தொழிவ தெந்நாளோ"
—தாயுமானார்.

**காமக் கலவிக்கள்:—**

காமத்திற்குக் கள்ளை உவமையாக்கினர். கள் எவ்வாறு அறிவை மயக்கி, தீயவைகளை அஞ்சாது செய்யச் செய்து, நரகத்தில் உய்க்குமோ அதுபோல காமமும் அறிவை மயக்கி, பற்பல கொடுமைகளைச் செய்யச் செய்து, பழியையும் பாவத்தையும் விளைவித்து, மீளா நரகத்திற் சேர்ப்பிக்கும்.

கள்ளினும் கொடியது காமம்; கள் குடித்தால் மட்டுமே வெறியைத் தரும். காமமானது ஒரு பெண்ணைத் தீய நினைவோடு பார்த்தமாத்திரத்திலேயே வெறியைத் தரும்; அறிவை மயக்கும். நினைத்த மாத்திரத்திலேயே மயக்கத்தைத் தரும்.

மாத்யதீ ப்ரமதாம் த்ருஷ்ட்வா ஸுராம் பீத்வாச மாத்யதீ
தஸ்மாத் த்ருஷ்டிவிஷாம் நாரீம் தூரத: பரிவர்ஜயேத்
—நாரதபரிவ்ராஜகம்.

"உள்ளக் களித்தலுங் காண மகிழ்தலுங்
கள்ளுக்கில் காமத்திற் குண்டு" —பொய்யாமொழி.

கள்ளுண்டவர் கொலை, புலை, களவு முதலிய பெரும் பாவங்களைச் செய்யச் சிறிதும் அஞ்சார். காமுற்றரும் கொலைக்கு அஞ்சார்; பொய் சொல்ல நாணமாட்டார்; மானத்தைக் காப்பாற்றமாட்டார்; களவு முதலிய பாவங்கள் யாவுஞ் செய்வார்; பழி பாவம் என்று பார்க்க மாட்டார். பிறிது மற்று என்னதான் செய்யமாட்டார்? எதனையும் கூசாது செய்வர்.

கொலையஞ்சார் பொய்ந்நாணார் மானமு மோம்பார்
களவொன்றோ ஏனையவுஞ் செய்வார்—பழியோடு
பாவமிஃ தென்னார் பிறிதுமற் றென்செய்யார்
காமங் கதுவப்பட் டார். —நீதிநெறிவிளக்கம்.

தீமை யுள்ளன யாவையுந் தந்திடுஞ் சிறப்பும்
தோமில் செல்வமுங் கெடுக்கு நல்லுணர்வினைத் தொலைக்கும்
ஏம நன்னெறி தடுத்திரு ளுய்த்திடு மிதனால்
காம மின்றியே யொருபகை யுண்டுகொல் கருதில்.

கள் உண்டவனை மயக்குமே யல்லது சுடாது; காமம் மயக்குவதோடு சுடவுஞ் செய்யும். நீருட் குளிப்பினுங் காமம் சுடும்; குன்றேறி ஒளிப்பினுஞ் சுடும்; உள்ளினும் சுடும்; தள்ளினும் சுடும். ஆதலால் காமம் கள்ளினும் நஞ்சினும் கொடியது. அதனை எல்லாவகை முயற்சியினுலும் இறைவனுடைய தியானத்தாலும் அறிஞர்கள் அகற்ற முயலுதல் வேண்டும்.

**மொண்டுண்டயர்கினும் வேல் மறவேன் :—**

மேற்கூறிய கொடிய காமக்கள்ளை மொண்டு உண்டு அறிவு மயங்கினும், "வேலாயுதத்தை மறவேன்" என்றபடியால் அக் காமக்கள் தனது வலியிழந்துவிடும்; அக் காமத்தால் பீடிக்கப்படுவோர் வேலை நினைக்க வேண்டும். வேல் - அறிவு. அறிவை நினைக்க அறியாமை யொழியும். வேலை நினைப்பார்க்கு அறியாமை யறவேயழியும். அறியாமை அழிய இன்பம் பெருகும்.

"முருகுகமழ் மலரமளி மீதினிற் புகுந்து
முகவனச மலர்குவிய மோகமுற்றழிந்து
மொழிபதற வசமழிய ஆசையிற் கவிழ்ந்து விடுபோதும்
முழுதுணர வுடையமுது மாதவத் துயர்ந்த
பழுதில்மறை பயிலுவள ஞதரித்து நின்று
முனிவர்சுரர்தொழுதுருகு பாதபத்மமென்று மறவேனே"

**டுண்டு.....டிண்டென :—**

இவைகள் பேய்க்கூத்தின் ஒலிக் குறிப்புகள்.

**வெஞ்சூர் :—**

வெப்பமான துன்பத்தைத் தேவர்கட்குத் தந்த சூரபன்மன்.

**ராவுத்தன் :—**

இது திசைச் சொல். ராவுத்தன்—குதிரைவீரன்; மயிலாகிய குதிரைமேல் வருகின்ற வீரன்,

"எதிரில் புலவர்க்குதவு வெளிமுகடு முட்டவளர்
இவுளி முகியைப் பொருத ராவுத்தனனவனும்" —வகுப்பு.

## கருத்துரை

சூரனைக் கொன்றருளிய சுப்ரமண்யக் கடவுளே! காமக்கள்ளைக் குடித்து அறிவு மயங்கினும் தேவரீருடைய வேலாயுதத்தை அடியேன் மறவேன்.

குறிப்பு :—இப் பாசுரத்தை ஒவ்வொருவரும் ஊன்றிப் படித்தும், எப்போதும் திருவேலிறைவனை இடைவிடாது சிந்தித்து வாழ்த்தி வந்தித்தும் மீட்டிங்கு வாரா நெறியைப் பெற்று இன்புறுவார்களாக.

## 38

நாளென் செயும்வினை தானென் செயுமெனை நாடிவந்த
கோளென் செயுங்கொடுங் கூற்றென் செயுங்கும ரேசரிரு
தாளுஞ் சிலம்புஞ் சதங்கையுந் தண்டையுஞ் சண்முகமுந்
தோளுங் கடம்பு மெனக்குமுன் னேவந்து தோன்றிடினே.

## பதவுரை

குமர ஈசர்=குமாரக் கடவுளுடைய, இருதாளும்=இரண்டு திருவடிகளும், சிலம்பும்=சிலம்புகளும், சதங்கையும்=சதங்கையும், தண்டையும்=தண்டைகளும், சண்முகமும்=ஆறு திருமுகங்களும், கடம்பும்=கடப்ப மலர் மாலையும், எனக்கு=அடியேனுக்கு, முன்னே வந்து=எதிரில் வந்தருளி, தோன்றிடின்=தோன்றுமானால், நாள் என் செயும்=கொடிய திதி நட்சத்திரங் கூடிய நாள்கள் அடியேனை என்ன செய்யக்கூடும்? வினைதான் என்செயும்=தீவினைதான் என்ன செய்யக்கூடும்? எனை நாடி வந்த கோள் என்செயும்=அடியேனைத் துன்புறுத்துவதற்குத் தேடி வந்த நவக்கிரகங்கள் தான் என்ன செய்யக்கூடும்? கொடும் கூற்று என்செயும்=கொடிய இயமனால்தான் என்ன செய்ய முடியும்?

## விரிவுரை

**நாளென் செயும் :—**

குமாரபரமேஸ்வரரைத் தெரிசித்த பக்த சீலர்களை நட்சத்திரம் திதி யோகம் முதலிய தீமை பயக்க நின்ற நாள்கள் ஒன்றும் செய்யமாட்டாது வலியிழந்து நிற்கும்.

**வினைதானென் செயும் :—**

ஊழ்வினையும் தன் ஆற்றல் இழந்து முருகனடியார்களைத் துன்புறுத்தாது நீங்கும்; வினையையறுப்பது வேல்; 'வினையோடவிடுங் கதிர்வேல்' என்றபடியாலும், "தீவினையெலாமடிய நீடு தனி வேல் விடுமடங்கல் வேலா" என்றபடியாலும் விளங்குகின்றது. அத்தகைய வேலையுடைய விமலனை வணங்கும் மெய்யடியார்களை வினைத்துன்பம் சாராது என்பது ஒரு தலை. வினையால் வெந்து வெதும்பும் ஒவ்வொருவரும் "கூறுமடியார்கள் வினைதீர்க்கும்" நம் குமரனை வணங்கி வினையைத் தணித்துக் கொள்வார்களாக.

**எனை நாடிவந்த கோளென் செயும் :—**

பண்டைப்பிறப்பில் செய்த வினைப்பயனால் துன்பஞ் செய்யும் பொருட்டு வந்த நவகோள்களும் கந்தக் கடவுளடியார்களிடம் தமது ஆற்றலைக் காட்டும் ஆற்றலற்று அடங்கிவிடும். இத்தன்மை கந்தரந்தாதியிலும் வருமாறு காண்க.

சேயவன் புந்தி வனவாச மாதுடன் சேர்ந்த செந்திற்
சேயவன் புந்தி கனிசா சராந்தக சேந்தவென்னில்
சேயவன் புந்தி பனிப்பானு வெள்ளிபொன் செங்கதிரோன்
சேயவன் புந்தி தடுமாற வேதருஞ் சேதமின்றே.

சிவந்த நிறத்துடன் அன்பை விளைவித்து கான்யாறு ஓடும் தினைவனத்தில் இருந்த வள்ளியம்மையாருடன் சேர்ந்த செந்திற் பெருமானே! வலிமை மிக்க போரில் வல்ல அசுரர்களை யழித்தவரே! சேந்தரே! என்று துதிப்பவர்க்கு, செவ்வாய், புதன், சந்திரன், சுக்கிரன், வியாழன், சூரியன், சனி இவைகள் அறிவைத் தடுமாற வைக்கும் துன்பம் ஒரு போதும்

இல்லை. பின் வரும் ஞானசம்பந்தருடைய தேவாரத்தை இதனோடு வைத்து எண்ணி இன்புறுக.

வேயுறு தோளிபங்கன் விடமுண்டகண்டன் மிகநல்ல வீணை தடவி
மாசறு திங்கள் கங்கை முடிமே லணிந்தெ னுளமே புகுந்தவதனால்
ஞாயிறு திங்கள் செவ்வாய் புதன் வியாழம் வெள்ளி சனிபாம்
[பிரண்டு முடனே
ஆசறு நல்ல நல்ல அவைநல்ல நல்ல அடியாரவர்க்கு மிகவே.

கொடுங்கூற்றென் செயும் :—

இயமன் உயிரையும் உடம்பையும் கூறுபடுத்துவதால் கூற்றுவன் எனப்படுவன். மணமகனென்றும், இளைஞன் என்றும், ஒரு குலத்திற்கு ஒரு மைந்தனென்றும் பாராது கருணையின்றி உயிரைக் கவர்பவனுதலால் கொடுங் கூற்றென்றார். குமரேசரை வணங்குவோர்க்கு எமபய மில்லை. அடிகள் இயமனை எதிர்த்து வீறிட்டு முழக்குவதை அடியிற்கண்ட அமுதப் பாக்களிலும் கண்டு மகிழ்க.

"சீராவுங் கையிற் சிறுவாளும் வேலுமென் சிந்தையவே
வாராதகல் அந்தகா வந்த போதுயிர் வாங்குவனே"
தண்டா யுதமுந் திரிசூலமும் விழத் தாக்கியுன்னைத்
திண்டாட வெட்டி விழ விடுவேன் செந்தில் வேலனுக்குத்
தொண்டாகியவென் அவிரோத ஞானச் சுடர்வடிவாள்
கண்டாயடா அந்த காவந்து பார்சற்றென் கைக்கெட்டவே.

இருதாளும் சிலம்பும் சதங்கையும் தண்டையும்:—

எந்தை கந்தவேள் இளம்பூரணனுதலால் அவனுடைய திருவடியில் தண்டையும் சதங்கையும் சிலம்பும் எப்போதும் இடையருது மறையொலியை முழக்கிக் கொண்டிருக்கும்.

"இனிய நாத சிலம்பு புலம்பிடும்
அருண ஆடக கிண்கிணி தங்கிய அடிதாராய்"
—திருப்புகழ்.

"அநவர தமுமறை முறையிடு பரிபுரம்
அலங்கு மிருதாள் குலுங்க ஒருபால்" —வகுப்பு.

### கருத்துரை

குமாரக்கடவுளைத் தெரிசித்த மெய்யடியார்களை நாளும் கோளும் வினையும் வருத்தமாட்டாது வலியழிந் தொழியும். அதனால் "இன்பமே எந்நாளுந் துன்பமில்லை."

## 39

**உதித்தாங் குழல்வதுஞ் சாவதுந் தீர்த்தெனை யுன்னிலொன்றா**
**விதித்தாண் டருள்தருங் காலமுண் டோவேற்பு நட்டுரக**
**பதித்தாம்பு வாங்கிநின் றம்பரம் பம்பரம் பட்டுழல**
**மதித்தான் திருமருகா மயிலேறிய மாணிக்கமே.**

### பதவுரை

வெற்பு=மந்தரமலையை, நட்டு=பாற்கடலில் மத்தாக நட்டு, உரகபதி=பாம்புகட்கரசாகிய வாசுகி என்னும், தாம்பு=வடக் கயிற்றால், வாங்கி நின்று=வளைத்து நின்று, அம்பரம்=பாற்கட லானது, பம்பரம் பட்டு உழல=பம்பரம் போல் சுழலுமாறு, மதித் தான்=கடைந்தவராகிய நாராயணமூர்த்தியின், திருமருகா= பெருமைமிக்க மருகரே! மயில் ஏறிய=மயில் வாகனத்தின் மீது எழுந்தருளிய, மாணிக்கமே=மாணிக்க மணியே! உதித்து ஆங்கு உழல்வதும்=பிறந்து பிறந்த இடங்களில் உழல்வதையும், சாவதும்=இறப்பதையும், தீர்த்து=நீக்கி, என்னை=அடியேனை, உன்னில் ஒன்றா=தேவரீரிடத்தில் இரண்டறக் கலக்குமாறு, விதித்து=நியமித்து, ஆண்டு அருள்தரும்=ஆட்கொண்டு அருள் புரியும், காலம் உண்டோ=ஒரு காலமும் உண்டாகுமோ?

### விரிவுரை

**உதித்தாங்குழல்வதும்:—**

உயிர்களாகிய நாம், பல்வேறு இடங்களில் பல்வேறு யோனிகளில் ஓயாமல் பிறந்து, பிறந்த அவ்விடங்களை யெல்லாம் சொந்தமென்று எண்ணி ஆங்காங்கு உழன்று வருகின்றோம். தாயராகியும் தந்தையராகியும் வராதவரில்லை; நாமும் அவ்வண்ணமே அவ்வுயிர்கட் கெல்லாம் தாயராகியும் தந்தையராகியும் வந்தோம்,

நாம் பிறவா நிலனும் இல்லை; இறவா நிலனும் இல்லை; நம்மைத் தின்னாத உயிர்களுமில்லை; நாம் தின்னாத உயிர்களுமில்லை; நாம் பேசாத மொழியுமில்லை; நாம் ஆடாத நீர் நிலையுமில்லை; நாம் செய்யாத தொழிலுமில்லை. படைப்பு தொடங்கிய நாள் முதல் பிறப்பதும், இறப்பதுமாகவே இருக்கின்றோம். எறும்பு முதல் யானையீருக உள்ள எண் பத்து நான்கு நூருயிர யோனிபேதங்களிலும் மாறி மாறி பிறந்திறந் துழன்று எய்த்து ஒழிந்தோம்.

''எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தே னெம்பெருமான்''

என்ருர் மணிவாசகனுர். இதனை இன்னும் விரித்து ஓது கின்ருர் பட்டினத்துப் பிள்ளையார்.

''அருள்பழுத் தளிந்த கருணை வான்கனி
ஆரா இன்பத் தீராக் காதல்
அடியவர்க் கமிர்த வாரி நெடுநிலை
மாடக் கோபுரத் தாடகக் குடுமி
மழைவயிறு கிழிக்குங் கழுமல வாணரின்
வழுவாக் காட்சி முதிரா இளமுலைப்
பாவையுடன் இருந்த பரமயோகி
யானென் றுணர்த்துவன் எந்தை மேனாள்
அகில லோகமும் அநந்த யோனியும்
நிகலமுந் தோன்றநீ நினைத்தநாள் தொடங்கி
எனைப்பல யோனியும் நினைப்பரும் பேதத்
தியாரும் யாவையும் எனக்குத் தனித்தனித்
தாய ராகியுந் தந்தைய ராகியும்
வந்தி லாதவர் இல்லை யான்அவர்
தந்தைய ராகியுந் தாய ராகியும்
வந்தி ராததும் இல்லை முந்து
பிறவா நிலனும் இல்லை அவ்வயின்
இறவா நிலனும் இல்லை பிறிதில்
என்னைத் தின்ன உயிர்களுமில்லை யான் அவை
தம்மைத் தின்ன தொழிந்ததுமில்லை அனைத்தே
காலமுஞ் சென்றது யானிதன் மேலினி
இளைக்குமா றிலனே நாயேன்

நந்தாச் சோதிநின் அஞ்செழுத்து நவிலும்
தந்திரம் பயின்றதும் இலனே தந்திரம்
பயின்றவர்ப் பயின்றதும் இலனே யாயினும்
இயன்றதோர் பொழுதின் இட்டதுமலராச்
சொன்னது மந்திர மாக என்னையும்
இடர் பிறப் பிறப்பென்னும் இரண்டின்
கடற்படா வகை காத்தல் நின்கடனே''

''பிறப்பு இறப்பு என்னும் பெருந்துயர் அற முருக வேளுடன் ஒன்றுபடுங் காலம் ஒன்று உண்டாகுமோ?'' என்று அடிகள் இப்பாடலில் வினவுகின்றனர்.

மதித்தான் திருமருகா:—

அமிர்தமதனம் செய்து அமரர்கட்கு இறவா நிலையைச் சிலகாலம் வரை தந்த திருமாலினது மருகராதலால், என்றும் பிறவாநிலையை எனக்கு அருள் புரிவீர் என்றனர்.

பிறவிப்பெருங்கடலினின்றும் நீந்தி உய்யும் மாதவ முடையார் ஒவ்வொருவரும் இத்திருப்பாடலை நாள்தோறும் எம்பிரானிடம் முறையிட்டுப்பாடி கனிந்து நலமுறுவார்களாக.

## கருத்துரை

பாற்கடல் கடைந்த பச்சைவண்ணன் மருகரே! பிறவிப் பெருங்கடலினின்று நீங்கி உம்முடன் கலந்தின்புற அருள் புரிவீர்.

## 40

சேல்பட் டழிந்தது செந்தூர் வயற்பொழில் தேங்கடம்பின்
மால்பட் டழிந்தது பூங்கொடி யார்மனம் மாமயிலோன்
வேல்பட் டழிந்தது வேலையுஞ் சூரனும் வெற்புமவன்
கால்பட் டழிந்ததிங் கென்றலை மேலயன் கையெழுத்தே.

## பதவுரை

செந்தூர் வயல்=திருச்செந்தூரிலுள்ள கழனிகள், சேல்பட்டு அழிந்தது=சேல் என்னும் மீன்கள் குதித்துத் திரிவதனுல் அழிந்து போயின, பூங்கொடியார்=மலர்க்கொடி போலுள்ள பெண்களின்,

மனம்=மனமானது, பொழில் தேம் கடம்பின்=சோலையிலுள்ள இனிமையான கடப்பமலர் மாலையின், மால்பட்டு அழிந்தது= விருப்பம் உண்டாகி அழிந்து போயிற்று, வேலையும்=கடலும், சூரனும்=சூரபன்மனும், வெற்பும்=கிரௌஞ்ச மலையும், மாமயிலோன்=பெருமை தங்கிய மயில்வாகனத்தை யுடைய முருகக் கடவுளது, வேல்பட்டு அழிந்தது=வேலாயுதமானது படுதலால் அழிந்துபோயின; இங்கு என் தலைமேல்=இவ்வுலகில் அடியேனுடைய தலையின்மேல் எழுதியுள்ள, அயன் கை எழுத்து= பிரமதேவனுடைய கை எழுத்தானது அவன் கால்பட்டு அழிந்தது=அக் கந்தவேளுடைய திருவடிபட்டு அழிந்து போயிற்று.

*விரிவுரை*

**சேல்பட்டழிந்தது செந்தூர் வயல் :—**

எந்தை கந்தவேள் எழுந்தருளியுள்ள செந்திலம்பதி மிக்க வளம் பொருந்தியது. அத் திருத் தலத்தை நல்ல நீருள்ள வயல்கள் சூழ்ந்திருக்கின்றன. அவ் வயல்கள் எப்போதும் மரகதக்கம்பளம் விரித்தாற்போன்று பச்சைப் பசேலென்று செந்நெற் பயிர்களோடு கூடி காண்பார் கண்களைக் குளிர்விக்கின்றன. நீர் நிறைந்த அவ்வயல்களில் சேற்கெண்டைகள் துள்ளித் துள்ளிக் குதித்து ஓடுகின்றன. அதனால் அப் பயிர் சற்று சிதைவுறுகின்றது. மேலும் அவ்வயலில் சேற்கெண்டையோடு வாளை மீன்கள் துள்ளியோடுகின்றன. அதனால் அருகிலுள்ள பாக்கு மரங்களின் பாக்குக் குலைகள் சிதறுகின்றன. மேலும் மஞ்சளும் இஞ்சியும் வாழையும் இடைவிடாது நெருங்கி வளர்ந்திருக்கின்றன. என்னே இயற்கையின் எழில்? எழுதும்போதே அவ்வியற்கையின் தட்பத்தால் கை குளிர்கின்றது; எண்ணுந்தோறும் இதயம் குளிர்கின்றது; நவிலுந்தோறும் நாவும் குளிர்கின்றது.

“சேலொடு வாளை வரால்கள் கிளம்பித்
தாறுகொள் பூக மளாவிய இன்பச்
சீரலைவாய் நகர் மேவிய கந்தப் பெருமாளே”

"வளரும் வாழையு மஞ்சளு மிஞ்சியும்
இடை விடாது நெருங்கிய மங்கல
மகிமை மாநகர் செந்திலில் வந்தருள் பெருமாளே"

**கடம்பின் மால்பட்டழிந்தது பூங்கொடியார் மனம்:—**

இது நாயகீ நாயக பாவத்தைக் கூறுகின்றது. இறைவனோடு இரண்டறக் கலந்து அநுபவிக்கும் அத்துவிதப் பேரானந்தப் பெருவாழ்வு இந்த நாயகீ நாயக பாவத்தால் தான் கிடைக்கும். இறைவனை நாயகனாகவும் நம்மை நாயகியாகவும் வைத்து அன்பு செய்வது. இங்ஙனம் அன்பு செய்யும் போது நாம் பெண்ணாகிவிடுகிறோம். இறைவனைத் தழுவ வேண்டுமென்று காதல் வெள்ளம் பொங்கி வழிந்து கரை புரண்டோடும். அக்காலை இறைவனுடைய திருமார்பிலுள்ள மாலை கிடைக்குமானால் அது அக் காதல் வெள்ளத்திற்கு ஓர் அணையாகும். ஆதலின் "பூங்கொடியார் மனம், பெருமான் அணிகின்ற கடப்ப மலர் மாலையில் அன்புற்று அழிந்து போயிற்று" என்றார். மேலும் இக் கருத்தில் வரும் திருவாக்குகளையும் உன்னி உள்ளம் உவப்புறுக.

"குறவாணர் குன்றில் உறைபேதை கொண்ட
கொடிதான துன்ப மயல்தீர
குளிர் மாலையின்கண் அணிமாலை தந்து
குறைதீர வந்து குறுகாயோ"

"மால்கொண்ட பேதைக்குன் மணநாறும்
மார்தங்கு தாரைத்தந் தருள்வாயே"

"கொடிய மதவேள்கைக் கணையாலே
குரைகடலாலே நெடுநிலக் கடலாலே
நெடிய புகழ்சோலைக் குயிலாலே
நிலைமை கெடுமானைத் தழுவாயே"
—திருப்புகழ்.

திருஞானசம்பந்த சுவாமிகளும் இவ்வாறு பாடுமாறு காண்க.

பைங்கோட்டு மலர்ப்புன்னைப் பறவைகாள் பயப்பூரச்
சங்காட்டந் தவிர்த்தென்னைத் தவிராநோய் தந்தானே
செங்காட்டங் குடிமேய சிறுத்தொண்டன் பணிசெய்ய
வெங்காட்டு ளனலேந்தி விளையாடும் பெருமானே.

வேல்பட்டழிந்தது வேலையும் சூரனும் வெற்பும் :—

சூரபன்மன் இறுதியில் வேற்படையைக் கண்டு அஞ்சி கடலில் ஒளிந்தனன்; அப்போது வேற்படை கடலிடஞ் செல்ல அம் மாப்பெருங்கடல் வற்றி வறண்டு அழிந்தது.

வெற்பு-கிரௌஞ்சமலை.

அவன் கால்பட்டழிந்தது..... அயன் கையெழுத்தே :—

மையால் எழுதிய எழுத்துக்களை யழித்தற்கு ஒரு (ரப்பர்) கருவியுள்ளது. அதுபோல் எதனாலும் அழிந்திடாத தலையிலுள்ள அயன் எழுத்தை அழிக்குங் கருவி (ரப்பர்) கந்தவேள் கழலிணையாகும். அப்பரமபதியின் தாள்மேல் வீழ்வோர்க்குத் திருவேலிறை திருவடி படுதலால் பிரமலிபி தானே அழிந்தொழிகின்றது.

வல்லைத் துரந்த முலை நுளைமாதர் வளையெறியப்
பல்லைத் திறந்துறு மிக்க விதானப் பழமுகுக்குந்
தொல்லைத் திருத்திகழ் போரூர்க் குகன்பதஞ் சூடுஞ்சென்னிக்
கில்லைப் பிரமன் றுயருறக்கீறு மெழுத்துக்களே.

—சிதம்பரசுவாமிகள்.

சேல்பட் ı ழியும் வயலுடைச் செந்திலாண்டவனைக் காதலித்து அவருடைய கடப்பமாலையில் மால்பட்டு மனமழிதலும், அம் மயில்வாகனன் வேல்பட்டு ஆசையாகிய கடலும், ஆணவமாகிய சூரனும், சஞ்சிதவினைக் கூட்டமாகிய வெற்பும் அழிந்தன; அழிதலும் அவருடைய கால் பட்டு அயனெழுத்து மழிந்தது. அதனால் இம்மையிலும் துன்பமில்லை; இனிப் பிறக்கவேண்டிய பெற்றியுமில்லை.

இப் பாடல் எத்துணை அழகாக அமைந்திருக்கின்றது என்பதை அன்பர்கள் சற்று சிந்தித்துப் பார்ப்பார்களாக.

தொடையழகு, நடையழகு, சொல்லழகு, பொருளழகு, காரண காரியத்தோடு கூறும் நுட்பம், அவைகளின் திட்பம் இத்தனைக்கும் உறைவிடமாக இத் திருப்பாடல் விளங்குகின்றது. நினைக்குந்தொறும் நெஞ்சை அள்ளு கின்றது. உன்னுந்தொறும் உந்திப் பசியாறுகின்றது. பாடுந்தொறும் பவப்பிணி தணிகின்றது. ஆராயுந்தொறும் ஆரா இன்பம் ஊற்றெடுக்கின்றது.

### கருத்துரை

செவ்வேளை எவ்வேளையுந் தொழுவோர்க்கு அயன் எழுத்தழியும்; அதனால் பிறவித் துன்பம் இன்றி இன்பமே உண்டாகும்.

## 41

பாலே யனைய மொழியார்த மின்பத்தைப் பற்றியென்றும்
மாலே கொண்டுய்யும் வகையறி யேன்மலர்த் தாள்தருவாய்
காலே மிகவுண்டு காலே யிலாத கணபணத்தின்
மேலே துயில்கொள்ளு மாலோன் மருகசெவ் வேலவனே.

### பதவுரை

காலே மிக உண்டு=வாயுவையே மிகவும் புசித்து, காலே இலாத=கால்களே இல்லாத, கண பணத்தின் மேலே=கூட்ட மாகிய படங்களையுடைய ஆதிசேடன்மீது, துயில்கொள்ளும்= சிவயோக நித்திரை செய்யும், மாலோன் மருக=திருமாலுக்கு மருகரே! செவ்வேலவனே=சிவந்த வேலாயுதத்தை யுடையவரே! பாலே அனைய மொழியார்தம் இன்பத்தை பற்றி=பாலையே ஒத்த சொற்களையுடைய பெண்களின் சுகத்தை விரும்பி, என்றும்=எக் காலத்தும், மாலே கொண்டு=மயக்கத்தையே மேற்கொண்டவ னாகி, உய்யும் வகை அறியேன்=பிழைக்கும் விதத்தை அறிந் திலேன் (ஆதலால்), மலர் தாள் தருவாய்=தேவரீருடைய செம் மலர் நோன்றுட்கமலங்களைத் தந்தருள்வீர்.

## விரிவுரை

**பாலேயனைய மொழியார் :—**

பெண்களுடைய சொற்கள் பெண் விருப்புடையார்க்குப் பாலினுந் தேனினும் கன்னலினும் இனிமையாகச் செவியில் தித்திக்கும். "பாலென்பது மொழி"; "கன்னலும் புளிக்கு மின்சொற் கயிரவங் கருகும் வாயாள்". விடபுருடர்கட்கு அங்ஙனம் இனிக்குமேயன்றி அருள்தாகங் கொண்டார்க்கு இனிக்காது.

**இன்பத்தைப் பற்றி :—**

பற்றற்ருன் பதமலரைப் பற்ருது, "மங்கையர் சுகத்தை வெகு இங்கித" மெனப் பற்றி ஈடேறுமாறின்றி இடர்ப்படு கின்றதைக் குறித்து அடிகள் வருந்துகின்றனர்.

**என்றும் மாலே கொண்டு :—**

மால்-மயக்கம்; பெண்ணுசை கொண்டோர்க்கு அறிவு விளக்கத்தை யடையாமல் இருளடையும். அதனுல் செய் வன இன்ன தவிர்வன இன்னவென்று உணருந் திறனின்றி மயங்குவர்.

**உய்யும் வகை :—**

பெண்மால் கொண்டு பேதுற்ருேர் உய்யும் வகை வேற் பெருமானைச் சிந்திப்பதுவே. "மகமாயை களைந்திட வல்ல பிரான்" அவனே யாதலின், அப் பரமபதியைச் சிந்திப் பார்க்குப் பெண்மயல் தானே விலகும்.

**மலர்த்தாள் தருவாய் :—**

பல பிறவிகளாக மாதர் மயலுற்று வருந்திய ஆன்மாக் களுக்கு எமது ஞானபண்டிதராம் குமர நாயகன் குரைகழலே பற்றுக்கோடாம். பாவ வெயிலால் வெதும்பிய ஆன்மாக்கள் ஒதுங்கி இளைப்பாறும் நிழல் அவ் வேலவன் திருவடி நிழலே. ஆதலால், அப் பதமலரைத் தருமாறு அடிகள் வேலவனை வேண்டுகின்றனர்.

**காலே மிகவுண்டு காலேயிலாத :—**

கால்-வாயு ; பாம்புகட்கு உணவு காற்று. பாம்புகட்குக் கால் இல்லை ; கணம்-கூட்டம் ; பணம்-பாம்பின் படம். இவ் வடியின் சொல்லழகும் சொல் வன்மையும் உன்னுந்தொறும் உள்ளம் உவக்கின்றது.

**துயில்கொள்ளு மாலோன் :—**

திருமால் அரவணையின்மீது பள்ளிகொண்டு சிவயோக நித்திரை செய்கின்றார். இவ்வறிதுயிலிலேயே அளவற்ற இன்பம் ஊற்றெடுக்கும். அதில் வல்லவர் அரவணைச் செல்வ ராம் அவரே.

“பனகந் துயில்கின்ற திறம்புனை
கடல்முன்பு கடைந்த பரம்பரர்
படரும்புய லென்றவ ரன்புகொள் மருகோனே”

மால்-பெருமை ; பெருமையின் மிக்கவராதலால் விஷ்ணு மூர்த்தி மாலெனப் படுவர். இனிச் சிவமூர்த்தியிடம் மால் கொண்டவராதலால் மால் எனப் பெயர் கொண்டனர் என்ப தும் பொருந்தும்.

## கருத்துரை

மால்மருகரே! வேலவரே! பெண்ணாசையிற் சிக்கிப் பேதுறும் அடியேனுக்குத் தேவரீருடைய திருவடியைத் தந்து அருள்வீர்.

## 42

**நிணங்காட்டுங் கொட்டிலை விட்டொரு வீடெய்தி நிற்கநிற்குங்
குணங்காட்டி யாண்ட குருதே சிகனங் குறச்சிறுமான்
பணங்காட்டு மல்குற் குருகுங் குமரன் பதாம்புயத்தை
வணங்காத் தலைவந்தி தெங்கே யெனக்கிங்ஙன் வாய்த்ததுவே.**

## பதவுரை

நிணம் காட்டும்=கொழுப்புடன் கூடிய தசைகள் மிகுதியாகத் தோன்றச் செய்கின்ற, கொட்டிலை=தொழுவத்தை (உடம்பை),

விட்டு=அகன்று, ஒரு வீடு எய்தி நிற்க=ஒப்பற்ற முத்தியை அடியேன் அடைந்து நிலைபெற்றிருத்தற்கு, நிற்கும்=நிற்றற்குரிய, குணம் காட்டி=குணத்தை எனக்குக் காட்டியருளி, ஆண்ட குரு தேசிகன்=அடியேனை ஆட்கொண்ட குருநாதன், அம் குற சிறு மான்=அழகிய குறவர் குலத்தில் தோன்றிய இளம் மான் போன்ற வள்ளிநாயகியாருடைய, பணம் காட்டும்=பாம்பின் படத்தை யொத்து விளங்குகின்ற, அல்குற்கு உருகும் குமரன்=அல்குலின் பொருட்டு உள்ளம் உருகுகின்ற குமாரக் கடவுளின், பத அம் புயத்தை=பாதமாகிய தாமரை மலரை, வணங்காத=பணியாத, தலை இது=சென்னியாகிய இந்த அவயவம், எங்கே வந்து=எந்த விதமாக வந்து, எனக்கு இங்ஙன் வாய்த்ததுவே=அடியேனுக்கு இந்த வண்ணம் கிடைத்தது.

## விரிவுரை

**நிணங்காட்டும் கொட்டிலை :—**

கொட்டில்-தொழுவம்; மாடு கட்டுமிடம். உயிர்களைப் பொதுவாகப் பசுவென்பது மரபு. சிறப்பாக மாட்டை நாற் காற் பசுவென்றும் மனிதரை இருகாற் பசுவென்றும் உபநிட தங்களில் கூறப்பட்டிருக்கின்றது. உயிர்களாகிய பசுக்களுக் குத் தலைவராதலால் சிவமூர்த்தியைப் பசுபதி என்று சுருதிகள் அழைக்கின்றன.

உமாபதயே பசுபதயே நமோ நம:
(தைத்திரீயாருணசாகை—நாராயணம்.)

வடமொழி நிகண்டும் அவ்வாறே பேசுகின்றது.

சம்புரீச: பசுபதி: சிவச்சூலீ மஹேச்வர:

கட்டுப்படுவதற்குப் பசு என்று பெயர். பாசமாகிய தளை யினுல் ஆன்மா கட்டுண்டிருப்பதால் பசுவெனப்படுகின்றது. எனவே, இவ்வான்மாவாகிய பசு இவ்வுடம்பில் தங்கியிருப்ப தால் உடம்பைக் கொட்டில் என்றனர்.

மேலும், பசுத் தொழுவம் சாணம் நீர் முதலியவைகளால் சகதியுற்று புழுக்கள் கொசுக்கள் தங்கியிருக்கும். உயிர் தங்கும்

இவ்வுடலும், கொழுப்பு, மாமிசம், மலமூத்திரங்கள், புழு, சீழ் முதலியன தங்கி அருவருப்புறக் கிடக்கின்றது. ஆதலால் கொட்டில் என்று மட்டுங் கூருது "நிணங்காட்டுங்கொட்டில்" என்று அடை கொடுத்துக் கூறுவாராயினர்.

"குரம்பை மலசலம் வழுவளு நிணமொடு
எலும்பு அணிசரி தசையிரல் குடல்நெதி
குலைந்த செயிர் மயிர் குருதியொ டிவைபல கசுமாலம்"

"தோலெலும்பு சீநரம்பு பீளைதுன்று கோழைபொங்கு
சோரிபிண்ட மாயுருண்டு வடிவான தூலம்"

—திருப்புகழ்.

"ஆபாசக் கொட்டில்" —பட்டினத்தார்.

விட்டு ஒரு வீடெய்தி நிற்க:—

மேற்கூறிய தூய்மை யில்லாத உடம்பை மாறி மாறிப் பிறந்து இறந்து எடுத்து வருவதை விடுத்து முருகனை நினைத்து ஒப்பற்ற பரகதியை அடைந்து மீட்டிங்கு வராது நிலை பேறுறுதல் வேண்டும். வீடு-விடுபடுவது; பந்தத்தி னின்றும் விடுபடுவதே வீடு; உடற்சிறையினின்று விடுதலை யடைதல் வேண்டும்.

"விதிகாணு முடம்பை விடா வினையேன்" —அநுபூதி.

"ஏழையி னிரட்டைவினை யாயதொ ருடற்சிறை
யிராமல் விடுவித்தருள் நியாயக் காரனும்" —வகுப்பு.

நிற்கும் குணங்காட்டி யாண்ட :—

நிற்கும் என்ற சொல், வீடெய்தி நிற்க என்ற சொல் லுடன் சேர்ந்து, பரகதியை யடைந்து நிலைத்து நிற்பதற்குச் சாதனமாக நிற்கும் குணம் என்று பொருள்படும். இதுவேயு மன்றி பெரியோர்கள் நிற்கும் குணம் என்றும் பொருள்படும். மற்றும் அழிந்து படும் குணம் போலல்லது நிலைத்து நிற்கும் குணம் என்றும் கொள்ளலாம். அவ்வருங் குணத்தை அறுமுகக் கடவுள் அருணகிரியார்க்கு குருநாதராகத் தாமே எழுந்தருளிவந்து உபதேசித்து ஆட்கொண்டனர்.

குருதேசிக னங்குறச் சிறுமான் :—

குருதேசிகன்–சிறந்த குருநாதன். இரு பெயரொட்டுப் பண்புத் தொகையாகக் கொண்டால் குருவாகிய தேசிகன் என்று பொருள்படும்.

குரு தேசிகன் அம் குற சிறுமான் என்றும் பிரிக்கலாம்.
குரு தேசிகன் நம் குற சிறுமான் என்றும் பிரிக்கலாம்.

முன்னையதிற் பின்னையது சிறப்புடையது. அம் குறச் சிறுமான் என்றால் அழகிய வள்ளியம்மை என்று மட்டுமே பொருள்படும். நம் குறச் சிறுமான் என்றால் ஆன்மகோடிகளாகிய நமக்கு அருள்புரியும் அருளன்னையாகிய நமது வள்ளியம்மையார் என்று பொதுவாகவும், தமிழ்நாட்டிலே மனித வுருவுடன் பிறந்தமையால் நம் தமிழ்மக்களுக்கே உரித்தாகிய நமது வள்ளியம்மையாரென்று சிறப்பாகவும் பொருள்படும். நம் குறச் சிறுமான் என்னும்போதே ஒரு சொந்தமும் தனி உணர்ச்சியும் மகிழ்ச்சியும் பிறக்கின்றன.

அல்குற் குருதுங் குமரன் :—

வள்ளியம்மையார் ஞானம்பிகை. காருற்ற ஆணவக் கருவறையில் கட்டுண்டுகிடக்கும் ஆன்மகோடிகள் தனுகரண புவன போகங்களைப் பெற்று உய்யும்பொருட்டு கருணைவள்ளலாகிய இறைவன் திருவருட் சத்தியை விழைகின்றனன். சித் சத்தியாம் வள்ளியம்மையாகிய துணைக் காரணத்தைக் கொண்டு நிமித்த காரணனாகிய இறைவன் மாயையாகிய முதற் காரணத்தால் உலகைப் படைத்து உயிர்களுக்கு நன்மையைச் செய்கின்றார் என்ற உயர்ந்த தத்துவத்தை இத் தொடர் விளக்குகின்றது. மேலோடு பார்க்காமல் அதன் ஆழத்தைப் பார்ப்பார்க்கு அவ் வரும் பெருந் தத்துவம் புலனாகும்.

பதாம்புயத்தை வணங்காத் தலை :—

இறைவன் திருவடிக் கமலங்களை வணங்கும்பொருட்டே இத் தலை நமக்குக் கிடைத்தது.

''வாழ்த்த வாயும் நினைக்க மடநெஞ்சும்
தாழ்த்த சென்னியும் தந்த தலைவனை''

''வணங்கத் தலைவைத்து வார்கழல்வாய் வாழ்த்த வைத்து
இணங்கத் தன் சீரடியார் கூட்டமும் வைத் தெம்பெருமான்''

என்பன நம் தமிழ்மறை வசனங்கள்.

''தலையே நீ வணங்காய்-தலைமாலை தலைக்கணிந்து
தலையாலே பலி தேருந் தலைவனை
தலையே நீ வணங்காய்''

என்று எமது அப்பமூர்த்திகள் கட்டளையிடுகின்றார்கள்.

இறைவனை வணங்காத தலை மறுபிறப்பில் ஈமக் காட்டில் இகழ் விறகு சுமந்து துன்புறும்.

''எங்கள் பெருமானுன்னை வணங்காத மூடர்தலை
இகழ் விற கெடுக்குந் தலை'' —இராமலிங்க அடிகள்.

''எம்பெருமானை வணங்காத மடவோர் தலை ஓயாமல் சும்மாடு கட்டிச் சுமை சுமந்து உழன்று ஒழியா உறுகண் எய்தும்'' என்றார் குருநமசிவாயர்.

சும்மாடு கட்டிச் சுமந்துழலு வார்சிலரை
இம்மா நிலத்தில் எண்ணுங்கால்—அம்மாநின்
பொன்னா ரடிமுடியைப் போற்றாத பேரன்றோ
மன்னா சிதம்பரதே வா.

இறைவனை வணங்கிய தலை மறுபிறப்பில் சுவர்ண மிழைத்த மணிமுடி பூண்டு பல்லோருந் தன்னை வணங்கப் பெருமிதமுற்று விளங்கும்.

பார்வையில்லாத கண்ணும், கேள்வியில்லாத செவிட்டுக் காதும், பேச வாய்ப்பில்லாத நாவும் எவ்வாறு பயனிலா தனவோ அவ்வாறே எண்குண பஞ்சரனாகிய இறைவனை வணங்காத தலை இருந்தும் பயனற்றதே.

கோளில் பொறியில் குணமிலவே எண்குணத்தான்
தாளை வணங்காத் தலை. —திருக்குறள்.

அவ்வாறு கடவுளை வணங்கக் கூசும் மடவோருடைய தலையை வெறுத்து திருவருட்பிரகாச வள்ளலார் இகழ்கின்றனர்.

"வீட்டுத் தலைவனின் ருள்வணங்கார் தம் விரிதலை சும்
மாட்டுத் தலைபட்டி மாட்டுத் தலைபுன் வராகத்தலை
ஆட்டுத் தலைவெறி நாய்த்தலை பாம்பின் அடுந்தலை கற்
பூட்டுத் தலைவெம் புலைத்தலை நாற்றப் புழுத்தலையே.

மனிதப் பிறப்பெடுத்த ஒவ்வொருவரும் இறைவனை மனமுருகிச் சிந்தித்து வாயார வாழ்த்தித் தலையார வந்திக்க வேண்டும்.

"தலையாரக் கும்பிட்டுக் கூத்துமாடி" —அப்பர்.

எங்ஙனே வாய்த்ததுவே:—

"முருகா! மூவர் முதல்வா! தேவரீரை வணங்காத இத் தலை எவ்வாறு எனக்கு வந்து வாய்த்தது?" என்று சுவாமிகள் வருத்தமும் வியப்பும் எய்துகின்றார்கள்.

*கருத்துரை*

எடுத்த இப் பிறப்பைக் கொண்டு இனியொரு பிறப்பை எடாவண்ணம் ஞானோபதேசம் புரிந்து ஆட்கொண்ட ஞானபண்டிதன் செம்மலர் நோன்றாட் கமலங்களை வணங்காத தலை எனக்கு ஏன் வாய்த்தது?

## 43

கவியாற் கடலடைத் தோன்மரு கோனைக் கணபணக்கட்
செவியாற் பணியணி கோமான் மகனைத் திறலரக்கர்
புவியாற் பெழத்தொட்ட போர்வேன் முருகனைப் போற்றியன்பாற்
குவியாக் கரங்கள்வந் தெங்கே யெனக்கிங்ஙன் கூடியவே.

*பதவுரை*

கவியால்=குரங்குகளைக் கொண்டு, கடல் அடைத்தோன்= சமுத்திரத்தை அணைகட்டி அடைத்த விஷ்ணுமூர்த்தியின், மருகோனை=மருகராகிய முருகக் கடவுளை, கணபணம்=கூட்டமாகிய

படங்களையுடைய, கட்செவியால்=பாம்பைக் கொண்டு, பணி அணி=ஆபரணமாகப் பூண்டுள்ள, கோமான் மகனை=சிவபெருமானுடைய புதல்வரை, திறல் அரக்கர் புவி=வலிமையுடைய அவுணர்கள் வாழ்கின்ற உலகங்களெல்லாம், ஆர்ப்பு எழ=கதறுதலால் பெரிய ஒலியுண்டாக, தொட்ட போர்வேல்=ஏவிய போர்த் தொழிலில் வல்ல வேலாயுதத்தை யுடைய, முருகனை=முருகப் பெருமானை, அன்பால் போற்றி=அன்போடு வணங்கி, குவியா கரங்கள்=கும்பிடாத கைகள், எனக்கு=அடியேனுக்கு, வந்து எங்கே இங்ஙன் கூடிய=எவ்விதம் வந்து இங்கு சேர்ந்தன ?

விரிவுரை

**கவியாற் கடலடைத்தோன் மருகோனை :—**

திருமால் இராவணவதஞ் செய்தற் பொருட்டு ஸ்ரீராமாவதாரஞ் செய்தனர். சீதாதேவியை இராவணன் கவர்ந்தேக, சுக்ரீவனைத் துணையாகக் கொண்டு, வாநரங்களைத் திரட்டி, அக் குரங்குச் சேனைகளால் மலைகளைக் கொணரச் செய்து தென்கடலில் அணை கட்டினர். கடலைத் தடுத்தோன் மருகராகிய முருகர் பிறவிக் கடலுக்கும் ஓர் அணை செய்து இனிப் பிறவாது தடுப்பர்.

இறந்து பிறந்துழலும் ஏழைமட நெஞ்சே
பிறந்துழலாப் பெற்றி பெறலாம்—சிறந்து
கருதமலை யாதேநற் காரமலை பெற்ற
மருதமலை வேலவனை வாழ்த்து.

**கணபணக் கட்செவியாற் பணியணிவார் :—**

கணம்-கூட்டம்; பணம்-பாம்பின் படம். கட்செவி-பாம்பு. பாம்புக்குக் காது கிடையாது; கண்ணே செவியாக நின்று கேட்டல் தொழிலைச் செய்யும். அத்தகைய பாம்புகளைத் திருவாபரணமாகச் சிவபிரான் தரித்தனர். காரணம் வருமாறு:

தாருக வனத்து இருடிகள் "கன்மமே பலனைத் தரும். பலனைத் தருதற்கு வேறு கடவுள் வேண்டா" என்ற கொள்கையுடன் சிவபக்தியின்றி வாளா கிடந்தனர். அவரவர்கள்

செய்யும் புண்ணிய பாவங்கட்குத் தக்க பலன் அப்பிறப்பிலும் மறுபிறப்பிலும் வருமாயினும், வினை சடமாகலின் தானே வந்து பொருந்தாது. அவ் வினையைக் காலமறிந்து உயிர்கள் புசிக்கச் செய்தற்கு இறைவர் ஒருவர் அவசியம் வேண்டும். அவ்விறைவரே வினைகளை அவ்வக் காலங்களில் உயிர்களுக்கு ஊட்டுகின்றனர்.

இதனைத் தாருகவனத்து இருடிகள் உணராராயினர்.

''விரதமே பரமாக வேதியரும்
சரத மாகவே சாத்திரங் காட்டினர்'' —திருவாசகம்.

கருணைக் கடலாங் கண்ணுதற் கடவுள் அத் தாருகவனத் திருடியர்க்கு நல்லுணர்வு வருவிக்கும்பொருட்டு பிட்சாடன ராகப் போந்தருளினர். அதனால் அவர்கள் தவமழிந்து சிவ பெருமானுடன் பகைகொண்டு அபிசார வேள்வி செய்து கொடிய விடப்பாம்புகளை சிவமூர்த்தியைக் கொல்லுமாறு ஏவினர். எம் பரம பிதாவாகிய எண்டோளண்ணல் தன்னைக் கொல்லவந்த அரவங்களை, கருணை மேலீட்டால் கொல்லாது அவைகளைப் பிடித்து ஆபரணமாகத் தரித்துக்கொண்டு, ''எமக்குத் தீங்கு செய்யும் புன்மையோருக்கும் நன்மையே புரிவோம்'' என்று உலகுய்ய உணர்த்தியருளினர். என்னே அவருடைய கருணைத் திறம்? ஆதலால், அத்தகைய கருணைக் கடலின் திருப்புதல்வராம் கந்தக் கடவுளும் தமக்குத் தீங்கு செய்பவருக்கும் புல்லறிவினருக்கும் நல்லருள் பாலிப்பார் என்பது தேற்றம். பல தீங்குகளைப் புரிந்து கொல்ல வந்த சூரபன்மனை இரு கூருக சேவலு மயிலுமாக்கி யாட்கொண்ட புனித வரலாறே இதற்குப் போதிய சான்று.

தீயவை புரிந்தா ரேனும் குமரவேள் திருமுனுற்றுல்
தூயவ ராகி மேலைத் தொல்கதி யடைவ ரென்கை
ஆயவும் வேண்டுங் கொல்லோ அடுசம ரிந்நாட் செய்த
மாயையின் மகனு மன்றோ வரம்பிலா வருள்பெற்றுய்ந்தான்.

—கந்தபுராணம்.

**வேன் முருகனை :—**

வேற்படையை யுடைய முருகக்கடவுள்; வேல்—எல்லா வற்றையும் வெல்வது; வேலை நினைப்பவர்க்கும் போற்றுபவர்க்கும் அகத்தே வினைப்பகையும், புறத்தே முனைப்பகையும் வேருடன் அழியும்.

முருகன்–இனிமை, இளமை, வாசனை, மகிழ்ச்சி, இவைகளை யுடையவர்,

"முருகு கள் ளிளமை நாற்றம் முருகவேள் விழா வனப்பாம்".
—நிகண்டு.

எனவே முருகனை அன்பாற் போற்றுபவர் இனிமை, இளமை, மணம், மகிழ்ச்சி, அழகு முதலிய எல்லா நலங்களையும் எளிதிற் பெறுவர்.

**அன்பாற் குவியாக் கரங்கள்......கூடியவே :—**

முருகப் பெருமானை அன்புடன் கரங்களைக் குவித்து சிரத்தின்மேற் கூப்பி வணங்குதல் வேண்டும். அவ்வாறு வணங்கினோர் இம்மையிற் பெருஞ் செல்வராய் எல்லோருந் தொழப் பெருமிதத்தோடு இன்புற்று, மறுமையில் இந்திரன் முதலிய இமையவர் பதங்களும் அந்தமில் இன்பத் தழிவில் வீடும் எளிதிற் பெறுவர் என்பது ஒருதலை.

கந்தக் கடவுளைக் கைகுவித்துப் போற்றும் மெய்யன்பரிடம் காலன் வரமாட்டான்.

மந்தர கிரியைச் சற்று மனிதரா லசைக் கொணாது
சுந்தர மாருதத்தைத் துரும்புக ளணுகொ ணாது
செந்தழல் தன்னை ஈக்கள் சேர்ந்தினி மொய்க்கொணாது
கந்தனைப் போற்று வார்மேற் காலனும் அணுகொணாதே.
—பழநித்தலபுராணம்.

முருகப் பெருமானுடைய திருவடிக் கமலங்களில் மலரிட்டுக் குவித்துக் கும்பிட்ட கைகள் மறுபிறப்பில் சுவர்ணமிடுகின்ற கைகளாக விளங்கும்.

"தோன்றலுன் திருமுன் குவித்தபெரி யோர்கைகள்
சுவர்ன மிடுகின்ற கைகள்" —திருவருட்பா.

அவ்வாறு அப் பரமபதியின் திரு முன்னர் குவியாத பாவிகள் கை மறுபிறப்பில் 'ஐயா! ஐயா!' என்று நாப்புலர அலறி நீட்டிப் பிச்சை யெடுக்குங் கைகளாகத் துன்புறும்.

"பரமநின் றிருமுன்னர் குவியாத வஞ்சர்கை
பலியேற்க நீள் கொடுங்கை" —திருவருட்பா.

மூவருக்குந் தேவருக்கும் எட்டாத முழுமுதற் கடவுளாகிய முருகப்பெருமான், தன்னை அன்புடன் அகங் குழைந்து கை கூப்பி வணங்கும் விழுத்தொண்டர்க்கு நண்பராகிவிடு கின்றார்.

"முடிமேலே அஞ்சலி செய்வோர்கள் நேயக்கார"
—திருப்புகழ்.

எமது திருவருட் பிதாவாகிய அப்பமூர்த்திகளும் இதனை நோக்கியன்றோ கைகளுக்குப் பின்வருமாறு கட்டளையிடு கின்றார்.

"கைகாள் கூப்பித்தொழீர் கடிமாமலர் தூவிநின்று
பைவாய்ப் பாம்பரை யார்த்த பரமனைக்
கைகாள் கூப்பித் தொழீர்"

ஆதலால், "கந்தப் பெருமானைக் குவித்துக் கும்பிடாத இக்கரங்கள் எனக்கு இங்கு எங்கிருந்து வந்து சேர்ந்த னவோ?" என்று வள்ளல் உள்ளம் கவல்கின்றார்.

கருத்துரை

திருமால் மருகரே! சிவகுமாரரே! அசுரகுலகாலரே! தேவரீரைத் தொழாத இக்கரங்கள் அடியேனுக்கு எவ் வாறோ வந்து சேர்ந்தன. இனியாவது தொழச் செய்து அருள்புரிவீராக.

## 44

**தோலாற் சுவர்வைத்து நாலாறு காலிற் சுமத்தியிரு**
**காலா லெழுப்பி வளைமுது கோட்டிக்கைந் நாற்றிநரம்**
**பாலார்க் கையிட்டுத் தசைகொண்டு மேய்ந்த அகம்பிரிந்தால்**
**வேலாற் கிரிதொளைத் தோனிரு தாளன்றி வேறில்லையே.**

### பதவுரை

தோலால் சுவர் வைத்து=தோலினாலே சுவர் எழுப்பி, நால் ஆறு காலில் சுமத்தி=பத்து வாயுக்களினால் தாங்குவித்து, இரு காலால் எழுப்பி=இரண்டு கால்களாகிய தூண்மேல் நிற்கச் செய்து, வளை முதுகு ஓட்டி=வளைந்த முதுகு எலும்பாகிய மேல் முகட்டை யமைத்து, கை நாற்றி=இரு கரங்களாகிய கொடுங் கைகளைத் தொங்கவிட்டு, நரம்பால் ஆர்க்கையிட்டு=நரம்பு களால் கட்டி, தசைகொண்டு மேய்ந்த=மாமிசம் என்ற பூசுவேலை யால் மூடிச் செய்த, அகம் பிரிந்தால்=இந்த உடம்பாகிய வீட்டை விட்டு உயிர் பிரியுங்கால், வேலால் கிரிதொளைத்தோன்=வேற்படை யால் கிரௌஞ்ச மலையைத் தொளைத்த முருகக் கடவுளுடைய, இரு தாள் அன்றி வேறு இல்லை=இரண்டு சரணாரவிந்தங்களைத் தவிர புகலிடம் வேறு இல்லை.

### விரிவுரை

இப்பாடலில் அடிகள் நமது உடம்பை ஒரு வீடாக உருவகஞ் செய்கின்றனர்.

இரண்டு கால்களே–இரு தூண்கள்
நடுவே நடுவேயுள்ள எலும்புகளே-செங்கற்கள்
அதற்கிடையிலுள்ள நிணமே–சேறு
இருகரங்களே-கொடுங்கைகள்
முதுகெலும்பே-மேட்டுருட்டு
பக்கவிலா எலும்புகள்-கழிகள்
வாய் -தெருவாசல்
கீழ்வாய்–தோட்டத்து வாசல்
கண் 2, காது 2, மூக்கு 2

ஆக ஆறும்-தெருப்பக்கமுள்ள சாளரங்கள்

நீர் வரும் வழி-தோட்டத்துச் சாளரம்
தலைமயிர்-மேலேயுள்ள மஞ்சம் புல்
மேலே மூடியுள்ள தோல்-பூசுவேலை
உள்ளே வாழ்பவன்-ஆன்மா
இவ்வீட்டைக் கட்டிவைத்தவன்-இறைவன்.

கால்கொடுத் திருகையேற்றிக் கழிநிரைத் திறைச்சி மேய்ந்து
தோல்படுத் துதிரநீரால் சுவரெடுத் திரண்டுவாசல்
ஏல்வுடைத் தாவமைத்தங் கேழுசா லேகம் பண்ணி
மால்கொடுத் தாவிவைத்தார் மாமறைக் காடனாரே.
—அப்பர்.

நாலாறு கால்-தசவாயுக்கள்; அவையாவன:—

பிராணன், அபானன், சமாநன், உதானன், வியாநன், நாகன், கூர்மன், கிருகரன், தேவதத்தன், தனஞ்சயன்.

கருத்துரை

உடம்பாகிய வீடு பிரிந்தால் அடியேனுக்குப் புகலிடம் வேலாயுதக் கடவுளின் இரு பதாம்புயங்களே.

## 45

ஒருபூ தருமறி யாத்தனி வீட்டி லுரையுணர்வற்
றிரு;பூத வீட்டி லிராமலென் றுனிரு கோட்டொருகைப்
பொருபூ தரமுரித் தேகாச மிட்ட புராந்தகற்குக்
குருபூத வேலவ னிட்டுர சூர குலாந்தகனே.

பதவுரை

இரு கோடு=இரண்டு கொம்புகளையும், ஒருகை=ஒரு துதிக் கையையும் உடைய, பொரு பூதரம் உரித்து=போர் செய்யும் மலையை (யானையை) உரித்து, ஏகாசம் இட்ட=உத்தரீயமாகப் போட்டுக்கொண்ட, புராந்தகற்கு=திரிபுர தகனராகிய சிவபெருமானுக்கு, குரு=ஆசாரியரும், பூதவேலவன்=பரிசுத்தமாகிய வேற்படையையுடையவரும், நிட்டுர சூர குல அந்தகன்=நிட்டுரத்தைச்

செய்யும் சூரபன்மனுடைய குலத்தை யழித்தவரும் ஆகிய முருகக் கடவுள், பூத வீட்டில் இராமல்=பஞ்ச பூதங்களாலாகிய இந்த உடம்பாகிய வீட்டில் வசிக்காமல், ஒரு பூதரும் அறியா=பூத உடம்பையுடைய ஒருவரும் அறியவொண்ணாத, தனிவீட்டில்= ஒப்பற்ற வீட்டின்கண், உரை உணர்வு அற்று=சொல்லும் நினைவும் அற்று, இரு என்றான்=சலிப்பின்றி இருப்பாயாக என்று உபதேசித் தருளினார்.

## விரிவுரை

**ஒருபூதரு மறியாத் தனிவீடு:—**

பூதர் - பஞ்சபூத சம்பந்தமுடையவர். தனி வீடு - மௌன பஞ்சரம்; அதில் ''உரையும் உணர்வும் அற்று இரு'' என்று முருகப் பெருமான் அருணகிரிநாத சுவாமிகட்கு உபதேசித் தருளினார். ''சும்மா இரு சொல்லற'' என்பது இறைவன் உபதேச அருள்மொழி. ''இராப்பகலற்ற இடம்'' ''எனை யாண்ட இடம்'' என்ற திருவாக்குகளெல்லாம் இது குறித்து எழுந்தனவே.

வேதாகம சித்ர வேலாயுதன் வெட்சி பூத்ததண்டைப்
பாதார விந்த மரணாக அல்லும் பகலுமில்லாச்
சூதான தற்ற வெளிக்கே ஒளித்துச் சும்மாவிருக்கப்
போதா யினிமன மேதெரி யாதொரு பூதர்க்குமே.

என்ற கந்தரலங்காரத் திருப்பாடலையும் இத்துடன் பொருத்தி சற்று ஆழமாகச் சிந்தித்துணர்க.

ஒரு பூதர் - என்பதற்கு ஒப்பற்ற பரிசுத்தர்கள் என்றும் பொருள்படும்.

**பூதவீடு:—**

பஞ்ச பூதத்தாலாகிய உடம்பு.

**இருகோட்டொருகை பொருபூதரம்:—**

பூதரம் - மலை; உவம ஆகுபெயராக யானையை உணர்த்துகின்றது.

ஏகாசம்:—

ஏகாசம்-மேற்போர்வை. சிவபெருமான் யானையை உரித்துப் போர்வையாகப் போர்த்துக்கொண்டனர்.

முருகக்கடவுள் அருணகிரிநாதருக்கு குருவடிவாக முன் தோன்றி உபதேசித்தருளினர். சிவபெருமானுக்கும் குருவாக இருந்த குகப்பெருமான் தனக்குங் குருவாக வந்து உபதேசித்தனர் என்று கூறும் அருமைப்பாடு உன்னுந்தொறும் உள்ளம் உருகுகின்றது.

“உரையுணர்வு அற்று இரு” என்றதற்கு இணங்க சீர்பாத வகுப்பிலும் கூறுமாறு காண்க.

“உரையவிழ உணர்வவிழ உளமவிழ உயிரவிழ
உளபடியை யுணருமவ ரநுபூதி யானதுவும்”

கருத்துரை

சிவகுருவாகிய செவ்வேட்பரமன், இப்பூத வீட்டில் இராமல் மௌனவளாகத்தில் சும்மா இரு என்று உபதேசித்தருளினர்.

## 46

நீயான ஞான விநோதந் தனையென்று நீயருள்வாய்
சேயான வேற்கந்த னேசெந்தி லாய்சித்ர மாதரல்குற்
றோயா வுருகிப் பருகிப் பெருகித் துவளுமிந்த
மாயா விநோத மனோதுக்க மானது மாய்வதற்கே.

பதவுரை

சேய்ஆன=குழந்தை வடிவத்துடன், வேல்=வேற்படையைத் தாங்கிய, கந்தனே=கந்தநாயகரே! செந்திலாய்=திருச்செந்தூரில் எழுந்தருளியிருப்பவரே! சித்ர மாதர் அல்குல்=அழகிய பெண்களது அல்குலில், தோயா=மூழ்கி, உருகி=அவர்களை நினைந்து உள்ளம் உருகி, பெருகி=அதனால் காமமும் பிற துர்க்குணங்களும் மேலிட்டு, துவளும்=வாடுகின்ற, இந்த மாயா விநோதம்= இந்த மாயையாகிய விளையாட்டினால் உண்டாகிய, மனோதுக்க மானது = மனத்துன்பமானது, மாய்வதற்கு = அடியோடு அழிவதற்கு, நீ ஆன=அடியேன் உம்முடன் இரண்டறக் கலந்து நீரே

யாக விளங்குகின்ற, ஞான விநோதந் தன்னை = பதிஞானப் பேரானந்தப் பெருவாழ்வை, நீ என்று அருள்வாய் = தேவரீர் அடியேனுக்கு எந்த நாளில் தந்தருள்வீரோ?

விரிவுரை

**நீயான ஞான விநோதம்:—**

ஆன்மா பாசத்தினின்றும் விடுபட்டு பதியுடன் இரண்டறக் கலந்து அதுவே தானாய் நிற்கும் சிவப்பேற்றை இச் சொற்றொடர் விளக்குகின்றது.

"அவனே தானே யாகிய வந்நெறி
ஏகனாகி இறைபணி நிற்க
மலமாயை தன்னொடு வல்வினையின்றே."

என்ற சிவஞானபோதத்துப் பத்தாஞ் சூத்திரத்தின் செம்பொருளே இதுவென்று ஓர்க.

நானவனென் றெண்ணினர்க்கு நாடுமுள முண்டாதல்
தானெனவொன் றின்றியே தானதுவாய்—நானெனவொன்
றில்லென்று தானே யெனுமவரைத் தன்னடிவைத்
தில்லென்று தானா மிறை.

இன்றெனக் கருளி இருள்கடிந் துள்ளத்
தெழுகின்ற ஞாயிறே போன்று
நின்ற நின்றன்மை நினைப்பற நினைந்தேன்
நீயலாற் பிறிதுமற்றின்மை
சென்றுசென் றணுவாய்த் தேய்ந்துதேய்ந் தொன்றாந்
திருப்பெருந் துறையுறை சிவனே
ஒன்று நீ யல்லை யன்றியொன் றில்லை
யாருன்னை யறியகிற் பாரே.

"நீவேறெ னாதிருக்க நான்வே றெனாதிருக்க
நேராக வாழ்வதற்குன் அருள்கூர"

என்ற ஆன்றோர் திருவாக்குகளை நுனித்துணர்க.

ஆன்மா சிவாத்துவிதமுற்றாலன்றி மனோ துக்கம் மாயாது. ஆதலால் மனோதுக்கம் மாய்வதற்கு "பசுவாகிய நான் பதி

யாகிய நின்னுடன் கலந்து பேரானந்தப் பெருவாழ்வைப் பெறுதற்கு என்று அருள்புரிவாய்?'' என்று அடிகள் முறை யிடுகின்றனர்.

**சேயான வேற் கந்தனே:—**

சேய்-செம்மை. செம்பொருளாக விளங்குபவர் முருக வேள். அந்த செம்பொருளைச் சார்ந்தாலன்றி பிறப்பென்னும் பேதைமை நீங்காது

பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னும்
செம்பொருள் காண்ப தறிவு. —பொய்யாமொழி.

செம்மையுடைய தெய்வம் இதுவேயாகலின் அதற்குச் சேய் என்னுந் திருநாமம் திகழ்கின்றது. அத் தெய்வம் மலை மேல் விளங்குகின்றது.

''சேயோன் மேய மைவரையுலகும்'' —தொல்காப்பியம்

இனி, சேய்-குழந்தை. அப் பரமபதி என்றும் ஒரு படித் தாய் மாறுபாடின்றி இளம் பூரணராய்த் திகழ்கின்றது. அதனிடத்துப் பரிபூரண ஞானம் விளங்குகின்றது என்று குறிப்பிடும் பொருட்டு வேற்படையை யுடையவ னென்றும் அது ஏனைய ஆற்றலை வற்றச் செய்யும் பேராற்றலுடையது என்றுணர்ந்துகொள்ளும்பொருட்டு ''கந்தனே'' என்றும் அழகிய சொற்களால் அருமையுடன் கூறுவாராயினர்.

**செந்திலாய்:—**

திருச்செந்தூர் முருகவேள் திருவடியில் அலைகள் வந்து ஓய்ந்தொழிவது போல், அவனடியை நினைப்பார்க்குங் கவலைகள் ஓய்ந்தொழியும் அது ஜயந்திபுரம் ஆதலின் காமக் குரோதங்களை ஜெயித்து வீடு பெறலாம்; சந்தன மலையாத லின் பாவ வெயிலின் வெப்பம் அங்கு தணியும்.

**சித்ரமாத ரல்குல்...மாயா வினோதம்:—**

மனோதுக்கத்திற்கு முக்கியமான பெருங்காரணம் பெண் மயலே என்று விளக்குகின்றனர். தோயா என்பது செய்யா

என்னும் வாய்ப்பாட்டின்படி தோய்ந்து எனப் பொருள்படும். காமக்கனல் மூள்வதால் உருகியென்றும், அதர பானத்தைப் பருகியென்றும், அவ்வாசை யடங்குதலின்றி அனுபவிக்க அனுபவிக்க வளர்வதாதலின் பெருகியென்றும், அதனுல் பிறவித் துன்பம் ஒழியாது வருதலின் துவளும் என்றும் வரன்முறை யாகக் கூறி யருளினுர்.

## கருத்துரை

குழந்தைவேலவரே! திருச்செந்திலாண்டவரே! பெண் மயலால் விளையும் மனக்கவலையை மாய்த்து தேவரீருடன் அத்துவிதமுற்று இன்புற அருள்புரிவீர்.

## 47

பத்தித் திருமுக மாறுடன் பன்னிரு தோள்களுமாய்த்
தித்தித் திருக்கு மமுதுகண் டேன்செயன் மாண்டடங்கப்
புத்திக் கமலத் துருகிப் பெருகிப் புவனமெற்றித்
தத்திக் கரைபுர ளும்பர மானந்த சாகரத்தே.

## பதவுரை

செயல்மாண்டு அடங்க = ஜீவனுடைய செயல்கள் கெட்டு ஒடுங்கிய இடத்தில், புத்தி கமலத்து உருகி=அறிவாகிய தாமரையில் கரைந்து, பெருகி=பெருக்கெடுத்து, புவனம் எற்றி=எல்லா உலகங்களையும் இடறி, தத்தி கரைபுரளும்=தாவி கரைமீது புரளுகின்ற, பரம ஆனந்த சாகரத்து=மேலான இன்பக் கடலிலே, பத்தி திருமுகம் ஆறுடன்=வரிசையான அழகிய திருமுகங்கள் ஆறேடு, பன்னிரு தோள்களுமாய்=பன்னிரண்டு புயங்களுமாய், தித்தித்து இருக்கும்=அறிவில் இடையருது இனித்திருக்கும், அமுது கண்டேன்=அமிர்தத்தை அடியேன் பார்த்தேன்.

## விரிவுரை

**பத்தித் திருமுக...தித்தித்திருக்கு மமுது:—**

*தேவர்கள் திருப்பாற்கடலைக் கடைந்து அமிர்தத்தைக் கண்டார்கள். அருணகிரிநாதசுவாமிகள் பரமானந்த சாகரத்*

தில் ஒரு இனிய அமிர்தத்தைக் கண்டார். தேவர்கள் மந்தர கிரியை மத்தாகவும் வாசுகியைத் தாம்பாகவும் கொண்டு பாற்கடலைக் கடைந்தனர். அருணகிரிநாதர் ஞானம் என்ற மத்தைக் கொண்டும் பக்தியென்ற கயிற்றைக் கொண்டும் பரமானந்த சாகரத்தைக் கடைந்தனர். அந்த அமிர்தம் உண்டால் மாத்திரம் இனிப்பது. இது காணுந்தொறும், பேசுந் தொறும், நினைக்குந் தொறும் கேட்குந்தொறும் உவட்டா இன்பத்தை ஊற்றெடுக்கச் செய்து அனைத் தெலும்புள் நெக ஆனந்தத்தை விளைவிப்பது.

இத்தகைய தித்திப்பைக் கண்டவர்க்குக் கரும்பும் துவர்க்கும்; செந்தேனும் புளித்தறக் கைக்கும்,

செயன்மாண்டடங்க:—

செயலற்ற இடத்தே சிவசொரூபந் தோன்றும்.

நஞ்செயலற்றிந்த நாமற்ற பின்னுதன்
தன்செயல் தானேயென் றுந்தீபற
தன்னையே தந்தானென் றுந்தீபற. —திருவுந்தியார்.

"என்செயலாவ தியாதொன்று மில்லை யினித் தெய்வமே
உன்செயலே யென் றுணரப் பெற்றேன்" —பட்டினத்தடிகள்.

"என்செய லழிந்தழிந் தழியமெய்ச்
சிந்தைவர என்றுநின் தெரிசனைப் படுவேனோ" —திருப்புகழ்

"யான் செய்கின்றேன்; யான் அநுபவிக்கின்றேன்" என்ற இரண்டுங் கெட்டவிடத்தில் முருகன் தோன்றுவன்.

புத்திக் கமலத்துருகி:—

அறிவு மயமாகிய அது அறிவு என்னுந் தாமரையில் கரைந்து பாய்கின்றது.

பெருகி புவனமெற்றி:—

எங்கும் தானாய் உலகங்களையெல்லாம் கடந்து அப்பாலைக் கப்பாலாய் விளங்குகின்றது. உலகை மறந்த நிலையில் காண்பது எனினும் அமையும்.

**நத்திக் கரைபுரளும்.—**

கரை புரண்டு தாவி ஒரே தன்மயமாக ஏக வெள்ளமாய்த் திகழ்கின்றது.

> ''சிவபோக மெனும் பேரின்ப வெள்ளம்
> பொங்கித் ததும்பிப் பூரணமாய்
> ஏக வுருவாய்க் கிடக்குது'' —தாயுமானுர்.

**பரமானந்த சாகரம்:—**

சமானமில்லாத பேரானந்தக் கடல்.

அறிவில் உருகிப் பெருகி எங்கும் பரந்து உலகங் கடந்து இன்ப அலே வீசி தன்மயமாய்த் திகழும் ஆனந்தக் கடலில் ஆறுமுகமும் பன்னிரு புயமுமாகத் தித்திக்கும் ஒரு இனிய அமிர்தம் திரண்டு விளங்குகின்றது.

அவ்வமிர்தத்தை அருணகிரியார் கண்டனர்; அவரே யன்றி அதனைக் காணவல்லார் யாவர்?

பரமானந்த சாகரம் என்பது சிவம்; அதில் வெளிப் பட்டது முருகனென்னும் அமுதம். வெண்ணிறமாகிய பாற்கடலினின்றும் அமுதந் தோன்றியது. அதுபோல் வெள்ளிமலேமேல், வெள்ளிவிடைமேல், வெண்ணீறு பூசி, வெண் தும்பையணிந்து, வெள்ளெருக்கம் தரித்து, வெண் நிலாச்சூடிய வித்தகராகிய சிவம் என்ற பேரானந்தக் கடலில் ஈசானம், தத்புருஷம், அகோரம், வாமதேவம், சத்யோ ஜாதம், அதோமுகம் என்னும் ஆறுமுகமும், ஓம் என்னும் மந்திரத்துடன் சம்மிதா மந்திரம் பதினொன்றுங் கூடினுற் போன்ற பன்னிருதோள்களுமாய் ஓர் அமுது எழுந்தது.

அவ் வமுதைப் பருகினேர் என்றென்றும் இறவா நிலே யெய்துவர்.

> சாகா தெனேயே சரணங் களிலே
> காகா நமனுர் கலகஞ் செயுநாள்
> வாகா முருகா மயில் வாகனனே
> யோகா சிவஞா னெப தேசிகனே. —அநுபூதி.

### கருத்துரை

எங்கும் வியாபகமாயுள்ள பரமானந்தக்கடலில், என் செயலை யொழித்து, ஆறுமுகமும் பன்னிரு தோள்களு மாக இனித்திருக்கும் ஓர் அரிய அமிர்தத்தைக் கண்டேன்.

## 48

**புத்தியை வாங்கி நின் பாதாம்புயத்திற் புகட்டியன்பாய்**
**முத்தியை வாங்க அறிகின்றி லேன்முது சூர்நடுங்கச்**
**சத்தியை வாங்கத் தரமோ குவடு தவிடுபடக்**
**குத்திய காங்கேய னேவினை யேற்கென் குறித்தனையே.**

### பதவுரை

குவடு தவிடுபட குத்திய=கிரௌஞ்சமலை பொடி படும்படி வேலாயுதத்தால் குத்தின, காங்கேயனே=கங்கையின் மைந்தரே! புத்தியை வாங்கி=தீ நெறிகளிற் சென்று அல்லற்படும் அடியே னுடைய புத்தியை அதிற் செல்லா வண்ணம் தடுத்து, நின் பாத அம்புயத்தில்=தேவரீரது திருவடித் தாமரையில், அன்பாய் புகட்டி=அன்புடன் செலுத்தி, முத்தியை வாங்க அறிகின்றிலேன்= வீடுபேற்றைப் பெற்று உய்வதற்கு அடியேன் அறியவில்லை, முது சூர் நடுங்க=நீண்டகாலம் ஆண்ட சூரபன்மன் நடுங்கும்படி, சத் தியை வாங்க தரமோ=சத்திவேலை விடுதற்கு அடியேனால் முடியுந் தரமோ? வினையேற்கு என் குறித்தனை=வினையையுடையவனாகிய அடியேனுக்கு யாது செய்ய நினைத்திருக்கின்றீர்?

### விரிவுரை

**புத்தியை வாங்கி நின் பாதாம்புயத்தில் புகட்டி:—**

எப்போதும் புலன்களின் வழியே சென்று சென்று உழ லும் மனத்தைத் தடுத்து நல்வழிப்படுத்துந் திறனறியாது புத்தியும் அதனுடன் தீநெறிப்பட்டு தணியாத பிறவி நோயைத் தருகின்றது. இனி புத்தி என்பதற்கு மனம் என்று பொருள் கூறுவாருமுளர்,

அங்ஙனம் அவமே சென்று பாழ்படும் புத்தியை அதி னின்றுந் தடுத்து மீட்டு முருகவேளுடைய திருவடித்தாமரை யில் செலுத்துதல் வேண்டும். அவ்வாறு அப் பரமபதியின் திருவடியிற் கருத்தைச் செலுத்துதலே முத்தி பெறுவதற்கு மிக எளிய வழியாம். ஆராய்வதற்கு அறிவிலும் ஆற்றலில்லை; உண்ணாது நோற்பதற்கு உடலிலும் ஆற்றலில்லை; பாடிப் பரவுவதற்கு மிடற்றிலும் ஆற்றலில்லை; சிவயோகஞ் செய்வதற்கு உறுதியும் வாய்ப்பும் இல்லை; தீர்த்த யாத்திரை செய்வதற்கும் போதிய அநுகூலமில்லை; எல்லாவகையிலும் ஆற்றலற்ற நாம் மிக எளிதில் முத்தி பெறுவதற்கு ஒரு எளிய வழியைக் கண்டுபிடித்து நம் குருமூர்த்திகளாகிய அருணகிரி நாத சுவாமிகள் அருள் புரிகின்றனர். அது அவருடைய திரு வடியிற் கருத்தைச் செலுத்துவதுதான்.

காட்டிற் குறத்தி பிரான்பதத்தே கருத்தைப் புகட்டின்
வீட்டிற் புகுத மிகஎளிதே விழிநாசி வைத்து
மூட்டிக் கபாலமூ லாதார நேரண்ட மூச்சையுள்ளே
ஓட்டிப் பிடித்தெங்கு மோடாமற் சாதிக்கும் யோககளே.

முத்தியை வாங்க அறிகின்றிலேன்:—

மேற்கூறியவண்ணம் முருகவேள் திருவடியிற் புத்தியைச் செலுத்தினால் முத்தியை வாங்கியுய்யலாம். இதைத்தவிர, காட்டிற் புகுந்தும் காய் கனியருந்தியும், கனலிடை நின்றும், புனலிடை மூழ்கியும், பூவலம் வந்தும், உடலை வருத்தியும், காய கற்பஞ் செய்தும் வறிதே அலைந்து திரிவோர் முடிவில் பயன்காணாது திகைப்பர்.

முத்தி-விடுபடுகை. திருவடிப்பற்று உறைப்புற்றவர்க்கு ஏனைய பற்றுக்கள் தானே அற்றுவிடும். தூங்கியவன் கைப் பொருள் கழல்வதுபோலென்றறிக. இதனையே திருவள்ளு வரும் கூறுகின்றார்:

பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்
பற்றுக பற்றுவி டற்கு.

முதுசூர் நடுங்க சத்தியை வரங்கத் தரமோ:—

முதுசூர்-நெடுங்காலம் ஆட்சி புரிந்த சூரன்; நூற்றெட்டு யுகங்கள் அரசாண்டானுதலின் முதுசூர் என்றனர்.

சூரபன்மன் என்பது ஆணவமலம். சத்தி என்பது ஞானம். ஆணவமலம் உயிருக்கு அநாதியேயுண்டு. மூல மலம் எனப்படும். செம்பிற்குக் களிம்புபோலும், அரிசிக்குத் தவிடுபோலும்.

நெல்லிற் குமியும் நிகழ்செம்பி னிற்களிம்பும்
சொல்லிற் புதிதன்று தொன்மையே—வல்லி
மலகன்ம மன்றுளவாம் வள்ளலாற் பொன்வாள்
அலர்சோகஞ் செய்கமலத் தாம்.

ஆணவமலத்தை ஞானத்தால் வலிகெடச் செய்வதே சூரசம்மாரமாம். ஆணவ மலம் ஒருபோதும் அழியாது. அதன் ஆற்றல் கெடுதலே அழிந்ததாம். அதனுலே "சூரழிய" என்னுமல் "சூர் நடுங்க" என்றனர்.

குவடு தவிடுபட:—

குவடு-மலே; கிரௌஞ்சம். அந்தாரகனுகிய மாயா மலத்திற்குத் துணைசெய்த விட்சேபமாம்.

காங்கேயன்:—

சிவபெருமானுடைய நெற்றி நாட்டத்தினின்றும் அழற் பிழம்புவடிவாக மறைகளுங் கடந்ததோர் தலேவன் வெளிப்பட காற்றுக்கடவுளும் கனற்கடவுளும் சிவாக்ஞையின்படி கங்கையில் விடுத்தனர். கங்கை சரவணத்தில் விடுத்தனள். சிறிதுநேரம் கங்கையிற் சம்பந்தப்பட்ட ஒரு காரணம் பற்றியே கங்கா மைந்தன் என்பர். கூர்ந்து நோக்கில், மூவருந் தேவருங் காணுத முழுமுதற் கடவுளாகிய முருகப் பெருமானே காங்கேயன், கார்த்திகேயன், தேவர் சேனுபதி, திருமால் மருகன் என்பன வெல்லாம் உபசாரவழக்கே,

கங்கைதன் புதல்வனென்றுங் கார்த்திகை மைந்தனென்றும்
செங்கண் மால் மருகனென்றுஞ் சேனையின் செல்வனென்றும்
பங்கயன் முதலோர் தேருப் பரஞ்சுடர் முதல்வன்றன்னை
இங்கிவை பலவுஞ் சொல்வ தேழைமைப் பாலதன்றோ.

—கந்தபுராணம்.

என் குறித்தனையே:—

அடியேனுடைய கணக்கு உனக்கே தெரியும். என்னை எவ்வண்ணம் நடத்தத் திருவுளமோ? என்று எம்பிரானிடம் முறையிடுகின்றனர்.

'கணக்குண்டாதல் திருவுள மறியாதோ' —திருப்புகழ்.

### கருத்துரை

காங்கேயனே! புத்தியை உமது திருவடியிற் செலுத்தி, மூலமலத்தை ஒடுக்கி வீட்டின்பத்தை என்று பெறுவேனோ? அருள் புரிவீர்.

## 49

சூரிற் கிரியிற் கதிர்வே லெறிந்தவன் றொண்டர்குழாஞ்
சாரிற் கதியன்றி வேறிலை காண்தண்டு தாவடி போய்த்
தேரிற் கரியிற் பரியிற் றிரிபவர் செல்வமெல்லாம்
நீரிற் பொறியென் றறியாத பாவி நெடுநெஞ்சமே.

### பதவுரை

தண்டு தாவடி போய்=சைனியங்களுடன் பிரயாணம் சென்று, தேரில்=தேரின் மீதும், கரியில்=யானையின் மீதும், பரியில்=குதிரையின்மீதும், திரிபவர் செல்வம் எல்லாம்=ஏறி உலாவுகின்ற அரசர்களுடைய செல்வம் முழுவதும், நீரில் பொறி என்று அறியாத=நீரின்மேல் எழுதிய எழுத்துக்கு நிகரென்று உணர்ந்து உய்வுபெறாத, பாவி நெடு நெஞ்சமே=பாவியாகிய நீண்ட எண்ணத்துடன் கூடிய மனமே! சூரில்=சூரபன்மன் மேலும், கிரியில்=கிரௌஞ்ச மலையின்மேலும், கதிர்வேல் எறிந்தவன்=ஒளியை

யுடைய வேற்படையை விடுத்தருளிய முருகக் கடவுளின், தொண்டர் குழாம்=அடியார்களது திருக்கூட்டத்தை, சாரின்=அடைந்தனையாயின், கதி அன்றி வேறு இல்லை=அதனைவிடச் சிறந்த கதி உனக்கு வேறு எங்கும் இல்லை.

## விரிவுரை

**சூரில்:—**

சூர்–சூரபன்மன். தேவர்கட்கு மிகுந்த துன்பத்தை விளைவித்தானுதலின் இப்பேர் பெற்றனன். 1008 அண்டங்களையுந் தனது ஆட்சிக்கு உட்படுத்தி 108 யுகங்கள் அரசு புரிந்தனன். வான் சுமந்த தேவர்கள் மீன் சுமந்தலுக்கவும், திருமால் பெருமாலாகி யலையவும், பிரமன் பிரமமுற்றுலையவும் திசைபாலகர்கள் பாலகர்போல் பயனற்று வாளாவிருக்கவும் சூரபன்மன் அச்சுறுத்தினன். பலகாலம் பஞ்சுபோற் பறந்து கரும்புபோல் நசுக்குண்டு வருந்திய தேவர்கள் முருகவேள் திருமுன் வந்து முறையிட வடிவேலிறைவன் சூரபன்மனை மாய்த்தருளினர்.

**கிரியில்:—**

இலக்கத்தொன்பான் வீரர்களும் தாரகன் செய்த சூழ்ச்சியால் கிரௌஞ்ச மலையில் மயங்கிக் கிடப்ப கந்தவேள் வேற்படையால் அம்மலையைப் பிளந்து வீரவாகு தேவர் முதலியோரைக் காத்தருளினர்.

**கதிர்வேல்:—**

கதிர்-ஒளி. வேல்-வெல்லுந் திறனுடையது. வெல் என்ற பகுதியடியாகப் பிறந்து முதனிலை நீண்டு வேல் என்றாயிற்று.

இனி, சூரபன்மன் ஆணவமலம். மூலமலமாகிய அதனாலேயே எல்லாத் துன்பங்களும் ஆன்மாக்களுக்கு விளைகின்றன. கிரௌஞ்சமலை சஞ்சிதவினைக் குவியல். வேல் சிவஞானம். சிவஞானத்தால் ஆணவமலந் தொலைய வினைத் தொகுதி சாம்பராயின.

தொண்டர் குழாம்:—

இறைவனை யடைவதற்கு அடியார் வழிபாடே எளிய நெறியாம். அதனாலன்றோ எமது சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருத்தொண்டத் தொகை பாடி எம்மை உய்வித்தனர்.

"அன்பர்பணி செய்யஎனை ஆளாக்கி விட்டுவிட்டால்
இன்பநிலை தானேவந் தெய்தும் பராபரமே"

என்றார் எமது தாயுமானப் பெருந்தகையார்.

பசுவினிடம் பால் கறக்கப் புகுவான் அதன் கன்றைத் துணை கோடல்போல், இறைவனது திருவருளைப் பெற விரும்புவோன், அவரடியாரைத் துணைகோடல் வேண்டும்.

"துரும்பனே னென்னினுங் கைவிடுதல் நீதியோ
தொண்டரொடு கூட்டு கண்டாய்"

"மறமலி யுலக வாழ்க்கையே வேண்டும்
வந்துநின் அன்பர்தம் பணியாம்
அறமது கிடைக்கின்" —தாயுமானர்.

ஆண்டவன் அடியாருள்ளத்தில் இமைப்போதும் நீங்காதுறைகின்றானாதலால் இறைவழிபாட்டினும் அடியார் வழிபாடே சாலச் சிறந்ததாகும். அதனாலன்றோ முற்றத்துறந்த முழுமுனிவராகிய பட்டினத்தடிகள் இறைவழிபாட்டைப் பின்னும், அடியாருறவை முன்னுமாக வைத்து அருளிச் செய்தனர்.

"அடியா ருறவு மரன்பூசை நேசமும் அன்றியிந்தப்
படிமீது வேறு பயனுளதோ"

"அடியார்வாழ் சபையி னேற்றியின் ஞானபோதமும் அருளி",

என்றார் அருணகிரியாரும்.

அடியவரிடத்து அன்பு செய்து அப்பூதி நாயனார், பெருமிழலைக் குறும்பர், சிறுத்தொண்ட நாயனார், பத்திரகிரியார், கலிசைச் சேவகனார் முதலியோர் பெறுதற்கரிய பெருவாழ்வுபெற்றனர்.

உடையா ளுன்ற நடுவிருக்கும் உடையாள் நடுவுள் நீயிருத்தி
அடியேன் நடுவு ளிருவீரு மிருப்பதானு லடியேனுன்
அடியார் நடுவுளிருக்கு மருளைப்புரியாய் பொன் னம்பலத்தெம்
முடியா முதலே யென்கருத்து முடியும்வண்ண முன்னின்றே.
—மாணிக்கவாசகர்.

தாவடி:—

தாவடி–பிரயாணம்; “தாவடியோட்டும் மயிலிலுந் தேவர் தலையிலும், என் பாவடியேட்டிலும் பட்டதன்றே” என்றார் பிறிதோரிடத்திலும். ‘போர்’ என்று பொருள் கொள்வாரும் உளர்.

தேரிற் கரியிற்......நீரிற் பொறி:—

தேர், யானை குதிரை முதலிய ஊர்திகளின் மீது ஊர்ந்து உலா வரும் பெருந்தகவுடைய அரசர்களது செல்வம் யாவும் நீர்மேல் எழுதிய எழுத்து எவ்வாறு ஒரு கணத்திற்குள் மறையுமோ அவ்வாறு நிலையற்றதாகும்.

குடைநிழ லிருந்து குஞ்சர மூர்ந்தோர்
நடை மெலிந்தோரூர் நண்ணினு நண்ணுவர்.—நறுந்தொகை.

செல்வம் என்ற சொல்லுக்கே நீங்குவோம் என்பது தானே பொருள்.

“நீர்க்குமிழிக்கு நிகரென்பர் யாக்கை நில்லாது செல்வம்
பார்க்கு மிடத்தந்த மின்போலும் என்பர்” —அருணகிரியார்.

நீரிற் குமிழி இளமை நிறைசெல்வம்
நீரிற் சுருட்டு நெடுந்திரைகள்—நீரின்
எழுத்தாகும் யாக்கை நமரங்காள் என்னே
வழுத்தாத தெம்பிரான் மன்று. —குமரகுருபரர்.

பாவிநெடு நெஞ்சமே:—

நெடு நெஞ்சம்—நீண்ட எண்ணங்களுடன் கூடிய நெஞ்சம். அடியார் குழுவில் கூடாமையால் மனத்தைப் பாவி என்றழைத்தனர்.

மனம் ஒரு கணமும் ஓய்வின்றி பலகோடி எண்ணங்களை எண்ணி எண்ணி இடருறுகின்றது.

"எண்ணாத எண்ணமெலாம் எண்ணி எண்ணி ஏழை நெஞ்சம்
புண்ணாகச் செய்ததினி போதும் பராபரமே" —தாயுமானார்.

*கருத்துரை*

மனமே! செல்வம் நிலையில்லாதது. நீ அதனைச் சாராமல் அறுமுகவள்ளலின் அடியார்களது திருக்கூட்டத்தைச் சார்ந்து உய்வு பெறுவாயாக.

**50**

படிக்குந் திருப்புகழ் போற்றுவன் கூற்றுவன் பாசத்தினால்
பிடிக்கும் பொழுதுவந் தஞ்சலென் பாய்பெரும் பாம்பினின்று
நடிக்கும் பிரான்மரு கா கொடுஞ் சூர னடுங்கவெற்பை
இடிக்குங் கலாபத் தனிமயி லேறு மிராவுத்தனே.

*பதவுரை*

பெரும் பாம்பில் நின்று நடிக்கும்=பெரிய காளிங்கன் என்னும் அரவத்தின் படத்தின்மீது நின்று கூத்தாடும், பிரான் மருகா= பெருமானாகிய திருமாலின் திருமருகரே! கொடும் சூரன் நடுங்க= கொடிய சூரபன்மன் நடுங்குமாறு, வெற்பை இடிக்கும்=கிரௌஞ்ச மலையைப் பொடிபட இடித்த, கலாப தனி மயில் ஏறும்= தோகையையுடையதும் ஒப்பற்றதும் ஆகிய மயில் வாகனத்தின் மீது ஏறுகின்ற, இராவுத்தனே=சேவகரே! படிக்கும் திருப்புகழ் போற்றுவன்=அறிஞர்களால் படிக்கத் தக்க தேவரீருடைய திருப்புகழைக் காப்பாற்றிப் படிப்பேன்; (ஆதலினால்) கூற்றுவன் பாசத்தினால் பிடிக்கும்பொழுது வந்து=இயமன் வந்து பாசக் கயிறு வீசி எனது உயிரைப் பிடிக்குந் தருணத்தில் எழுந்தருளிவந்து, அஞ்சல் என்பாய்=பயப்படாதே என்று கூறி அடியேனை யாட்கொள்வீராக.

*விரிவுரை*

படிக்குந் திருப்புகழ்:—

எல்லோராலும் படிக்கத் தகுந்தது திருப்புகழ் என்பது இதனால் நன்கு புலனாகின்றது. பாச கரணம் பசு கரணம் நீங்கப்பெற்று பதிகரணம் வாய்க்கப் பெற்ற அருணகிரிநாத

சுவாமிகள் முருகவேள் முழுமுதற்கருணை முழுவதும் பெற்று பதிஞானச் சிகரத்தின் மீதிருந்து திருப்புகழாகிய செந்தமிழ்த் திருமறையைப் பாடியருளினர். அருள்நாத ஒலியில் எழுந்த அற்புதப் பாடல் திருப்புகழ். அது உலகிலுள்ள மன்பதைகள் யாவும் பாடியுய்ய வேண்டுமென்ற பரமகருணையால் பாடப்பெற்றது.

"ஏறுேரு மோது மாறு தீதற
நாளுசு பாடி யாடி நாடொறும்
ஈடேறு மாறு ஞான போதகம் அன்புறுதோ"

"ஃ ஃ அற்புதத் திருப்புகழ்
தேனூற வோதி எத்திசைப் புறத்தினும்
ஏடேவு ராஜதத்தினைப் பணித்ததும்" —திருப்புகழ்.

திருப்புகழைப் படிப்பவர்க்கு இடுக்கண் அணுத்துணையும் உண்டாகாது.

"இருப்பவல் திருப்புகழ் விருப்பொடு படிப்பவர்
இடுக்கினை யறுத்திடும் எனவோதும்" - திருப்புகழ்.

திருப்புகழைப் படிக்கும் மெய்யன்பர்கட்கு சத்துரு பயம் இல்லை. அவரைப் பகைக்கும் வன்கணரை வேலாயுதம் விரைவில் அழித்துவிடும்.

"சொலற்கரிய திருப்புகழை யுரைப்பவரை யடுத்தபகை
அறுத்தெறிய முறுக்கியெழும் அறத்தை நிலைகாணும்"
—வேல் வகுப்பு.

திருப்புகழைக் கற்கும் புண்ணிய சீலர்க்கு அட்டமா சித்திகளும் தானே வந்து அடிமையாகிக் குற்றேவல் செய்யும்.

"வேலன் வாய்த்த திருப்புகழ் கற்றவர்
சீல மேத்திய சித்தப்ரசித்தரே" —சித்துவகுப்பு.

"கருப்புகழாம் பரசமயக் கதைகேளா தநுதினமுன்
திருப்புகழைக் கற்பார்க்குச் சித்தியெட்டு மெளிதாமே"
—கந்தப்பதேசிகர்.

''வைப்பாம் அருணகிரி வாழ்த்துந் திருப்புகழைக்
கற்பார் கரையேறு வார்''

''தோத்திரம தாகத் துதிக்குந் திருப்புகழை
ஏத்தினவர் ஈடேறு வார்''

பல பிறப்புக்களிலே சீலமுடன் ஈட்டிய நல்ல புண்ணிய மிருந்தால்தான் திருப்புகழைப் படிக்கும் பெரும் பேறு கிடைக்கும். ஆதலினால், அன்பர்கள் அனைவரும் திருப்புகழை அன்புடன் படித்துப் பயன் பெறுவார்களாக.

**போற்றுதல்:—**

போற்றுதல்-காப்பாற்றுதல். இது, திருப்புகழைப் படித்து மறவாது அதனை மனதில் வைத்துக் காப்பாற்றித் துதித்தலைக் குறிப்பிடுகின்றது.

**கூற்றுவன்:—**

உடம்பையும் உயிரையும் வேறாகக் கூறுபடுத்துபவன் ஆதலினால் இயமனுக்குக் கூற்றுவன் என்ற இப்பெயருண்டாயிற்று.

**பாசத்தினால்:—**

கூற்றுவன் கரத்திலுள்ள ஓர் ஆயுதம் பாசம். அது ஆருயிர்களைக் கட்டிப் பிடிக்கும் வன்மையுடையது. அப்பாசக் கயிற்றை வீசி பிராணனுடன் கட்டி இழுப்பான்.

''காலனார் வெங்கொடுந் தூதர் பாசங்கொடென்
காலினார் தந்துடன் கொடுபோக'' —திருப்புகழ்.

ஆனால் உலகபாசம் அற்ற பக்தர்கட்கு இயமபாசம் இல்லை. பாசமுடையார்க்கே பாசமுண்டு; பாசமற்றார்க்கு பாசமற்றே போகும்.

**பிடிக்கும்பொழுது வந்து அஞ்சல் என்பாய்:—**

முருகப்பெருமானே! இயமன் வந்து பாசக் கயிற்றினால் என் உயிரைப் பிடித்து இழுக்கும்போது தேவரீர் எனக்கு

முன்னே எழுந்தருளி வந்து, "அன்பனே! அஞ்சாதே" என்று கூறியாட்கொள்வீர்.

"அந்தகனு மெனை யடர்ந்து வருகையினில்
அஞ்சலென வலிய மயில்மேல்நீ
அந்த மறலியொ டுகந்த மனிதனம
தன்பனென மொழிய வருவாயே" —திருப்புகழ்.

**பாம்பினின்று நடிக்கும் பிரான்:—**

கண்ணபிரான் காளிந்தி நதியில் பலர்க்கும் இடுக்கண் புரிந்துகொண்டிருந்த காளிங்கன் என்ற அரவரசன் பண மகுடத்தின் மீது நின்று இனிய நாத சிலம்பு புலம்பிட இனிது திருநடனம் புரிந்தருளினர்.

பாம்பு என்பது குண்டலி சத்தி. அதன்மீது நடிப்பது என்பது பிராணவாயுவை அடக்கி நிற்பது.

"அரவுபொன் முடி மிசை
திமித திமிதிமி யெனநட மிடுமரி மருகோனே
—திருப்புகழ்.

**சூரன் நடுங்க:—**

சூரபன்மன் ஆயிரத்தெட்டு அண்டங்களுக்குந் தலைவன்; அவனுடைய ஆட்சியில், அயன் மால் இயமன் இந்திரன் முதலிய யாவரும் அடங்கி கைகட்டி வாய் பொத்தி ஏவல் செய்தனர். அத்தகைய சூரபன்மன் நடுங்க வேல் விட்டு கிரௌஞ்ச வெற்பை இடித்தவராதலால், இயமன் நடுங்க வருவாய் என்பது குறிப்பு.

**கலாபத் தனிமயிலேறு மிராவுத்தனே:—**

முருகவேள் எல்லா உலகங்களையும் மயிற்பரியூர்ந்து ஒரு நொடியில் வலம் வந்தாராதலின் இயமன் வரும்போது அம் மயிலின்மீது வந்தருள வேண்டும் என்று வேண்டுகின்றனர்.

**இராவுத்தன்:—**

இது திசைச் சொல்,

"எதிரில் புலவர்க்குதவு வெளிமுகடு முட்ட-வளர்
இவுளி முகியைப்பொருத ராவுத்தனனவனும்" —திருவகுப்பு.

கருத்துரை

திருமால் மருகரே! மயில்வாகனரே! திருப்புகழைப் படித்து பணிவேன்; என்னைக் காலன் பற்றுங் காலத்தில் வந்து "அஞ்சல்" என்று அருள் புரிவீர்.

## 51

**மலையாறு கூறெழ வேல்வாங்கி னானை வணங்கியன்பின்**
**நிலையான மாதவஞ் செய்குமி னோநும்மை நேடிவருந்**
**தொலையா வழிக்குப் பொதிசோறு முற்ற துணையுங்கண்டீர்**
**இலையா யினும்வெந்த தேதா யினும்பகிர்ந் தேற்றவர்க்கே.**

பதவுரை

தொலையா வழிக்கு=உலகத்தவரே! (வறிஞர்க்கு வழங்கியது) நீவிர் இறுதியில் செல்லும் தொலையாத வழிக்கு, நும்மை நேடி வரும்=உங்களைத் தேடிக்கொண்டு வருகின்ற, பொதி சோறும்= கட்டமுதும், உற்ற துணையும் கண்டீர்=பொருந்திய உதவியும் ஆகும் என்பதனை உணர்மின்கள்; (ஆதலால்) ஏற்றவர்க்கு=உம் மை வந்து யாசித்தவர்க்கு, இலையாயினும்=இலைக்கறியையாயினும், வெந்தது ஏதாயினும்=வெந்தது வேறு எதுவாயினும், பகிர்ந்து= பங்கிட்டுக் கொடுத்து, மலை ஆறு கூறு எழ=கிரௌஞ்ச மலை யானது வழிகாணப் பிளக்குமாறு, வேல் வாங்கினானை=வேலா யுதத்தை ஏவியருளிய முருகக் கடவுளை, அன்பின் வணங்கி=அன் புடன் பணிந்து, நிலையான மாதவம் செய்குமின்=நிலைபேறுடன் பெருந்தவத்தைச் செய்வீர்களாக.

விரிவுரை

**மலையாறு கூறெழ வேல்வாங்கினன்:—**

இலக்கத் தொன்பான் வீரர்களையும் பூதவீரர்களையும் தாரகனுடைய மாயக் கருத்துக் கிணங்கி, கிரௌஞ்சம் என்னும் மலையாயிருந்த அசுரன் தன்னிடத்து மயக்கி இடர் செய்தான். அதுகண்ட முருகப் பெருமான் வேல் வாங்கி அம்

மலையைப் பிளந்து அதனின்றும் துணைவரும் வீரரும் வெளிப்பட்டு வர வழியுண்டாக்கி அருள் புரிந்தனர்.

ஆறு-வழி. இனி ஆறு துண்டாகப் பிளந்தனர் என்றும் பொருள் கூறுவர். இந்திராணியின் கழுத்திலுள்ள மங்கல நூல் வாங்கிடாது வளம்பெற முருகன் வேல் வாங்கினன்.

"ஃ ஃ ஃ களிற்றுன் கழுத்திற் கட்டும்
நூல்வாங்கி டாதன்று வேல்வாங்கி பூங்கழல் நோக்குநெஞ்சே"

அன்பின் வணங்கி:—

இறைவனை அன்புடன் வணங்குதல் வேண்டும். உலகம் மெச்சுவதற்காகவும், தான் செய்யும் பல தீய செயல்களை மறைப்பதற்காகவும், தன்னைப் பக்தன் என்று உலகம் நம்பி ஏமாந்து போகும்பொருட்டும், பொய்யாக இறைவனை வணங்குபவரைக் கண்டு இறைவன் சிரிக்கின்றனன்.

எலும்பை விறகாக எரித்து, இறைச்சியை யறுத்து வறுத்து மிக்க பயங்கரமான கொடுந்தவம் அன்பின்றி புரியினும் இறைவனை அடையமுடியாது. அன்போடு உருகி அகங் குழைவோர் எளிதில் அடைவர்.

நிலையான மாதவம்:—

மனிதனையுயர்த்துவது தவம்; தெய்வத் தன்மையைத் தருவது தவம்; அழிவற்ற ஆற்றலையும் ஆட்சியையும் அருளுவது தவம். அத் தவம் உறுதியுடன் கூடியிருத்தல் வேண்டும். தவத்திற்கு உயிர் உறுதி. இறைவனை நினைந்து தவங் கிடப்போர்க்கு இடையூறுகள் பல உண்டாகும். அவற்றைக் கண்டு அணுவளவும் நிலைகுலையாதிருத்தல் வேண்டும்.

தவமேது மின்றி முழுமூடனுகி மயலா லுழன்று தரைமே
லவமே பரிந்து கலரோ டிணங்கி யுடலோம்பி மாளு மடியா
னிவனுகு மென்று பழியா திரங்கி யெனையாண்டு
கோடல் கடனே
நவமார் குளந்தை நகரா யரங்கி னடமாடு முக்கண் மணியே.
—குளத்தூர்ப் பதிற்றுப்பத்தந்தாதி.

தொலையாவழி......ஏற்றவர்க்கே:—

தொலையாவழி-கூற்றுவனூர்க்குச் செல்லும் மரண யாத்திரை; அது மிகவும் கடுமையான வழி. நெடுந்தூரம் செல்லப் புறப்பட்டானொருவன் வழியில் உண்டு இளைப்பாறுவதற்குக் கட்டமுது கொண்டு போவான்; அதற்குத் தோட்கோப்பு என்றும் பேர்.

இயமபுரத்திற்கு ஏகும் வழி மிகுந்த துயரத்தை விளைவிக்கும்; பசியுந் தாகமும் வருத்தும்.

"ஃ ஃ ஃ ஃ எரிவாய் நரகக்
குழியுந் துயரும் விடாய்ப்படக் கூற்றுவ னூர்க்குச் செல்லும்
வழியுந் துயரும் பகரீர் பகரீர் மறந்தவர்க்கே" —அலங்காரம்.

அத்தகைய கொடிய வழிக்குக் கட்டமுது வேண்டுமல்லவா? அக் கட்டமுது எது எனின், ஏழைகள் வயிற்றில் இடும் அன்னமும் நீருந்தான் அது. வறிஞர்க்கிட்டது வறிதேயாகாது; தான் செல்லுந் தனிவழிக்கு நல்ல மதுரமான கட்டமுதாக வந்து உதவி மிகுந்த இன்பத்தைத் தரும்.

மெய்யன்பர்களே! சற்று சிந்தியுங்கள். ஏழைகட்கு உணவு தருவது எவ்வளவு இன்றியமையாதது? அதனினும் சிறந்த பேறு உண்டோ? கைப்பொருள் உண்டானபொழுது கரவாது அறஞ் செய்மின்; காக்கையைக் கண்டாவது சிறிது விழிப்படையுங்கள். "பகடு நடந்த கூழ் பல்லாரோடுண்க" என்ற அறவுரையை நினைமின்.

ஏழைகள் வயிற்றை நல்ல அன்னத்தால் நிரப்பினவன் வயிறு வானுலகில் அமுதத்தால் நிரம்பும். ஏழைகளுக்கு நீர் மோர் கொடுத்தவன் காமதேனுவின் தீம்பால் பருகி இன்புறுவன். தவஞ் செய்யும் ஒருவனுக்குச் சிறந்த ஆற்றலாவது பசியைப் பொறுத்தலாம். பசியைப் பொறுத்தல் மிகவும் கடுமையானது. அங்ஙனம் பொறுத்தற்கரிய பசியைப் பொறுப்பானுடைய ஆற்றல் பசியை ஆற்றுபவனுடைய ஆற்றலுக்குப் பின் நிற்கின்றது. அன்பர்கள் கவனிக்க: பசியைப் பலநாள் பொறுத்துப் பட்டினி கிடந்து தவஞ்செய்யும் தவசிரேட்டனைவிட வறியவர் பசியை யாற்றும் தருமசீலன் பெரியவனாகின்றான்.

ஆற்றுவா ராற்றல் பசியாற்றல் அப்பசியை
மாற்றுவா ராற்றலிற் பின். —பொதுமறை.

உம்மால் நிரம்ப அறஞ் செய்தற்கு இல்லையாயின் இலைகளைச் சமைத்தாவது கொடுங்கள். இல்லையாயினும் என்பதற்கு "ஒன்றும் இல்லையாயினும்" என்றும் பொருள்படும்.

"வேகாத பண்டம் பலநாள் உமக்குத் துணையாக இருக்கும். வெந்தது விரைவில் கெடும். வேகாததைத் தர மனமில்லையேல் வெந்ததையாவது கொடுங்கள்" என்னும் நயம் பாராட்டற்குரியது. "வெந்தது ஏதாயினும்" என்னும் சொல் அதனினும் சிறந்த நயம். ஆழமாகச் சிந்திப்பார்க்கு அவற்றின் அருமைப்பாடு விளங்கும். "கேளாமுன்னமே குறிப்பறிந்து தாமே சென்று கொடுக்க வேண்டும். அங்ஙனந் தருவது தலையானது; தருவித்துக் கொடுப்பது இடையானது; வந்து கேட்டபின் தருவது கடையானது. கேட்டுந் தரவில்லையாயின் அவரை எந்த வகுப்பில் சேர்ப்பது என்று விளங்கவில்லை. நீவிர் கேளா முன்னமே தரவேண்டும்; அப்படித் தரவில்லையேல் கேட்டபிறகாவது கொடும்" என்னும் குறிப்பை எத்துணைச் சுருக்கமாக "ஏற்றவர்க்கே" என்று உன்னுந்தொறும் உள்ளத்தை உருக்குமாறு சுவாமிகள் அமைத்துவைத்திருக்கின்றார்கள் என்பதை ஊன்றிப் பாருங்கள்.

## கருத்துரை

நம்மவர்களே! முருகனை வணங்கி ஏற்றவர்க்கு இயன்றதைக் கொடுங்கள். அங்ஙனம் உம்மாற் கொடுககப்பட்டது உமக்கு மரண யாத்திரைக்குக் கட்டமுதும் உற்ற துணையுமாகும்.

## 52

சிகராத்ரி கூறிட்ட வேலுஞ்செஞ் சேவலுஞ் செந்தமிழாற்
பகரார்வ மீ; பணி பாசசங் க்ராம பணமகுட
நிகராட் சமபட்ச பட்சி துரங்க ந்ருபகுமரா
குகராட் சசபட்ச விட்சோப தீர குணதுங்கனே.

## பதவுரை

பாச=பாசக் கயிறு போன்றதும், சங்க்ராம=போர் செய்தற் குரியதுமாகிய, பணி பணமகுட=பாம்பினுடைய படத்தின் மகுடங் களை, நிகராட்சம=பொடியாக்குதற்குரிய, பட்சபட்சி துரங்க= சிறகுகளுடன் கூடிய மயிலை வாகனமாகவுடையவரே! ந்ருப=தலை வரே! குமரா=குமாரக் கடவுளே! குக=குகையில் வசிப்பவரே! ராட்சச பட்ச விட்சோப=அரக்கர்களின் பக்கத்தில் வெறுப்புள்ள வரே! தீர=தைரியமுடையவரே! குணதுங்கனே=தூய அருட் குணத்தை யுடையவரே! சிகர அத்ரி = சிகரங்களையுடைய கிரௌஞ்ச மலையை, கூறு இட்ட=பிளந்த, வேலும்=வேலாயுதத் தையும், செம் சேவலும்=செம்மையாகிய கோழிக் கொடியையும், செம் தமிழால்=செவ்வையாகிய தமிழ்மொழிப் பாடல்களால், பகர் ஆர்வம் ஈ=பாடித் துதிக்கின்ற விருப்பத்தை அடியேனுக்கு அளித் தருள்வீர்.

## விரிவுரை

**சிகராத்ரி கூறிட்ட வேலும்:—**

வேல் கிரௌஞ்ச மலையைப் பிளந்ததுமன்றி, நக்கீரருக் காக கற்கிமுகிக்கு அனுகூலமாக இருந்த மலையையும் பிளந்தது.

"மலைதொளை யுருவச் சென்ற வேலென" —திருப்புகழ்.

மலையென்பது வினை; அது மலைபோல் குவிந்திருக்கின்றது. அவ் வினையாகிய மலையை அழிப்பது ஞானம். வேல் என்பது ஞானம்.

**சேவலும்:—**

குமாரக் கடவுளுடைய கொடியில் நின்று கூவுவது சேவல். அஞ்ஞான இருள் விடியுமாறு கூவுகின்றது.

அடியார்க்கு அருள்புரிய ஆறுமுக வள்ளல் வரும்போது அப் பெருமானுடைய வரவை முன்னே தனது இனிய ஒலியால் உணர்த்தி அஞ்சலென ஆட்கொள்வது சேவல். பிரணவத்தை

நாத ரூபமாக புலப்படுத்துவது; செம்மை நிறமுடன் செந்தீ வண்ணமாக விளங்குவது.

**செந்தமிழாற் பகரார்வமீ:—**

"வேலாயுதத்தையும், சேவலையும் செந்தமிழ் மொழியால் துதிக்கும் விருப்பத்தை அடியேனுக்கு அருள்புரிவீர்" என்று அடிகள் முறையிடுகின்றனர். கந்தரநுபூதி முதற்பாடலிலும்,

"ஆடும்பரி வேல் அணிசேவல் எனப்
பாடும்பணியே பணியா அருள்வாய்"

என்றனர்.

அருணகிரியாருக்கு ஆறுமுகக்கடவுள் வயலூரில் "மயிலையும் கடப்பமாலையையும் வேலையும் சேவலையும் திருவடியையும் புயாசலங்களையும் வயலூரையும் வைத்து விருப்புடன் திருப்புகழைப் பாடுதி" என்று அருள்புரிந்தனர்.

"பக்கரை விசித்ரமணி பொற்கலணை யிட்டநடை
பட்சியெனு முக்ரதுர கமுநீபப்
பக்குவமலர்த் தொடையு மக்குவடு பட்டொழிய
பட்டுருவ விட்டருள்கை வடிவேலும்
திக்கது மதிக்கவரு குக்குடமும் ரட்சைதரு
சிற்றடியு முற்றியப னிருதோளும்
செய்ப்பதியும் வைத்துயர்தி ருப்புகழ் விருப்பமொடு
செப்பென எனக்கருள்கை மறவேனே"

"கவடுகோத் தெழு முவரி மாத்திறல்
காய்வேல் பாடேனடேன்வீடா னதுகூட"

மொழிகளுள் சிறந்தது தமிழ்; எல்லா நலன்களும் பொருந்தியது; செம்மைப் பண்புடையது; இறைவனைப் போல் என்றும் ஒருபடித்தாகத் திகழ்வது; இளமை நலங் குன்றுமல் இலகுவது. ஆதலினல் செந்தமிழ் என்றனர்.

"என்றுமுள தென்றமிழ்" —கம்பர்.

''அம்புவி தனக்குள்வளர் செந்தமிழ் வழுத்தியுனே
அன்பொடு துதிக்க மனம் அருள்வாயே''
—திருப்புகழ்.

வேலாயுதத்தின் சிறப்பை வியந்து கூறும் பாடல் :

தேரணியிட்டுப் புரமெரித்தான் மகன் செங்கையில்வேல்
கூரணி யிட்டனு வாகிக் கிரௌஞ்சங் குலேந்தரக்கர்
நேரணி யிட்டு வளேந்த கடக நெளிந்தது சூர்ப்
பேரணி கெட்டது தேவேந்த்ர லோகம் பிழைத்ததுவே.

சேவலின் சிறப்பைப் புகழ்ந்து கூறும் பாடல் :

படைபட்ட வேலவன் பால்வந்த வாகைப் பதாகையென்னுந்
தடைபட்ட சேவல் சிறகடிக்கொள்ள சலதிகிழிந்
துடைபட்ட தண்ட கடாக முதிர்ந்த துடுபடலம்
இடைபட்ட குன்றமு மாமேரு வெற்பு மிடிபட்டவே.

வேலே வழிபடுவார்க்கு ஞானமும், சேவலே வழிபடுவார்க்கு அருட்பிரகாசமும் உண்டாகும்.

பணிபாச......துரங்க:—

பாசம் போன்றதும் போர்புரிய வல்லதுமாகிய பாம்பினுடைய பணமகுடங்களே மயில் துகள் படுத்துகின்றது என்பார்.

துரங்கம்-குதிரை. அது உவம ஆகுபெயராக மயிலேக் குறிக்கின்றது.

''பட்சியெனு முக்ர துரகம்''
''ஓகார பரி''

என்பார் பிற இடங்களிலும்.

நிருப:—

நிருபன்-தலேவன். முருகனே முழுமுதற் பரம்பொருள்.

இனி நிருபகுமரா என்பதை ஒரு தொடராக்கி நிருபனுடைய குமாரரே என்றும் கூறலாம். அவ்வாறு கொள்ளின் நிருப என்பது சிவபெருமானேக் குறிக்கும்.

குக:—

குமரவேள் குறிஞ்சி நிலக் கடவுளாதலின் மலைக்குகைகளில் வசிப்பாராயினர். அதனல் குகனெனப்பட்டனர்.

ஆன்மாக்களின் தகராகாச புண்டரீகக் குகையில் வசிப்பதால் குகன் என்பது அதன் சிறப்புப் பொருள்.

''அணோரணீயான் மஹதோ மஹீயா நாத்மா குஹாயாம்''

ராட்சச பட்ச விட்சோப:—

அமரர்கட்கு ஆற்ருெணு அல்லல் இழைத்த அரக்கர்களை அறுமுகப்பரமன் அழித்தனர்.

சமதமாதி நற்குணங்களை அடக்கும் ராகத்வேஷாதி துர்க்குணங்களைப் பெருமான் அழிப்பன் என்பது அதனுடைய குறிப்பு.

''நிருதரார்க்கொரு காலா ஜேஜெய'' —திருப்புகழ்.

அருணகிரிநாத சுவாமிகள் தமிழில் வல்லவர் என்பது மட்டுமின்றி வடமொழியிலும் கரைகண்டவர். பல இடங்களில் வடமொழிப் பதங்களின் அரும் பிரயோகங்கள் வருகின்றன. இப்பாடல் 30 பதங்களால் ஆகியது. இதில் 13 பதங்கள் தமிழ். 17 பதங்கள் வடமொழி.

சிகர, அத்ரி, பாச, சங்க்ராம, பணு, மகுட, நிகராட்சம, பட்ச, பட்சி, ந்ருப, குமரா, குக, ராட்சச, பட்ச, விட்சோப, தீர, குண என்பன வடமொழிகள்.

## கருத்துரை

மயில்வாகனரே! குமாரமூர்த்தியே! குகக்கடவுளே! அசுர குலகாலரே! அருட்குணக் கடலே! தேவரீருடைய வேலாயுதத்தையும் சேவலையும் அன்புடன் தமிழால் துதிக்க அருள்புரிவீர்.

## 53

**வேடிச்சி கொங்கை விரும்புங் குமரனை மெய்யன்பினற்**
**பாடிக் கசிந்துள்ள போதே கொடாதவர் பாதகத்தாற்**
**றேடிப் புதைத்துத் திருட்டிற் கொடுத்துத் திகைத்திளைத்து**
**வாடிக் கிலேசித்து வாழ்நாளை வீணுக்கு மாய்ப்பவரே.**

### பதவுரை

வேடிச்சி கொங்கை விரும்புங் குமரனை=குறக்குடியில் அவதரித்த வள்ளியம்மையாருடைய தனங்களை விரும்புகின்ற முருகக் கடவுளை, மெய் அன்பினல்=உண்மையான அன்பினல், கசிந்து பாடி=உள்ளம் உருகிப் பாடித் துதித்து, உள்ளபோதே கொடாதவர்=கையில் பொருள் இருக்கும்போதே ஏழைகட்கும் சிவ புண்ணியச் செல்வர்கட்கும் தராதவர்கள், பாதகத்தால் தேடி=பாவ வழியில் பொருளையீட்டி, புதைத்து=தானும் அநுபவிக்காமல் பிறரையும் அநுபவிக்க விடாமல் மண்ணில் புதைத்து வைத்து, திருட்டில் கொடுத்து=திருடர்களுக்குக் கொடுத்து, திகைத்து இளைத்து=அதனல் உள்ளந் திகைப்புற்று உடல் மெலிந்து, வாடி கிலேசித்து=மனம் வாட்டமுற்று மிகவும் துக்கப்பட்டு, வாழ்நாளை வீணுக்கு மாய்ப்பவரே=தமது ஆயுள் நாளை அவமாகப் பயனின்றி கழிக்கின்றவர்களே யாவர்.

### விரிவுரை

**வேடிச்சி கொங்கை விரும்புங் குமரன்:—**

வள்ளியம்மையாருடைய தனங்களை ஞானபண்டிதராகிய எம் ஆறுமுகப் பெருமான் விரும்புகின்ருன் என்பது, கேவலம் விடபுருடர்களைப் போன்று வெறுஞ் சதைத் திரட்சியை விரும்புகின்றனர் என்று பொருளன்று. அன்பர்கள் அங்ஙனம் நினைத்தும் பேசியும் மீளா நரகிற்கு ஆளாகக் கூடாது.

> "ஞானந்தான் உருவாகிய நாயக னியல்பை
> யானும் நீயுமா யிசைத்து மென்ருலஃதெளிதோ

மோனந் தீர்கலா முனிவருந் தேறிலர் முழுதுந்
தானுங் காண்கிலன் இன்னமுந் தன்பெருந் தலைமை.''

என்று சிங்கமுகனும்,

''ஞானபண்டித ஸ்வாமீ நமோ நம''
''ஞானகர சுர பாஸ்கரனே''

என்று அருணகிரியாரும் புகழ்ந்து ஓதிய குமாரக் கடவுள் மற்றையரைப்போல் வெறுந் தனத்தை விரும்புவாரோ? உய்த்துணர்மின். ஆழ்ந்து சிந்திப்பவர்க்கே அதன் அருமை புலப்படும். அதன் உட்பொருளைச் சிறிது கூறுதும். அன்பர்கள் உணர்ந்து இன்புறுக.

வள்ளியம்மையார் ஞானம்பிகை; அடியில் வரும் அருள் திருவாக்குகளை ஊன்றிப்பார்த்துணர்க.

''சுந்தரஞான மென்குற மாது
தன்திரு மார்பில் அணைவோனே''

''நாறிதழிவேணி சிவரூப கலியாணி முதல்
ஈண மகவானை மகிழ் தோழவனமீது செறி
ஞான குறமாதைதினை காவில்மண மேவுபுகழ் மயில்வீரா''
—அருணகிரியார்.

எனவே ஞானத்தின் தனிக்கொடியாகிய அம்பிகைக்கு பரஞானம் அபரஞானம் என்ற இருதனங்கள் உள. பரஞானம் —அநுபவஞானம், அபரஞானம்—கலைஞானம். இந்த இரு ஞானங்களையுமே ஞானபண்டிதன் விரும்புகின்றனன்.

''பெரும்பைம் புனத்தினுள் சிற்றேனல் காக்கின்றபேதைகொங்கை
விரும்புங் குமரனை''

''இலகுசிலை வேடர் கொடியி னதிபார
இருதன விநோதப் பெருமாளே''

என்பவைகளும் இவ்வரிய கருத்தாகிய உள்ளீட்டைக் குறித்து எழுந்தன என்பதையும் நுனித்துணர்க.

இனி பரஞானம் இத்தன்மைத்தென்று பிறிதோரிடத்தில் கூறுமாறு காண்க,

"சீவ னொடுக்கம் பூத வொடுக்கம்
தேற வுதிக்கும் பரஞான"

**மெய்யன்பினுல் பாடிக் கசிந்து:—**

இறைவனை நற்றமிழ் மொழியால் உண்மையான அன்போடு உள்ளம் கசிந்து பாட வேண்டும்.

"என்புருகிப் பாடுகின்றிலை" —மணிவாசகர்.

"காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி ஓதுவார்" —சம்பந்தர்.

மனமாகிய கல் கசிந்துருக வேண்டுமானுல், இறைவன் நம்மிடத்துக் காட்டுகின்ற கரையற்ற கருணையையும் நமது சிறுமையையும் அவருடைய பெருமையையும் நினைந்து நினைந்து நின்றும், ஆண்டவனுடைய அருட்குணங்களை உணர்ந்தும், அதனுல் உள்ளம் அவனுடைய திருவடியிற் பதிய அன்பு செய்தும் நிற்கவேண்டும். இதனை வடலூர் வள்ளலார் கூறுமாறு காண்க.

"நினைந்துநினைந் துணர்ந்துணர்ந்து நெகிழ்ந்து நெகிழ்ந் தன்பே
நிறைந்துநிறைந் தூற்றெழுங்கண் ணீரதனு லுடம்பு
நனைந்துநனைந் தருளமுதே நன்னிதியே ஞான
நடத்தரசே யென்னுரிமை நாயகனே யென்று
வனைந்துவனைந் தேத்துதும் நாம் வம்மினுலகியலீர்"

**உள்ளபோதே கொடாதவர்:—**

பொருள் கையில் உள்ளபோதே நல்வழியில் செலவிட வேண்டும். அங்ஙனம் அறவழியில் செலவிடாத பொருள் தீய வழியில் செல்லும். பிறகு "என்னிடம் பொருளிருந்தால் எத்தனையோ நல்லறங்களைச் செய்வேன்; ஒன்றுமில்லையே" என்று கூறி வருந்துவர். ஆதலினுல் "கைத்துண்டாம் போதே கரவாதறஞ் செய்மின்" என்ற அறவுரையை உன்னி கையில் பொருள் உள்ளபொழுதே நல்ல தருமங்களைச் செய்து புகழும் புண்ணியமும் அடைய வேண்டும். அங்ஙனம் அறஞ் செய்யாதார் பொருள் அழியும் வகையைக் கூறுகின்றனர்.

பாதகத்தாற்றேடி:—

தீயவழியிலே பொருளைச் சேகரிப்பது. அப்படி பிறர் வருந்த ஈட்டிய பொருள் பிறகு தான் வருந்த அழிந்துவிடும்.

அழக்கொண்ட வெல்லாம் அழப்போம் இழப்பினும்
பிற்பயக்கும் நற்பாலவை. —வள்ளுவர்.

''தீவினைவிட் டீட்டல் பொருள்'' —ஔவையார்.

நல்வழியில் ஈட்டிய பொருள் ஒருபோதும் கெடாது.

புதைத்துத் திருட்டிற் கொடுத்துக்......கிலேசித்து:—

பழையகாலத்தில் பணங்களைச் சேமித்து வைக்கும் சேம நிலையங்கள் இன்மையால் பணத்தை ஆழப் புதைத்து வைக்கும் வழக்கம் இருந்தது.

பாடுபட்டுத் தேடிப் பணத்தைப் புதைத்துவைத்துக்
கேடுகெட்ட மானிடரே கேளுங்கள்—கூடுவிட்டிங்
காவிதான் போயினபின் யாரே யநுபவிப்பார்
பாவிகா ளந்தப் பணம்.

''ஊழிற் பெருவலி யுண்ணவொட்டா துங்க ளத்தமெல்லாம்
ஆழப் புதைத்து வைத்தால் வருமோநும் மடிப்பிறகே''

திருட்டில் கொடுத்து அதனால் உள்ளந் திகைத்தும் வாடியும் வருந்தியும் உலோபர் உழன்று வறிதே கெடுவர்.

உடாஅது முண்ணாதுந் தம்முடம்பு செற்றும்
கெடாஅத நல்லறமுஞ் செய்யார்=கொடாஅது
வைத்தீட்டி னாரிழப்பர் வான்றோய் மலைநாட
உய்த்தீட்டுந் தேனீக் கரி. —நாலடியார்.

கருத்துரை

வள்ளிமணவாளராகிய வள்ளலை வாழ்த்தி உருகி அறஞ் செய்யாதவர் பொருளை வறிதே போக்கி பயனற்றழிவர்.

## 54

**சாகைக்கு மீண்டு பிறக்கைக்கு மன்றித் தளர்ந்தவர்க்கொன்**
**றீகைக் கெனைவிதித் தாயிலை யேஇலங் காபுரிக்குப்**
**போகைக்கு நீவழி காட்டென்று போய்க்கடல் தீக்கொளுந்த**
**வாகைச் சிலைவளைத் தோன்மரு காமயில் வாகனனே.**

### பதவுரை

இலங்கா புரிக்கு போகைக்கு=இலங்கைமா நகரத்திற்குச் செல்வதற்கு, நீ வழிகாட்டு என்றுபோய்=நீ வழிகாட்டக் கடவாய் என்று சென்று, கடல் தீ கொளுந்த=கடலானது நெருப்பு பற்றச் செய்ய. வாகை சிலை வளைத்தோன்=வெற்றி பொருந்திய கோதண்டத்தை வளைத்தவராகிய ஸ்ரீ ராமச்சந்திர மூர்த்திக்கு, மருகா=திருமருகரே! மயில் வாகனனே=மயிலை வாகனமாக உடையவரே! சாகைக்கும்=இறப்பதற்கும், மீண்டு பிறக்கைக்கும் அன்றி=பின்னும் திரும்பத் திரும்ப பிறப்பதற்கும் அல்லாமல், தளர்ந்தவர்க்கு=வறுமைப் பிணியால் தளர்வுற்றவர்கட்கு, ஒன்று ஈகைக்கு=ஒரு பொருளைக் கொடுத்து உதவி செய்வதற்கு, என்னை விதித்தாய் இலையே=அடியேனை ஏற்படுத்தினாயில்லையே? (இது என்ன நியாயம்?)

### விரிவுரை

**சாகைக்கு மீண்டு பிறக்கைக்கும்:—**

மனிதர் பிறந்து வளர்ந்து உண்டு உடுத்து உயிர்த்து உறங்கி தளர்ந்து ஒரு நற்கருமமும் புரியாமல் வறிதே இறந்து படுகின்றனர். மீண்டும் பிறந்து அவமே உழன்று அழிகின்றனர். ஆகவே பிறப்பதும் இறப்பதுமாகவே யாகிப் பயனற்றுப் போகின்றனர். காட்டிலே சில மரங்கள் தாமே தோன்றி வளர்ந்து ஒருவருக்கும் பயனின்றி பட்டுப் போதல் போலென்றறிக. இதை நினைக்கின் அறிவுடைய ஒருவனுக்கு உள்ளங் கவலுமன்றோ? அந்தோ! காட்டிலே எரிந்த நிலவும், கடலிலே பொழிந்த மழையும், களரிலே விதைத்த விதையும், ஆற்றிலே கரைத்த புளியும், அறிவிலார்க்குரைத்த அறமும்போல் வறிதேயாகின்றனர். பெறுதற்கரிய இம்

மானிடப் பிறவியைப் பெற்று ஒரு பயனுமின்றிச் சாவதினும் மடமை வேறுளதோ?

பெறுதற் கரிய பிறவியைப் பெற்றும்
பெறுதற் கரிய பிரானடி பேணர்
பெறுதற் கரிய பிராணிக ளெல்லாம்
பெறுதற் கரியதோர் பேறிழந் தாரே. —திருமந்திரம்.

ஒரு சிறந்த நற்கருமத்தைச் செய்து இறந்தவர், இறந்தவரேனும் இறந்தவராகார்; இருந்தவரே. ஒரு பயனுமின்றி வாழும் மனிதர் இருந்தவரேனும் இருந்தவராகார்; இறந்தவரே. பல திருக்கோயில்களைப் புதுக்கிப் பொன்ருப் புகழ் பெற்ற கோச் செங்கட்சோழன், திருமலைநாயக்கர், தருமகுணசீலர் பச்சையப்ப முதலியார், சீதக்காதி மரக்காயர் முதலியவர்கள் இன்றும் புகழுடம்பு தாங்கி இருக்கின்ருர்களன்ருே?

உலகில் இறந்தவர் இறந்தவராகார்; ஒன்றைக்கொடு என்று பிறரிடம் போய் கையேந்திக் கேட்டல், இழிதொழில் செய்தல் முதலிய தீமைகளைச் செய்பவர் உயிரோ டிருந்தும் இறந்தவரே; தனக்கு இருக்கட்டுமென்று எண்ணுது ஈதல் முதலிய நன்மைகளைச் செய்பவர் இறந்தவரேனும் இருப்பவராவர். இதனைக் கம்பர் கூறுமாறு காண்க.

மாய்ந்தவர் மாய்ந்தவ ரல்லர்கண் மாயா
தேந்திய கைகொ டிரந்தவ ரெந்தாய்
வீந்தவ ரென்பவர் வீந்தவ ரேனும்
ஈந்தவ ரல்ல திருந்தவர் யாரே.

ஆதலால் ஒவ்வொருவரும் தமது பிறப்பு யாதொரு பயனுமின்றி வறிதே போகா வண்ணம் ஏதாவது ஒரு சிறந்த நலத்தைச் செய்யவேண்டும். அந் நலங்களுள் தலைசிறந்தது யாது எனின் ஈதல் என்னும் அறமேயாம். ஆதலினுல்தான் "அறஞ்செய விரும்பு" என்று முதலாவதாகக் கூறிய தமிழ்க் கிழவி, "அறனை மறவேல்" என்று மீண்டுங் கூறுகின்றனள்.

அறத்தினூஉங் காக்கமு மில்லை யதனை
மறத்தலினூங் கில்லை கேடு. —திருவள்ளுவர்.

அறமே மறங்கள் முழுதழிக்கும் அறமே கடவு ளுலகேற்றும்
அறமே சிவனுக் கொருவடிவம் அறமே சிவனை வழிபடுவோர்க்
கறமே எல்லாப்பெரும்பயனும் அறமேயார்க்கும் எவ்விடத்தும்
அறமேயச்சந் தவிர்ப்பதென அறைந்தான்சாதா தபமுனிவன்.
—காஞ்சிப்புராணம்.

தளர்ந்தவர்க்கொன்று ஈகைக்கு என்று எனைவிதித்தாயிலையே:—

மேற்கூறிய ஈதலில் எது சிறந்தது எனின் கூறுதும். ஒரு சிறிதும் ஆதரவற்ற பரம தரித்திரர்க்கு ஒன்று ஈவதே மிகச் சிறந்ததாம்.

வறியார்க்கொன் றீவதே ஈகைமற் றெல்லாங்
குறியெதிர்ப்பை நீர துடைத்து.
அற்றார் அழிபசி தீர்த்தல் அஃதொருவன்
பெற்றான் பொருள்வைப் புழி. —திருவள்ளுவர்.

அற்றார் என்ற சொல்லை அன்பர்கள் உற்றுப்பார்க்க. ஆதாரமின்றி, வேறு போக்கிடமின்றி, போற்றுவாரற்று நிர்க்கதியாக உடையவனை அழைத்து இலை நிரம்ப அன்னமும் கறிகளுமிட்டு வயிறார உண்பித்து ஆடையும் பொருளும் தந்தால் அவன் உள்ளம் குளிரும்; அதனால் உயிர் குளிரும்; உயிர்க்குயிராயுள்ள சிவங் குளிரும். அவன் அளவற்ற மகிழ்ச்சியுறுவன். அவன் மகிழ்வதைக் கண்டவுடனே கொடுக்கின்றவனுக்கும் மகிழ்ச்சியுண்டாகும். செல்வத்தால் பெறுவது மகிழ்ச்சி. இதனை ஏன் செல்வமுடையார் உணராதிருக்கின்றனர்.

ஈத்துவக்கு மின்ப மறியார்கொல் தாமுடைமை
வைத்திழக்கும் வன்க ணவர். —திருவள்ளுவர்

இலங்கைக்கு.........சிலைவளைத்தோன்:—

இராவணன் எண்ணில்லாத சேனைகளையும், அளவற்ற வரங்களையும், ஆற்றலையும் படைத்திருந்தனன்; எனினும் அறநெறிநின்றும் வழுவினன்.

'அறன்கடை நின்ருரு ளெல்லாம் பிறன்கடை
நின்ருரிற் பேதையா ரில்'

என்ற பொய்யா மொழிப்படி பிறன்மனை நயக்கும் பேதைய ஞயினன்.

'அழுக்கா றவாவெகுளி இன்னுச்சொல் நான்கும்
இழுக்கா வியன்ற தறம்.'

என்பதனை உணராது கெட்டான். அதனுல் அறநெறி இதுவே என்று உலகமுணர திருமால் ஸ்ரீராமராக மன்னு புகழ் கௌசலைதன் மணிவயிறு வாய்க்கத் திருவவதாரஞ் செய்து, ஏகபத்நி விரதத்துடன் தூய ஒழுக்கமே உயிராகக் கொண்டு, பெற்ருேர் பேணல், உடன் பிறந்தாரை உவத்தல், அடைந்தார்க் கருளல், சொற்சோர்வுபடாமை முதலிய நற் குணங்களைத் தம் வாழ்க்கையில் காட்டி யருளினர். பிறன் மனை நயந்த இராவணனை, அவன் வாழும் இலங்கை போய் "கரங்கு திரைக் கருங்கடலுங் காரவுணப் பெருங்கடலுங் கலங்கி எரிய" வெற்றி வில்லை வளைத்தனர்.

"நீடிய அரக்கர்சேனை நீறுபட்டழிய வாகை
சூடிய சிலையிராமன்" —கம்பர்.

மயில் வாகனனே:—

அமரரைச் சிறையிட்டு ஆயிரத்தெட்டண்டங்களையும் நூற்றெட்டு யுகங்களாகப் பல அலக்கண் விளைத்து அரசு புரிந்த சூரபன்மனுடைய தருக்கையடக்கி மயிலாகச் செய்து அதன் மீது ஏறியருளுகின்ற கருணைக் கடல் கந்தக் கடவுள். சூர பன்மனது பிறப்பையும் இறப்பையும் தவிர்த்து அழியாப் பதம் அருளினுர். ஆதலினுல் நமக்கும் அதனை யருளுவர். தளர்ந்த தேவர்க்கு உதவிய தயாபரன் நம்மையும் அவ்வாறு தளர்ந்த வர்க்கு ஒன்று தருமாறு செய்வன். அவன் செய்வித்தாலன்றி நம்மாற் செய்ய முடியாதல்லவா?. அதனுல் அவனிடம் வரமாகக் கேட்கின்றனர்.

## கருத்துரை

திருமால் மருகரே! மயில் வாகனரே! இறப்பு பிறப்பை யொழித்து அடியேனுக்குத் தரும சிந்தையைத் தந்தருள்வீர்.

## 55

ஆங்கா ரமு மடங் காரோடுங் கார்பர மாநந்தத்தே
தேங்கார் நினைப்பு மறப்பு மறார் தினைப் போதளவும்
ஓங்காரத் துள்ளொளிக் குள்ளே முருக னுருவங் கண்டு
தூங்கார் தொழும்புசெய் யாரென்செய் வார்யம தூதருக்கே.

## பதவுரை

ஆங்காரமும்அடங்கார்=அகங்காரம், மமகாரம் (நான்,எனது) என்ற இரண்டையும் ஒழித்து அருளனுபவத்திலே அடங்கப் பெறார், ஒடுங்கார்=பொறி புலன்கள் ஒடுங்கப்பெறார், பரம ஆனந்தத்தே தேங்கார்=பேரின்ப வெள்ளத்திலே முழுகி நிறைவுபெறார், நினைப்பும் மறப்பும் அறார்=நினைப்பையும் மறப்பையும் அற்று சமாதி நிலையில் பொருந்தார், தினைபோது அளவும்=ஒரு தினையளவு காலமாயினும், ஓங்காரத்து உள் ஒளிக்கு உள்ளே=ஓங்காரமாகிய நாதத்துக்குள்ளே ஒளிரும் ஜோதிக்குள்ளே, முருகன் உருவம் கண்டு=முருகப் பெருமானுடைய திருவுருவத்தைத் தரிசித்து, தூங்கார்=ஏனைய கருவிகரணங்களெல்லாம் ஓய்ந்து அறிவு மாத்திரம் ஒளிசெய்ய அப்பரவச நிலையில் தூங்கார், தொழும்பு செய்யார்=தொண்டு செய்யார், யமதூதருக்கு என் செய்வார்=மேற்கூறியவைகளில் ஒன்றையேனும் அடையாமையால் இயமனுடைய தூதருக்கு யாது பரிகாரம் செய்வார்கள்?

## விரிவுரை

ஆங்காரமும் அடங்கார்:—

அகங்காரம் என்பது ஆங்காரம் என வந்தது. அகங்காரம் என்பது நான் என்ற அகப்பற்று; ஆங்காரம் என்றதனால் மமகாரமும் வருவிக்கப்பட்டது. எதிரது தழீஇய எச்சவும்மை.

மமகாரம் என்பது எனது என்ற புறப்பற்று. இவ்விரண்டும் கெட்டாலன்றி திருவருள் வாய்க்காது.

யான்என தென்னுஞ் செருக்கறுப்பான் வானோர்க்
குயர்ந்த உலகம் புகும். —திருக்குறள்.

"யானென தெனச்சருவு மீனசமயத் தெவரும்
யாருமுணர் தற்கரிய நேர்மைக் காரனும்"—திருவகுப்பு.

"நான் காணு இடத்ததனைக் காண்பே மென்று
நல்லோர்கள் நவில்கின்ற நலமே" —அருட்பா.

ஒடுங்கா:—

நான் எனது என்ற இருவகைப் பற்றும் அற்றபின் பொறி புலன்களை யொடுக்கி அருளநுபவத்தில் ஒடுங்குதல் வேண்டும்.

ஐந்தில் ஒடுங்கில் அகலிட மாவது
ஐந்தில் ஒடுங்கில் அருந்தவ மாவது
ஐந்தில் ஒடுங்கில் அரன்பத மாவது
ஐந்தில் ஒடுங்கில் அருளுடை யாரே. —திருமந்திரம்.

ஆமையைப்போல் ஐம்புலனையடக்கிய இடத்தில் ஒரு பெரிய சுகம் ஆரம்பமாகின்றது. ஒரு மனிதன் வெளியிலே கண்டவாறு அலைந்து திரிகின்றபோது துன்பம் உண்டாகும். வீட்டிலே போய் நிழலில் சற்று ஆறுதலாக அமர்ந்தவுடன் மகிழ்ச்சியாக இருக்கின்றதல்லவா? அதுபோல் புலன்கள் வெளிப்பட்டுழலுங்கால் கவலையுண்டாகின்றது. அவைகளை அகமுகப்படுத்தும்போது ஆறுதலும் ஆனந்தமும் உண்டாகின்றன. இதனையே திருமூலர் பிறிதோரிடத்தில்,

முகத்தில் கண்கொண்டு காண்கின்ற மூடர்காள்
அகத்தில் கண்கொண்டு காண்பதே யானந்தம்
மகட்குத் தாய்தன் மணாளனோ டாடிய
சுகத்தைச் சொல்லென்றாற் சொல்லுமா றெங்ஙனே.

என்று அருளிச் செய்தனர்.

"ஐங்கரனை யொத்தமன மைம்புல மகற்றிவளர்
அந்திபக லற்றநினை வருள்வாயே"
—திருப்புகழ்.

பரமானந்தத்தே தேங்கார்:—

மேற் கூறியவாறு பற்றற்று புலனொடுங்கப் பெற்றபோது பெரிய ஆனந்தம் உண்டாகும். அந்தப் பேரானந்தத்தில் நிறைவு பெற்று நிலைபெறுதல் வேண்டும். தேங்குதல்—நிறைவு பெற்று அசைவற்றிருத்தல். "தண்ணீர் தேங்குகின்றது" என்ற உலக வழக்கையும் உன்னுக. ஒரு கணப்பொழுதில் இன்பம்போல் தோன்றி மறு கணத்தில் அழியும் இன்பத்தினை நாடாமல், நினைக்குந்தொறும் பேசுந்தொறும் இன்பம் பயக்கும் அப்பரமசுகத்தை நாடுவோமாக.

நினைப்பு மறப்பு மறர்:—

நினைப்பும் மறப்பும் அற்ற நிலையே சிறந்த நிலை. இதனை வடநூலார் "சகலகேவலம்" என்பர். நினைப்பைப் பகலென்றும் மறப்பை இரவென்றுங் கூறுவர். நினைப்பதும் மறப்பதுமாகவே நாம் இருக்கின்றோம். இவ்விரண்டும் அற்ற நிலையில் சித்திர தீபம்போல் நிலைத்திருப்பதாம். இந் நிலையை நம் அருணகிரிநாத சுவாமிகள் பல இடங்களில் இனிது கூறுகின்றனர்.

"இராப்பக லற்ற விடத்தே இருக்கை எளிதல்லவே"
—அலங்காரம்.

"கருதா மறவா நெறி காணவெனக்
கிருதாள் வனசந் தரவென் றிசைவாய்" —அநுபூதி.

"அந்திபக லென் றிரண்டையு மொழித்
திந்திரிய சஞ்சலங்களை யறுத்
தம்புய பதங்களின் பெருமையைக் கவிபாடி"
—திருப்புகழ்

பலகாலம் பயின்றவர்க்கே இந்நிலை கைகூடும். காண்பான், காட்சி, காட்சிப்பொருள் ஆகிய முப்பாலுந் தாண்டி

அப்பாலுக்கப்பாலாகிய சமாதி நிலையே இது. இது கைவரப் பெற்றாரே பெரியார்.

சாக்கிரந் தன்னில் அதீதந் தலைப்படில்
ஆக்கிய வந்த வயிந்தவ மானந்த
நோக்கும் பிறப்பறு நோன்முத்தி சித்தியாம்
வாக்கும் மனமும் மருவல் செய்யாவே. —திருமந்திரம்.

தினைப்போதளவும் ஓங்காரத்துள் ளொளிக்குள்ளே முருகனுருவங் கண்டு தூங்கார்:—

தினை என்பது ஓர் சிறிய தானியம். ஒரு சிறிய அணு வளவு நேரமேனும் ஓவியம்போல் கருவி கரணங் கழன்று தூங்கவில்லையே என்று அடிகள் வருந்துகின்றனர்.

தினைத்துணை நன்றி செயினும் பனைத்துணையாக்
கொள்வர் பயன்தெரி வார். —திருக்குறள்.

தினைப் போதளவுந் தூங்காரர்; ஓங்காரத்துள்ளொளிக் குள்ளே தூங்கார்; முருகனுருவங் கண்டு தூங்கார்; என்று கூட்டுக.

ஓங்காரத்துள் உள்ளொளியில் விளங்கும் முருகப் பெருமானுடைய திருவுருவத்தை அறிவுக் கண்ணால் கண்டு வேறு ஒன்றையுங் காணாதவராகி சிறிது நேரமேனுந் தூங்க வேண்டும்.

அன்பர்கள் இவ் வரியை நன்கு சிந்தித்து அநுபவத்திற் குக் கொண்டுவர வேண்டும்.

ஆங்கார மும்மடக்கி ஐம்புலனைச் சுட்டறுத்துத்
தூங்காமல் தூங்கி சுகம்பெறுவ தெக்காலம். —பத்திரகிரியார்.

தூங்கிக் கண்டார் சிவலோகமுந் தம்முள்ளே
தூங்கிக் கண்டார் சிவயோகமுந் தம்முள்ளே
தூங்கிக் கண்டார் சிவபோகமுந் தம்முள்ளே
தூங்கிக் கண்டார் நிலைசொல்வ தெவ்வாறே. —திருமந்திரம்.

**தொழும்பு செய்யார்:—**

முடிவாக நிருவிகற்பசமாதி கூடிய மெய்ஞ்ஞானிகளும் வாசனுமலந் தாக்காதிருக்கும்பொருட்டு இறைவனுடைய ஆலய வழிபாடுந் திருத்தொண்டுஞ் செய்வர்.

சிவமாம் பேறு பெற்ற எம் பரமாசிரியராகிய மணிவாசகப் பெருந்தகையாரும்,

" ஃ ஃ ஃ புத்தேளிர்
கோமானின் திருக்கோயில் தூகேன் மெழுகேன் கூத்தாடேன்"

என்று அருளிச்செய்தனர்.

**என்செய்வார் யமதூதருக்கே:—**

ஆங்காரம் அடங்கல், புலன் ஒடுங்கல், பரமானந்தத்தே தேங்கல், நினைப்பும் மறப்பும் அறல், தினைப்போதளவும் ஓங்காரத்துள்ளொளிக்குள்ளே முருகன் உருவங் கண்டு தூங்கல், தொழும்பு செய்யல், ஆகிய ஆறனுள் ஒன்றேனும் செய்யாதார் எம தூதருக்கு என் செய்வார்? என்று சுவாமிகள் வினவுகின்றனர்.

*கருத்துரை*

பற்றற்று, புலனொடுங்கி, பரமானந்தமுற்று, சகல கேவலம் அற்று, முருகனுருவங் கண்டு ஓங்காரத்துள் தூங்கி, தொழும்பு செய்து காலதூதரை வென்று வாழ வேண்டும்.

**56**

கிழியும் படியடற் குன்றெறிந் தோன்கவி கேட்டுருகி
இழியுங் கவிகற் றிடாதிருப் பீரெரி வாய்நரகக்
குழியுந் துயரும் விடாய்ப்படக் கூற்றுவ னூர்க்குச் செல்லும்
வழியுந் துயரும் பகரீர் பகரீர் மறந்தவர்க்கே.

*பதவுரை*

அடல் குன்று = வலிமையுடைய கிரௌஞ்ச மலையானது, கிழியும்படி=பிளந்தொழியுமாறு எறிந்தோன் = வேலாயுதத்தை

விடுத்தருளியவராகிய முருகப் பெருமானுடைய, கவிகேட்டு உருகி = அருட்பாடல்களைச் செவி குளிரக் கேட்டு உள்ளம் உருகி, இழியும் கவி = ஏனைய இழிந்த பாடல்களை, கற்றிடாது இருப்பீர் = கற்காமல் இருப்பீர்களாக, எரிவாய் நரக குழியும்=நெருப்புடன் கூடிய நரகக் குழியையும், துயரும்= அதனால் அனுபவிக்கக்கூடிய துன்பத்தையும், விடாய்பட = நீர் விடாய் கொண்டு தவித்து, கூற்றுவன் ஊர்க்கு செல்லும் வழியும்= இயமனுடைய ஊருக்குப் போகின்ற கொடிய வழியையும், துயரும் =அதனாலுண்டாகுந் துன்பத்தையும், மறந்தவர்க்கு=மறந்த அறிவிலிகட்கு, பகரீர் பகரீர்=சொல்லுங்கள், சொல்லுங்கள்.

## விரிவுரை

**கிழியும்படியடற் குன்றெறிந்தோன்:—**

கிரௌஞ்சம் என்பது ஒரு பறவை. தாரகனுக்கு நண்பனாகிய ஓரசுரன் பெரிய மாயாவி. அவன் அப்பறவை போன்ற மலை வடிவத்தைக் கொண்டு தேவர்களையும் முனிவர்களையும் தனதிடத்தில் வழியுளதுபோல் காட்டி அவர்கள் அவ்வழி செல்லுங்கால் அவர்கள் அறிவை மயக்கி அழிப்பன். அகத்திய முனிவரை அவ்வாறு அவன் ஒரு சமயம் துன்புறுத்த முயன்றான். அம்மாதவ சிகாமணி சினந்து, மலைவடிவாகவே இருக்குமாறும் கந்தப் பெருமான் கைவேலால் அழியுமாறும் சாபங் கொடுத்தனர். அதனால் அப் பாதகன் மலையுருவுடனேயே இருந்து அவ்வழியே செல்லும் இமையவரையும் இருடியரையும் இடர்ப்படுத்திக்கொண்டிருந்தான்.

பின்னர் முருகவேளின் துணைவர்களாகிய இலக்கத்தொன்பான் வீரர்களையும் பூத சேனாதிபதிகளையும் தன்னிடத்தே வழிபோற் காட்டி, அவர்கள் அதில் நுழைதலும் வழியைமறைத்து, இடி மழை காற்று இருள் ஆகியவற்றையுண்டாக்கி மயக்கினான். அதனையுணர்ந்த ஆறுமுகப்பெருமான் தமது திருக்கரத்துள்ள நூறுகோடி சூரியப்பிரகாசமுடைய வேற்படையை விடுத்து கிரௌஞ்ச மலையைத் துகள்படுத்தியழித்தனர். அதில் மயங்கிய வீரர்களும் உய்வு பெற்றனர்,

அதனுல் குமாரக் கடவுளுக்கு "வரைபக வெறிந்தோன்" என்ற திருநாமம் உண்டாயிற்று.

நக்கீர தேவரையும், தொளாயிரத்துத் தொண்ணூற் ஞென்பான் மனிதரையும் கற்கிமுகியென்ற பூதம் மலைக்குள் சிறைப்படுத்தியது. நக்கீரதேவர் திருமுருகாற்றுப்படை பாடுதலும் முருகவேள் வேற்படையால் கற்கிமுகியையும் அம் மலையையும் பிளந்தருளினுர்.

கவிகேட்டுருகி:—

கிரௌஞ்சம் என்பது ஆகாமியம், சஞ்சிதம், பிராரப்தம் ஆகிய வினைத் தொகுதிகள். அவற்றை வேல் அழித்தது.

"வினையோட விடுங் கதிர்வேல் மறவேன்"

ஆதலால் வினைத் தொகுதிகளாகிய மலைகளை உடைத் தெறிந்த ஞானவேலையுடைய முருகப்பெருமானுடைய திரு வருட் பாடலாகிய திருப்புகழைக் காதுகுளிரச் சதா கேட்டு, கருங்கல் போன்ற மனம் கரைந்துருகி நிற்க வேண்டும். அங்ஙனம் உருகுவார்க்கு இருவினையால் வரும் இடர்கள் வாரா. அவற்றை ஆண்டவன் அகற்றி அருள்புரிவன்.

"உருகு மடியவர் இருவினை இருள் பொரும்
உதய தினகர இமகரன் வலம்வரும்
உலக முழுதொரு நொடியினில் வலம்வரு பெருமாளே"
—திருப்புகழ்.

சீரானைப் பிறவானைச் சேவலனை மஞ்ஞைத்
தேரானைப் போற்றலர்க டேரானை யெம்முள்
நீரானை யளத்தற்கு நேரானைப் பொய்யிற்
சேரான்சீர் கேளாத செவியென்ன செவியே
செவ்வேளின் சீர்கேளாச் செவியென்ன செவியே.
—நா. கதிரைவேற் பிள்ளையவர்கள்.

இறைவனுடைய அருமைப் புகழ்ப்பாடலைக் கேட்பதனுல் அன்பு உண்டாகும். அன்பினுல் அகங் குழைந்து உருகும். அங்ஙனம் உருகுவார் இறைவனை எளிதிலடைவர்.

என்பே விறகா இறைச்சி யறுத்திட்டுப்
பொன்போற் கனலிற் பொரிய வறுப்பினும்
அன்போ டுருகி அகங்குழைவார்க் கன்றி
என்போன் மணியினை எய்த வொண்ணுதே. —திருமூலர்.

**இழியுங் கவி கற்றிடாதிருப்பிர் :—**

இழியுங்கவி என்றது செத்து செத்துப் பிறக்கின்ற ஏனைய தேவர்களையும், தனவந்தர்களையும், மாதர்களையுங் குறித்துப் பாடிய பாடல்கள். இன்றிருந்து நாளை அழிகின்றவரும் கொடுங்குணங்களுக்கெல்லாம் உறைவிடமானவரும் உலோபருபமாகிய மனிதர்களைக் குறித்து எழுந்த பாடல்களையும், புலால் உடம்புடன் கூடி நாறுகின்ற வாயையும் கண்ணையும், காதையும் வெறுந் தசைத் திரட்சியையும் உயர்த்தி உயர்த்தி எழுந்த பாடல்களையும் கற்றுப் பாடுவோர் எங்ஙனம் சிவகதி பெறுவர்? அந்தோ! அறிவின்மை. இறைவனது ஞானத் திருமேனியைப் புகழ்ந்து பாடாமல், ஊன உடம்பைப் புகழ்ந்து பாடி யழிவர். அவலை மெல்லாது உமியை மெல்லுபவரையும், கரும்பிருக்க இரும்பைக் கடிப்பவரையும் ஒப்பர்.

பாலென்பது மொழி பஞ்சென்பது பதம் பாவையர்கண்
சேலென் பதாகத் திரிகின்ற நீ செந்தி லோன்றிருக்கை
வேலென் கிலை கொற்ற மயூரமென்கிலை வெட்சித் தண்டைக்
காலென் கிலை மனமே எங்ஙனே முத்தி காண்பதுவே.
—அலங்காரம்.

மேகமென்றும் கொடிப்பாசி யென்றும் கருமணல் என்றும் கூறிய அளகம் பஞ்சுபோலாகியும், சேல், வேல், தாமரை, நீலோற்பலம் என்றெல்லாம் கூறிய கண்கள் தயிர் பிதிர்ந்தது போல் பீளையுடன் குழிந்துபோயும் வனப்பு குன்றும். பிற உறுப்புக்களும் இங்ஙனமே எழிலழியும்; நிலையில்லாதவற்றை நிலையென்று புகழ்ந்தழிதல் கூடாதென்று சுவாமிகள் பலவிடத்துங் கூறுமாறு காண்க.

**எரிவாய் நரகக் குழியுந் துயரும் :—**

கொலை, புலை, களவு, பிறன்மனை விழைவு ஆகிய பாவங்களைச் செய்தவர்கள் இயமனுடைய ஆட்களால் மிகவும்

கொடுமையான நெருப்புடன் கூடிய நரகக் குழியில் வீழ்ந்து துன்புறுவர்.

ஊனை வளர்க்கும்பொருட்டுப் பிறிதோருயிரைக் கொன்று சிறிதுங் கருணையின்றி ஊனையுண்ணும் வன்கணரை இயமன் நரகில் துன்புறுத்துவன் என்பதைத் திருமூலர் கூறுமாறு காண்க.

பொல்லாப் புலாலை நுகரும் புலையரை
எல்லாருங் காண இயமன்றன் தூதுவர்
செல்லாகப் பற்றித் தீவாய் நரகத்தின்
மல்லாக்கத் தள்ளி மறித்து வைப்பாரே.

தன் மனைவியை ஒருவன் உற்று நோக்கினும் உள்ளங் கொதிக்கின்றதல்லவா? பிறன் மனைவியை நோக்கினும் அவன் உள்ளம் கொதிக்குமே என்ற பகுத்தறிவின்றி பிறன்மனை விழையும் பேதையர் நரகில் அழலிற் காய்ந்த செப்புருவைத் தழுவியலறுவர்.

காதலாள் கரிந்து நைய கடியவே கனைந்து கன்றி
ஏதிலான் தார நம்பி எளிதென இறந்த பாவத்
தூதுலை யுருக வெந்த ஒள்ளழற் செப்புப் பாவை
ஆதகா தென்னப் புல்லி யலறுமால் யானைவேந்தே.
—சிந்தாமணி.

சிறிய பயன் கருதி தீமைகளை நெஞ்சமஞ்சாது செய்து, நினைக்கினும் நெஞ்சைச் சுடுகின்ற தீவாய் நரகில் வீழ்ந்து துன்புறுவோர் பேதைமையை என்னென்பேம்!

விடாய்ப்பட........செல்லும் வழியும்:—

தண்ணீர்ப் பந்தல் வைத்து ஏழைகட்கு உதவிய புண்ணிய சிலர் ஆவி பிரியுங்கால் அமிர்த சரஸுடன் கூடிய குளிர் நிழல் வழியே செல்லுவர். ஏழைகளுக்குத் தண்ணீர் கூடத் தராத கொடும்பாவிகளுடைய ஆன்மாவை இயம தூதர் தண்ணீரில்லாததும், நொய் மணலுடன் கூடியதுமான கடும் வழியில் "தண்ணீர் தண்ணீர்" என்று அலற வெய்யிலில் இழுத்தேகுவர்.

கொல்வதே கன்றி நின்றார் கொடியவர் கடிய நீரார்
இல்லையே யிம்மை யல்லா லும்மையு முயிரு மென்பார்
அல்லதுந் தவமு மில்லை தானமு மிழவென் பாரும்
செல்பவந் நகரந் தன்னுட் டுவினைத் தேர்க ளூர்ந்தே.

—சிந்தாமணி.

பகரீர் பகரீர் மறந்தவர்க்கே:—

ஆதலால், இயமனுடைய ஊருக்குப் போகும் வழியும், துயரும், நரகக் குழியும் துயரும் நிச்சயமாக உண்டென்பதை செல்வச் செருக்காலும், இளமை முறுக்காலும், அதிகாரத் திமிராலும் மறந்து மயங்கி, கண்டதே காட்சி கொண்டதே கோலம் என்று அல்லதைப் புரியும் அறிவிலிகட்கு உள்ளந் திருந்துமாறு எடுத்து இடித்துச் "சொல்லுங்கள்; சொல்லுங்கள்" என்று இருமுறை கூறி வற்புறுத்துகின்றனர்.

அறவுரைகளை வற்புறுத்திக் கூறுதல் ஒரு பேரறமாகும்.

கருத்துரை

உலகீரே! அவகவிகளைக் கல்லாமல் சிவகவிகளைக் கற்று உய்மின்; அங்ஙனங் கற்று உய்யுநெறி யறியாதார் வெய்ய நரகுறுவர். இவற்றை மறந்தவர்க்கு வற்புறுத்திக் கூறுங்கள்.

## 57

பொருபிடி யுங்களி றும்விளை யாடும் புனச்சிறுமான்
தருபிடி காவல சண்முக வாவெனச் சாற்றிநித்தம்
இருபிடி சோறுகொண் டிட்டுண் டிருவினை யோமிறந்தால்
ஒருபிடி சாம்பருங் காணது மாய வுடம்பிதுவே.

பதவுரை

இருவினையோம் இறந்தால்=(ஓ மனமே!) நல்வினை தீவினை யாகிய இருவினைகளையுடைய நாம் இறந்துவிட்டால், மாய உடம்பு இது=மாயாகாரியமாகிய உடம்பாகிய இது, ஒரு பிடி சாம்பரும் காணது=ஒரு பிடியளவு சாம்பலும் ஆகாது ஒழியும்; (ஆதலால்)

பொரு பிடியும்=போர் செய்தற்குரிய பெண் யானையும், களிறும்= ஆண்யானையும், விளையாடும்=கலந்து விளையாடுகின்ற, புனம் சிறு மான்=தினைப்புனத்தின்கண்ணுள்ள சிறிய மானுனது, தரு பிடி=பெற்ற பெண்யானை போன்ற வள்ளி பிராட்டியாருக்கு, காவல=நாயகரே! சண்முகவா=ஆறு திருமுகங்களை யுடையவரே! என=என்று, சாற்றி=துதித்து, பிடி சோறு கொண்டு இட்டு உண்டு இரு=பிடியளவு சோருவது அன்புகொண்டு யாசிக்கும் வறியவர்க்குக் கொடுத்து நீயும் சாப்பிட்டு இருப்பாயாக.

## *விரிவுரை*

**பொருபிடியுங் களிறும் விளையாடும் புனம்:—**

உலகம் முழுவதும் சக்தி சிவமாகக் காட்சி தருகின்றது, பெண்ணும் ஆணுமாகவே யாண்டுங் காணப்படுகின்றன; ஓரறிவுயிர் முதல் ஆறறிவுயிர்வரை உள்ள எல்லா உயிர்களும் அவ்வண்ணமே ஆணும் பெண்ணுமாக அமைந்திருப்பது கண்கூடு. திருவோத்தூர் என்னுந் திருத்தலத்தில் திருஞான சம்பந்த சுவாமிகளால் ஆண்பனை பெண்பனையான அதிச யத்தை அறியாதார் யாவர்?

> ''பவமாய்த் தாணது வாகும் பனைகாய்த்தே மணநாறும்
> பழமாய்ப் பார்மிசை வீழும்'' —திருப்புகழ்.

இனி அப்பரடிகள் திருக்கைலாய மலையை அவனருளே கண்ணுகக் கொண்டு கண்டபோதும் கைலையில் ஆண்யானை யும் பெண்யானையுங் கூடி வருவனவாகக் கண்டு இன்புற்றதும் ஈண்டு நினைந்து மகிழற்பாலது.

> மாதர்ப் பிறைக் கண்ணியானை மலையான் மகளொடும்பாடிப்
> போதொடு நீர் சுமந்தேத்திப் புகுவா ரவர்பின் புகுவேன்
> யாதுஞ் சுவடு படாமல் ஐயா றடைகின்றபோது
> காதன் மடப்பிடி யோடுங் களிறு வருவன கண்டேன்
>
> கண்டே னவர்திருப் பாதங்
> கண்டறியாதன கண்டேன்.

சிறுமான் தருபிடி :—

நடையழகுபற்றி பெண்களை பெண்யானையாக உவமிப்பது மரபு. மான் பெற்ற யானை என்னும் அழகு சிந்தித்து மகிழ்தற்குரியது. மான் வயிற்றில் மான் பிறப்பது இயல்பு; யானை பிறந்தது என்கின்றார். பிடி என்பது ஆகுபெயராக வள்ளியம்மையாரைக் குறிக்கின்றது.

சண்முகவா எனச் சாற்றி நித்தம் இரு :—

இரு என்ற சொல்லை, சாற்றி நித்தம் இரு; பிடி சோறு கொண்டு இட்டுண்டு இரு; என இரண்டிடத்தினும் கூட்டிப் பொருள் கொள்ளுதல் சால இனிதாகக் காண்கின்றது. தருமஞ் செய்யும்போது தற்போதமின்றி திருவருளைச் சிந்தித்துப் பயன் கருதாமல் இருக்கவேண்டுமென்பது இவ்வமுத மொழியால் விளங்குவது கவனிக்கத் தக்கது.

"வையிற் கதிர் வடி வேலோனை வாழ்த்தி வறிஞர்க்கென்றும்
நொய்யிற் பிளவளவேனும் பகிர்மின்கள்"

என்று சுவாமிகள் பிறிதோரிடத்தில் இங்ஙனமே வற்புறுத்திக் கூறுமாறு காண்க.

காரைக்காலம்மையாரும் இங்ஙனமே சிவனடியார்களுக்கு நல்ல திருவமுதும், செம்பொன்னும், நவமணியும், செழுந்துகிலும் பிறவுந் தகுதிக்குத் தக்கவாறும் வேண்டுமளவுந்தரும் போதெல்லாம் சிவபெருமானைச் சிந்தித்தார்கள் என்னும் செய்தி எத்துணை இன்பத்தைத் தருகின்றது. அறிஞர்கள் ஆழ்ந்து நினைந்து அகமகிழ்க.

நம்பரடி யாரணைந்தால் நல்லதிரு வமுதளித்தும்
செம்பொன்னு நவமணியுஞ் செழுந்துகிலு முதலான
தம்பரிவி னுலவர்க்குத் தகுதியின்வேண் டுவகொடுத்தும்
உம்பர்பிரான் திருவடிக்கீழ் உணர்வுமிக ஒழுகுநாள்.
—பெரியபுராணம்.

பிடிசோறு கொண்டிட்டுண்டிரு :—

பிறந்த நாள் தொட்டு தூராக்குழியாகிய வயிற்றை நிரப்பி நிரப்பி நெடிது அலைகின்றோம்; பயன் யாதுங்கண்டோமில்லை,

ஆதலால் வறியவர்க்கு ஒரு பிடி சோறுவது அன்புடன் இட்டு உண்ணவேண்டும்.

"யாவர்க்குமாம் உண்ணும்போது ஒரு கைப்பிடி"

என்றார் திருமூலர்.

"எமக்கென்னென் றிட்டுண்டிரும்" —ஔவையார்.

ஏழைகள் வயிற்றில் விழும் ஒவ்வொரு சோறும் ஒவ்வொரு பொன்னாகத் தனக்கு மறுபிறப்பில் வந்து உதவும். இது குறித்தே, "எங்காயினும் வரும் ஏற்பவர்க்கிட்டது" என்ற திருமொழியுஞ் சித்தத்தில் தித்திக்க எழுந்தது.

**இருவினையோம்:—**

இருவினையோம் என்பதற்கு பெரியவினையென்றும் பொருள் படும். "வினைப் போகமேயொரு தேகங் கண்டாய்" என்றார் பட்டினத்தடிகள்.

**ஒருபிடி சாம்பருங் காணுது மாய உடம்பிதுவே:—**

நான்குபேர் சுமக்கும் எண்சாணுடம்பாகிய இது முடிவில் பிடிசாம்பரும் ஆகாமல் அழிகின்றது. இதனைப் பேணுதற்கே அறுபது நாழிகையும் அவமே கழிகின்றது.

"ஓர்பிடி நீறு மிலாத உடம்பை
நம்பு மடியேனை இனியாளுமே" —பட்டினத்தடிகள்

".........அரசாகி
இனிதிரு மாந்து வாழும் இருவினை நீண்ட காயம்
ஒருபிடி சாம்பலாகி விடலாமோ" —திருப்புகழ்.

கருத்துரை

மனமே! இம் மாய உடம்பை விரும்பாமல், யாசிப்பவருக்குச் சிறிதேனுங் கொடுத்து உண்டு, வள்ளிமணவாளனைத் துதித்து இனிது இருப்பாயாக.

## 58

நெற்ருப் பசுங்கதிர்ச் செவ்வேனல் காக்கின்ற நீலவள்ளி
முற்ருத் தனத்திற் கினிய பிரானிக்கு முல்லையுடன்
பற்ருக்கை யும்வெந்து சங்க்ராம வேளும் படவிழியாற்
செற்ருர்க் கினியவன் தேவேந்த்ர லோக சிகாமணியே.

### பதவுரை

நெற்ரு பசுங்கதிர்=முதிராத பசுமையாகிய கதிர்களையுடைய செவ்வேனல்=சிவந்த தினைப்புனத்தை, காக்கின்ற=காவல் புரிகின்ற, நீல வள்ளி=நீல நிறமுள்ள வள்ளியம்மையாரின், முற்ரு தனத்திற்கு இனிய பிரான்=என்றும் முதிராத கொங்கைக்கு இனிமையாகிய தலைவராக விளங்கும் பெருமான் (யாவனென்ருல்), இக்கு=கரும்புவில்லும், முல்லையுடன்=முல்லைமலராகிய அம்பும், பற்ருக்கையும்=அம்புக்கூடும், சங்க்ராம வேளும்=போர்செய்ய வல்லவனுகிய மன்மதனும், வெந்துபட=வெந்து சாம்பராகும்படி, விழியால் செற்ருர்க்கு=நெற்றிக் கண்ணுல் அழித்தவராகிய சிவ பெருமானுக்கு, இனியவன்=இனியவனும், தேவேந்த்ரலோக சிகாமணியே=தேவேந்த்ர லோகத்திற்கு முடிமணிபோல்பவனும் ஆகிய முருகக்கடவுளாவார்.

### விரிவுரை

நெற்ருப் பசுங்கதிர் செவ்வேனல்:—

முதிர்ந்து உலர்ந்ததை நெற்று என்பது உலகப் பெரு வழக்கு. முதிர்ந்துவிட்டால் கதிரறுத்துவிடுவர். ஆதலால் முதிராத தினைப்புனத்தை வள்ளியம்மையார் காவல் புரிந் திருந்தனர்.

முற்ருத் தனத்திற்கு இனியபிரான்:—

*வள்ளியம்மையார் – ஜீவான்மா; தினைப்புனம் - உள்ளம்; தினைப்பயிர் - நல்லெண்ணங்கள்; தீய நினைவுகளாகிய பறவை கள் வந்து பாழ்படுத்தா வண்ணம் பாதுகாத்தல். பசுங்கதிர்-அநுபவம்; தனம்-பதிஞானம். முற்ருத்தனம் என்ற மையால் அப் பதிஞானம் தளராது நிற்றலைக் குறிக்கின்றது.*

ஞானத்திற்கே இனியவன் முருகன்; ஞானம் என்பதும் அறிவு என்பதும் ஒன்றே. அறிவும் அறியாமையுங் கடந்த அறிவே ஒரு திருமேனியாகக் கொண்டவர் குமாரக் கடவுள்.

"ஞானந்தா னுருவாகிய நாயகன்"

என்பது கந்தபுராணத் திருவாக்கு. 'ஞானபண்டிதஸ்வாமீ' என்றார் அருணகிரியாரும். ஆதலினால் ஞானம் ஒன்றாலேயே ஞானபண்டிதனை யடையமுடியும்.

உலகில் புதைபட்ட ஒரு பொருளைக் காணுதற்கு அஞ்சனம் (மை) போட்டுப் பார்ப்பது வழக்கம். அதுபோல் மெய்ப்பொருளைக் காண்பதற்கு ஒரு மை வேண்டுமல்லவா? அதுதான் 'ஞானம்' எனப்படும் என்பர் தாயுமானார்.

ஈனமில்லா மெய்ப்பொருளை இம்மையிலே காணவெளி
ஞானமெனும் அஞ்சனத்தை நான்பெறுவ தெந்நாளோ.

தானம் தவம் தருமம் ஆகிய, அனைத்தையுஞ் செய்வது ஞானம் என்ற ஒன்றைப் பெறுவதற்காகவே.

தானந் தவந்தருமஞ் சந்ததமுஞ் செய்வர்சிவ
ஞானந் தனையணைய நல்லோர் பராபரமே. —தாயுமானார்.

ஞானமில்லாமல் பக்திநெறியில் நிலைத்து நிற்பதும், ஒன்பது கண்டங்களாக உள்ள பரந்த பூமண்டலத்தை வலம் வருதலும், சிறந்த கடல் துறைகளில் முழுகுதலும், புண்ணிய நதிகளில் ஆடுதலும், பசி தாகம் முதலியவற்றைப் பொறுத்துக்கொண்டு நெருப்புக்கு நடுவே நின்று தவம் புரிதலும், உதிர்ந்த சருகு தண்ணீர் காற்று முதலியவற்றைப் பசியுற்றபோது புசித்தலும், மௌனத்தில் இருத்தலும், மலைக்குகையில் வாழுதலும், பத்துநாடிகளையுந் தூய்மை செய்தலும், மூலக்கனலை பிராணவாயுவால் எழுப்பி சந்திர மண்டலம் வரை மூட்டுதலும், அதனால் பொங்கும் அமிர்தத்தைப் பருகுதலும், யோகப் பயிற்சியால் உடல் கற்ப காலம் வரை இருக்குமாறு சித்திகள் செய்தலும் பரகதி என்ற பெருநிலையைத் தரமாட்டா. பிறவாப் பெற்றியை நிச்சயமாகத் தர

வல்லதல்ல என்பது கருத்தாம். ஞானம் ஒன்றே பரகதியைத் தரவல்லது. அந்த ஞான உருவாகிய செவ்வேளை எவ்வேளை யுந் தியானித்தலால் ஞானத்தைப் பெற்று, பெற்ற ஞானத் தால் அப் பரம் பொருளாகிய ஞான பதத்தைப் பெற வேண்டும்.

பத்திநெறி நிலைநின்றும் நவகண்ட பூமிப்
பரப்பைவல மாக வந்தும்
பரவையிடை மூழ்கியும் நதிகளிடை மூழ்கியும்
பசிதாக மின்றி எழுநா
மத்தியிடை நின்றும் உதிர் சருகுபுனல் வாயுவினை
வன்பசி தனக் கடைத்தும்
மௌனத் திருந்தும் உயர் மலைநுழைவு புக்கியும்
மன்னுதச நாடி முற்றும்
சுத்திசெய் தும்மூல ப்ராணனோ டங்கியைச்
சோமவட் டத்தடைத்தும்
சொல்லரிய அமுதுண்டும் அற்பவுடல் கற்பங்கள்
தோறும்நிலை நிற்கவீறு
சித்திசெய் துஞ்ஞான மலது கதிகூடுமோ
சித்தாந்த முத்திமுதலே
சிரகிரி விளங்கவரு தக்ஷிணா மூர்த்தியே
சின்மயா னந்தகுருவே. —தாயுமானர்.

ஆதலால் ஜீவான்மாவாகிய வள்ளிபிராட்டியார் செய்த மேற்கூறிய தினைக்காவலின் பயனாகத் தோன்றிய ஞான மாகிய தனத்திற்கு ஞானபண்டிதன் இனியனாக இருக் கின்றான்.

இக்கு முல்லையுடன் பற்றாக்கை:—

இக்கு-கரும்பு. மன்மதனுடைய வில்; முல்லை-மன்மத னுடைய ஐங்கணைகளில் ஒன்று. பற்றுக்கை—அம்புக்கூடு. பற்று ஆக்கை எனப் பிரித்துப் பொருள் கொள்வாருமுளர்.

வேளும் படவிழியால் செற்றார்க்கு இளியவன்:—

வேள்—விருப்பத்தை யுண்டாக்குபவன்; மன்மதன். விருப் பத்தை விளைக்கும் மதனனையும் அவன் வில் முதலியவற்றை

யும் ஞானவிழியால் அழித்த ஞானபரிபூரணர்க்கு ஞானபண்டி தன் இனியனுக இருக்கின்றுன் என்ற கருத்து சிந்தித்து மகிழத் தக்கது.

### கருத்துரை

ஞானம்பிகையாகிய வள்ளிக்கினியனுகிய முருக வேள் காமாரியாகிய கண்ணுதற் கடவுளுக்கும் இனிய னுகி தேவலோக சிகாமணியாக விளங்குகின்றனன்.

## 59

பொங்கார வேலையில் வேலைவிட் டோனருள் போலுதவ
எங்கா யினும்வரும் ஏற்பவர்க் கிட்ட திடாமல் வைத்த
வங்கா ரமுமுங்கள் சிங்கார விடு மடந்தையருஞ்
சங்காத மோகெடு வீருயிர் போமத் தனிவழிக்கே.

### பதவுரை

கெடுவீர் = நல்வழியிற் செல்லாமல் அல்வழியிற் சென்று கேடடையும் மனிதர்களே! பொங்கு ஆர வேலையில் = மிகுந்து ஒலிக்கும் சமுத்திரத்தில், வேலை விட்டோன் அருள்போல் = வேலா யுதத்தை விடுத்தருளிய முருகப் பெருமானுடைய திருவருளைப் போல, ஏற்பவர்க்கு இட்டது = யாசிக்கும் வறியாருக்கு வழங்கிய பலன், உதவ எங்கு ஆயினும்வரும் = தப்பாமல் உதவும்பொருட்டு எவ்விடத்திலாயினும் உங்களை நாடிவரும்; இடாமல் வைத்த = அவ்வாறு யாசிப்பவர்க்குத் தருமஞ் செய்யாமல் அழுத்தமாகப் பெட்டியில் பூட்டி வைத்திருந்த, உங்கள் வங்காரமும் = உங்க ளுடைய பொன்னும், சிங்கார வீடும் = அழகிய வீடும், மடந்தை யரும் = பெண்களும், உயிர் போம் அத் தனிவழிக்கு = உயிர் போகின்ற அந்தத் தனிமையான வழிக்கு, சங்காதமோ = துணை யாகுமோ?

### விரிவுரை

பொங்கார வேலை:—

ஆரம்—முத்து; முத்துக்களையுடைய கடல் எனினும் பொருந்தும்.

**வேலை விட்டோன்:—**

சூரபன்மன் இறுதியில் கடலுக்குள் ஒளிந்தனன்; முருகக் கடவுள் வேலாயுதத்தை விடுத்தருளினர். அவ் வேற்படை கடலுக்கு அருகில் சென்றவுடன் கடல் வற்றி வறண்டு விட்டது.

"வேலைவற்றி வறண்டு சுறீல் சுறீலென
மாலைவெற்பு மிடிந்து திடீல் திடீலென
மேன்மைபெற்ற சனங்கள் ஐயா ஐயாவென இசைகள்கூற
வேலெடுத்து நடந்த திவாகராசல" —திருப்புகழ்.

"திரைக்கடலை யுடைத்துநிறை புனற்கடிது குடித்துடைய
முடைப்படைய அடைத்துதிர நிறைத்துவிளையாடும்"
—வேல்வகுப்பு.

**அருள்போல்:—**

அடியார்கள் எங்கும் எந்த சமயத்திலும் என்ன இடருற்ற போதும் நினைப்பார்களாயின், அங்கு அந்த சமயத்தில் அறுமுக வள்ளலின் அருள் வந்து துணை செய்யும். ஒருவன் ஒரு கல்லை வானத்தில் விட்டெறிந்தால் அக்கல் எப்படித் தவருமல் நிலத்தில் வந்து விழுமோ அப்படி முருகனருளும் அன்பர்க்குத் தவருமல் முன்னின்றருளும்.

வல்லா னொருவன் கைம்முயன் றெறியினும்
மாட்டா வொருவன் வாளா எறியினும்
நிலத்தின் விழாஅக் கல்லேபோல்
நலத்தின் வழார்நின் நாமம் நவின்றாரே. —பட்டினத்தடிகள்.

முருகனை வழிபடுவோர் இடர் தீர்ந்து எல்லா நலன்களை யும் அப்பெருமானருளால் எய்துவர்.

**எங்காயினும் வரும் ஏற்பவர்க்கிட்டது:—**

"கைத்துண்டாம்போதே கரவாது அறஞ் செய்மின்" என்ற அறிவுரையின்படி, பொருளுள்ளவர் உள்ளபோதே வறிஞருக்கு முடிந்த அளவு ஒல்லும் வகையால் உதவி செய்ய வேண்டும். பசித்தவர்க்கு அன்புடன் இட்டவை மீண்டும்

திரும்ப இட்டவனிடம் ஒன்றுக்கு ஆயிரமாக வந்து சேரும். உழவன் வயலிற் கொண்டுபோய் இட்ட நெல் ஒன்றுக்கு நூருகப் பெருகி வீடு தேடி வருகின்றதல்லவா? தான் செய்த தருமமும் அங்ஙனமே ஒன்றுக்கு ஆயிரமாகத் தான் எங்கு போய்ப் பிறந்தாலும் தேடிக்கொண்டு வரும். வெளிநாடுகளாகிய மலாய், ஆப்ரிகா முதலிய இடங்களுக்குச் சென்று பணந் தேடின ஒருவன் அப்பணங்களை அங்குள்ள பொருள் பாதுகாப்பு நிலையங்களில் (Banks) போட்டு (Draft) பொருட் சீட்டு பெற்றுக்கொண்டு இந்தியா வந்து அதை மாற்றிக் கொள்வான்; அப்படிக்கின்றி அங்கு தேடிய பொருளை அங்கேயே போட்டுவிட்டு வரமாட்டான்; அப்படி வந்தால் அவனுடைய பாடு பயனற்றதாகும். அதுபோல் இப் பிறப்பில் தேடிய பொருள்களை ஏழைகள் வயிறு என்ற பாங்கியில் போட்டு புண்ணியமென்ற உண்டியல் (Draft) பெற்றுக் கொண்டால் அது மறுபிறப்பில் வந்து உதவும். அங்ஙனஞ் செய்யாமல் அரும் பாடுபட்டு ஈட்டிய செம்பொருளை இரும்புப் பெட்டியில் வைத்துப் பூட்டி ஒரு சிறிதும் அறஞ் செய்யாது மாண்டுபோகின்ற மதியிலிகட்கு அப் பொருள் அடுத்த பிறவியில் வந்து சேருமா? இதனைச் சற்று சிந்தித்துப் பார்த்தால் அறஞ்செய்ய யாருக்குத்தான் எண்ணந் தோன்ருது? அன்பர்கள் சற்று உய்த்துணர்க. 'இல்லை, எங்கள் மனைவி மக்களுக்கு இப்பொருள் பயன்படட்டுமே' என்று கூறலாம்; மறு பிறப்பெடுத்த ஒருவனுக்கு இவர்கள் மனைவி மக்களாவாரா? அந்தப் பிறப்புக்கு வருகின்ற மனைவி மக்களைக் காப்பாற்றவும் அவர்கள் சுகப்படவும் தானே அப்போது முயற்சிப்பான்? உதாரணமாக:—சாத்தப் பிள்ளை என்ற ஒருவன் பத்து லட்சம் பொன் சம்பாதித்தான்; ஒரு காசும் அறஞ்செய்யாது தன் மனைவி மக்களுக்கு என்று வைத்துவிட்டு இறந்தான். இறந்த சாத்தப்பிள்ளை வேறு ஊரில் சுப்பையா முதலியாராகப் பிறந்தான். பிறந்த அவன் முற்பிறப்பின் மனைவியிடம் வந்து "நீ என் மனைவி; இவர்கள் என் புதல்வர்கள்; இந்த வீடும் மாடும் நிலமும் என்னுடையன" என்று கூறுவானேயாஞல் அவனுக்கு என்ன கிடைக்

கும்! சிந்தியுங்கள். தனது முற்பிறப்பின் வீட்டுத் திண்ணையி லாவது இருக்க முடியுமா?

ஆதலால், அடுத்த பிறப்புக்கு அல்லது புண்ணிய உலகத் திற்குத் தன் பொருள் உடன் வரவேண்டுமானுல் வறியார்க்கு வழங்க வேண்டும். ஏழைகட்குக் கொடுத்த பொருள் தன் னுடைய பொருள்; இறை வழிபாடு செய்த நேரம் தன்னுடைய நேரம். இடாது வைத்த பொருளும் இறைவழிபாடல்லாத பிறவகையில் கழிந்த நேரமும் நிச்சயமாகத் தன்னுடையவாக மாட்டா.

''கெடுவாய் மனனே கதிகேள் கரவா
திடுவாய் வடிவே லிறைதாள் நினைவாய்''

என்ருர் அநுபூதியிலும்.

இளமையும் செல்வமும் யாக்கையும் நிலையா
உளநாள் வரையாது ஒல்லுவது ஒழியாது
செல்லும் தேயத்துக் குறுதுணை தேடுமின்.

—இளங்கோவடிகள்.

இடாது வைத்த......தனி வழிக்கே:—

அவ்வாறு ஏற்பவருக்கு இம்மியளவேனும் இடாது இறுகப் பிடித்து வைத்த பொருளும், பொருளைச் சேமித்து வைத்த வீடும், வீட்டிற்குரிய மனைவியும் உயிர் பிரிந்து ஏகுகின்ற தனி வழிக்குத் துணையாகுமோ? ஒருபோதும் ஆகாது.

இல்லும் பொருளும் இருந்த மனையளவே
சொல்லும் அயலார் துடிப்பளவே—நல்ல
கிளைகுளத்து நீரளவே கிட்டியே நெஞ்சே
வளைகுளத் தீசனையே வாழ்த்து.

—ஐயடிகள் காடவர்கோன்.

அத்தமும் வாழ்வு மகத்துமட் டேவிழி யம்பொழுக
மெத்திய மாதரும் வீதிமட்டே விம்மிவிம்மி இரு
கைத்தலை மேல்வைத்தழு மைந்தருஞ்சுடு காடுமட்டே
பற்றித் தொடரு மிருவினைப் புண்ணிய பாவமுமே.

—பட்டினத்தடிகள்.

ஆருயிர்க்கு உற்ற துணைபோல் இருந்த உற்ருர் உறவினர் நண்பர் மனைவி மக்கள் ஆகிய அனைவரும் கைவிட்டுவிடுவர்; உயிர் ஒன்றே நமனுடன் தொடரும். ஒருவரும் தொடர்ந்துவர ஒருப்படார். அதனல் தனி வழி என்றனர்.

உற்ருர் ஆருளரோ உயிர்கொண்டு போம்பொழுது
குற்ருலத்துறை கூத்தனல்லால் நமக்கு
உற்ருர் ஆருளரோ. —அப்பர்.

தனிவழி துணைவழியாக வேண்டுமானுல் அறஞ் செய்தல் வேண்டும். அறஞ் செய்யாத அவலர்கள் எல்லாவற்றையும் இங்கேயே வைத்துவிட்டு ஏமாந்து உடம்பினின்றும் புறப் பட்டுத் தனியே செல்வர். அறஞ் செய்தோர் அறப்பயனுகிய அளவற்ற புண்ணியப் பேற்றுடன் மிக்க மகிழ்ச்சியுடன் செல்லுவர்.

உலகில் பணத்துடனே அல்லது ஆட்களுடனே புறப் பட்டு யாத்திரை புரிபவர் மகிழ்ச்சியுடனும் இன்பத்துடனும் இருப்பர். பணமும் ஆளுமின்றித் தனியே யாத்திரை புரிபவர் படும் அல்லல் பகருந் தரமன்று.

ஆதலால் பாடுபட்டுத் தேடிப் பணத்தை ஆழப் புதைத்து வைத்து அழியாமல் பயனுடைய நல்லறம் பல புரிந்து உலகம் இன்புறுவதாக.

கருத்துரை

உலகியலீர்! அறஞ்செய்யாத பொருளும் போகமும் உயிர் பிரிந்தேகுங்கால் துணையாக மாட்டா. முருகனருள் போல் தவருது எங்காயினும் வந்துதவுவது ஏற்பவர்க் கிட்டதே யாதலின் அறஞ்செய்து உய்மின்.

**60**

**சிந்திக்கி லேனின்று சேவிக்கி லேன்றண்டைச் சிற்றடியை**
**வந்திக்கி லேனென்றும் வாழ்த்துகி லேன் மயில் வாகனனைச்**
**சந்திக்கி லேன்பொய்யை நிந்திக்கிலேனுண்மை சாதிக்கிலேன்**
**புந்திக் கிலேசமும் காயக் கிலேசமும் போக்குதற்கே.**

## பதவுரை

புந்தி கிலேசமும் = மனத்தின் துக்கங்களையும், காயகிலேச மும்=உடம்பின் துக்கங்களையும், போக்குதற்கு=அறவே அகற்று தற்பொருட்டு, மயில்வாகனனை = மயிலை வாகனமாக வுடைய முருகப் பெருமானை, சிந்திக்கிலேன்=நினைக்கின்றேனில்லை, நின்று சேவிக்கிலேன் = அவருடைய சந்நிதியில் நின்று தெரிசிக்கின்றே னில்லை, தண்டை சிற்றடியை வந்திக்கிலேன் = தண்டையை யணிந்த சிறிய திருவடியை வணங்குகின்றேனில்லை, ஒன்றும் வாழ்த்துகிலேன்=அவருடைய பெருமை பலவற்றுள் ஒன்றையா வது சொல்லி வாழ்த்துகின்றேனில்லை, சந்திக்கிலேன்=அப்பரமபதி யைக் கூடுகின்றேனில்லை, பொய்யை நிந்திக்கிலேன்= பொய்ம்மையை இகழ்ந்து நீக்கினேனில்லை, உண்மை சாதிக் கிலேன்=மெய்ம்மை இதுவே என்று உலகமுணர நிலைநிறுத்தினே னில்லை.

## விரிவுரை

**சிந்திக்கிலேன்:—**

"என்று நீ அன்று நான்" என்ற அருமை வாக்கால் இறைவனைப் போல் ஆன்மாக்களும் அநாதி நித்தியம்; ஆனால் இறைவன் பிறப்பிறப்பில்லாதவன்; ஆன்மாக்கள் யோனிவாய் தோறும் பிறந்திறந்துழலுந் தன்மையன. இங்ஙனம் பிறந்த பிறப்புக்கள் எண்ணில்லாதன.

"ஊரனந்தம் பெற்ற பேரனந்தஞ் சுற்றும் உறவனந்தம்
வினையினால்
உடலனந்தஞ் செயும் வினையனந்தங் கருத்தோ அனந்தம்"

பல்வேறு பிறப்பெடுப்பதற்குக் காரணம் பல்வேறு நினைவுகளேயாம். "மனத்தி லெத்தனை நினைவு......அதனால் விதிகரம் ஒழியாமல் வகுத்த தெத்தனை" என்கின்றார், அருணகிரியார் பிறிதோரிடத்தில். எண்ணில்லாத நினைவு கள்; அதனால் எண்ணில்லாத பிறப்புக்கள். பிறப்புக்களைத் தவிர்க்கவேண்டுமானால் சிந்தனையைக் குறைக்க வேண்டும்; "மனமே! நீ ஒன்றையும் நினையாதே" என்று கட்டளையிட்

டால் அது கேளாது; அதிகமாக நினைக்க ஆரம்பித்துவிடும். பலப்பலவற்றை நினைத்துப் புண்படும் மனதினிடம் அந் நினைவுகளையெல்லாம் அகற்ற இறைவனுடைய சிந்தனையை உண்டுபண்ணிவிட்டால், தூங்கினவன் கைப்பொருள் தானே நழுவி விடுவதுபோல் பிற நினைவுகள் தானே கழன்று விடும். இதுவே பிறவி யறுவதற்குச் சிறந்த வழி. இறைவனை இடையறுது சிந்திக்க வேண்டும். இறைவனைச் சிந்திக்கச் சிந்திக்க ஏனைய சிந்தனைகள் நீங்கி, ஏனைய சிந்தனைகளால் விளையும் தீவினைகளும், அவ்வினைகளால் விளையும் துன்பங்களும் நீங்கி, பேரின்ப ஊற்றெடுக்கும். அன்பர்கள் உய்த்துணர்க. அதனாலன்றோ அவிநாசித் திருப்புகழில் நம் சுவாமிகள், ''நினையே தினம் நினைக்கவுந் தருவாய்'' என்று அருளிச் செய்தார். ''சிந்தனை நின்றனக்காக்கி'' என்றார் மணிவாசகப் பெருந்தகையாரும்.

நின்று சேவிக்கிலேன்:—

எம்பெருமான் திருக்கோயிலில் இறைவன் திருமுன் நின்று சேவித்தால் எல்லா வினைகளும் விலகும். பலகோடி தீமைகளைப் புரிந்த சூரபன்மன் திருவேலிறைவன் திருமுன் உற்ற நல்வினை வயத்தால் தூயவனாகிப் பெறுதற்கரிய பெரும்பேறு பெற்றான்.

தீயவை புரிந்தா ரேனுங் குமரவேள் திருமுனுற்றால்
தூயவ ராகிமேலைத் தொல்கதி யடைவ ரென்கை
ஆயவும் வேண்டுங் கொல்லோ அடுசமரிந் நாட்செய்த
மாயையின் மகனு மன்றோ வரம்பிலா வருள்பெற்றுய்ந்தான்.

ஆண்டவனுடைய சந்நிதிக்குச் சென்றால் சிறிது நேரங் கூட நிற்பதற்கும் சோம்பலடைகின்றனர்; சிறிய சிறிய தொகை கைமாற்று வாங்குவதற்கு நெடுநேரம் நிற்கின்றனர். பஸ் ஸ்டாண்டில் பஸ்ஸை ஒரு மணி இருமணி நேரம் எதிர் பார்த்து நிற்கின்றனர். பெருமான் திருவீதி பவனி வருங்கால் அவரைச் சேவிக்கவேண்டு மென்று ஐந்து நிமிஷங்கூட எதிர்நோக்கி நிற்பதில்லை.

முருகப்பெருமானுடைய சந்நிதியில் மூவருந்தேவரும் நின்று தாழ்கின்ருர்கள் எனின், நாம் நின்று தாழ வேண்டாமா? அவருடைய திருமுன் நின்று தாழ்பவரை உலகம் நின்று தாழும் என்பதில் என்ன சந்தேகம்?

''இதழ்பொதி யவிழ்ந்த தாமரையின்
மணவறை புகுந்த நான்முகனும்
எறிதிரை யலம்பு பாலுததி நஞ்சராமேல்
இருவிழிது யின்ற நாரணனும்
உமைமருவு சந்த்ர சேகரனும்
இமையவர் வணங்கு வாசவனும் நின்றுதாழும்
முதல்வ'' —திருப்புகழ்.

**தண்டைச் சிற்றடியை வந்திக்கிலேன்:—**

வீரர்கள் காலில் தண்டையணிவது வழக்கம்; முருகக் கடவுள் வீரவீரவீராதிவீரப் பெருமாளாதலால் அழகிய மணித்தண்டையணிந்திருக்கின்றனர்.

'' ஃ ஃ ஃ ஃ அணிமணித் தண்டையார்க்கும்
செழுமல ரடியுங்கண்டான் அவன் தவஞ் செப்பற் பாற்ரோ''
—கந்தபுராணம்.

இளம்பூரணனுதலின் சிற்றடி என்றனர். ''ரட்சை தரு சிற்றடி'' என்ருர் பிறிதோரிடத்தில். உலகங்களை யெல்லாம் காத்தருள் புரிகின்ற திருவடியை உடம்பால் வணங்குதல் வேண்டும்.

**ஒன்றும் வாழ்த்துகிலேன்:—**

இறைவனுடைய அருட்குணங்கள் பலவற்றுள் ஒன்றை யாவது கூறி வாயார வாழ்த்துதல் வேண்டும். இறைவனை வாழ்த்துவதற்காகவே வாயைக் கொடுத்திருக்கின்ருர்.

''வாழ்த்த வாயும் நினைக்க மடநெஞ்சும்
தாழ்த்த சென்னியுந் தந்த தலைவனை''

''வணங்கத் தலைவைத்து வார்கழல்வாய் வாழ்த்தவைத்து
இணங்கத்தன் சீரடியார் கூட்டமும்வைத் தெம்பெருமான்''

இறைவனை மனத்தால் சிந்திக்கவேண்டும். காயத்தால் வந்திக்கவேண்டும். வாக்கால் வாழ்த்தவேண்டும். மனத்தால் செய்த பாவங்கள் சிந்திப்பதால் நீங்கும். காயத்தால் செய்த பாவங்கள் வந்திப்பதால் நீங்கும். வாக்கால் செய்த பாவங்கள் வாழ்த்துவதால் நீங்கும்.

மனத்தால் செய்யும் வினைகள்:—பொறாமை, ஆசை, பகை, கோபம் முதலியன.

காயத்தால் செய்யும் வினைகள்:—பிறன்மனை சேரல், களவுபுரிதல், கொலை, புலை முதலியன.

வாக்கால் செய்யும் வினைகள்:—பொய், புறங்கூறல், தீச்சொல் முதலியன.

இவற்றையே, "சிந்திக்கிலேன், வந்திக்கிலேன், வாழ்த்துகிலேன்" என்று கூறுமாறு காண்க.

**மயில்வாகனனைச் சந்திக்கிலேன்:—**

மயில்வாகனனைச் சந்தித்தவருக்கு இயமனுடைய சந்திப்பு உண்டாகமாட்டாது; மயில்வாகனனைச் சந்தித்தவர்க்கு மீண்டுங் கருச்சந்திப்பு உண்டாகாது; ஆதலால் இறப்பும் பிறப்பும் எய்தார்; நறுமலர்களுடன் உள்ளம் உருகி மறை முறைப்படி சந்திக்கவேண்டும்.

"இந்தச்சடமுட னுயிர் நிலைபெற நளி
னம்பொற் கழலிணைகளில் மரு மலர்கொடு
என்சித்தமுமன முருகி நல்சுருதியின் முறையோடே
சந்தித்து"
—திருப்புகழ்.

**பொய்யை நிந்திக்கிலேன்:—**

நீர்க்குமிழிபோல் தோன்றி மறையும் நிலையில்லாத உலகவாழ்வை நிந்தித்து ஒழிக்கின்றேனில்லை என்பது இதன் கருத்து.

'குடை நிழலிருந்து குஞ்சரமூர்ந்தோர் நடைமெலிந்து' ஊருராய் நண்ணுவதும், ஏழ்நிலை மாடம் கழுதை மேய்கின்ற பாழ்நிலமாதலும், செல்வத்தின் எண்ணிக்கை தெரியாத

அளவு நிதிபடைத்திருந்தோர் செல்லாக்காசுக்கும் வழியின்றி மல்லாக்கப்படுத்து ஏங்குதலுங் கண்கூடு. ஆதலினுல் இந்த மாய வாழ்வை சதமென்று எண்ணி இறுமாந்து இறையை மறந்து, இரையை விரும்பி வறிதே யழிதல் மதியுடைமை யாகாது. "வாழ்வாவது மாயம் மண்ணுவது திண்ணம்" என்பதும் உற்று உய்த்துணர்தற்பாலது.

இனி உலகில் இன்பம்போல் காணப்படும் அத்தனையுந் துன்பமே. செல்வம், மனைவி, மக்கள், உடம்பு ஆகியவற்ருல் இன்பம் இன்பம் என்று ஏமாந்து நிற்கின்றனர். துன்பமானது இன்பம் போல் பொய்யாகக் காட்சி தருகின்றது. கானல் நீர் போலென்றறிக. ஆதலினுல் உலகவாழ்வைப் பொய் யென்று நிந்தித்து மெய்வாழ்வைப் பெறுவதற்கு ஒவ்வொரு கணமும் முயற்சி செய்யவேண்டும்.

**உண்மை சாதிக்கிலேன்:—**

இறைவன் திருவடிப்பேறு ஒன்றே உண்மையான இன்பம்; இன்ப நிலையிதுவே என்று உலகறிய உரைத்து நிலைநிறுத்த வேண்டும்.

தண்ணமுத மதி குளிர்ந்த கிரணம் வீசத்
தடம் பொழிற்பூ மணம்வீசத் தென்றல்வீச
எண்ணமுதப் பளிங்குநிலா முற்றத் தேஇன்
னிசை வீசத் தண்பனிநீ ரெடுத்துவீசப்
பெண்ணமுத மனையவர் விண்ணமுதமூட்டப்
பிறக்கின்ற சுகமனைத்தும் பிற்பட்டோடக்
கண்ணமுதத் துடம்புயிர் மற்றனைத்து மின்பங்
கலந்துகொளத் தருங்கருணைக் கடவுள் தேவே.

—இராமலிங்க அடிகள்.



**புந்திக்கிலேசம்:—**

புந்திக்கிலேசம்-மனத்திலுண்டாகுந் துன்பங்கள்; அவை யாவன: பயம், திகைப்பு, சுழற்சி, வருத்தம் முதலியன.

செவ்வேளைச் சிந்திப்பார்க்கு பயம் உண்டாகாது. கூற்றுவனேடும் எதிர்க்கும் மனேதைரியம் உண்டாகும்.

தாரா கணமெனுந் தாய்மா ரறுவர் தருமுலைப்பால்
ஆரா துமைமுலைப் பாலுண்ட பால னரையிற் கட்டுஞ்
சீராவுங் கையிற் சிறுவாளும் வேலுமென் சிந்தையவே
வாரா தகலந்த காவந்த போதுயிர் வாங்குவனே.

—அருணகிரிநாதர்.

காலா என்மீதினில் வந்தால் நினையுங் கடாவையுங்கைச்
சூலா யுதத்தையு நேரே பிளந்து துணிக்கும்படி
வேலா யுதன்வரு வானவன் முன்னுக்குன் வீரியமங்
கேலா தடாதப்பிப் போடா யிவிடம்விட் டெங்கிட்டுமே.

—நல்லவீரப்பிள்ளை.

காயக்கிலேசம்:—

காயக்கிலேசமாவது உடம்பிற்கு வரும் நோய்; வெட்டுக் காயம், வெயில், மழை முதலியவற்றால் வருந்துன்பம். முருகனை வணங்குகின்ற அடியார்க்குப் பிணி முதலிய துன்பங்கள் உண்டாகா.

“முருகா எனவுனை யோதுந் தவத்தினர் மூதுலகில்
அருகாத செல்வ மடைவர் வியாதி யடைந்து நையார்”

—சிதம்பரசுவாமிகள்

சிந்திப்பதால் மனக்கிலேசமும், வணங்குவதால் காயக்கிலேசமுந் தொலையும்.

கருத்துரை

மனத்திலும் உடம்பிலும் உண்டாகுந் துன்பங்கள் தொலைய முருகனைச் சிந்தித்து வாழ்த்தி வந்திக்க வேண்டும்.

## 61

வரையற் றவுணர் சிரமற்று வாரிதி வற்றச்செற்ற
புரையற்ற வேலவன் போதித்த வா! பஞ்ச பூதமுமற்
றுரையற் றுணர்வற் றுயிரற் றுபாயமற்றுக்
கரையற் றிருளற் றெனதற் றிருக்குமக் காட்சியதே.

## பதவுரை

பஞ்சபூதமும் அற்று=மண் நீர் தீ காற்று வெளி ஆகிய ஐந்து பூதங்களும் நீங்கி, உரை அற்று=சொல்லற்று, உணர்வு அற்று= சுட்டியறிகின்ற அறிவும் நீங்கி, உடல் அற்று=உடம்புடன் தொடக்குண்டுறையும் அலக்கணும் அறவே யொழிந்து, உயிர் அற்று=உயிரின் தன்மையும் நீங்கி, உபாயம் அற்று=சோபானங்க ளாகிய சாதனங்களும் நீங்கி, கரை அற்று=முடிவும் அற்று, இருள் அற்று=மூலமலமாகிய ஆணவ இருளும் தேய்ந்து, எனது அற்று=எனது என்ற புறப்பற்றும் அகன்று, இருக்கும் அக் காட்சியது=மனோலய ஆனந்த பரிபூரண சமாதி நிலையில் இருக் கும் அந்த அருட்காட்சியானது, வரை அற்று=கிரௌஞ்ச மலை பிளந்தொழியவும், அவுணர் சிரம் அற்று=சூராதியவுணர்களின் தலைகள் அற்று உருளவும், வாரிதி வற்ற செற்ற=கடல் வற்றவும் அழித்த, புரை அற்ற வேலவன்=குற்றமில்லாத ஞானசக்தியை யுடைய முருகக் கடவுள், போதித்தவா=அடியேனுக்கு உபதேசித் தது என்ன வியப்பு!

## விரிவுரை

**வரையற்று:—**

தாரகாசுரனுக்கு அநுகூலமாக இருந்து பலப்பல மாயங்களைப் புரிந்து, இமையவருக்கும் இருடியருக்கும் இடுக்கண் இழைத்து வந்தவனும், கிரௌஞ்சம் என்ற பறவை யுருவுடன் மலைவடிவாக நின்றவனும், அகத்திய முனிவரால் சபிக்கப் பெற்றவனும் ஆகிய கிரௌஞ்சன் இலக்கத் தொன்பான் வீரர்களையும் படைத் தலைவர்களையும் மயக்கி இடர் விளைத்தனன். அதனால் ஆறுமுகக்கடவுள் அம் மாயையில் வல்ல கிரௌஞ்ச வெற்பை வேலாயுதத்தால் பிளந்தழித்தனர்.

**அவுணர் சிரமற்று:—**

தாரகன் சிங்கமுகன் முதலிய அவுணர்களின் தலைகள் அற்று விழுமாறு வேற்படையை முருகவேள் விடுத்தருளினர்.

வாரிதி வற்றச் செற்ற:—

இறுதி நாளில் சூரபன்மன் கடலிற்போய் ஒளித்தனன்; அவனைத் தொடர்ந்து சென்ற வேலாயுதம் அக்கடலை வற்றச் செய்தது.

"வேலை வற்றி வறண்டு சுறீல் சுறீல் என" —திருப்புகழ்.

| | |
|---|---|
| கிரௌஞ்சமலை | — வினைத் தொகுதி |
| தாரகன் | — மாயாமலம் |
| சிங்கமுகன் | — கன்மமலம் |
| சூரபன்மன் | — ஆணவமலம் |
| கடல் | — பிறவித்துன்பம் |
| வேல் | — பதிஞானம் |

வேலவன் போதித்தவா:—

ஞானசக்திதரக் கடவுள் உபதேசித்ததை வியந்து பாராட்டுகின்றனர்; சுவாமிகள் இங்ஙனமே பலமுறை பாராட்டி மகிழ்கின்றனர்.

ஒளியில் விளைந்த உயர்ஞான பூதரத் துச்சியின்மேல்
அளியில் விளைந்தொ ராநந்தத் தேனை யநாதியிலே
வெளியில் விளைந்த வெறும்பாழைப் பெற்ற வெறுந்தனியைத்
தெளிய விளம்பியவா முகமாறுடைத் தேசிகனே.

"ஒருபூதரு மறியாத் தனிவீட்டில் உரையுணர்வற்
றிரு பூத வீட்டி லிராமலென்றான்"

"சொல்லுகைக் கில்லையென் றெல்லா மிழந்து சும்மாவிருக்கும்
எல்லையுட் செல்ல எனைவிட்டவா"

பஞ்சபூதமுமற்று:—

அவ்வாறு குமாரகுருபரன் உபதேசித்த உபதேசமானது ஐம்பெரும் பூதமும் அற்ற இடத்திலே காண்டற்குரியது.

தேனென்று பாகென் றுவமிக்கொணாமொழித் தெய்வவள்ளி
கோனன் றெனக்குப தேசித்த தொன்றுண்டு கூறவற்றோ
வானன்று காலன்று தீயன்று நீரன்று மண்ணுமன்று
தானன்று நானன் றசரீரியன்று சரீரியன்றே. —அலங்காரம்.

"பூதமுங் கரணமும் பொறிகளைம் புலனும்
பொருந்திய குணங்களோர் மூன்றும்
நாதமுங்கடந்த வெளியிலே" —பட்டினத்தடிகள்.

உரையற்று:—

சொல்லற்று நிற்கும் சுகபூரண நிலை; அறுமுகப்பெருமான் அருணகிரிநாதருக்கு அருளையில் குருமூர்த்தியாக வந்து, "சும்மா இரு; சொல்லற" என்று உபதேசித்தருளினர்.

"உரையவிழ வுணர்வவிழ வுயிரவிழ
வுளபடியை யுணருமவ ரநுபூதியானதுவும்" —வகுப்பு.

"உரையுணர்வு அற்று இரு" —அலங்காரம்.

"பேசா அநுபூதி பிறந்ததுவே" —அநுபூதி.

உணர்வற்று:—

சுட்டியறிகின்ற அறிவு. இந்த உணர்ச்சி நீங்கினலன்றி தடையற்ற ஞானம் உண்டாகாது.

உடலற்று உயிரற்று:—

உடம்போடிருக்கும்போதே உடம்பின் தொடக்கு நீங்கி விடவேண்டும். வாள் உறையில் தொடக்கின்றி இருப்பது போல். அவ்வாறு தேகபுத்தி நீங்கப்பெற்றவரை உடம்புக்கு வரும் இன்ப துன்பம் பற்ருது. உடலூழாக முடியும்.

சொன்னக் ரௌஞ்ச கிரியூ டுருவத் தொளைத்த வைவேல்
மன்ன கடம்பின் மலர்மாலை மார்பமௌ னத்தையுற்று
நின்னை யுணர்ந்துணர்ந் தெல்லா மொருங்கிய நிர்க்குணம்பூண்
டென்னை மறந்திருந் தேனிறந்தே விட்ட திவ்வுடம்பே.

—அலங்காரம்.

உபாயமுமற்று:—

இலட்சியத்தை யடையச் செய்யும் சாதனங்களும் நீங்க வேண்டும். சாத்தியம் வந்தபின் சாதனந் தானே நீங்கும். பிணஞ்சுட்டவுடன் சுடுகோல் அத்துடனே வெந்து நீருகுவதுபோல்.

கரையற்று:—

முடிவற்ற பூரணநிலை.

போக்கும் வரவு மிரவும் பகலும் புறம்பு முள்ளும்
வாக்கும் வடிவு முடிவுமில் லாதொன்று வந்துவந்து
தாக்கு மனோலயந் தானே தருமெனைத் தன்வசத்தே
ஆக்கு மறுமுகவா சொல்லொணுதிந்த ஆநந்தமே.

இருளற்று:—

ஆணவமலமாகிய இருள். இது இருளினும் வலிமை யுடையது. இருள் தன்னைக் காட்டி ஏனைய பொருள்களைக் காட்டாமல் மறைக்கும். ஆணவ இருள் தன்னையுங் காட்டா மல், ஏனைய பொருள்களையுங் காட்டாமல் மறைக்கும் விறலுடையது.

எனதற்று:—

எனது-புறப்பற்று; நான்–அகப்பற்று. நான் என்ற அகப் பற்று தொலையவேண்டுமானுல் முதலில் எனது என்ற புறப் பற்று தொலைய வேண்டும். ஒரு சப்பாத்திக் கள்ளியைச் சுற்றி தாழங்காடு இருக்கின்றது. சப்பாத்திக் கள்ளியை யழிக்க வேண்டுமாயின் தாழங்காட்டை யழிக்க வேண்டும். சப்பாத்திக்கள்ளிபோல் நான்; தாழங்காட்டைப்போல் எனது. எனது என்ற புறப்பற்று தொலைந்த பின்னரேயே நான் என்ற அகப்பற்று தொலைய வேண்டும்.

‘‘எனதி யானும் வேருகி எவரும் யாதும் யானுகும்
இதயபாவ னுதீதம் அருள்வாயே’’
—திருப்புகழ்.

‘‘யான்என தென்னுஞ் செருக்கறுப்பான் வானேர்க்
குயர்ந்த வுலகு புகும். —வள்ளுவர்.

கருத்துரை

ஞானவேலைத்தாங்கிய முருகக்கடவுள் அடியேனுக்கு உபதேசித்த காட்சி எல்லாமற என்னையிழந்த நலமாகும்.

## 62

ஆலுக் கணிகலம் வெண்டலை மாலை அகிலமுண்ட
மாலுக் கணிகலம் தண்ணந் துழாய் மயி லேறுமையன்
காலுக் கணிகலம் வானோர் முடியுங் கடம்புங் கையில்
வேலுக் கணிகலம் வேலையுஞ் சூரனும் மேருவுமே.

### பதவுரை

ஆலுக்கு அணிகலம்=சிவபெருமானுக்கு பூணாக விளங்குவது, வெண் தலை மாலை=வெண்மையான (பிரமதேவர்களின்) தலை மாலையாகும்; அகிலம் உண்ட மாலுக்கு அணிகலம்=உலகமெல்லாவற்றையும் விழுங்கின திருமாலுக்குப் பூணாக விளங்குவது, தண் அம் துழாய்=குளிர்ந்த அழகிய துளவ மாலையாகும்; மயில் ஏறும் ஐயன்=மயில் வாகனத்தின்மீது ஏறிவருகின்ற தனிப் பெருந் தலைவராகிய முருகப் பெருமானுடைய, காலுக்கு அணிகலம்= திருவடிக்குப் பூணாக விளங்குவன, வானோர் முடியும் கடம்பும்= தேவர்களின் மணி முடிகளும் அவர்கள் சூட்டும் கடப்பமலர் மாலையும் ஆகும்; கையில் வேலுக்கு அணிகலம்=அவருடைய திருக்கரத்திலுள்ள வேலாயுதத்திற்குப் பூணாக விளங்குவன, வேலையும் சூரனும்=கடலும், சூரபன்மனும், மேருவும்=மாமேரு மலையும் ஆகும்.

### விரிவுரை

ஆலுக்கு அணிகலம் வெண்டலைமாலை:—

ஆல்-கல்லாலமரம்; கல்லாலின் கீழ் சிவபெருமான் எழுந்தருளியிருப்பதனால் இடவாகு பெயராக ஆலுக்கு என்றனர். ஆலாகலவிடத்தை யுண்டதனால் ஆலன் என்று பேருண்டாயிற்றென்றும், அது ஆல் என்று குறுகிற்றென்றும் கூறுவாரும் உளர்.

பிரமன், "நானே உலகங்களையெல்லாம் படைக்கின்றேன்; படைப்புத் தொழிலுக்கு நானே தலைவன்" என்று தருக்குற்றனன். அதுகண்டு சிவபெருமான் வைரவரை ஏவி நடுத்தலையைக் கிள்ளி வரச்செய்து, ஏனோரும் அங்ஙனம் தருக்குறாதிருக்கும் பொருட்டு அதனை மார்பில் தரித்

தனர். அப்படி ஒவ்வொரு கற்பத்திலும் உண்டாகும் பிரமர்களின் தலைகளையெல்லாம் மாலையாகக் கோத்துத் தரித்தனர்.

நல்ல மலரின்மேல் நான்முகனார் தலை
ஒல்லை யரிந்த தென் றுந்தீபற
உகிரா லரிந்ததென் றுந்தீபற. —திருவுந்தியார்.

அதனால் படைத்தல் காத்தல் அழித்தல் ஆகிய முத்தொழிலுக்கும் முதல்வர் சிவபெருமானே என்பது தெற்றென விளங்கும். அயன் அரி அரன் என்ற மூவரும் முக்கட் பெருமான் திருவருளைத் தாங்கியே முத்தொழில்களையும் இயற்றுகின்றனர்.

"படைப்பானுங் காப்பானும் பார்க்கி லருணேசன்
படைப்பா னயனென்றல் பாவம்" —அருணகிரியந்தாதி.

அகிலமுண்ட மாலுக்கணிகலம் தண்ணந் துழாய்:—

உலகமுண்டவராதலால் திருமாலை "அகிலமுண்டமால்" என்றனர். அவருக்குப் பூண் துளவமாலை. பச்சை நிறமுடைய பகவான் பச்சையாகிய துளவமாலையை யணிந்துகொள்வது பொருந்துவதேயாம்; வில்வம் தட்பத்தைத் தருவது; துளவம் வெப்பத்தைத் தருவது. நெருப்பு வடிவாகிய சிவபெருமான் வில்வத்தையும், நீர் வடிவாகிய திருமால் துளவத்தையும் அணிவதன் அருமையை நுனித்துணர்க.

மயிலேறும் ஐயன்:—

மயில் பிரணவ மந்திரம்; மயில் ஆடும்போது உற்று நோக்குக. ஆடுகின்ற மயிலின் தலையில் சுழித்து பின்னே விரிந்ததோகையை வளைத்து காலில் வந்து ஓ என்று முடித்துக் கொள்க. அந்த ஓங்காரத்திற்கு நடுவே அருட்பெருஞ்சோதியாகிய ஆண்டவன் விற்றிருக்கின்றான்.

"ஆன தனிமந்த்ர ரூபநிலை கொண்ட
தாடுமயிலென்ப தறியேனே" —திருப்புகழ்.

ஐயன் என்பதில் அன் என்பது ஆண்பால் ஒருமை விகுதி; அது நீங்க ஐ என்ற பகுதி நிற்கின்றது. ஐ என்ப தற்கு இறைவன் என்பது பொருள். இறைவன் அகர எழுத் துப்போல் உலகத்தை இயக்குகின்றனன். கூர்த்த மெய்ஞ் ஞானத்தால் கொண்டுணர்வார் தங்கருத்தின் நோக்கரிய நோக்காக விளங்குபவன். ஆதலால் இறைவன் அகர உயிர் போன்றவன். அப்பாலைக்கப்பாலாக விளங்குபவன். ஆத லால் தூரத்திலுள்ள பொருளைச் சுட்டும் அகர உயிர் இறை; உயிர் இகர உயிர்; உலகம் யகர உயிர்மெய்; உலகம் நன்ருகக் காணப்படுவது; உயிர் சிறிது புலப்படுவது; இறை மிக நுணுக்கமாக உணர்ச்சியில் புலப்படுவது. ஐ என்ற எழுத் தைக் கவனியுங்கள். அதில் சுழி அகர எழுத்தையும், நடுப் பகுதி இகரத்தையும், கீழ்ப்பகுதி யகரத்தையும் தெரிவிக்கும். இகரத்தையும் யகரத்தையும் கீழ்ப்படுத்திக்கொண்டு அகரம் மேற்பட நிற்கின்றது. அதுபோல் பசுபாசத்திற்கும் இறைவன் பதியாக விளங்குகின்றனன். அதனுல் இறைவனுக்கு ஐ என்ற பேருண்டாயிற்று.

**காலுக்கணிகலம் வானோர் முடியுங் கடம்பும்:—**

முருகக்கடவுளின் திருவடிக்கு அணிகலம் தேவர்களின் திருமுடிகளும் கடப்பமலர் மாலையுமாம்.

குமாரக்கடவுளைச் சேவிக்கும் பொருட்டு மாலயனுதி வானவர்கள் கடப்பமலர் மாலையுடன் வருகின்றனர். முப்பத்து முக்கோடி தேவர்களாதலின் தனித்தனியே வணங்குதற்கு காலந் தாழ்க்குமென்று சேர்ந்தாப்போல வணங்குமாறு வீர வாகுதேவர் பணித்தலால் எல்லோரும் கரத்திலுள்ள கடப்ப மாலையை ஆண்டவன் திருவடியில் சூட்டி, வரிசையாக வீழ்ந்து வணங்குவர். அதனுல் ஆண்டவன் திருவடியில் கடப்பமாலையும் வானோர் மணிமகுட மாலையும் ஆபரணமாக விளங்குகின்றன. தேவர்கள் கூட்டமாகச் செல்லுங் காட்சியும் வரிசையாக மலர் மாலையிட்டு வணங்கும் மாட்சியும் அருண கிரிநாதருக்கு அகக் காட்சியில் புலனுகின்றன.

கையில் வேலுக்கணிகலம் வேலையும் சூரனும் மேருவுமே:—

முருகன் திருக்கரத்தில் அணிசெய்யும் வேலாயுதத்திற்கு அணிகலங்களாவன, கடலும் சூரனும் மேருவும் ஆம்.

சூரபன்மன் இறுதியில் கடலில் ஒளிந்தனன். வேலாயுதம் கடலை வற்றச் செய்தது. சூரனுகத்தைப் பிளந்து மேருகிரியைத் துளைப்படுத்தியது.

“அண்டங்க ளொருகோடி யாயினுங் குலகிரி
யநந்தமா யினுமேவினு
லடையவுரு விப்புறம் போவதல் லதுதங்க
லறியாது சூரனுடலைக்
கண்டம் படப்பொருது காலனுங் குலைவுறுங்
கடியகொலை புரியு மதுசெங்
கனகா சலத்தைக் கடந்துமுனை யிட்டுக்
கடுக்கின்ற துங்கநெடுவேல்” —வேல்விருத்தம்.

கடல் என்பது பிறவி. சூரன்—ஆணவமாம்; மேரு அகங்காரம். ஆக மூன்றையும் ஞானமாகிய வேல் வென்றது.

கருத்துரை

சிவமூர்த்திக்குப் பூண் தலைமாலை; திருமாலுக்குப் பூண் துளவம்; முருகவேளுக்குப் பூண் வானோர் முடியும் கடம்பும். வேலுக்குப் பூண் கடலும் சூரனும் மேருவுமாம்.

63

பாதித் திருவுருப் பச்சென் றவர்க்குத்தன் பாவனையைப்
போதித்த நாதனைப் போர்வே லனைச்சென்று போற்றியுய்யச்
சோதித்த மெய்யன்பு பொய்யோ அழுது தொழுதுருகிச்
சாதித்த புத்திவந் தெங்கே யெனக்கிங்ஙன் சந்தித்ததே.

பதவுரை

பாதி திருவுரு=தமது திருமேனியில் ஒரு பகுதி, பச்சென்றவர்க்கு=பச்சை நிறமாகவுடைய சிவபெருமானுக்கு, தன் பாவனை

யை=தனது தியான பாவனையை, போதித்த நாதனை=உபதேசித்த குருநாதனை, போர்வேலனை=போருக்குரிய வேலாயுதத்தையுடைய முருகக்கடவுளை, சென்று போற்றி உய்ய=அவர் சந்நிதியிற் போய் வணங்கி உய்வு பெற, சோதித்த மெய்யன்பு பொய்யோ=சோதனை செய்த உண்மையான அன்பு பொய்யாகுமோ? அழுது தொழுது உருகி=அழுது தொழுது உள்ளம் உருகி, சாதித்த புத்தி வந்து= உறுதி செய்த அறிவானது வந்து, இங்கே எனக்கு இங்ஙன் சந்தித்தது=இவ்விடத்திலே அடியேனுக்கு எந்த விதமாக நேர்ந்தது.

## விரிவுரை

**பாதித் திருவுரு பச்சென்றவர்:—**

சிவபெருமான் திருவுருவிற் பாதி உமையம்மையாருடையது. மாதொரு கூறன்; வலப்பாகஞ் செம்பவளச் சோதியாகவும், இடப்பாகம் எழில்மிகு மரகதச் சோதியாகவும் உளது. உன்னுந்தொறும் உள்ளத்தை உருக்கி உவட்டாத உவகையைத் தரும் உருவமன்றோ எந்தைபிரான் எழிலுருவம்!

"குவளைக்கண்ணி கூறன் காண்க
அவளுந்தானு முடனே காண்க"

அக்கினி நன்கு கொழுந்துவிட்டெரியும்போது அன்பர்கள் கூர்ந்து நோக்குக. அவ் வனற்கொழுந்தின் நுனியில் பச்சை வர்ணம் பளபளவென்று மின்னி எழில் தர இலங்கும். அக் காட்சி இறைவன் திருவுருவை நினைவூட்டும்.

**தன் பாவனையை போதித்த நாதன்:—**

சிவபெருமானுக்கு செவ்வேட்பரமன், தனது பாவனையாகிய ஓம் என்ற பிரணவத்தை உபதேசித்தனர். தன் பாவனையானது பிரணவமந்திரம். அதன் உட்பொருள் முருகவேளேயாவர்.

"நாலந்த வேதத்தின் பொருளோனே
நானென்று மார்தட்டும் பெருமாளே"

அதனல் அவருக்கு 'சிவகுருநாதன்' என்ற திருநாமம் உண்டாயிற்று.

"அரிபிரமருக்கு முத லரியபரமர்க்குயரும்
அருமறை முடிப்பையுப தேசித்த தேசிகனும்"—வகுப்பு.

போர் வேலன்:—

வெல் என்ற முதனிலை நீண்டு வேல் என்று தொழிற் பெயராயிற்று. எல்லாவற்றையும் வெல்லுவது அறிவே யாதலின் வேல் என்பது அறிவு (ஞானம்) ஆகும். "ஞான பூரண சத்தி தரித்தருள் பெருமாளே" என்ருர் அருணகிரி நாதர்.

அறிவின் தன்மை அஞ்சாமையாகும்; அஞ்சாமையா வது வீரம்; மற்றும் அறிவின் தன்மை கூர்மை; பலவகை யான வில்லங்கங்களினின்று விடுதலையடையச் செய்வதும் அறிவேயாம். ஆழ்ந்திருப்பதும் வெற்றியைத் தருவதும் ஆணவமலத்தையும் வினைத்தொகுதியையும் அறவே யழிப் பதும் அறிவேயாம். இதனையே நக்கீரர் வகைப்படுத்திக் கூறுகின்ருர்.

வீரவேல் தாரைவேல் விண்ணோர் சிறைமீட்ட
தீரவேல் செவ்வேள் திருக்கைவேல்—வாரி
குளித்தவேல் கொற்றவேல் சூமார்புங் குன்றுந்
தொளைத்தவேல் உண்டே துணை.

காமம் குரோதம் லோபம் மோகம் முதலிய துர்க் குணங்களுடன் போராடுவதும் அறிவேயாதலின் வேலைப் 'போர்வேல்' என்றருளிச் செய்தார்.

அறிவு குறுகியிருத்தலாகாது; நீண்டிருத்தல் வேண்டும். ஆதலினல்தான் வேல் நீண்டிருக்கின்றது. "நெடு வேல்" என்று பாராட்டுவதைக் காண்க. அவ் வேலைப் பூசிப்பதா லும், உடம்பில் அணிவதாலும், பாடுவதாலும், பணிவ தாலும், அறியாமையை வென்று அறிவு நிரம்பப் பெற்று இன்புறலாம்.

சென்று போற்றியுய்ய சோதித்த மெய்யன்பு பொய்யோ:—

"முருகவேளுடைய திருமுன் சென்று போற்றி செய்து உய்வு பெற ஆய்ந்து வந்தடைந்த உண்மையான அன்பு பொய்யாகுமோ? ஆகமாட்டாது" என்றார். அது உண்மை யான அன்பு என்பதற்குச் சான்றுகள் கீழே கூறுமாறு காண்க.

அழுது தொழுது உருகி:—

"அன்பிற்கு முண்டோ அடைக்குந்தாழ் ஆர்வலர்
புன்கணீர் பூசல் தரும்"

என்ற பொய்யாமொழிப்படி அன்பு அதிகமுற்றதற்கு அடை யாளம் கண்ணீர் வருவது. அழுதால் ஆண்டவனை யடை யலாம். "அழுதாலுன்னைப் பெறலாமே" என்றார் மணிவாசகர்.

அடியார்களின் ஆனந்தக் கண்ணீரில் ஆண்டவ னுடைய திருவடி முழுகிக்கொண்டிருக்கின்றது; அவ்வன் புக்கண்ணீரே அவருக்கு மிக்க உவப்பைத் தருகின்றது.

"முருக சரவண மகளிர் அறுவர் முலை நுகரு மறு
முககுமர சரணமென அருள்பாடி யாடிமிக
மொழிகுழற அழுது தொழு துருகுமவர் விழியருவி
முழுகுவதும் வருகவென அறைகூவி யாளுவதும்"

—வகுப்பு.

"உருகுமடியவர் இருவினை யிருள்பொரும்
உதய தினகர"

என்ற அருமைத்திருவாக்கால் உள்ளம் உருகுகின்றவர் களின் உள்ளத்தில் இறைவன் திருவடியாகிய தாமரை மலரும். கல்லின்மேல் தாமரைப் பூ மலராது. அதுபோல் கல்மனத்தில் இறைவன் பாத தாமரை மலராது. ஆனபடி யால் கெட்டியாக உள்ள கல்போன்ற உள்ளத்தை உரு கச் செய்தால் பெருமானுடைய பாத கமலம் மலர அதனால் பெரும்பயனையடையலாம்,

"திணியான மனோசிலை மீதுன தாள்
அணியா ரரவிந்த மரும்புமதோ"

அருணகிரிநாத சுவாமிகள் அநுபூதியில், "அருட்குணங்கள் எட்டும் உடையவரே! மோனரும் வானவரும் பணியும் குரு நாதா! அடியேனுக்கு உலகில் வேறு ஒன்றும் வேண்டா; முருகா! குமரா! குகா! என்று கூறி உள்ளம் உருகும் செயலைத் தந்து உணர்ச்சியைத் தந்தருள்வீர்" என்று வேண்டுகின்றார்.

முருகன் குமரன் குகனென்று மொழிந்
துருகுஞ் செயல்தந் துணர்வென் றருள்வாய்
பொருபுங் கவரும் புவியும் பரவுங்
குருபுங் கவவெண் குணபஞ் சரனே.

புத்திவந் தெங்கே எனக்கிங்ஙன் சந்தித்ததே:—

"இத்தகைய அன்புருவமாகிய அறிவு எங்கே எப்படியோ எனக்குக் கிடைத்தது" என்று வியப்புறுகின்றார்.

## கருத்துரை

சிவகுருநாதனாகிய வேலாயுதக்கடவுளை அடியேன் போய் வழிபட்ட அன்பு பொய்யன்று; பண்டை செய்த நல்வினைப் பயனால் கிடைத்தது.

## 64

பட்டிக் கடாவில் வருமந்த காவுனைப் பாரறிய
வெட்டிப் புறங்கண் டலாதுவிடேன் வெய்ய சூரனைப்போய்
முட்டிப் பொருதசெவ் வேற்பெரு மாள்திரு முன்பு நின்றேன்
கட்டிப் புறப்பட டாசத்தி வாளென்றன் கையதுவே.

## பதவுரை

பட்டி கடாவில் வரும்=திருட்டுத்தனமுடைய எருமைக் கடாவின்மீது வருகின்ற, அந்தகா=இயமனே! பார் அறிய= உலகமுழுவதும் அறியும்படி, உன்னை வெட்டி புறம் கண்டு அலாது =உன்னைத் துண்டஞ் செய்து புறங்கொடுத்து ஓடுமாறு செய்வ

தல்லாமல், விடேன்=விடமாட்டேன்; வெய்ய சூரனை போய்=கொடுந் தொழில்களையே செய்து வெப்பத்துடன் கூடிய சூரபன் மனைச் சென்று, முட்டி பொருத=தாக்கிப் போர்செய்த, செவ் வேல்=சிவந்த வேலாயுதத்தையுடைய, பெருமாள்=முருகப்பெருமானது, திருமுன்பு நின்றேன்=சந்நிதியில் நின்றேன், கட்டி புறப்பட்டா=நீ உன்னுடைய விருதுகள் எல்லாவற்றையுங் கட்டிக் கொண்டு வெளிப்பட்டா, சத்திவாள் என்றன் கையது=சத்தியாகிய வாளாயுதம் எனது கையிலிருக்கின்றது.

## விரிவுரை

**பட்டிக் கடாவில் வரும் அந்தகா:—**

பட்டிமை—வஞ்சனை. ஈறுகெட்டு பட்டியென நின்றது. "பட்டிமாடான நான்" என்று சுவாமிகள் திருப்புகழிலும் கூறுகின்றனர். உடையவன் அறியா வண்ணம் வந்து கள்வன் உடைமையைக் கொண்டு போவதுபோல், ஒருவருமறியா வண்ணம் எருமைக்கிடாவும் வந்து உயிரைக் கொண்டு போவதால் 'பட்டிக்கடா' என்றார். உடையவன் நிலத்தில் வந்து கரவுத்தனமாகப் பயிரை மேயும் மாட்டைப் பட்டிமாடு என்று உலகம் உரைப்பதும் உய்த்துணர்க.

அந்தகன் என்பது இயமனுடைய பெயர்களில் ஒன்று. அந்தம்—முடிவு; முடிவைச் செய்பவன் ஆதலின் அந்தகன் எனப்பட்டனன். அந்தகன்-குருடன். கண்ணில்லாதவன் எனவும் பொருள்படும். குருடன் சந்தனமென்றும் சாணம் என்றும் தெரியாமல் மிதித்துக்கொள்வான். அதுபோல் இயமனும் நல்லோர் பொல்லோர் என்று அறியாமல் வந்து உயிரைப் பற்றுவான். புது மண மகன் என்றும் பாரான்; மணமகனைப் பிணமகனுகவும் செய்வான். ஒரு குடிக்கு ஒரு மகனென்றும் நினையான்.

**வெட்டிப் புறங்கண் டலாது விடேன்:—**

முருகனருள் பெற்றார் கூற்றுவனுக்கு ஒருபோதும் அஞ்சமாட்டார்கள். கூற்றுவன் முருகனடியாரைப் பற்றுவதற்கு ஒருவேளை வரினும் அவ்வடியார் அவனைத்

தாக்கிப் புறங்கொடுத்து ஓடப் புரிவர். "அஞ்சா நெஞ் சாக்கந் தரவல பெருமாள்" ஆதலின் அறுமுகனடியார்க்கு அச்சமில்லை. "அஞ்சுவது மில்லை. அஞ்ச வருவது மில்லை."

"அந்தகன் வருந்தினம் பிறகிட
ஃ ஃ ஃ ஃ
என்று நின் தெரிசனைப் படுவேனோ"

என்றார் திருப்புகழில்.

"வாராதகலந்தகா வந்த போதுயிர் வாங்குவனே" என்றார் பிறிதொரு அலங்காரத்திலும்.

"வேண்டா மடாகாலா வேலாயுதப் பெருமான்
ஆண்டு கொண்ட தென்னை யறியாயோ—தீண்டாதே
அப்புறத்தே போடா அறுமுகவன் கண்டக்கால்
தப்பாமற் கொல்வான் க்ஷணம்"

என்றார் மற்றொரு அடியார்.

"நாமர்க்குங் குடியல்லோம் நமனையஞ்சோம்" என்றார் அப்பமூர்த்திகள்.

"காலனையும் வென்றோம் கடுநரகங் கைகழன்றோம்
மேலை யிருவினையும் வேரறுத்தோம்—கோல
அரனார விந்தழிய வெந்தீயம் பெய்தான்
சரணார விந்தங்கள் சார்ந்து"

என்றார் காரைக்காலம்மையார்.

இறைவனை வழிபட்டு இறைமயமாக இலங்கும் அருளா ளர்க்கு அளக்க முடியாத அருளாற்றல் உண்டாகின்றது.

"பஞ்ச பாதக ராயினும் பாவமே
தஞ்ச மென்று சரிப்பவ ராயினும்
நஞ்ச யின்றவன் நாமமு ரைப்பரேல்
அஞ்சும் அஞ்சும்என் நெஞ்சக மஞ்சுமால்"

என்று கூற்றுவனும் கூறுகின்றான். எத்துணைப் பாதக மிழைத்தவராயினும் அவர்கள் அப் பாவச் செயலினின்று நீங்கித் தமது உளத்தை அன்புமயமாக மாற்றி சிவபெருமா னுடைய திருநாமங்களைச் செப்புவராயின் அவர்களைக்

கண்டு அந்தகன் அஞ்சுகின்ருன். பாவஞ் செய்து கொண்டே சிவநாமங்களைச் சொல்வது என்பதில்லை. பாவத்தி னின்றும் விடுபட்டு சிவநாமஞ் சொல்லுதல் வேண்டும்.

மேலும் இயமன் தன் தூதரைப் பார்த்து "இறைவனைப் பணியும் அடியார்க்கு அடியார்; அவ்வடியார்க்கு அடியார்; என்னும் இவ்வடியார் பரம்பரையைக் கண்டால் அவர்கள் இருக்கின்ற திசைக்குக்கூட போகவேண்டா" என்று அத் தூதர் காதில் ஒரு கோடி அறிவுரை கூறுகின்ருன் என்று சிவரகசியங் கூறுமாறு காண்க.

ஐயவனைப் பணிவோனைப் பணிவோனைப் பணிவோனை
யவன்றன் பாதங்
கையதனுல் தொழுவோனைத் தொழுவோனைத் தொழு
வோனைக் கண்ணிற் கண்டால்
செய்யவவ ரிருந்ததிக்குஞ் செலவேண்டா வெனக்காலன்
றிறற்றூதற்கே
உய்யவழைத் தவர்செவியிற் பையவொரு கோடிபுத்தி
யுரைசெய்வாணுல்.

தூரனைப்போய் முட்டிப்பொருத......திருமுன்பு நின்றேன்:—

காலனை வெட்டிப் புறங்காணும் ஆற்றல் எதனுலுண் டாயிற்று? எனில், காலனைப் பணியாளனுகக் கொண்ட வெய்ய சூரபன்மனைத் துணித்த வேலாயுதத்தையுடைய குமாரக் கடவுளின் அருகில் நிற்பதனுல் உண்டாயிற்று என்று சுவாமிகள் காரணமுங் கூறுகின்றனர். அக்கினி மலைக்கு அருகில் நிற்பாரைப் பனி நெருங்கமாட்டாததுபோல் முருகன் திருமுன் நிற்போரைக் கூற்றுவன் மட்டுமன்று, ஏனைய கோளும் நாளும் வாளும் நெருங்கமாட்டா.

"நாளென் செயும் வினை தானென் செயும் எனை நாடி வந்த
கோளென் செயுங் கொடுங் கூற்றென் செயுங்கும ரேசரிரு
தாளுஞ் சிலம்புஞ் சதங்கையுந் தண்டையுஞ் சண்முகமுந்
தோளுங் கடம்பு மெனக்குமுன் னேவந்து தோன்றிடினே."

என்று சுவாமிகள் பிறிதோரிடத்திலும் கூறியருளினுர்.

சேறு படிந்த உடம்புடைய ஒருவன் நீரிற் படிவானுயின் அவனுடம்பு தூய்மையுறும். அதுபோல் அகத்தில் ஆணவ மலச் சேறுடையவன் ஞானதேசிகராகிய எந்தை கந்தவேள் திருமுன்னுற்ருல் ஆணவச் சேறு நீங்கித் தூயவராகி மேலைத் தொல்கதி யடைவர். இதனை ஆராய வேண்டா; சூரபன்மனே போதிய சான்று.

தீயவை புரிந்தாரேனும் குமரவேள் திருமுன் னுற்ருல்
தூயவ ராகி மேலைத் தொல்கதி யடைவ ரென்கை
ஆயவும் வேண்டுங் கொல்லோ அடுசம ரிந்நாட் செய்த
மாயையின் மகனு மன்ருே வரம்பிலா அருள்பெற் றுய்ந்தான்.
—கந்தபுராணம்.

கட்டிப் புறப்படடா சத்திவாளென்றன் கையதுவே:—

“ஒருவேளை முருகனடியாரின் அருளாற்றலை யறியாது, முன்னர் மார்க்கண்டேயரைப் பற்ற வந்தது போல் கூற்றுவனே! நீ வருவதற்கு எண்ணினல் வில்லும் அம்பும் வாளுந் தண்டுமாகிய ஆயுதங்களை யெல்லாம் எடுத்துக் கட்டிக் கொண்டு புறப்படு; பல ஆயுதங்களை யெடுத்துக்கொண்டு நீ வரினும் என்னிடம் ஒரு ஆயுதம் உண்டு. “அது சக்திவாள்” எனப்படும். உன்னைப்போல் கோடி கூற்றுவனை மாய்க்கும் வன்மையுடையது அது. அவ்வாள் எந்தை கந்தவேள் தந்தது. அவர் முன்னே தந்தைக்கும் அந்த வாளைத் தந்திருக்கின்ருர். “தந்தைக்கு முன்னந் தனிஞான வாளொன்று சாதித்தருள் கந்தசுவாமி” எம்பெருமான் தந்த அவ் வாள் மற்றைய வாள் போன்று இரும்பினல் செய்யப்பெற்றதன்று. சத்திவாள்; அருள்வாள்; ஞானவாள்; அவிரோத ஞானச் சுடர் வடிவாள்; அவ் வாளை நான் வீட்டில் எங்காவது ஒரு புறத்தில் தூங்க வைத்தேனில்லை. என் கையிலேயே இருக்கின்றது. ஆதலின் தைரியமிருந்தால் புறப்பட்டு வா” என்று நம் அருணையடிகள் அந்தகனை அறைகூவி யழைக்கின்ருர்.

அருணகிரிநாதரே யன்றி அவர் பரம்பரையில் வந்த தாயுமான அடிகளும் அங்ஙனமே இயமனை வெருட்டி விரட்டுகின்ருர்.

எல்லாம் அறிந்தவரும் ஏதுமறி யாதவரும்
இல்லையெனு மிவ்வுலகமீ
தேது மறியாதவ னெனப்பெயர் தரித்துமிக
ஏழைக்குள் ஏழையாகிக்
கல்லாத அறிவிற் கடைப்பட்ட நான் அன்று
கையினால் உண்மை ஞானங்
கற்பித்த நின்னருளி னுக்கென்ன கைம்மாறு
காட்டுவேன் குற்றேவல் நான்
அல்லார்ந்த மேனியொடு குண்டுகட் பிறையெயிற்
ருபாச வடிவ மான
அந்தகா நீயொரு பகட்டாற் பகட்டுவ
தடாதடா காசு நம்பால்
செல்லாத டாளன்று பேசுவா யதுதந்த
செல்வமே சத்தாகி என்
சித்தமிசை குடிகொண்ட அறிவான தெய்வமே
தேசோ மயானந்தமே.

*கருத்துரை*

அடா இயமனே! சூரனை வென்ற சுப்பிரமணி முன் நிற்கின்றேன். சத்திவாள் என் கையிலுளது. நீ என்னைப் பற்ற வரின் வெட்டித் துணிப்பேன். தீரமிருக்கின் புறப் படுவாயாக.

**65**

வெட்டுங் கடாமிசைத் தோன்றும்வெங் கூற்றன் விடுங் கயிற்றால்
கட்டும் பொழுது விடுவிக்க வேண்டுங் கராசலங்கள்
எட்டுங் குலகிரி யெட்டும் விட்டோடவெட் டாதவெளி
மட்டும் புதைய விரிக்குங் கலாப மயூரத்தனே.

*பதவுரை*

கர அசலங்கள் எட்டும்=கையையுடைய மலைபோன்ற திக் கஜங்கள் எட்டும், குலகிரி எட்டும்=குலமலைகள் எட்டும், விட்டு

ஓட=தத்தம் இடம் விட்டு விலகும்படி, எட்டாத வெளிமட்டும் புதைய=கண்களுக்கு எட்டாத ஆகாயம் வரைக்கும் மறையும்படி, விரிக்கும் கலாப=விரிக்கின்ற தோகையையுடைய, மயூரத்தனே= மயில்வாகனரே, வெட்டும் கடா மிசை தோன்றும்=வெட்டுகின்ற எருமைக்கடாவின்மீது வருகின்ற, வெம்கூற்றன்=வெம்மையாகிய இயமன், விடும் கயிற்ருல் = வீசுகின்ற பாசக் கயிற்றினுல், கட்டும் பொழுது=அடியேனைக் கட்டிப்பிடிக்கும் பொழுதில், விடு விக்கவேண்டும்=தேவரீர் தோன்றி அக் கட்டினின்றும் விடுவித்துக் காப்பாற்றியருள வேண்டும்.

## விரிவுரை

**வெட்டுங்கடா:—**

கூற்றுவனுடைய வாகனம் எருமைக்கடா; கடா என்பது ஆண் எருமை; கூற்றுவனுடைய நிறம் கருமை; அவனுடைய வாகனமாகிய எருமையுங் கருமை; அநேக அமாவாசை யிருளைப் பிழிந்து அப் பிழியை உடம்பிற் பூசினுற்போன்ற கருமை; "காரிருட்பிழம்பு மெழுகிய அங்கமும்" என்ருர் பிறிதோரிடத்தில். கண்டவரைக் கொம்பினுற் குத்தி வெட்டுங் கொடுமையுடைய எருமையாதலின் "வெட்டுங் கடா". இனி முருகப்பெருமானுடைய அடியாரிடத்தில் வந்தால் அப் பெருமானுடைய சத்திவாளால் வெட்டுதற்குரிய கடா எனினும் பொருந்தும். இயமன், "பார்வையிற் கொளுந்தும் தழலுமிழ் கண்களும் காளமொத்த கொம்பும் உள" கடாவில் வந்து வெருட்டி உயிர்களைப் பற்றுவன்.

**கூற்றன் விடுங்கயிற்ருல் கட்டும்பொழுது:—**

கூற்றுவன்-உடம்பை வேறு உயிரை வேருகப் பிரிப்பவன். காலாந்தரத்தில் வந்து பாசக்கயிற்றை வீசி உயிரைக் கட்டிப் பிடிப்பன். மாட்டை மூக்கணுங்கயிற்ருல் அடக்கிப் பிடிப்பது போல், இயமன் பிராண வாயுவைப் பிடித்து ஈர்த்துக் கட்டிக் கொண்டு போவான்.

"காலனுர் வெங்கொடுந் தூதர்பா சங்கொடென்
காலினுர் தந்துடன் கொடுபோக"

—திருப்புகழ்.

கால்-வாயு; பிராணவாயுவைப் பாசத்தால் ஈர்த்து உடம்பினின்றும் உயிரைப் பிரித்து, எட்டுத் தத்துவங்களோடு கூடிய புரியட்டக சரீரத்தைப் பிணித்து தன்னுலகிற்குக் கொண்டு செல்வான்.

**விடுவிக்கவேண்டும்:—**

"முருகா! மூவர் முதல்வா! முக்கண்ணன் புதல்வா! தேவரீருடைய திருவடிகளே அடைக்கலமாகப் புகுந்தேன். கொடுமையான கூற்றுவன் என்னிடம் நெருங்கிவந்து, என் பொறிகளும் புலன்களும் அறிவும் கலங்க, உரை குழற, விழி சுழல பாசக்கயிற்ருல் கட்டியிழுக்குங் காலத்தில் தேவரீர் வந்து, "அடா இயமனே! இவன் நமது அடியான்" என்று கூறி அடியேனை விடுவித்தருள வேண்டும்.

"அந்தகனுமெனை யடர்ந்து வருகையினில்
அஞ்ச லெனவலிய மயில்மேல்நீ
அந்த மறலியொ டுகந்த மனிதனம
தன்பனென மொழிய வருவாயே"—திருப்புகழ்.

"பைவருங் கேளும் பதியுங் கதறப் பழகிநிற்கும்
ஐவருங் கைவிட்டு மெய்விடும் போதுன் அடைக்கலமே"
—அலங்காரம்.

அந்த ணாளனுன் னடைக்கலம் புகுத்
அவனைக் காப்பது காரண மாக
வந்த காலன்ற னாருயி ரதனை
வவ்வினுய்க் குன்றன் வண்மைகண் டடியேன்
எந்தை நீயெமை நமன்றமர் நலியில்
இவன்மற் றென்னடி யானென விலக்குஞ்
சிந்தை யால்வந்துன் றிருவடி யடைந்தேன்
செழும் பொழிற்றிருப் புன்கூருளானே. —சுந்தரர்.

**கராசலங்கள் எட்டும்:—**

கராசலம்-யானை; கையையுடைய மலை; திக்குகளில் நின்று உலகைத் தாங்குபவைகளாகிய திக்கஜங்கள். அவை

யாவன: ஐராவதம், புண்டரீகம், வாமனம், குமுதம், அஞ்சனம், புட்பதந்தம், ஸார்வபௌமம், சுப்ர தீபம்.

குலகிரி எட்டும்:—

குல மலைகளாவன: கைலை, நிடதம், இமயம், ஏமகூடம், மந்தரம், நீலகிரி, விந்தம், கந்தமாதனம்.

எட்டாத வெளிமட்டும் புதைய விரிக்கும் கலாபம்:—

எம்பெருமான் ஏறுகின்ற மயிலின் கலாபத்தின் விரிவு இதனுல் வியந்து ஓதப்படுகின்றது.

எட்டாத வெளி-கட்புலனுக்கு எட்டாததாகிய அண்ட முகட்டுக்கு அப்பாலும் மறைய விரிக்குந் தோகை; எனின் அதன் விரிவு இத்தன்மைத்தென்று இயம்பவல்லார் யாவர்?

“சங்கார காலமென அரிபிரமர் வெருவுறச்
சகல லோகமு நடுங்கச்
சந்த்ர ஸூரியரொளித் திந்த்ராதி யமரரும்
சஞ்சலப் படவுமையுடன்
கங்காளர் தனிநாடகஞ் செய்த போதந்த
காரம் பிறந்திடநெடுங்
ககன கூடமுமேலை முகடுமூடிய பசுங்
கற்றைக் கலாப மயிலாம்” —மயில் விருத்தம்.

இத்தகைய் சிறந்த மயிலை வாகனமாக உடையவர் ஆதலினுல் எருமையை வாகனமாக உடையவன் வரும்போது மயில் மீது வந்தருள்வாய் என்று குறிப்பிடுகின்ருர்.

“கார்மா மிசை காலன் வரிற் கலபத்
தேர்மா மிசை வந் தெதிரப் படுவாய்” —அநுபூதி.

காலன் வரும்போது உரையும் உணர்வும் அற்று அவசமுற்றுக் கிடப்போமாதலின் காலன் வரும்போது வேலனை வருமாறு இப்பொழுதே விண்ணப்பங் கொடுத்துவிட வேண்டும். வெள்ளம் வருமுன் அணை போடுவது போல் என்றறிக. வேலனை வழிபடுவார் காலனை யஞ்சார்.

## கருத்துரை

சிறந்த—விரிந்த கலாபமயில் வாகனரே! காலன் வந்து என்னைப் பாசத்தாற் கட்டும்போது விடுவித்தருளல் வேண்டும்.

## 66

நீர்க்குமி ழிக்கு நிகரென்பர் யாக்கை நில் லாதுசெல்வம்
பார்க்கு மிடத்தந்த மின்போலு மென்பர் பசித்துவந்தே
ஏற்கு மவர்க்கிட வென்னினெங் கேனு மெழுந்திருப்பார்
வேற்கும ரற்கன் பிலாதவர் ஞான மிகவுநன்றே.

### பதவுரை

யாக்கை=இவ்வுடம்பானது, நீர் குமிழிக்கு நிகர் என்பர்= நீரில் எழுகின்ற குமிழிக்கு ஒப்பாகும் என்று கூறுவார்கள், செல்வம் நில்லாது=பொருட் செல்வமானது நிலை பெற்றிராது, பார்க்கும் இடத்து=ஆராய்ந்து பார்க்குங்கால், அந்த மின்போலும் என்பர்=அந்த மின்னலைப் போன்றது என்று வாயினுற் கூறுவார்கள்; பசித்து வந்து ஏற்கும் அவர்க்கு= மிகவும் பசியினுல் வாடி வந்து "ஐயா! இத்தனை அன்னங் கொடுங்கள்" என்று யாசிப்பவர்கட்கு, இட என்னின்=ஏதாவது கொடுக்கவேண்டும் என்ருல், எங்கேனும் எழுந்திருப்பார்=எங்கே யாகிலும் போய்விட எழுந்திருப்பார்கள், வேல் குமரற்கு அன்பு இலாதவர்=வேலாயுதத்தையுடைய குமாரக் கடவுளுக்கு பக்தி இல்லாதவரது, ஞானம் மிகவும் நன்று=அறிவு மிகவும் நன்ருக இருக்கின்றது.

### விரிவுரை

இந்தப் பாடலில் சுவாமிகள் செயலில் நடந்துகாட்டாமல் வெறும் வாய்ப்பந்தலிடும் வெற்றுரை வீணரை இடித்துரைக் கின்றனர். சொல்லுஞ் செயலும் ஒத்து நடப்பவரே உத்தம ராவர். எல்லோருக்கும் உபதேசஞ் செய்துவிட்டு தாங்கள் அங்ஙனம் நடக்கவில்லையானுல் அவர்களை மக்கட்பதடி என்று

கூறவேண்டும். அவர்களைக் கண்டு மரங்கள்கூட நகைக்கும். அவர்களுடைய மடமையை என்னென்றுரைப்பது?

நீர்க்குமிழிக்கு நிகரென்பர் யாக்கை:—

உடம்பானது நீரில் தோன்றி மிக விரைவில் அழியும் குமிழிக்கு நிகரானது என்று யாக்கை நிலையாமையைப் பற்றிப் பேசுவர்.

'நீரின் எழுத்தாகும் யாக்கை' —குமரகுருபரர்.

"காலெதிர் குவித்த பூளை, காலைக்
கதிர் எதிர்பட்ட கடும்பனிக் கூட்டம்
அந்தரத் தியங்கும் இந்திர சாபம்"

"அதிரு மேகத் துருவி னருநிழல்
நீரிற் குமிழி நீர்மே லெழுத்து
கண் துயில் கனவில் கண்ட காட்சி"

—பட்டினத்தார்.

"ஐந்துவித மாகின்ற பூதபேதத்தினால்
ஆகின்ற யாக்கை நீர் மேல்
அமிழ் கின்ற குமிழி"

"நீர்க்குமிழி பூளைமைத்து நின்றாலும் நில்லாமெய்
பார்க்கு மிடத் திதன்மேற் பற்றறுவதெந்நாளோ"

—தாயுமானார்.

செல்வம்......மின்போலும்:—

செல்வம்-நிலைத்திருக்காமல் போவோம் என்று பொருள் படுமாறு காண்க. செல்வம் யார்மாட்டும் நிலைத்திராது. உருண்டுகொண்டே யிருக்கும். அதனாலேயே நாணயங்களைப் பழைய அறிஞர்கள் வட்ட வடிவில் அமைத்தனர் போலும்.

"அகடுற யார்மாட்டு நில்லாது செல்வம்
சகடக்கால் போல வரும்" —நாலடியார்.

மின்னல் எப்படி காட்டி மறைகின்றதோ அதுபோல் செல்வம் உள்ளதுபோல் இருந்து கள்ளமாய் மறையும்.

ஆதலினால் கைத்துண்டாம்போதே கரவாது அறஞ் செய்தல் வேண்டும்.

> ''தேரிற் பரியிற் கரியிற் றிரிபவர் செல்வமெல்லாம்
> நீரிற் பொறியென் றறியாத பாவி நெடு நெஞ்சமே''

என்றார் பிறிதோரிடத்திலும்.

பற்றறுத்து பற்றற்றான் பற்றினைப் பற்றி பரகதி புக முயற்சி செய்வோர் யாக்கை நிலையாமையையும் செல்வம் நிலையாமையையும் அடிக்கடி சிந்திக்க வேண்டும். அதனா லேயே திருவள்ளுவர் வீடுபயக்கும் உணர்வாகிய ஞானத் தைக் கூறத் தொடங்கியபோது ''நிலையாமை'' என்ற அதிகாரத்தை முதற்கண் கூறுவாராயினார்.

> ''நில்லாதவற்றை நிலையின வென்றுணரும்
> புல்லறி வாண்மை கடை''

என்றார்.

நாள்தோறும் இறந்துபட்டொழிவோரைக் கண்டும் ''நாம் நீடூழி வாழ்வோம்'' எனக் கருதும் மதியிலிகளை என்னென்றுரைப்பது?

> ''போனவர் வாழ்வுகண்டும் ஆசையிலேயழுந்தும் மயல்தீர''
> —திருப்புகழ்.

> நேற்றுளார் இன்று மாளா நின்றனர் அதனைக் கண்டும்
> போற்றிலேன் நின்னை அந்தோ போக்கினேன் வீணே காலம்
> ஆற்றிலேன் அகண்டா னந்த அண்ணலே அளவில் மாயைச்
> சேற்றிலே இன்னம் வீழ்ந்து திளைக்கவோ சிறிய னேனே.
> —தாயுமானார்.

ஆதலினால் யாக்கை யுள்ளபோதே தவமும், செல்வ முள்ள போதே தருமமும் செய்தல் வேண்டும்.

பசித்து வந்தே....................எழுந்திருப்பார்:—

மேலே கூறியவாறு யாக்கை நிலையாமையைப் பற்றியும், செல்வ நிலையாமையைப் பற்றியும் மிக விரிவாகவும்

தெளிவாகவும் கல்லுங் கரையுமாறு சிலர் பேசுவர்; ஆனால் செய்கை இராது. யாராவது ஒரு ஏழை பசியுடன் வந்து "ஐயா" என்று கையேந்திக் கேட்டால் அவர் சத்தம் போடாமல் எங்கேனும் எழுந்துபோய் மறைவர். அந்தோ! இவர்களுடைய பேச்சு ஏச்சாக முடிந்தது. இதற்குக் காரணம் அன்பின்மையே.

வேற்குமரற் கன்பிலாதவர் ஞானம் மிகவும் நன்றே:—

ஆதலினால் முருகனிடத்தில் அன்பின்றி உயிர்களிடத்து இரக்கமின்றி வாசாவாகப் பேசுவார் ஞானம் மிகவும் நன்றாயிருக்கின்றது! என்று இகழ்கின்றனர்.

அன்பு ஒன்றுக்கே இறைவன் எளிதில் கட்டுண்பன். அன்பில்லாத ஞானம் மணமில்லாத மலர்போலாகும். அந்த அன்பு எல்லா உயிர்கள் மாட்டும் நிகழ வேண்டும்.

"அறிவினா னாகுவ துண்டோ பிறிதினோய்
தந்நோய்போற் போற்றாக் கடை"

என்றார் திருவள்ளுவர்.

கருமம், தவம், ஜபம், சமாதி, ஞானம் ஆகிய இவைகளை மேற்கொண்டோரிடம் இறைவன் எளிதில் வெளிப்பட மாட்டான். அன்பு செய்வார் முன் எளிதில் வெளிப்படுவான். அவருடன் உரை செய்வான்; அவருளத்தில் நீங்காது உறைவான்.

கருமமா தவஞ் செபஞ் சொல் காசறு சமாதி ஞானம்
புரிபவர் வசமதாகிப் பொருந்திடோம் புரையொன் றின்றித்
திரிவறு மன்பு செய்வோர் வசமதாய்ச் சேர்ந்து நிற்போம்
உரைசெய்வோ மவர்மு னெய்தி யவருளத் துறைவோமென்றும்
—வாயுசங்கிதை.

கருத்துரை

இறைவனிடத்தும் ஏழைகளிடத்தும் அன்பில்லாத வாசாஞானம் பேசுவார்களுடைய அறிவு உண்மையறிவாக மாட்டாது.

## 67

பெறுதற் கரிய பிறவியைப் பெற்றுநின் சிற்றடியைக்
குறுகிப் பணிந்து பெறக்கற்றி லேன்மத கும்பகம்பத்
தறுகட் சிறுகட் சங்க்ராம சயில சரசவல்லி
இறுகத் தழுவுங் கடகா சலபன் னிருபுயனே.

### பதவுரை

மதம்=மதநீர் ஒழுகுவதும், கும்பம்=கும்பஸ்தலத்தை யுடையதும், கம்பம்=அசைந்து கொண்டேயிருக்குந் தன்மையை யுடையதும், தறுகண்=அஞ்சாமையும், சிறுகண்=சிறிய கண்களை யும் உடையதுமாகிய யானையையுடைய, சங்க்ராம=போர் வீரனே! சயில சரச வல்லி=மலையில் பிறந்து வளர்ந்தவரும் விளையாடல் புரி பவரும் கொடி போன்றவருமாகிய வள்ளியம்மையார், இறுக தழு வும்=மார்பு இறுகத் தழுவுகின்ற, கடக அசல பன் இரு புயனே= வீரக்கடகங்களை யணிந்துள்ளதும் மலைபோல் விளங்குவதுமாகிய பன்னிரண்டு புயங்களை யுடையவரே! பெறுதற்கு அரிய பிறவியை பெற்றும்=பெறுவதற்கு மிகவும் அருமையான இம் மனிதப் பிறவி யைப் பெற்றும், நின் சிறு அடியை=தேவரீரது சிறியதாகிய திரு வடிகளை, குறுகி பணிந்து=அடைந்து தொழுது, பெற கற்றி லேன்=வீடுபேற்றைப் பெறுவதற்குக் கற்றேனில்லை.

### விரிவுரை

பெறுதற்கரிய பிறவி:—

மனிதப் பிறப்பு மிகவுஞ் சிறப்புடையது. பிறவியின் நோக்கம் பிறப்பை யறுப்பதுதான். அது தேவப்பிறப் பாலும் முடியாதது; தேவப்பிறப்பு புண்ணியக் குவியலைப் பொருந்தி இன்பத்தை நுகர்வதற்கு மட்டும் உரியது. தாவரம், நீர்வாழ்வன, ஊர்வன, பறப்பன, விலங்கு, மனிதர், தேவர் என்று பிறப்பு எழுவகைப்படும்.

அன்றியும் அறிவு அறுவகைப்படும். உற்றறிவது, சுவைத்தறிவது, மோந்தறிவது, பார்த்தறிவது, கேட்டறிவது, (ஆராய்ந்து) நினைந்தறிவது என்பனவாம்.

ஒன்றறிவதுவே உற்றறிவதுவே
இரண்டறிவதுவே அவற்ருெடு நாவே
மூன்றறிவதுவே அவற்ருெடு மூக்கே
நான்கறிவதுவே அவற்ருெடு கண்ணே
ஐயறிவதுவே அவற்ருெடு செவியே
ஆறறிவதுவே அவற்ருெடு மனனே
நேரிதி னுணர்ந்தோர் நெறிப்படுத்தினரே.

(தொல்—பொருள்—மரபியல்)

இவற்றுள், புல், செடி, கொடி, மரம், மலை முதலியவை உற்றறிவதாகிய ஓரறிவுடையயவையாம். சங்கு, சிப்பி, நத்தை முதலியவை உற்றறிவதும் சுவைத்தறிவதுமாகிய ஈரறிவுடையயவையாம். செல், எறும்பு முதலியவை உற்றறிவது, சுவைத்தறிவது, மோந்தறிவது என மூன்றறிவுடையயவையாம். நண்டு, தும்பி முதலியவை உற்றறிவது. சுவைத்தறிவது, மோந்தறிவது, கண்டறிவது என்ற நான்கறிவுடையயவையாம். விலங்கு மாக்கள் என்பவை மேற்கூறிய நான்கறிவுடன் கேட்டறிவதாகிய ஐயறிவுடையயவையாம். இத்தகைய ஐயறிவுடன், இவை செய்வன, இவை தவிர்வன, இவை தக்கவை, இவை தகாதன என்று பகுத்துணர்கின்ற மனவறிவும் சேர்ந்து ஆறறிவுடையவர் மனிதர். மாக்கள் என்பவர் மனித உடம்பெடுத்துப் பகுத்துணர்வின்றி விலங்கு போல் இருப்பவர்.

புல்லு மரனும் ஓரறிவினவே
நந்து முரலு மீரறிவினவே
சிதலு மெறும்பு மூவறிவினவே
நண்டுந் தும்பியு நான்கறி வினவே
மாவு மாக்களும் ஐயறிவினவே
மக்கள் தாமே ஆறறி வுயிரே.

(தொல்—பொருள்—மரபியல்.)

ஆதலினுல் மனிதப் பிறப்பு மிகமிக உயர்ந்தது; அண்டஜம், சுவேதஜம், உற்பிஜம், ஜராயுஜம் என்ற நால்வகைப் பிறப்புக்களிலும், எண்பத்து நான்கு நூருயிர

யோநி பேதங்களிலும் பிறந்து பிறந்து பல்கோடி பிறப்புக் களில் செய்த மாதவத்தின் பயனாக இம்மனிதப் பிறவி வரு கின்றது. கடலைக் கையால் நீந்திக் கரையேறுவது போல என்றறிக.

அண்டசம் சுவேதசங்கள் உற்பிச்சம் சராயு சத்தோ
டெண்டரு நாலெண் பத்து நான்குநூ ருயி ரத்தால்
உண்டுபல் யோனி யெல்லாம் ஒழித்துமா னுடத்து தித்தல்
கண்டிடில் கடலைக் கையால் நீந்தினன் காரி யங்காண்.

—சிவஞானசித்தியார்.

''அரிது அரிது மானுடராதல் அரிது'' —ஔவையார்.

''எண்ணரிய பிறவிதனில் மானுடப் பிறவிதான்
யாதினும் அரிது அரிது காண்
இப்பிறவி தப்பினால் எப்பிறவி வாய்க்குமோ
யாது வருமோ அறிகிலேன்'' —தாயுமானார்.

இத்தகைய மானுடப் பிறப்பின் உயர்வை அன்பர்கள் நன்கு உற்று நோக்குதல் வேண்டும். வைரக் கல்லின் உயர்வு தெரிந்தால்தானே அதனிடத்து மிக்க மதிப்பும் அன் பும் உண்டாகும். உண்டாகவே அதனைப் பேணுவதோடு அதனைப் பயன்படுத்திக்கொள்ள முற்படுவான். அதுபோல் இம்மனிதப் பிறவியின் பெருமையும் அருமையும் இத்துணை விழுமியதென்று உணர்ந்து தெளிந்து, உய்யுநெறி தேடி இனிப்பிறவாத பெற்றியைப் பெற ஒவ்வொருவரும் உடனே முயற்சி செய்ய வேண்டும். பெறுதற்கரிய பிறவியைப் பெற் றோர் பெறுதற்கரிய பேற்றைப் பெறவேண்டும் என்பார் திருமூலரும்.

சிற்றடி:—

சிறு—அடி சிற்றடி எனப் புணர்ந்தது. முருகப்பெருமான் என்று மகலாத இளமையுடையவராதலாலும், 'குமரகுரு குமர குரு' என மறையாயிரங்களும் கூறித் துதிப்பதாலும், 'என்றும் இளையாய்' என்று நக்கீர தேவரும் வியந்துரைப்பதாலும் எந்தை கந்தவேள் திருவடி இளமையான சிறிய திருவடி யாகும்,

''சிற்றடியு முற்றியப னிருதோளும்'' —திருப்புகழ்.

''மறையின் முத னடுமுடிவில் மணநாறு சீறடியே''—வகுப்பு.

**குறுகிப் பணிந்து:—**

குறுகுதல்-அணுகுதல். குமரப்பெருமானிடம் நெருங்கி அவருடைய திருவடியைப் பணிந்து வழிபடுதல் வேண்டும். நெருப்பையணுகுபவரிடம் குளிர் நீங்குவதுபோல் குமரவேளை யணுகுபவரிடம் பாவம் நீங்கும்.

மேலும் குறுகுதல் என்றால் குறைதல் என்பது ஒரு பொருள்; நம்மிடத்திலுள்ள ஆணவம் குறைந்து வணங்குதல் வேண்டும். இன்னும் 'நான் மிக்வும் படித்தவன்; நான் பெரும் பணம் படைத்தவன்; நான் அதிகாரி; நான் செல் வாக்குடையவன்' என்ற முனைப்புகள் குறைந்து அப் பரமபதி யைப் பணிதல் வேண்டும்.

மேலும் சீவன் என்று உயிர்க்குப் பெயர்; சிவன் என்று பதிக்குப் பெயர். சீ, நெடில்; இரண்டு மாத்திரை; சி, குறில்; ஒரு மாத்திரை. சீ என்ற எழுத்தில் ஒரு மாத்திரை குறுகினால் சி என்று ஆகின்றது. ஆகவே சீவன் குறுகினால் சிவனாகின்றது.

தாமார்க்குங் குடியல்லாத் தன்மையான
சங்கரனற் சங்கவெண் குழையோர் காதிற்
கோமாற்கே நாமென்று மீளா ஆளாய்க்
கொய்ம்மலர்ச் சேவடியிணையே குறுகினோமே. —அப்பர்.

**பெறக் கற்றிலேன்·—**

பெறத்தகுவது பிறவாமையே. ''வேண்டுங்கால் வேண் டும் பிறவாமை'' என்றார் திருவள்ளுவர். பெறுதற்கரிய தாகிய பிறவியைப் பெற்றும் பிறவிப்பயனாகிய பிறவாமை யைப் பெறாது வீணாள் கழிப்பது பேதைமை. விலங்கு பறவை தாவரம் ஆகிய கீழ்ப்பிறப்பில் பிறந்துழன்றபோதுதான் அறிவின்மையால் இறைவன் இணையடிகளைப் பணிந்து பிறவிப் பிணியைத் தணிந்து உய்யுமாறின்றி யொழிந்தது; அதற்

கேற்ற பிறவியைப் பெற்றும் வாளா கிடப்பது வருந்தத் தக்கதாம்.

மதகும்ப கம்ப தறுகட் சிறுகட் சங்க்ராம:—

மதநீர் பொழிதலும், தலையில் மஸ்தகமும், அசையுந் தன்மையும், சிறிய கண்களும், அஞ்சாமையும் யானைக்கு உரியவாம். முருகப் பெருமானுக்கு யானை வாகனமும் உண்டு. திருத்தணிகை, திருப்போரூர், சுவாமிமலை முதலிய திருத்தலங்களில் பெருமானுக்கு முன் யானை வாகனம் அமைந் திருப்பது கண்கூடு.

சயிலசரசவல்லி இறுகத்தழுவும்:—

மலைவல்லியாகிய வள்ளியம்மையார் இறுகத்தழுவுகின்றார் என்பது ஞானக்கொடியாகிய அம்பிகை ஞானபண்டிதனை அணைந்திருக்கின்றார் என்பதனைக் குறிக்கின்றது.

கடகாசல பன்னிருபுயனே:—

வீரர்கள் தோளில் கடகம் அணிவார்கள். வீரவீர வீராதி வீரப்பெருமாளாகிய வேலாயுதக் கடவுள் சூராதி யவு ணர்களையழித்த மாப்பெரும் வீரமூர்த்தியாதலால் பன்னிரு புயங்களிலும் வீர கடகங்களை யணிந்திருக்கின்றனர்.

''கடகபுயமீதில் ரத்ன மணியணி பொன்மாலை செச்சை
கமழுமண மார்கடப்ப மணிவோனே''

''வாசகளபவர துங்கமங்கல
வீரகடகபுய சிங்கசுந்தர
வாகைபுனையும் ரணரங்க புங்கவ வயலூரா''
—திருப்புகழ்.

## கருத்துரை

போர்வீரரே! வள்ளிமணாளரே! அடியேன் பெறுதற் கரிய இம் மனிதப்பிறவியைப் பெற்றும் உமது திருவடி யைக் குறுகிப் பணிந்து பிறவாமையைப் பெறக் கற்றுக் கொண்டேனில்லை,

## 68

சாடுஞ் சமரத் தனிவேன் முருகன் சரணத்திலே
ஓடுங் கருத்தை யிருத்தவல் லார்க்குகம் போய்ச்சகம்போய்ப்
பாடுங் கவுரி பவுரிகொண் டாடப் பசுபதிநின்
ருடும் பொழுது பரமா யிருக்கு மதீதத்திலே.

### பதவுரை

சாடும் சமர தனிவேல்=அறநெறிக்கு மாறுபட்டவரையும் வல்வினைகளையும் அழித்து போர் செய்ய வல்லதாகிய ஒப்பற்ற வேலாயுதத்தையுடைய, முருகன் சரணத்திலே=முருகப் பெருமானுடைய திருவடிக் கமலங்களிலே, ஓடும் கருத்தை=பல்வேறு வழியிலே ஓடித் திரிகின்ற மனத்தை, இருத்த வல்லார்க்கு = நிலை பெறச் செய்யும் ஆற்றலுடையவர்களுக்கு, (அக்கருத்தானது) உகம் போய்=யுகங்கள் யாவும் முடிந்து, சகம்போய்=உலகமெல்லாம் அழிந்து, பாடும் கவுரி==பாடும் வன்மையுடைய உமாதேவியார், பவுரி கொண்டாட=அழகிய திருக் கூத்தை மெச்சிப் புகழ, பசுபதி நின்று ஆடும்பொழுது=பசுக்களுக்கெல்லாம் பதியாகிய சிவபெருமான் அழியாமல் நிலைபெற்று நின்று ஆனந்தத் தாண்டவஞ் செய்யும் பொழுது, அதீதத்திலே=அந்த முடிவான காலத்திலே, பரமாய் இருக்கும்=முருகப் பெருமான் திருவடியில் வைத்த கருத்து அழியாமல் மேலானதாக இன்புற்று விளங்கும்.

### விரிவுரை

சாடுஞ்சமரத் தனிவேல்:—

எத்துணை வன்மையும் வரமும் படைத்தவராயினும் எதிர்த்தவரை யழிக்குந் திண்மை படைத்தது எம்பெருமான் திருக்கரத்திலுள்ள வேலாயுதமாகும். ஆயிரத்தெட்டண்டங்களையும் ஆளும் ஆற்றலும் ஏற்றமும் படைத்த சூரபன்மனுடைய வச்சிரப் பெரும் யாக்கையைப் பிளந்தது அவ்வேற்படை; இலக்கத்தொன்பான் வீரர் பொருட்டும், நக்கீரதேவர் பொருட்டும் மலைகளைப் பிளந்து துகள்படுத்தியது அச் சத்திவேல்; இன்னும் தொலையாத வினைத் தொகுதிகளைச் சாடுவது அவ் வேல், வேலை நினைப்பார்க்கு வினையில்லை,

"சாடுந் தனிவேல் முருகன் சரணம்
சூடும்படி தந்தது சொல்லுமதோ"

"வினையோட விடுங் கதிர்வேல் மறவேன்" —அநுபூதி.

"நீசர்கட மோடெனது தீவினை யெலாமடிய
நீடுதனி வேல்விடு மடங்கல் வேலா" —திருப்புகழ்.

முருகன் சரணத்திலே:—

நமது கருத்தை இருத்தவேண்டிய இடம் முருகன் திருவடியேயாம். வேதமுடிவில் விளங்குவதும், விண்ணவர் மணிமுடியில் விளங்குவதும், பாசஞானமும் பசுஞானமுங் கழன்று பதிஞானங் கைவரப் பெற்றோர்க்குக் காணப்படுவதுமாக நிற்பது முருகன் சரணம்.

"வீடுஞ் சுரர்மாமுடி வேதமும் வெங்
காடும் புனமுங் கமழுங் கழலே" —அநுபூதி.

இத்தகைய எந்தை கந்தவேள் திருவடியில் கருத்தைச் செலுத்துதலே முத்திநலம் பெறுவதற்கு எளிய வழியாம். வேறுள்ள சாதனங்கள் யாவும் முத்தி பெறுவதற்கு கடின வழிகளாம்.

"காட்டிற்குறத்தி பிரான்பதத் தேகருத் தைப்புகட்டில்
வீட்டிற் புகுத மிகஎளி தேவிழி நாசிவைத்து
மூட்டிக் கபால மூலாதார நேரண்ட மூச்சையுள்ளே
ஓட்டிப் பிடித்தெங்கு மோடாமற் சாதிக்கும் யோகிகளே"

என்று சுவாமிகள் மற்றோரிடத்தில் மிகவும் அழகாக உன்னுந்தொறும் உள்ளம் உருகுமாறு உரைத்தருளியிருப்பதும் ஈண்டு சிந்தித்தற்குரியதாம்.

ஓடுங் கருத்து:—

நம்முடைய மனம் மிகவும் வேகமாக ஓடிக்கொண்டேயிருக்கின்றது. குலாலனுடைய சக்கரம் ஒரு முறை சுற்றுவதற்குள் இப் பாழ்மனம் நூறுயிரங்கோடி சுற்று சுற்றுகின்றது என்றார் கந்தரந்தாதியில்,

''ஒருகாற் றிரிகையி லாயிரக் கோடி சுற்றேடுந் திருத்துளமே''

கடினங்களுக்கெல்லாம் மிகக் கடினம் மனத்தை ஒரு வழியில் நிற்கச் செய்வதுவே. ''சிந்தையை யடக்கியே சும்மா இருக்கின்ற திறமரிது'', ''மனமிறக்கக் கல்லார்க்கு வாயேன் பராபரமே'' என்பார் தாயுமானுர். பலப்பல வழி களில் ஓடும் மனத்தை முருகன் திருவடியில் நிறுத்தினுல் அப் பரமபதியின் கருணை தானேயுண்டாகும். ''வைவேல் விடுங் கோனருள் வந்து தானே யுமக்கு வெளிப்படுமே தடுங்கோள் மனத்தை'' என்ருர் பிறிதோரிடத்தில். சுகமுள்ள இடத்தில் மனத்தைச் செலுத்தாமல், சுகமென்பது ஒரு சிறிதுமில்லா வகைகளில் செலுத்துவது மதியீனமென்பதில் தடை யுளதோ? எண்ணிப் பாருங்கள். 'காடுங்கரையு மனக் குரங்கு கால்விட்டோட அதன்பிறகே ஓடுந் தொழிலால் பய னுளதோ?' என்று வினவுகின்ருர் தாயுமானுர். என்றுமழி யாத இன்பவூற்று இளம்பூரணன் இணையடிகளில் இருப்பதால் அத் தாடாமரையில் கருத்தை யிருத்துதல் இன்றியமையாத தாம்.

உகம்போய் சகம்போய்:—

யுகம் நான்கு; உலகத்தின் தோற்ற ஒடுக்கத்திற்கு யுகம் கால அளவு காட்டித் துணை செய்கின்றது. மனித ஆண்டு 360 கூடினுல் தேவ ஆண்டு 1. இந்தத் தேவ ஆண்டு 12000 கூடினுல் ஒரு சதுர்யுகமாகும். அதாவது கலியுகத்தில் 10 பங்கு கொண்டது ஒரு சதுர்யுகம்.

| | | | |
|---|---|---|---|
| கிருதயுகம் தேவ ஆண்டு | 4000, | சந்தி 400, | சந்தியாம்சம் 400 |
| திரேதாயுகம் | 3000, | சந்தி 300, | சந்தியாம்சம் 300 |
| துவாபரயுகம் | 2000, | சந்தி 200, | சந்தியாம்சம் 200 |
| கலியுகம் | 1000, | சந்தி 100, | சந்தியாம்சம் 100 |

ஆக 12000. இந்த சதுர்யுகம் ஆயிரம் கழிந்தால் பிரம னுடைய ஆயுளில் ஒரு பகல் ஆகின்றது. அப்போது அவர் துயில் புரியத் தொடங்குவர். அது சமயம் உலகம் அழி கின்றது.

பிரமதேவருடைய ஆயுளில் 7 கல்பம். இப்போது நடப்பது சுவேதவராக கல்பம். முந்தி நடந்தது லக்ஷ்மீ கல்பம். பிரமதேவருடைய பகலில் (அதாவது தேவவருடத்தில் 12000 கொண்ட சதுர் யுகம் ஆயிரத்தில்) 14 மன்வந்தரங்கள். ஒவ்வொரு மன்வந்தரத்திற்கும் ஒவ்வொரு மனு அதிகாரியாவர். இப்போது ஏழாவது மனுவின் காலம். வைவஸ்வத மனு; ஒரு மன்வந்தரத்திற்கு 71 சதுர்யுகம். இதில் இப்போது நடப்பது 28வது சதுர்யுகம். இப்படி உலகம் அழிவது யுகப்பிரளயம்; பிரமதேவர் ஆயுள் முடிவது பிரம பிரளயம்; இப்படியே திரிமூர்த்திகளின் காலம் முடிந்து எல்லாம் அழிவது மகாபிரளயம். அந்த மகா பிரளயத்தில் அழியாமல் இருப்பவர் ஈறிலாத ஈசன் ஒருவனே. சர்வசம்மார காலத்தில் அப் பரமபதி சக்தியுடன் திருநடனம் புரிவர்.

நூறுகோடி பிரமர்கள் நொங்கினர்
ஆறு கோடி நாராயண ரங்ஙனே
ஏறு கங்கை மணலெண்ணி லிந்திரன்
ஈறி லாதவ னீச னொருவனே. —அப்பர்.

பாடுங் கவுரி பவுரி கொண்டாட:—

மேற்கூறியபடி சர்வசங்கார காலத்தில் மூவருந் தேவரும் முடிந்த மயானத்தில் சக்தி பாட சிவமூர்த்தியாடுவர். (பவுரி—ஒருவகைக் கூத்து)

ப்ரபஞ்சோபசமம் சாந்தம் சிவம் அத்வைதம்
சதுர்த்தம் மந்யந்தே ஸ ஆத்மா ஸவிஜ்ஞேய:

பிரபஞ்ச லயத்தானமாயுள்ளதும், சாந்தமாயிருப்பதும், அத்வைதமாயுள்ளதுமாகிய சிவத்தை (மூவருக்கு மேற்பட்ட) நான்காவது பொருளாக நினைக்கின்றனர். அஃது ஆன்மா; அவன் அறியத்தக்கவன். —மாண்டுக்யம்.

"முடிவில் ஒன்றென் றிருப்பதனை"

"சாங்கரி பாடி யிட வோங்கிய ஞானசுக
தாண்டவ மாடியவர் வடிவான" —திருப்புகழ்.

பசுபதி:—

உயிர்களைப் பசுக்கள் என்பர். உயிர்கட்குத் தலைவனைப் பதியென்பர். பசுக்களைப் பந்தித்திருப்பதைப் பாசம் என்பர். பதி பசு பாசம் என்ற முப்பொருளுண்மையைத் திருமூலர் கூறுமாறு காண்க.

பதிபசு பாச மெனப்பகர் மூன்றில்
பதியினைப் போல்பசு பாச மனாதி
பதியினைச் சென்றணு காப்பசு பாசம்
பதியணு கிற்பசு பாச நிலாவே.

பசுக்களுக்குப் பதியாதலிற் சிவபெருமானுக்குப் பசுபதி என்ற திருநாமம் உண்டு. கரூரில் உள்ள சுவாமிக்குப் பசுபதீசுரர் என்று பெயர். பசுக்களாகிய உயிர்கள் சேருமிடமாதலின் பேரூரிலுள்ள சுவாமிக்குப் பட்டீசர் என்று பெயர்.

பரமாயிருக்கு மதிதந்திலே:—

உடல் பிரியும்போதே கருத்தழிகின்றது. இன்னும் திடுக்கிடக்கூடிய ஆபத்துக்களிலும் கருத்தழிகின்றது.

“கலக்குறுஞ் செய லொழிவற அழிவுறு
கருத்து நைந்தல முறுபொழு தளவைகொள்
கணத்தி லென்பய மறமயில் முதுகினில் வருவாயே”
—திருப்புகழ்.

அப்படியழிவதற்கேதுவாகிய கருத்து, அறுமுகனடி மலரில் வைத்துவிட்டால் சர்வ சங்கார காலத்தும் அழியாது இன்புற்றிருக்கும்.

கருத்துரை

வேலாயுதக் கடவுளது திருவடியில் கருத்தை வைத்துவிட்டால் உலகமெல்லாம் அழியினும் அழியாது இன்புற்றிருக்கும்.

## 69

தந்தைக்கு முன்னந் தனிஞான வாளொன்று சாதித்தருள்
கந்தச்சுவாமி யெனைத்தேற் றியபின்னர்க் காலன் வெம்பி
வந்திப் பொழுதென்னை யென்செய்ய லாஞ்சத்தி
வாளொன்றினற்
சிந்தத் துணிப்பன் தணிப்பருங் கோபத்ரி சூலத்தையே.

*பதவுரை*

முன்னம்=முன்னுளிலே, தந்தைக்கு=தந்தையாகிய சிவபெருமானுக்கு, தனி ஞான வாள் ஒன்று=ஒப்பற்ற மெய்ஞ்ஞானமாகிய வாளாயுதமொன்றை, சாதித்து அருள்=கொடுத்து (உபதேசித்து) அருள் புரிந்த, கந்தசுவாமி=கந்தக் கடவுளாகிய முருகப்பெருமான், என்னை தேற்றிய பின்னர்=அடியேனை (அவ்வுபதேசத்தால்; தெளிவித்த பிறகு, காலன் வெம்பி வந்து இப்பொழுது என்னை என் செய்யலாம்=இயமன் சினங்கொண்டு வந்து இவ்வேளையில் என்னை என்ன செய்ய முடியும்? (ஒன்றுஞ் செய்யமுடியாது; ஒரு வேளை ஏதாவது செய்யலாமென்றெண்ணி வருவானுயின்) சத்தி வாள் ஒன்றினுல்=(முருகப் பெருமான் கொடுத்த) சத்திவாள் ஒன்றைக் கொண்டே, தணிப்பு அரும் கோப=தணிக்க முடியாத கோபத்தை யுடைய, த்ரிசூலத்தை=அவனது முத்தலைச் சூலத்தை, சிந்த துணிப்பன்=சிதறும்படி வெட்டியெறிவேன்.

*விரிவுரை*

**தந்தைக்கு:—**

தந்தை-சிவபெருமான். முருகப் பெருமானுக்கு மட்டும் அவர் தந்தையன்று; எல்லா அண்ட கோடிகளுக்கும் அவரே தந்தை. நம்மைப் பெற்ற ஒருவர் உடம்புக்குப் பிதா சிவபெருமான் உயிருக்குப் பிதா; பரம பிதா எனப்படுவர். நமக்குத் தாய் பார்வதியம்மை; தந்தை பரமசிவம்.

மாதா மே பார்வதீ தேவீ பிதா தேவோ சங்கர: —சங்கரர்.

சிவபெருமானுக்குத் தாயுமானுர் என்று ஒரு திருநாம முண்டு. தாயும் ஆனுர் என்ற எச்சவும்மையால் அவர்

தந்தையாராக இருக்கின்ருர் என்பது விளங்குகின்றதன்ருே? "ஈசன் எந்தை இணையடி நீழலே", "எந்தையார் இணையடி என் மனத்துள்ளவே", "என் தாதை சதாசிவ கோத்திரன்", "எந்தை தன் திகழுருவின் மகிழெனது தாய்" என வரும் அமுதத் திருவாக்குகளைச் சிந்தித்துப் பார்க்கும் புண்ணிய முடையார்க்கு இனிது புலனுகும்.

கூர்ம புராணத்திலே, பிரபஞ்ச தோற்றமுரைத்த அத்தியாயத்திலே மூன்ருவது செய்யுளில் சிவபெருமானே கூறியதாக வரும் அருமைச் செய்யுளையும் ஈண்டு படித்து அன்பர்கள் மகிழ்க.

என்னையும் தந்தையென அறிந்தோர்கள் இரும்பிறவிக் கடலின் வீழ்க்கும்
முன்னைவினை தனைநீக்கு மூதுக்குறைந்தோர்; என்னையன்றி மற்ருேர் தெய்வந்
தன்னையன்றித் தவனென்ன வுரைத்திடுவோர் தன்தந்தை யகத்துள் மேவ
அன்னியனைத் தந்தையெனும் விலைமாதர் அருள்புதல்வர் அனையர் மாதோ.

தனி ஞான வாளொன்று சாதித்தருள்:—

ஞானத்தை வாள் என்று உருவகஞ் செய்யப்பட்டது. ஞானம் கூர்மையாக இருக்கும்; வாளும் கூர்மையாக இருக்கும். அறிவில்லாத ஒருவனை கூர்கெட்டவன் என்று உலகங் கூறுவதுஞ் சிந்தித்தற்குரியது. வாள் முட்செடிகளையும் கொடி முதலியவைகளையுஞ் சேதிக்கும்; ஞானம் பாசமாகிய கொடிகளையும் ஆணவமாகிய முள் மரத்தையும் வெட்டித் துணிக்கும். "கூர்த்த மெய்ஞ்ஞானம்" என்ருர் மணிவாசகர். முருகப்பெருமான் சிவபெருமானுடைய செவியில் பிரமனுல் சொல்லற்கரிய ஓம் என்னும் பிரணவ மந்திரத்தின் உட்பொருளை உபதேசித்தருளியதை சுவாமிகள் இங்கு குறிப்பிடுகின்றனர். சாதித்தல் என்ற சொல் குருநாதர் முதலியோர் ஒரு பொருளைத் தருவதற்குக் கூறப்படுஞ் சிறப்புச் சொல்லாகும்.

**கந்தச் சுவாமி:—**

கந்தனாகிய சுவாமி என இருபெயரொட்டுப் பண்புத் தொகையாகும். கந்தன் என்ற சொல்வடமொழிக் காந்தத்தில் பகைவர்களை வற்றச் செய்பவன் என்ற பொருளிலும், தென்மொழிக் காந்தத்தில் ஒன்று சேர்க்கப் பட்டவன் என்ற பொருளிலும் வருகின்றது.

"ஸ்கந்தயதி சத்ரூன் சோஷயத்தீதி ஸ்கந்த:" —அமரம்.

"அன்னவள்கண் டவ்வுருவ மாறினையும்—தன்னிரண்டு
கையா லெடுத்தணைத்துக் கந்தனெனப் பேர்புனைந்து
மெய்யாறு மொன்றாக மேவுவித்து" —கந்தர்கலிவெண்பா.

**என்னைத் தேற்றிய பின்னர்:—**

அருணகிரிநாதருக்கு ஆறுமுகப்பெருமானே குருவாகத் தோன்றி உபதேசித்தும், தனது அருட்டிருமேனியைக் கனவிலும் நனவிலும் காட்டிப் பலகாலும் ஆட்கொண்டும், ஜெபமாலை தந்தும் அருள்புரிந்தனர்.

"அறிவுமறி தத்துவமும் அபரிமித வித்தைகளும்
அறியென இமைப்பொழுதில் வாழ்வித்த வேதியனும்"
—திருவகுப்பு.

"எட்டிரண்டு மறியாத என்செவியில்
எட்டிரண்டு மிதுவா மிலிங்கமென
எட்டிரண்டும் வெளியா மொழிந்தகுரு முருகோனே"
—திருப்புகழ்.

"அரிதா கியமெய்ப் பொருளுக் கடியேன்
உரிதா உபதேசமுணர்த்தியவா" —அநுபூதி.

இன்னும் பலப்பல இடங்களில் சுவாமிகள் தனக்குக் கிடைத்த திருவருளை வாயாரக் கூறி மகிழ்ந்திருப்பதை ஆங்காங்கு காண்க.

'முன்னர் வந்து வெருட்டிய காலன் இப்போது என்னை வெருட்ட முடியாது' என்று உறுதி கூறுகின்றனர்.

சத்திவாளொன்றினல்...துணிப்பன்...த்ரிசூலத்தையே:—

"ஒருவேளை காலன் எனது உயிர்நிலையைக் கருதாது வருவானேல், என் ஐயன் எனக்குத் தந்த சத்திவாட் படையால் தணிதலில்லாத சினத்துடன் கூடிய நமனுடைய திரிசூலத்தைப் பிளந்தொழியப் பொடிபடுத்துவன்" என்று சுவாமிகள் கூறும் வீரவசனங்களை ஊன்றிப் பார்க்குங் கால் எத்துணை வீர உணர்ச்சி யெழுகின்றது என்பதை அன்பர்கள் உணர்க.

"வாராதக லந்தகா வந்தபோதுயிர் வாங்குவனே"

"கட்டிப் புறப்படடா சத்திவாளென்றன் கையதுவே"

என வரும் திருவாக்குகளையும் உய்த்துணர்மின்; இது வேற்படையையுடைய செவ்வேளை எவ்வேளையுஞ் சிந்திப் பதனல் வருந்திறம். "ஆபத்திலஞ்சே லென்ற பெருமாளும்," "அஞ்சா நெஞ்சாக்கந் தரவல பெருமாளும்" அப் பரமபதியன்றே?

"தேவரே முத லுலகங்கள் யாவையும் சிருட்டியாதிய செய்யும்
மூவரே யெதிர் வருகினும் மதித்திடேன்"

என்ற வடலூர் வள்ளலார் வாக்கையும் ஒப்ப நோக்கி உவகையுறுக. "அஞ்சுமுகந் தோன்றில் ஆறுமுகந் தோன்றும்", "சலங்காணும் வேந்தர் தமக்கு மஞ்சார் யமன் சண்டைக் கஞ்சார்; துலங்கா நரகக் குழியணுகார்", "காலனையும் வென்ருேம் கடுநரகங் கைகழன்ருேம்", "நாமார்க்குங் குடியல்லோம் நமனை யஞ்சோம்" என வருந் திருவருள் தெய்வ அமிர்தத் திருவாக்குக ளெல்லாம் எத்துணை இன்பமும் எழுச்சியும் தருகின்றன என்பதை அன்பர்கள் உற்று நோக்குக. அவைகளைச் சிந்தித்து வேலை வணங்குவதே வேலையாகக் கொண்டு அச்சத்தை யகற்றி அருள் பெறுதல் வேண்டும்.

## கருத்துரை

சிவபெருமானுக்கு உபதேசித்த செவ்வேட்பரமன் எனக்கும் உபதேசித்துத் தேற்றியதனுல் இனி இயமன் என்னை யடைய முடியாது; கால பயமில்லை.

## 70

விழிக்குத் துணைதிரு மென்மலர்ப் பாதங்கள் மெய்ம்மைகுன்ரு
மொழிக்குத் துணைமுரு காவெனு நாமங்கண் முன்புசெய்த
பழிக்குத் துணையவன் பன்னிரு தோளும் பயந்ததனி
வழிக்குத் துணைவடி வேலும்செங் கோடன் மயூரமுமே.

## பதவுரை

விழிக்கு துணை=நமது கண்களுக்குத் துணையாவது, திருமெல் மலர் பாதங்கள்=முருகப்பெருமானுடைய மேன்மை பொருந்தியதும் மென்மையானதும் தாமரை மலர்போன்றதுமாகிய திருவடிகளே, மெய்ம்மை குன்ரு=உண்மையில் ஒரு சிறிதுங் குறையாத, மொழிக்கு துணை=சொல்லுக்குத் துணையாவது, முருகா எனும் நாமங்கள்=முருகா என்று கூறும் அப் பரமபதியினுடைய திருநாமங்களே, முன்புசெய்த பழிக்குதுணை=நாம் முற்பிறப்பிற் செய்த பழியைத் தருகின்ற பாவத்தையகற்றுவதற்குத் துணையாவது, அவன் பன்னிருதோளும்=அத்திருமுருகேசனுடையபன்னிருபுயங்களுமே, பயந்த தனி வழிக்கு துணை=அஞ்சுந் தன்மையுடைய தனிமையான வழிக்குத் துணையாவது, செங்கோடன்=திருச்செங்கோட்டில் எழுந்தருளியுள்ள கந்தப்பெருமானுடைய, வடிவேலும்=கூர்மை பொருந்திய வேலாயுதமும், மயூரமுமே=மயிலுமேயாம்.

## விரிவுரை

**விழிக்குத் துணை திரு மென்மலர்ப் பாதங்கள்:—**

கண்கள் படைத்ததற்குப் பயன் .கந்தப் பெருமானுடைய கழலிணைகளைக் கண்டு களிப்பதேயாம். பெருமானுடைய திருவடி மென்மை பொருந்தியது. திரு என்ற சொல் இங்கே ஞானம் என்ற பொருளில் வருகின்றது. ஞானமே இறைவ

னுடைய திருவடி. அறிவு நுட்பமானது. ஆதலினல் மெல்லிய திருவடியென்றும், ஞானங் கமழ்வது ஆதலினுல் மலர்ப்பாதங்கள் என்றும் கூறியருளினர். ஞானம் ஒளிமய மாக விளங்குவது; கண்ணும் ஒளிக்கு உறைவிடம் ஆனபடி யால் ஒளியையுடைய கண்ணுக்கு ஞான ஒளி வீசும் முருக வேளுடைய திருவடி துணையென்றனர்.

"கண்களிரண்டும் அவன் கழல் கண்டு களிப்பன வாகாதே" என்ருர் மணிவாசகரும்.

அழகிய தோற்றங்களைப் பார்ப்பதில் கண்ணுக்கு ஒரு பெரிய மகிழ்ச்சி; நல்ல பூமரம், பசும்பயிர், ஓவியங்கள், புதிய வெள்ளம், நீலக்கடல், மேகங்கள் படர்ந்த நீலவானம் முதலிய வனப்புகளைக் காணும்போது கண்கள் தம்மை யறியாமல் இமைக்குந் தொழிலை மறந்து விடுகின்றன. இனி அழகுக் கெல்லாம் தலைசிறந்த கருவூலம் மன்மதன். மதனன் என்ற சொல்லுக்கே மகிழ்ச்சியை விளைவிப்பவன் என்பது பொருள். அழகின் சொரூபமாகிய மன்மதன் ஆயிரங் கோடி ஒருங்கு கூடி நின்ருல் அந்த அழகும் எந்தை கந்தவேளுடைய திருவடியின் அழகுக்கு இணையாகாது; இதனை நெடுவேலண்ணலை நேரே பார்க்கும் பேறு பெற்ற சூரபன்மன் வியந்து கூறுகின்றுன்.

ஆயிர கோடி காம ரழகெலாம் திரண்டொன் ருகி
மேயின வெனினுஞ் செவ்வேள் விமலமாஞ் சரணம் தன்னில்
தூயநல் லெழிலுக் காற்ரு தென்றிடி லிணைய தொல்லோன்
மாயிரு வடிவிற் கெல்லாம் உவமையார் வகுக்க வல்லார்.

"ஆண்டவனே! ஞானமணங் கமழ்கின்றதும், சிறந்த பண்களால் அடியார்கள் பரவித் துதிக்கின்றதுமாகிய உனது திருவடிக் கமலங்களின் அழகினை இப் பாவியாகிய அடியேன் கனவிலேனும் பார்ப்பேனே? அங்ஙனம் பார்த்தால் கண்ணேறு படுமென்ருே காட்டாமல் ஒளித்து வைத்தனை" என்று அருட்பிரகாச வள்ளலார் கல்லுங் கரையுமாறு கூறுவது காண்க.

"பண்ணேறு மொழியடியார் பரவி வாழ்த்தும்
பாதமல ரழகினையிப் பாவி பார்க்கில்
கண்ணேறு படுமென்றோ கனவி லேனுங்
காட்டென்றால் காட்டுகிலாய் கருணையீதோ?"

'நாயினேன்றன் கண்ணினை நின் திருப்பாதப் போதுக்காக்கி" என்றார் மாணிக்கவாசகரும். ஆதலினால் கண்களுக்குத் துணை கந்தக் கடவுளின் கழலிணைக் கஞ்சங்களே.

**மெய்ம்மைகுன்றா மொழிக்குத்துணை முருகாவெனு நாமங்கள்:—**

மொழி என்று கூறாமல் மெய்ம்மை குன்றா மொழி என்றது அறிஞர் கருதற்குரியது. மொழியாகிய மலரில் சத்தியமாகிய மணங் கமழ்தல் வேண்டும். அத்தகைய உண்மை வழுவாத மொழிகளுக்குத் துணை முருக நாமங்களாம். நாமம் என்று கூறாது நாமங்கள் என்று பன்மையாகக் கூறியது சிந்தனைக்குரியது. அதற்குப் பல காரணங்கள் உள. எல்லா நாமங்களினும் சிறந்தது முருகா என்னும் நாமம்; அன்றியும் பல நாமங்களின் பொருள்கள் இந்த முருகா என்ற ஒரு நாமத்திற்குண்டு. வடமொழியில் மகாவாக்யம் என்ற உயர்ச்சியுடைய சொல் உண்டு. அதுபோல் முருகா என்பது மகாவாக்கியமாகும். "அரும் பெறல் மரபின் பெரும் பெயர் முருக" என்றார் நக்கீர தேவர்.

முருகப்பெருமான் சரவணப் பொய்கையில் அருள்மேனி தாங்கி வெளிப்பட்ட இடத்திலேயே, "ஒரு திரு முருகன் வந்தாங் குதித்தன னுலகமுய்ய" என்றார் கச்சியப்ப சிவாச்சாரியர்.

"அஞ்சுமுகந் தோன்றில் ஆறுமுகந் தோன்றும்
வெஞ்சமரந் தோன்றில் வேல்தோன்றும்—நெஞ்சில்
ஒருகால் நினைக்கில் இருகாலுந் தோன்றும்
முருகாவென் றோதுவார் முன்"

என்ற அருமைப் பாடலையும் உற்று நோக்குக.

"ஆவி பிரியும்போது, 'முருகா! முருகா! முருகா!' என்று மூன்று முறை கூறுமாறு அருள் புரியும்" என்று அருணகிரி நாதர் பிரிதோரிடத்தில் கூறியிருப்பதும் ஈண்டு நினைத்தற்குரியது.

"ஆதிவிதியோடு பிறழாத வகை தேடி யென
தாவிதனையே குறுகி வருபோது
ஆதிமுரு காதிமுரு காதிமுரு காஎனவும்
ஆதிமுருகா நினைவு தருவாயே"

"முருகா என ஓர் தரமோ தடியார்
முடிமேல் இணைதாள் அருள்வோனே"
—திருப்புகழ்.

"படிக்கின்றிலை பழநித்திருநாமம் படிப்பவர் தாள்
முடிக்கின்றிலை முருகாஎன்கிலை" —அலங்காரம்.

**முன்புசெய்த பழிக்குத் துணை அவன் பன்னிரு தோளும்:—**

முற்பிறப்புக்களில் செய்த சஞ்சித வினைகளை நீக்குதற்கு உறுதுணை முருகவேளுடைய பன்னிரு புயங்களே. பாவத்தினும் வருவது பழியாதலால் காரணத்தைக் காரியமாக உபசரித்தார். பழி இம்மையில் நிற்பது. பாவம் மறுமையில் வருவது. இப்பிறப்பிற் செய்வது ஆகாமியம்; முருகனை வழி படுவோர் இப்பிறப்பில் வினை புரியாராதலின் முன்பு செய்த பழி என்றனர். வினைத் தொகுதிகளைத் தகர்த்துப் பொருதழிப்பது புயமாதலின் பன்னிரு தோளும் என்று கூறி யருளினர்.

**பயந்த தனிவழிக்குத் துணை வடிவேலும்... ..மயூரமும்:—**

தனித்து துணையின்றிச் செல்லும் வழியில் துணையாக வந்து உதவுவன வேலும் மயிலுமேயாம். இனி தனிவழி யென்பது, உற்றார் உறவினர்களாகிய அனைவரும் கைவிட மெய்விட்டு கூற்றுவன் பின்,செல்லும் வழியெனக் கொள்வது மிகவும் பொருந்தும். அத் தனிவழிக்குதவுவன வேலு மயிலுமே.

"ஃ ஃ ஃ நும்மை நேடி வருந்
தொலையா வழிக்குப் பொதி சோறு முற்ற துணையுங் கண்டீர்"
"ஃ ஃ ஃ இடாமல் வைத்த
வங்காரமு முங்கள் சிங்கார வீடு மடந்தையருஞ்
சங்காத மோகெடு வீருயிர் போமத் தனிவழிக்கே"
—அலங்காரம்.

"தனித்துவழி நடக்குமென திடத்துமொரு வலத்துமிரு
புறத்துமரு கடுத்திரவு பகற்றுணைய தாகும்" —வேல்வகுப்பு.

திருச்செங்கோட்டில் அருணகிரியாருக்கு அளவிறந்த காதல் உண்டு; அத்திருத்தலத்தைப் பலவிடத்தும் வியந்து ஆங்காங்கு கூறுமாறு காண்க.

கருத்துரை

கந்தப்பெருமானுடைய கழலிணை விழிக்கும், முருகா வெனு நாமம் மொழிக்கும், பன்னிரு புயாசலம் பழி பாவங்கட்கும், வேலுமயிலும் வழிக்கும் துணையாக நின்றருள் புரியும்.

## 71

துருத்தி யெனும்படி கும்பித்து வாயுவைச் சுற்றிமுறித்
தருத்தி யுடம்பை யொறுக்கிலென் னாஞ்சிவ யோகமென்னுங்
குருத்தை யறிந்து முகமா றுடைக்குரு நாதன்சொன்ன
கருத்தை மனத்தி லிருத்துங்கண் டீர்முத்தி கைகண்டதே.

பதவுரை

துருத்தி எனும்படி கும்பித்து=(கர்மயோகிகளே!) தோலினாற் செய்யப்பட்ட துருத்தி என்று சொல்லும்படி கும்பகஞ் செய்து, வாயுவை சுற்றி முறித்து=பிராணவாயுவைச் சுழற்றி முறியச் செய்து, அருத்தி உடம்பை ஒறுக்கில் என்னும்=வாயுவையேஉண வாக உண்பித்து இந்த உடம்பை துன்புறுத்துவதனால் ஆகிய பயன் யாது? சிவயோகம் என்னும்=சிவயோகம் என்று கூறுகின்ற, குருத்தை அறிந்து=மூளையைத் தெரிந்து, முகம் ஆறு உடை= ஆறு திருமுகங்களையுடைய, குருநாதன் சொன்ன=சற்குருநாத ராகிய முருகப்பெருமான் உபதேசித்தருளிய, கருத்தை மனத்தில் இருத்தும் கண்டீர்=திருக்கருத்தை உங்கள் மனத்தில் நிலைபெறச் செய்வீர்களாக, முத்தி கைகண்டது=முத்தி இன்பமானது கைக் கெட்டினதாகும்.

## விரிவுரை

இப்பாடலில் அருணையடிகள் சிவயோகத்தின் நுட்ப மறியாது உடம்பை ஒறுத்துப் புரியும் அடயோகத்தை மறுக்கின்றனர்.

துருத்தியெனும்படி கும்பித்து:—

துருத்தி-கன்னுன் உலைக்களத்திலுள்ள தோலாற் செய்த காற்றுத் துருத்தி, அந்தத் துருத்தியைப் போல் பிராணவாயு வைப் பிடித்து குடல் நிறைய நிறுத்தி அசைவற்று நிற்றல்; வலுவில் வாயுவை அடக்கி அதனுல் மனத்தை யடக்குதல். இது அடயோக சாதனம்.

"அனித்தமான ஊனுளு மிருப்பதாக வேநாசி
அடைத்து வாயு வோடாத வகைசாதித்
தவத்திலேகு வால்மூலி புசித்துவாடு மாயாச
அசட்டு யோகி யாகாமல்'' —திருப்புகழ்.

அடயோகத்தின் பயன் ஆயுள் நீடிக்கும். ஞானத்திற்கு அது நேர் சாதனமாகாது. முரட்டுச் சாதனமுமாகும். சற்று சாதனையில் தவறின் தீங்கும் நேரும். அன்பு முறையினு லன்றி அடக்குமுறையால் ஒருவனைக் கட்டுப்படுத்துவது போலும். அடக்குமுறையில் சற்று தவறு நேரின் அடக்குபவனை அவன் சமயம் பார்த்து இடர்ப்படுத்துவ னன்றே?

சோற்றுத் துருத்திச் சுமை சுமப்பக் கண்பிதுங்கக்
காற்றைப் பிடித்தலைந்தேன் கண்டாய் பராபரமே.
—தாயுமானுர்.

உடம்பை ஒறுக்கிலென்னும்:—

அடயோகத்தால் உடம்பு துன்புறும். துன்புறினும் அதற்குரிய ஞானமாகிய பயன் எய்தா தொழிகின்றது. பரகதிக்கு ஞானமே நேர்வழி; ஞானமின்றி எந்த வழியாலும் பரகதி எய்தாது.

''மன்னுதச நாடிமுற்றும்
சுத்திசெய்தும் மூல ப்ராணனோ டங்கியைச்
சோமவட்டத் தடைத்தும்
சொல்லரிய அமுதுண்டும் அற்பவுடல் கற்பங்கள்
தோறும் நிலைநிற்க வீறு
சித்தி செய்துஞ் ஞான மலது கதி கூடுமோ''

என்பார் தாயுமானூர்.

சிவயோகமென்னுங் குருத்தை யறிந்து—

யோகம் என்பது மூன்ருவது படி. அது பல பிரிவுகளை யுடையது. அதிற் சிறந்தது சிவயோகம். யோகம் என்ற சொல்லுக்கு ''கூடுவது'' என்பது பொருள். சிவத்தோடு கூடி நிற்பது சிவயோகம். அந்த சிவயோகக் காட்சியில் தானற்றுவிடும். பிறிதொரு பொருளும் தோன்ருது ஒழியும், எல்லாம் சிவமாகக் காணும்.

அண்ட பகி ரண்டம் அனைத்தும் ஒருபடித்தாக்
கண்டவர்கள் கண்டதிருக் காட்சியை நான் காண்பேனே?

என்ருர் சிவராஜயோகச் செல்வராகிய நமது தாயுமானூர்.

''ஐந்து பூதமு மாறு சமயமும்
மந்த்ர வேத புராண கலைகளும்
ஐம்பதோர் விதமான லிபிகளும் வெகுருப
அண்டராதி சரா சரமுமுயர்
புண்டரீகனு மேக நிறவனும்
அந்தி போலுரு வானு நிலவொடு வெயில்காலும்
சந்த்ர சூரியர் தாமு மசபையும்
விந்து நாதமு மேகவடிவம
தன் சொருபம தாக வுறைவது சிவயோகம்''

என்று நம் அருணையடிகள் விராலிமலைத் திருப்புகழில் சிவயோகத்தின் இலட்சணஞ் சொல்லுமாறு காண்க.

சரியை கிரியை நெறிகளைக் கடைப்பிடித்து அந் நன்னெறிகளில் உறைத்து நின்ருர்க்கு அதன் பயனுகவும் குரு

நாதரின் தண்ணருளாலும் சித்திப்பது சிவயோகம்; சிவ யோகத்தின் சுவைதான் சிவஞானம்.

சரியை, கிரியை, யோகம், ஞானம் என்ற நான்கும் ஒன்றை ஒன்று சார்ந்துளது. ஒன்றின்றி ஒன்று நிலை பெருது. முறையே இவற்றை அநுசரிக்க வேண்டும்.

பால்போலே சரியை; பாலினின்றும் வெளிப்பட்ட வெண்ணெயைப் போலே கிரியை; வெண்ணெய் உருகி அதனின்றுந் தோன்றிய நெய் போலே சிவயோகம்; அந்த நெய்யின் சுவை போலே திகழ்வது சிவஞானம்.

இன்னும் அரும்பு சரியை; மலர் கிரியை; காய் யோகம்; பழம் ஞானம் எனவும் கூறுவதுண்டு.

விரும்புஞ் சரியைமுதல் மெய்ஞ்ஞான நான்கும்
அரும்புமலர் காய்கனிபோ லன்ருே பராபரமே.

—தாயுமாஞர்.

முகமாறுடைக் குருநாதன் சொன்ன கருத்து:—

அருணகிரிநாதருக்கு ஆறுமுகக்கடவுள் குருவுருவாக வந்தருளி உபதேசித்தருளினர். அவ்வுபதேசமாவது "சும்மா இரு சொல்லற" என்பதாம். அதன் கருத்து "பேசா அநுபூதி". தனக்கு முருகன் உபதேசித்த உபதே சத்தின் அருமையைச் சுவாமிகள் பல இடங்களில் பாராட்டி மகிழ்கின்றனர். "அதனை எவ்வாறு கூறுவேன்" என்றும், அந்த அநுபவத்தை அவ்வாறு அறிவார்க்கல்லது அறைய வொண்ணுதெனவும் அறிவிக்கின்றனர்.

செவ்வா னுருவில் திகழ் வேலவனன்
றெவ்வாததென உணர்வித் ததுதான்
அவ்வாறறிவா றறிகின்றதலால்
எவ்வா றெருவர்க் கிசைவிப்பதுவே. —அநுபூதி

தேனென்று பாகென் றுவமிக்கொணு மொழித் தெய்வ வள்ளி
கோனன் றெனக்குப தேசித்த தொன்றுண்டு கூறவற்ருே
வானன்று காலன்று தீயன்று நீரன்று மண்ணுமன்று
தானன்று நானன் றசரீரியன்று சரீரியன்றே. —அலங்காரம்.

அருணகிரிநாதருக்கு ஆறுமுகப்பெருமான் கூறிய உபதேச மொழியைத் தவிர வேறு ஒன்றையுந் தாயுமானுர் பொருளாக மதிக்கமாட்டார். இக் கருத்தைத் தாயுமானுருடைய மாணவராகிய அருளையர் கூறுவார்.

"அருணகிரியார்க் காறுமுகன் சொல்லும்
பொருணல மல்லது பொருளென் மதியான்"

தாயுமானுர் எப்போதும் சும்மா இருப்பதற்கே பெரிதும் விரும்புகின்றனர்.

சொல்லும் பொருளுமற்றுச் சும்மா இருப்பதற்கே
அல்லும் பகலுமெனக் காசை பராபரமே
சும்மா இருப்பதுவே சுட்டற்ற பூரணமென்
றெம்மா லறிதற் கெளிதோ பராபரமே.

சுகங்களுக்கெல்லாம் தலையாய சுகம் சும்மா இருப்பதுவே. அதுவே சுகத்தின் சிகரம். சுருதிகள் அனைத்திற்கும் இது சம்மதம்.

சும்மா இருக்கச் சுகஞ்சுக மென்று சுருதி யெல்லாம்
அம்மா நிரந்தரஞ் சொல்லவுங் கேட்டும் அறிவின்றியே
பெம்மான் மவுனி மொழியையுந் தப்பிஎன் பேதைமையால்
வெம்மாயக் காட்டி லலைந்தேன் அந்தோ என் விதிவசமே.

ஆதலினுல் குமரகுருபரராகிய எம்பெருமான் அருணகிரியார்க்கு உபதேசித்ததும், சும்மா இருப்பதுவே சுகமெனச் சுருதிகள் வற்புறுத்துவதும், தாயுமானுராதி அனுபவச் செல்வர்கள் கடைப்பிடித்ததும் ஆகிய சும்மா இருத்தலை ஒரு சிறிதாவது மேற்கொண்டு அனுபவத்திற்குக் கொண்டுவரப் பழகவேண்டும்.

அதனை விடுத்து மூச்சைப் பிடித்து விழி பிதுங்கப் பழகுதல் வேண்டா.

சும்மா இருக்கச் சுகமுதய மாகுமே
இம்மாயா போகமினி ஏனடா —தம்மறிவின்
சுட்டாலே யாகுமோ சொல்லவேண்டாங் கன்ம
நிட்டா சிறுபிள்ளாய் நீ. —தாயுமானுர்.

முத்தி கைகண்டதே:—

இத்தகைய சிவநெறி சென்ருர்க்கு முத்தி கைகண்ட பலனுக எளிதில் சித்திக்கும்; மற்ருர்க்கு எட்டாத தூரத்தில் இருக்கின்றது.

"காட்டிற் குறத்திப் பிரான்பதத்தே கருத்தைப் புகட்டில்
வீட்டிற் புகுத மிகஎளிதே விழி நாசிவைத்து
மூட்டிக் கபால மூலாதார நேரண்ட மூச்சையுள்ளே
ஓட்டிப் பிடித் தெங்கும் ஓடாமல் சாதிக்கும் யோகிகளே"

என்றும் சுவாமிகள் பிறிதோரிடத்தில் இக் கருத்தைத் தெளிவாகவும் சுவையாகவும் கூறுமாறு காண்க. ஆதலினல் அன்பர்கள் உற்று நோக்கி, உய்த்துணர்ந்து அருணகிரிநாதரைக் குருவாகக் கருதி அப் பரம குருநாதர் காட்டிய சிவ யோக நெறியைக் கடைப்பிடித்து, அதில் உரமாக நின்று, உள்ளத்தை ஒடுக்கிச் சும்மா இருந்து சுகம்பெற முயல்வார்களாக.

கருத்துரை

யோகிகளே! அடயோக மார்க்கத்தால் வாயுவையடக்கி உடம்பை ஒறுப்பதால் பயனில்லை; முருகவேள் கூறியபடி சும்மா இருந்து சுகம் பெறுங்கள்.

**72**

சேந்தனைக்கந்தனைச்செங்கோட்டு வெற்பனைச்செஞ்சுடர்வேல்
வேந்தனைச் செந்தமிழ் நூல்விரித் தோனை விளங்குவள்ளி
காந்தனைக் கந்தக் கடம்பனைக் கார்மயில் வாகனனைச்
சாந்துணைப் போது மறவா தவர்க்கொரு தாழ்வில்லையே.

பதவுரை

சேந்தனை=சிவந்த திருமேனியையுடையவரை, கந்தனை= தன் பராக்கிரமத்தால் பகைவர்களை வற்றச்செய்பவரை, செங்கோட்டு வெற்பனை=திருச்செங்கோடு என்னும் திருமலையில் எழுந்தருளியிருப்பவரை, செம் சுடர் வேல் வேந்தனை=சிவந்த ஒளியையுடைய வேலாயுதத்தையுடைய தலைவரை, செம்

தமிழ் நூல் விரித்தோனை=செவ்வையாகிய தமிழ் நூல்களைப் பரவும்படி செய்தவரை, விளங்கு வள்ளி காந்தனை=விளங்குகின்ற வள்ளியம்மையாரது கணவரை, கந்த கடம்பனை=பரிமள மிகுந்த கடப்பமலர்மாலையை அணிந்தவரை, கார் மயில் வாகனனை=மேகத்தைக்கண்டு மகிழ்கின்ற மயிலை வாகனமாக வுடையவரை, சாம் துணை போதும்=உயிர் பிரியும்வரை, மறவாதவர்க்கு=மறவாது நினைப்பவர்க்கு, ஒரு தாழ்வு இல்லையே=எந்த வகையான ஒரு குறையும் உண்டாகாது.

## விரிவுரை

**சேந்தனை:—**

சேந்தன் - சிவந்த நிறமுடையவன்; முருகப்பெருமானுடைய திருமேனி பவளக்குன்று போலவும், செவ்வானம் போலவும், செஞ்சுடர் போலவும் விளங்குவது.

''சுடரனைய திருமேனி''
''அடர்பவள வொளிபாய''
''செவ்வானுருவிற் றிகழ்வேலவன்''

என்ற திருவாக்குகளால் காண்க.

**கந்தனை:—**

கந்தன் என்ற சொல்லுக்குப் பகைவர்களைத் தன் ஆற்றலினால் வற்றச் செய்கின்றவன் என்பது பொருள்.

ஸ்கந்தயதிசத்ரூன் சோஷயதீதி ஸ்கந்த: —நிகண்டு
''அலகில வுணரைக் கொன்ற தோளென''

என்பார் அருணகிரிநாதர்.

இனி, கார்த்திகை மாதர் பொருட்டு ஆறுருக்கொண்ட முருகவேளுடைய ஆறு திருவுருவங்களையும் உமாதேவியார் ஒன்று சேர்த்தருளி எடுக்க மீண்டும் ஆறுருவங்களும் ஒன்று பட்டது. அக் காரணத்தாலும் கந்தன் எனப் பட்டார். கந்தம் – சேர்க்கை. இக்கருத்தை குமரகுருபரர் தமது அமிழ்தினுமினிய தமிழ்ச் சொற்களைத் தொடுத்துப் புனைந்த கந்தர் கலிவெண்பாவில் கூறுமாறு காண்க.

"நறுநீர் முடிக்கணிந்த நாதன்—குறுமுறுவற்
கன்னியொடுஞ் சென்றவட்குக் காதலுருக் காட்டுதலும்
அன்னவள்கண் டவ்வுருவ மாறினையும்--தன்னிரண்டு
கையா லெடுத்தணைத்துக் கந்தனெனப் பேர்புனைந்து
மெய்யாறு மொன்ருக மேவுவித்துச் –செய்ய
முகத்தி லணைத்துச்சி மோந்து முலைப்பால்
அகத்துண் மகிழ்பூத் தளித்துச்—சகத்தளந்த
வெள்ளை விடைமேல் விமலன் கரத்திலளித்
துள்ள முவப்ப உயர்ந்தோனே"

எந்தை சத்திக ளுயிரெலா மொடுங்குறு மெல்லை
முந்து போலவொன் ருகியே கூடிய முறைபோல்
அந்த மில்லதோர் மூவிரு வடிவமொன் ருகிக்
கந்த னென்றுபேர் பெற்றனன் கவுரிதன் குமரன்.

—கந்தபுராணம்.

செங்கோட்டு வெற்பனை:—

திருச்செங்கோட்டிலுள்ள திருமுருகன் மீது அருணகிரி நாதருக்கு அளவிறந்த காதல்; பல இடங்களில் திருச்செங் கோட்டைப்பற்றி வியந்து பாராட்டுகின்றனர்.

"தெய்வத் திருமலைச் செங்கோட்டில் வாழுஞ் செழுஞ்சுடரே"

"வழிக்குத்துணை வடிவேலுஞ் செங்கோடன் மயூரமுமே"

"சேலார் வயற்பொழில் செங்கோடனைச் சென்றுகண்டு தொழ
நாலாயிரங் கண் படைத்திலனே யந்த நான்முகனே"

இன்னும் ஆங்காங்கு வரும்போது கண்டு மகிழ்க.

சேஞ்சுடர்வேல் வேந்தனை:—

வேல் ஞானமாதலின், ஞானபண்டிதனுகிய கந்தப் பெருமான் வேலை விடாது தாங்கியுள்ளார். ஞானம் செம் மையும் ஒளியும் உடையது ஆதலின் "செஞ்சுடர் வேல்" என்றனர்.

செந்தமிழ்நூல் விரித்தோனை:—

உயிருக்கும் உணர்வுக்கும் ஒப்பற்ற நலனைத் தரும் மொழியாதலால் தமிழ் என்னது செந்தமிழ் என்றனர். முருகப்

பெருமானுடைய சாரூபம் பெற்ற அபர சுப்ரமண்யமூர்த்தி களில் ஒருவர், உருத்திரசன்மராகவும், ஞானசம்பந்தராகவும் அவதரித்தனர். இவ்விருவருடைய செயல்கள் பரசுப்ரமண் யத்தின் திருவருளும் ஆணையும் பதிந்து செய்தவை. அரச னுடைய ஆணையும் அருளும் தாங்கிக் கீழேயுள்ள அதிகாரி செய்த செயலை அரசன் செயலாகக் கூறுவது உலகியலிலும் கண்கூடு. இறையனுரகப்பொருளின் உரை கேட்டு அருள் புரிந்ததும், பதினுயிரம் தேவாரப்பதிகம் பாடியருளியதும் ஆகியவற்றைக் குறிப்பிடுகின்றது.

விளங்கு வள்ளி காந்தனை:—

தவமே வடிவாக விளங்குபவர் வள்ளியம்மையார்; தவஞ் செய்வாரைத் தேடிக்கொண்டு இறைவனே சென்று அருள் புரிவன். அதனுலேயே வள்ளியம்மையாரைத் தானே போய் வலிதில் மணந்து மகிழ்ந்தனர்.

செந்தமிழ்க் கடவுளாகிய செவ்வேட்பரமனைப் பல இடங் களிலும் வள்ளிக்கணவன் என்றே குறிக்கின்றனர். இங்கே "செந்தமிழ் நூல் விரித்தோனை" என்ற சொற்ருெடருக்கு அடுத்து "விளங்கு வள்ளிகாந்தனை" என்று அமைத்திருப் பதும் அறிஞர் சிந்திக்கற்பாலது. முருகன் செந்தமிழ்ப் பிரியன். தமிழ்நாட்டில், தமிழ்க் குடியில், தமிழணங்காகத் திருவவதாரம் புரிந்து, தமிழிலே வளர்ந்து தமிழிலே தவழ்ந்து, தமிழிலே இருந்து தமிழிலே வாழ்ந்த தமிழ்த்தாய் வள்ளியம்மை. ஆதலின் அத்தமிழன்னையிடம் தமிழரசாகிய முருகவேள் மிக வும் அன்பு பாராட்டுகின்றனர். வள்ளியம்மை பேசும் தமிழ்ப் பேச்சில் முருகவேளுக்கு மிகவும் வேட்கை.

"தேனுறு கிளவிக்கு வாயூறி நின்றவன்"

"தேனென்று பாகென்றுவ மிக்கொணு மொழித் தெய்வ வள்ளி
கோன்"

"பாகு கனிமொழி மாது குறமகள்"

**கந்தக் கடப்பனை:—**

கடப்பமலர் முருகப்பெருமானுக்கு மிகவும் உகந்தது. அது மெல்லிய மணத்துடன் கூடியது. உருத்திராக்கம் போன்று உருண்ட வடிவமுடையது. மகரந்தப் பொடிகளுடன் மனத்திற்கு மகிழ்ச்சியைத் தரும்; கடப்ப மலரையணிவதால் கந்தப்பெருமானுக்குக் கடம்பன் என்ற திருநாமம் ஏற்பட்டது. 'பூக்குங்கடம்பா' என்பார் நக்கீரர்.

''பலபல பைம்பொன் பதக்கமாரமும்
அடிமை சொலுஞ் சொல் தமிழ்ப் பனீரொடு
பரிமள மிஞ்சக் கடப்ப மாலையு மணிவோனே''

என்ற திருப்புகழடியும் ஈண்டு சிந்தித்தற்குரியது.

''மதுகராரவ மந்திரசிந்துர மணமருத கடம்பு புனைந்தவன்''
—வகுப்பு.

**கார்மயில் வாகனனை:—**

கார் - மேகம். நீருண்டு இருண்டு வரும் மேகத்தைக் கண்டு மயில் மகிழ்ந்து ஆடும். மேகத்திற்கும் மயிலுக்கும் நட்பு. அன்றியும் நீலமேகம் போல் மயிலும் காண்பார்க்கு மகிழ்ச்சியைத் தருகின்றது. மயிலின் கழுத்தும் நீலமாக விளங்கும். ஆதலினலேயே வேறு இடத்தில் ''நீலங்கொள் மேகத்தின் மயில்மீதே'' என்றூர்.

கார்பெற்ற தோகையோ கண்பெற்ற வாண்முகமோ
நீர்பெற்றுயர்ந்த நிறை புலமோ—பார்பெற்று
மாதோடு மன்னன் வரக்கண்ட மாநகருக்
கேதோ வுரைப்பன் எதிர். —புகழேந்திப்புலவர்.

**சாந்துணைப்போது மறவாதவர்க் கொரு தாழ்வில்லையே:—**

இம்மைக்கும் ஏழேழ் பிறவிக்கும் பற்றுகும் எந்தை கந்தவேளை எந்தவேளையும் மறவாமல் உறவாகி உள்ளம் உருகி உருகி நினைத்தல் வேண்டும். அங்ஙனம் உயிர் உடம்பினின்று பிரியும்வரை நினைப்பவர்க்கு யாதொரு குறையும் ஒருபோதும் உண்டாகமாட்டாது.

"நினைவார் கின்னங் களையுங் க்ருபைசூழ் சுடரே"—அநுபூதி.
" ஃ ஃ ஃ மறவாதவர் நினைப்பவை முடிக்குமவன்"
உருகு மடியாரிரு வினைத் தொகையறுக்குமவன்"—வகுப்பு.

உலக சம்பந்தமான நினைவுகளை மாற்றி முருகவேளை இடையறாது நினைத்தல் வேண்டும். இறைவனை மறந்தால் உய்வில்லை. ஒவ்வொரு கணமும் மறவாது நினைத்தல் வேண்டும்.

"அனைத்தும் வேடமாம் அம்பலக் கூத்தனைத்
தினைத்தனைப் பொழுதும் மறந்துய்வனோ" —அப்பர்.

வாழ்வு வரினும் வறுமையால் தாழ்வு வரினும் வடிவேலண்ணலை மறத்தலாகாது.

"வாழினும் வறுமை கூரினு நினது
வார்கழ லொழிய மொழியேனே"
—திருப்புகழ்.

"அறமார் புகழ்தில்லை அம்பலவாண ரடிக்கமலம்
மறவாதிரு மனமே இதுகாண் நன் மருந்துனக்கே"
—பட்டினத்தடிகள்.

*கருத்துரை*

செவ்வேளை எவ்வேளையும் மறவாது சிந்திப்பார்க்கு யாதொரு குறையுமில்லை.

## 73

போக்கும் வரவு மிரவும் பகலும் புறம்புமுள்ளும்
வாக்கும் வடிவு முடிவுமில் லாதொன்று வந்துவந்து
தாக்கு மனோலயந் தானே தருமெனைத் தன்வசத்தே
ஆக்கு மறுமுக வாசொல் லொணுதிந்த ஆனந்தமே.

*பதவுரை*

அறுமுகவா = ஆறுதிருமுகங்களையுடையவரே! போக்கும் = போதலும், வரவும் = வருதலும், இரவும் = இராக்காலமும், பகலும் = பகற்காலமும், புறம்பும் — வெளியும், உள்ளும் = உள்ளிடமும்,

வாக்கும்=சொல்லும், வடிவும்=உருவமும், முடிவும்=இறுதியும், இல்லாதது ஒன்று=ஒன்றுமில்லாததாகிய ஒரு பொருள், வந்து வந்து=அடியேனிடம் வந்துவந்து, தாக்கும்=என்னைப் பொருந்தா நிற்கும், தானே மனோலயம் தரும்=தானாகவே அடியேனுக்கு மன வொடுக்கத்தைத் தருகின்றது, என்னை தன் வசத்தே ஆக்கும்= அடியேனைத் தன்னுடைய வயமாக ஆக்கிக் கொள்ளுகின்றது, இந்த ஆனந் தம்=இந்த இணையற்ற சுகத்தை இத்தன்மைத் தென்று, சொல்ல ஒணாது=கூறுதற்கு முடியாதது ஆகும்.

விரிவுரை

போக்கும் வரவும்:—

இறை போக்குவரவற்றது. யாண்டும் நீக்கமற நிறைந்தது. ஆதலினால் போக்குவரவில்லாத பூரணமாகின்றது.

“போதபரிபூரண அகண்டிதாகாரமாய்ப்
போக்குவர வற்ற பொருளே” —தாயுமானார்.

இரவும் பகலும்:—

இரவு பகலற்றது இறை. கேவல சகலமில்லாதது.

“கங்குல் பகலற நின்ற எல்லையுளதெது”

புறம்புமுள்ளும்:—

உள்ளும் புறமுமாக இருப்பதால் இறை உள்ளும் புறமு மற்றதாக ஆகின்றது.

“உள்ளோடு புறங்கீழ் மேலா யுயிர்தொறு மொளித்து நின்ற
கள்வனை” —பரஞ்சோதி.

வாக்கும்:—

இறை வாக்கிறந்த வான்பொருள்.

‘மாற்றம் மனங்கழிய நின்ற மறையோனே” —திருவாசகம்.

வடிவும் முடிவும்:—

தனக்கென ஓர் வடிவும், முடிவும் இல்லாதது இறை.

“அருவும் ஆகுவன் உருவமு மாகுவன் அருவும்
உருவு மற்றதோர் தன்மையு மாகுவன்” —கந்தபுராணம்.

இல்லாதொன்று:—

மேற்கூறிய தன்மைகள் யாதொன்று மில்லாதது ஒப்பற்ற இறையாகிய முருகவேள் திருவருள்.

வந்து வந்து தாக்கும்:—

மேற்கூறிய இலக்கணங்களுடன் கூடிய தெய்வத் திருவருள் மிகுதியாக வந்து பொருந்துகின்றது. வந்து வந்து என்றது மிகுதியைத் தெரிவிக்கின்றது. பலகாலுந் தவஞ் செய்தார்க்கும் எட்டாத பரம்பொருளின் அருள் அருணகிரி நாதருக்குப் பண்டைத் தவ வலிமையால் வந்து அணுகு கின்றது.

மனோலயந் தானே தரும்:—

திருவருள் வந்து அணுகுகின்றபோது நெடிது முயன் றாலும் கைகூடப்பெறாத மனோலயந் தானே கைகூடி நிற் கின்றது. மனோலயத்தின் பெருமை சொல்லவும் நினைக்க வும் முடியாதது.

“பகரொணாதது சேரவொணாதது
நினையொணாதது வானதயாபர
பதியதான சமாதி மனோலயம் வந்துதாராய்”

தன்வசத்தே ஆக்கும்:—

“மனோலயமானது என்னைத் தன்வசமாக்குகின்றது” என்றனர். உலகவசமாயிருந்த தொழிந்தது.

“உரையவிழ உணர்வவிழ உளமவிழ உயிரவிழ
உளபடியை யுணருமவ ரநுபூதியானதுவும்
உடலுமுட லுயிருநிலை பெறுதல்பொரு ளென உலகம்
ஒருவிவரு மநுபவன சிவயோக சாதனையில்
ஒழுகுமவர் பிறிதுபர வசமழிய விழிசொருகி
உணர்வுவிழி கொடுநியதி”

—திருவகுப்பு.

அறுமுகவா:—

ஆறுதிருமுகங்களின் தன்மையாவது: ஸர்வஞ்ஞத்வம், திருப்தி, அநாதிபோதம், ஸ்வதந்திரம், அலுப்தசக்தி, அநந்தசக்தி என்ற ஆறுகுணங்களே ஆறுமுகம்.

''ஏவர்தம் பாலு மின்றி எல்லைதீ ரமலற் குள்ள
மூவிரு குணனுஞ் சேய்க்கு முகங்களாய் வந்த தென்ன''
—கந்தபுராணம்·

ஆதிசக்தி, பராசக்தி, ஞானசக்தி, கிரியாசக்தி, இச்சா சக்தி, குடிலாசக்தி என்ற ஆறுசக்திகளே ஆறுமுகம் எனினும் அமையும்.

சொல்லொணுதிந்த ஆனந்தமே:—

திருவருள் துணைசெய்ய மனோலயமுற்று தன்வசமாகி நின்றபோது உண்டாகிய ஆனந்தத்தை இத்தன்மைத் தென்று சொல்லமுடியாது.

''தன்னந் தனிநின் றதுதா னறிய
இன்னம் ஒருவர்க் கிசைவிப் பதுவோ''

''அவ்வா றறிவா றறிகின் றதலால்
எவ்வா றொருவர்க் கிசைவிப் பதுவே''

—கந்தரநுபூதி

கருத்துரை

ஆறுமுகக்கடவுளே! போக்குவரவு முதலிய தன்மைகளில்லாத தேவரீருடைய திருவருள் வந்து துணைசெய்து மனோலயமுண்டாக்கி சொல்ல ஒண்ணுத இன்பத்தைத் தரா நின்றது.

74

அராப்புனை வேணியன் சேயருள் வேண்டு மவிழ்ந்தவன்பாற்
குராப்புனை தண்டையந் தாள்தொழல் வேண்டுங்கொடியவைவர்
பராக்கறல்வேண்டும் மனமும்பதைப்பறல் வேண்டுமென்ருல்
இராப்பகலற்ற விடத்தே யிருக்கை யெளிதல்லவே.

## பதவுரை

அரா புனை வேணியன்=அரவத்தை அணிந்த சடை முடியை யுடைய சிவபெருமானுடைய, சேய் அருள்வேண்டும்=திருக்குமார ராகிய முருகக் கடவுளின் திருவருள் வேண்டும், அவிழ்ந்த அன்பால் = மலர்ந்து நெகிழ்ந்த அன்பினால், குராபுனை = குரா மலர் மாலையைப் பூண்டுள்ளதும், தண்டை=தண்டையை யணிந் துள்ளதும் ஆகிய, அம் தாள் = அழகிய திருவடியை, தொழல் வேண்டும்=வணங்க வேண்டும், கொடிய ஐவர் பராக்கறல் வேண்டும்=கொடிய புலன்களாகிய ஐவர்களின் வேடிக்கை ஒழிய வேண்டும், மனமும் பதைப்பு அறல் வேண்டும் = மனமும் துடிப்பு நீங்குதல் வேண்டும், என்றால் = இவ்வாறு இவைகளை எய்துவோ மானால், இராப்பகல் அற்ற இடத்தே = இரவு பகல் இல்லாத இடத்தில், இருக்கை எளிது = அசைவற்றிருத்தல் எளிதாகும்; அல்லவே=அல்லாதவர்க்கு எளிதாகமாட்டாது.

## விரிவுரை

இப் பாடல் மிகவும் சிறந்த அநுபவத்தைக் கூறு கின்றது. கேவல சகலம் என்கின்ற நினைப்பு மறப்பு அற்று இருக்கும் நிலையே ஒப்புயர்வற்ற நிலை. அதிலே பேரின்ப ஊற்றுண்டு. அதை அநுபவித்தவர்கள் வேறு ஒன்றை யுங் கருதமாட்டார்கள். அந்த நிலை வர வேண்டுமானால் கீழ்க்கண்டவைகள் வரவேண்டுமென்கிறார்.

**அராப்புனை வேணியன் சேயருள் வேண்டும்:—**

பாம்பை யணிகின்ற திருமுடியையுடைய சிவபெருமா னுடைய திருக்குமாரராகிய முருகவேள் திருவருள் துணை செய்ய வேண்டும். அப் பரமபதியின் கருணை துணை செய்யா விடில் அத் தனிநிலை எய்தாது.

சர்ப்பம் என்பது பிராணவாயு; சர்ப்பம்போல் சீறி ஓடு கின்ற வாயுவை அதன் போக்கின்படி விடாமல் அடக்குதலைக் குறிக்கின்றது அராப்புனைந்த வரலாறு.

**அவிழ்ந்த அன்பால்......தாள்தொழல் வேண்டும்:—**

மேற்கூறியபடி முருகன் திருவருள் பெறுவதற்கு அவருடைய திருவடியை உருகிய உள்ளமுடன் பணிதல் வேண்டும். இறைவன் திருவடியை வணங்குதற்கு இன்றியமையாதது அன்பே; அவ்வன்பு அவிழ்ந்த அன்பாக அமைதல் வேண்டும்.

> "அன்போ டுருகி யகங்குழைவார்க் கன்றி
> என்போன் மணியை எய்தவொண் ணாதே"

அன்பு வடிவாய ஆண்டவனை அன்பினாலன்றி வேறு ஒன்றாலும் அடைய முடியாது.

**கொடிய ஐவர் பராக்கறல் வேண்டும்:—**

மெய், வாய், கண், நாசி, செவி என்ற ஐம்புலன்களும் நன்னெறி செல்லாமல் தம்மிஷ்டம்போல் தீவழிச் சென்று நரகில் ஆழச் செய்வதால், "கொடிய ஐவர்" என்றார். "கள்ளப்புலனைந்தும்" என்றார் திருமூலர். பராக்கு—செய்யும் தொழிலைவிட்டு வேறு ஒன்றில் புலன்கள் செல்வது.

> "இராப்பகல் பிறிது பராக்கற"

என்றார் பிறிதோரிடத்திலும்; இறைவனை அன்பினால் குழைந்து வழிபடுதற்கு ஒருமைப்பாடு வேண்டும். புலன்களும் பொறிகளும் கூடி நின்றபோது அன்பு தலைப்படும். ஐம்புலன்கள் ஒருவழிப்படாமலேயே மனதில் பலப்பல துன்பங்கள் நேருகின்றன.

> "வனைத்துநின் றைவர் கள்வர் மனத்திடை துயரஞ் செய்து"

என்றார் அப்பர்.

**மனமும் பதைப்பறல் வேண்டும்:—**

புலன்கள் ஒருமுகப் படும்போது மனத்தின் பதைப்பு அற்றுவிடுகின்றது. மனம் அடங்காமையாலேயே பல எண்ணங்களும் அதனால் பிறவிகளும் ஓயாது வருகின்றன. மனமடங்கியவிடத்து மட்டற்ற சுகமுண்டாகின்றது. மனமடங்கு

தற் பொருட்டே வழிபாடு, ஜெபம், ரூபதியானம் முதலிய யாவும் நிகழ்த்தப்படுகின்றன.

"பாழான என்மனங் குவிய ஒரு தந்திரம்
பண்ணுவதுனக் கருமையோ" —தாயுமானுர்.

இராப்பகலற்ற இடத்தே இருக்கை எளிதல்லவே:—

மேற்கூறிய படிகளின் மூலம் இராப்பகலற்ற இடமாகிய மேல்வெளிக்குப் போய், சுகானந்தமாகிய பளிங்கு மேடையில் இருத்தல் வேண்டும். அது எளிதில் கிடைப்பதன்று. மேற்போந்த சாதனமின்றி அதனையடைவது அரிது. இரவு—(கேவலம்) மறப்பு. பகல்-(சகலம்) நினைப்பு. இரண்டுமற்ற நடுவில் இருப்பதுவே சுக வாழ்வு. 'கருதா மறவா நெறிகாண எனக்கு இருதாள் வனசந்தர என்று இசைவாய்' என்று அநுபூதியிலும் வேண்டுகின்றுர்

"ஐங்கரனை யொத்த மனம் ஐம்புலம் அகற்றிவளர்
அந்திபக லற்ற நினைவு அருள்வாயே"

என்றுர் திருப்புகழில். அன்பர்கள் இதனை ஆழ்ந்து சிந்தித்து முருகனை முழுமனதுடன் வந்தித்து இப் பெருநிலையைப் பெறுதற்கு முயலுதல் வேண்டும்.

இரவுபக லற்றவிடத் தேகாந்தயோகம்
வரவுந் திருக்கருணை வையாய் பராபரமே. —தாயுமானுர்.

கருத்துரை

முருகன் கருணை முதலியவைகளால் நினைப்பு மறப்பற்ற சகஜ நிலையைப் பெற்று இனிது வாழவேண்டும்.

**75**

படிக்கின் றிலைபழ நித்திரு நாமம் படிப்பவர்தாள்
முடிக்கின் றிலைமுரு காவென் கிலைமுசி யாமலிட்டு
மிடிக்கின் றிலைபர மானந்த மேற்கொள விம்மிவிம்மி
நடிக்கின் றிலைநெஞ் சமேதஞ்ச மேது நமக்கினியே,

பதவுரை

நெஞ்சமே=ஓ மனமே! பழநி திருநாமம் படிக்கின்றிலை = பழநியில் எழுந்தருளியுள்ள எம்பெருமானது திருநாமங்களைப் படிக்கின்றாயில்லை, படிப்பவர் தாள் முடிக்கின்றிலை=பழநி ஆண்டவர் திருநாமங்களைப் படிக்கின்ற அடியார்களது திருவடிகளைச் சென்னியில் சூடிக்கொள்கின்றாயில்லை, முருகா என்கிலை = முருகப்பெருமானே என்று அப் பரமபதியை அன்புடன் அழைக்கின்றாயில்லை, முசியாமல் இட்டு மிடிக்கின்றிலை=இரப்பவர்கள் பசியால் மெலிவடையாமலிருக்குமாறு வழங்கி அதனால் நீ வறுமையை யடைகின்றாயில்லை, பரமானந்தம் மேற் கொள=பெரிய இன்பம் மிகுந்து வருமாறு, விம்மிவிம்மி நடிக்கின்றிலை = விம்மி விம்மி அழுது கூத்தாடுகின்றாயில்லை, நமக்கு=இவ்வாறு செய்யாத உனக்கும் உன்னுடன் கூடிய எனக்கும், இனி தஞ்சம் ஏது=இனி அடைக்கலமாகப் புகப் பற்றுக்கோடு எங்குளது?

விரிவுரை

**படிக்கின்றிலை பழநித் திருநாமம்:—**

முருகவேள் பழங்காரணமாக உலகை வலம் வந்து, திருவாவினன்குடியில் சென்று தண்டதர சுவாமியாக நின்றனர். சிவபெருமான் உமையம்மையாருடன் சென்று, முருகவேளை நோக்கி, 'பழம் நீ' என்று கூறி எடுத்து அணைத்து அன்பு செய்தனர். அதனால் பழநீ என்றாகி குறுகல் விகாரம் பெற்று பழநி என்றாயிற்று. பொதினி என்பது பழநியென மருவிற்று என்பாரும் உளர். ஞானப் பழமாக விளங்குவதால் முருகன் அப் பேர் பெற்றனர். அவருடைய திருநாமங்களை அன்புடன் ஓதவேண்டும். முருகப்பெருமானுடைய திருநாமங்களைக் கனிந்துருகி ஓதுபவர் பிறவிக்கடலைத் தாண்டுவர்; மிடியால் ஒருபோதுந் துன்பமடையார். படித்தல்–பயிலுதல்; அப் பரமபதியின் நாமங்களை இடையறாது பயிலுதல் வேண்டும்.

**படிப்பவர்தாள் முடிக்கின்றிலை:—**

பழநிமேவும் பரமனைப் பரவி அவருடைய திருநாமங்களைப் படிக்கவில்லையாயினும் படிப்பவருடைய பாத கம

லங்களைச் சென்னிமேற் சூடிக்கொள்ளுதல்வேண்டும். அடியாரை வணங்குதல்வேண்டும்; அடியவர் வணக்கம் சாலவும் சிறந்தது.

"கருணை கூர்ப்பன கழல்க ளார்ப்பன
கால்மேல்வீழேன் வீழ்வார் கால்மீ தினும் வீழேன்"—திருப்புகழ்.

முருகா என்கிலை:—

முருகவேள் திருநாமங்களுள் மிக மிகச் சிறந்தது முருகா என்ற நாமம். "பெரும்பெயர் முருக" என்றார் நக்கீரதேவர் முருகா என்று ஒருமுறை கூறுவோர் முடிமேல் இருதாள் களையும் இறைவன் வைத்தருளுவன்.

"முருகா என ஓர் தரமோ தடியார்
முடிமேல் இணைதாள் அருள்வோனே". —திருப்புகழ்.

முருகு—என்ற சொல் இனிமை, இளமை, மணம், களிப்பு, அழகு முதலிய பல பொருள்களைப் பயந்து விளங்குகின்றது. "முருகா! முருகா!" என்று உள்ளம் உருகி ஓதுபவர்க்கு யாதொரு குறையும் உண்டாகாது. இம்மை மறுமைப்பயன் எளிதில் கிடைக்கும். ஆதலின் முருக நாமத்தை வாய்குளிரக் கூறுதல் வேண்டும்.

முசியாமலிட்டு மிடிக்கின்றிலை:—

வறிஞர்க்கு சலியாமல் வழங்கி வழங்கி வறுமை யடைதல் வேண்டும. "அடியார்க்கு அன்னமளிப்பதனுல் அடையும் தரித்திரமும், விரதமிருப்பதனுல் அடையும் உடல் இளைப்பும் இறைவனே எனக்குத் தந்தருள்வாய்" என்று வரங்களாகக் கேட்கின்ருர் சிவப்பிரகாசர்.

"வெண்டிரு நீறு புனையுமா தவர்க்கு
விருந்துசெய் துறும்பெரு மிடியும்
கொண்டநல் விரதத் தினைக்கும் யாக் கையுமிக்
கொடியனேற் கருளுநா ளுளதோ".

அப்படிக்கின்றி வழக்காடியும், பரத்தையர்க்கீந்தும், மதுவுண்டும், சூதுபோராடியும், பதவிப் போட்டியில் நின்றும்

வறுமையடைதல் கூடாது. அப்படி வழங்கும்போது சலிப் படையாமலிருக்க வேண்டும். அன்றியும் ஏற்போர் சலிப்படை யாமல் மகிழுமாறு வழங்கவேண்டும் எனினும் அமையும்.

மேலும் உறுப்பிழந்தார்க்கு வெறுப்பிலாதீவார் ஆனை யும் சேனையுஞ் சூழும் மன்னராய் வாழ்வார்.

இல்லிழந்தார் கண்ணிழந்தார் ஈண்டியசெல் வம்மிழந்தார்
நெல்லிழந்தார் ஆனிரை தானிழந்தார்க்—கெல்லுழந்து
பண்ணியூ ணீந்தவர் பல்யானை மன்னராய்
எண்ணி யூணுர்வார் இயைந்து. —ஏலாதி.

பரமானந்த மேற்கொள விம்மிவிம்மி நடிக்கின்றிலை:—

மேற்கூறிய வழிபாடுகளால் உள்ளம் நிறைந்து, உவகை சிறந்து, வல்வினை கரைந்து, திருவருள் உறைந்து நிற்ப அதனுல் சிறந்த இன்பம் மேலிட, அந் நிலையில் உண்டான விம்முதலால் பரவசமாகிய ஆனந்தக் கூத்தாடுதல் வேண்டும்.

நெஞ்சமே தஞ்சமேது நமக்கினியே:—

ஏ மனமே! மேற்போந்த நற்செயல்களைச் செய்யாத நமக்கு இனி அடைக்கலம் ஏது? இல்லை. என்கின்ருர். அடைக்கலந் தந்து இறைவன் நம்மைக் காக்கவேண்டு மானுல், அதற்குரிய வழிகள்; பழநித்திருநாமம் படிப்பதும், படிப்பவர் தாள் முடிப்பதும், முரு கா என்பதும், முசியாம லிட்டு மிடிப்பதும், விம்மி விம்மி நடிப்பதும் ஆகும். 'நெஞ்சக் கனகல்லு நெகிழ்ந்துருகத் தஞ்சத்தருள் சண்முக' னுதலின் தஞ்சந் தந்து தண்ணருள் புரிவன். இறைவனிடம் அடைக்கலம் புகுந்தோரை இயமன் அணுகான்.

இப்பாடலில் இன்ன இன்ன செய்தல் வேண்டும் எனக் கட்டளையிடுவாராய், சுவாமிகள் அவற்றை உலகினர்க்குக் கூறத் துணிந்து, உலகினர் அதனைக் கேளா தொழிவரோ என ஐயுற்று தனது நெஞ்சிற்குக் கூறுவார்போல் கூறுகின்றனர்.

*கருத்துரை*

நெஞ்சமே! உனக்கு முருகவேள் தஞ்சமளித்துத் தண்ணருள் புரியவேண்டுமானல், பழநித் திருநாமத்தைப் படிப்பாயாக. படிப்பவர் தாள் முடிப்பாயாக. முருகாவென்று மொழிவாயாக. அறம் புரிவாயாக. ஆனந்த மேலீட்டால் ஆடுவாயாக.

## 76

**கோடாத வேதனுக் கியான்செய்த குற்றமென் குன்றெறிந்த**
**தாடாள னேதென் றணிகைக் குமரநின் றண்டையந்தாள்**
**சூடாத சென்னியு நாடாத கண்ணுந் தொழாதகையும்**
**பாடாத நாவு மெனக்கே தெரிந்து படைத்தனனே.**

*பதவுரை*

குன்று எறிந்த=கிரவுஞ்சமலை பிளவுபடுமாறு வேலாயுதத்தை ஏவிய, தாடாளனே=மிகுந்த முயற்சியை யுடையவரே! தென் தணிகை குமர=தென் திசையிலுள்ள திருத்தணிகை என்னுந் திருத்தலத்தில் எழுந்தருளியுள்ள குமரக்கடவுளே! நின் தண்டை அம் தாள்=தேவரீருடைய தண்டையணிந்த அழகிய திருவடியை, சூடாத சென்னியும்=அணிகலமாகச் சூடிக்கொள்ளாத தலையும், நாடாத கண்ணும்=உமது திருவடியைக் கண்டு மகிழாத கண்களும், தொழாத கையும்=உமது திருவடியைக் கூப்பி வணங்காத கரங்களும், பாடாத நாவும்=உமது திருவடிப் புகழைத் துதித்துப் பாடாத நாவும், எனக்கே தெரிந்து படைத்தனன்=எனக்கென்றே தெரிந்து உண்டாக்கி வைத்தனன், கோடாத வேதனுக்கு=தனது தொழில் முறையில் கோணுதல் இல்லாத பிரமதேவனுக்கு, யான் செய்த குற்றம் என்=அடியேன் புரிந்த பிழை யாதோ?

*விரிவுரை*

**கோடாத வேதன்:—**

கோடுதல்-கோணுதல்; வேதன்-பிரமன்; வேதங்களில் வல்லவன். பிரமதேவர் தனது தொழிலில் பட்சபாதமின்றி உயிர்களின் நல்வினை தீவினைக்குத் தக்கவாறு படைப்புத்

தொழிலை நிகழ்த்துகின்றனர். அவருடைய எழுத்தின்படியே யாவும் நிகழும். ''எழுதாக் குறைக்கு அழுதால் வருமோ'' என்பது பழமொழி. எல்லோருக்கும் இன்னபடி என்று விதிப்பதால் அவருக்கு ''விதி'' என்பது பேர்.

யான் செய்த குற்றமென்:—

முருகவேளே! பிரமன் எனக்கு உமது வழிபாட்டில் ஈடுபடாத உறுப்புகளைப் படைத்தனன்; அதற்கு அப் பிரமனுக்கு யான் என்ன குற்றம் செய்தனன்? தேவரீர் தானே பிரமனுக்குப் படைப்புத் தொழிலைக் கொடுத்தவர். அவரைக் கேட்டு நியாயத்தை நிறுத்துவது உமது கடனல் லவா? அடியேன் ஒரு குற்றமும் செய்தேனில்லையே. கருணைக் கடலாகிய தேவரீரிடம் இந்த விண்ணப்பத்தைத் தருகிறேன்'' என்று சுவாமிகள் குறிப்பிடுகின்றனர்.

குன்றெறிந்த தாடாளன்:—

தாரகனுக்குத் துணையாக நின்று, பல வஞ்சனைகளையும் மாயைகளையும் புரிந்து இலக்கத் தொன்பான் வீரர்களையும் மயக்கிய கிரௌஞ்ச மலையை வடிவேலை ஏவிப் பிளந்தமை யால் முருகக் கடவுளைத் 'தாடாளன்' என்றனர். தாடாளன்–முயற்சியுடையோன்.

தண்டையந்நாள்:—

முருகவேள் என்றுமகலாத இளமையுடையவராதலின் அவருடைய திருவடிகள் தண்டைகளால் விளங்குகின்றன. அவை சிறந்த இரத்தினத் தண்டைகள். தாரகன் எம்பெரு மானைக் கண்ட காட்சியைக் கூறும் பகுதியில் கச்சியப்பர் கூறுமாறு காண்க.

''ஃ ஃ ஃ அணிமணித் தண்டையார்க்குஞ்
செழுமல ரடியுங் கண்டான் அவன்தவஞ் செப்பற் பாற்றே''

—கந்தபுராணம்.

''தண்டையணி வெண்டையங் கிண்கிணி சதங்கையுந்
தண்கழல் சிலம்புடன் கொஞ்சவே'' —திருப்புகழ்

**தாள் சூடாத சென்னியும்:—**

இறைவனுடைய திருவடியே தலைக்குச் சிறந்த அணிகலமாகும். ஆண்டவனுடைய அடிமலரை வணங்குதற்காகவே தலை ஏற்படுத்தப்பட்டது. 'வணங்கத் தலைவைத்து' என்பார் மணிவாசகர். 'பாதமலர் சூடுகின்றிலை' என்ற மணிமொழியையும் உன்னுக. சிறந்த உடம்பையும், உடம்புக்குள் கரணங்களையும், உலகங்களையும், நுகர்வுகளையும் வழங்கிய வள்ளலாகிய இறைவனை வணங்காத தலையைப் பற்றி இராமலிங்க அடிகள் கூறுமாறு காண்க.

வீட்டுத் தலைவனின் முன்வணங் கார்தம் விரிதலைசும்
மாட்டுத் தலை; பட்டி மாட்டுத்தலை; புன் வராகத் தலை;
ஆட்டுத் தலை; வெறி நாய்த் தலை; பாம்பின் அடுந் தலை; கற்
பூட்டுத் தலை; வெம்புலைத்தலை; நாற்றப் புழுத்தலையே.

தலையே நீ வணங்காய்—தலைமாலை தலைக்கணிந்து
தலையாலே பலி தேருந் தலைவனைத்
தலையே நீ வணங்காய். —அப்பர்.

இறைவனை வணங்காத தலை மறுபிறப்பில் ஓயாது சும்மாடு கட்டி 'கூலியோ கூலி' யென்று கூவி சுமை சுமந்தும் இடுகாட்டிற்கு விறகு சுமந்தும் துன்புறும்.

சும்மாடு கட்டிச் சுமந்துழலு வார்சிலரை
இம்மா நிலத்தில் எண்ணுங்கால்—அம்மாநின்
பொன்னு ரடிமுடியைப் போற்றாத பேரன்றே
மன்னு சிதம்பரதே வா. —குருநமசிவாயர்.

"எங்கள் பெரு மானுன்னை வணங்காத மூடர்தலை
இகழ்விற கெடுக்குந் தலை" —இராமலிங்கர்.

இறைவனை அன்புடன் வணங்கிய தலை மறுபிறப்பில் மணிமுடி புனைந்து பலர் வணங்க பெருமித முடையதாய்ச் சிறப்புற்று விளங்கும்.

"அப்பநின் திருவடி வணங்கினோர் தலைமுடி
அணிந்தோங்கி வாழுந் தலை" —அருட்பா.

நாடாத கண்ணும்:—

கண்கள் படைத்ததன் பயன் இறைவனுடைய அருள் திருமேனியைக் கண்டு மகிழ்வதேயாம். 'கண்ணினை நின் திருப்பாதப் போதுக்காக்கி' என்றார் மணிவாசகனார்.

கண்காள் காண்மின்களோ—கடல் நஞ்சுண்ட கண்டன்றனை
எண்டோள் வீசிநின் றாடும்பி ரான்றனைக்
கண்காள் காண்மின்களோ. —அப்பர்.

இறைவனுடைய திவ்ய மங்கள வடிவைக் காணாது உலகி லுள்ள பகட்டுப் பொருள்களைக் கண்டு களிக்கும் கண்களைப் பற்றி வடலூர் வள்ளலார் கூறுமாறு காண்க.

தெண்ணீர் முடியானைக் காணார் தங் கண் இருள் சேர்குருட்டுக்
கண்ணீர் சொரிந்தகண்; காசக்கண்; புன்முலைக்கண்; நகக்கண்
புண்ணீர் ஒழுகுங் கொடுங்கண்; பொறாமைக்கண்; புன்கண்; வன்கண்;
மண்ணீர்மை யுற்றகண்; மாமணி நீத்தகண்; மாலைக்கண்ணே.

"கந்தநின் திருமேனி காணாத கயவர்கண்
கலநீர் சொரிந்த அழுகண்"
"மெய்யநின் திருமேனி கண்டபுண் ணியர்கண்கள்
மிக்கவொளி மேவு கண்கள்" —திருஅருட்பா.

இறைவனுடைய திருமேனியைக் காணாத கண்கள் மறு பிறப்பில் ஒழியாமல் துன்பத்தினால் அழுதுகொண்டிருக்கின் றனவாயும், திருமேனியைக் கண்டு களித்த கண்கள் நல்ல ஒளியை யுடையனவாய் நலமுடன் விளங்குகின்றனவாயும் முறையே இடரும் இன்பமும் எய்துகின்றன.

தொழாத கையும்:—

கைகளால் இறைவனைக் கூப்பித் தொழுதும், நறுமலர் களைக் கொண்டு அருச்சனை புரிந்தும், ஏனைய தொண்டுகள் புரிந்தும் வாழுதல் வேண்டும். 'கரே தஸ்ய க்ருத்யம்' என்ற

சுப்ரமண்ய புஜங்கத் திருவாக்கையும், ‘எங்கை யுனக்கல்லா தெப்பணியுஞ் செய்யற்க’ என்ற மணிவாசகத்தையும் உன்னுக.

கடவுளைத் தொழாத கைகள் மறுபிறப்பில், பிறர் நகைக்க மனைதொறும்போய் பல்லையிளித்து ஐயா! ஐயா! என்று அரைகாசுக்கும் விரித்து நீட்டி இடறுரும். தொழுத கைகள் கடகம் மோதிரம் முதலிய அணிகலன்களால் சிறந்து யாசிப்பவர்க்குப் பொற்காசுகளை அள்ளிக்கொடுக்கும் பெருமையுடன் விளங்கும்.

ஏசும் பிறர்மனையில் எய்தியவ ரீயுமரைக்
காசும் பெறவிரிக்குங் கைகண்டாய்—மாசுந்த
விண்டுஞ் சிரங்குனிக்கும் வித்தகனே நின்தலத்தைக்
கண்டுஞ் சிரங்குவியாக் கை.

“பரமநின் றிருமுன்னர் குவியாத வஞ்சர்கை
பலியேற்க நீள் கொடுங்கை”

“தோன்றலுன் றிருமுன் குவித்தபெரி யோர்கைகள்
சுவர்னமிடு கின்றகைகள்” —வடலூர் வள்ளலார்.

பாடாத நாவும்:—

ஏனைய பிராணிகள் நாவிருந்து பேசும் இயல்பிலவாயின. நாக்கு மென்மையாக அமையாமையும், அந்த நாவுக்கு அனுகூலமான உட்கருவிகள் அமையாமையுமே காரணங்களாம். மனிதனுக்கு நாவை மிகவும் மென்மையாகப் பேசுவதற்கு அனுகூலமாக இறைவன் அமைத்துள்ளான். ஆதலின் அவ்விறைவனுடைய அருட்குணங்களை நாவாரப் பாடவேண்டும்.

இவ்வாறு இறைவனைத் தலையாரக் கும்பிட்டும், கண்களாரச் சேவித்தும், கையாரக் கூப்பித் தொழுதும், நாவாரப் பாடியும், நெஞ்சார நினைந்தும் அன்பு செய்து அருட் செல்வத்தைப் பெறுதற்குப் பெரிதும் முயற்சிக்க வேண்டும். பல காலும் புரிந்த நல்வினைப்பயனால் கிடைத்த மனிதப் பிறப்பை வறிதாக்கி வாழ்நாளை வீழ்நாளாக்கக் கூடாது.

கண்ணுண்டு காணக் கருத்துண்டு நோக்கக் கசிந்துருகிப்
பண்ணுண்டு பாடச் செவியுண்டு கேட்கப்பல் பச்சிலையால்
எண்ணுண்டு சாத்த எதிர்நிற்க ஈசன் இருக்கையிலே
மண்ணுண்டு போகுதையோ கெடுவீர் இந்த மானிடமே.
—பட்டினத்தடிகள்.

## கருத்துரை

முருகா! குமாரமூர்த்தி! தேவரீரை வணங்காத தலையும், காணாத கண்ணும், தொழாத கையும், பாடாத நாவும் ஆகிய இவைகளை எனக்குப் படைக்க அடியேன் அயனுக்குச் செய்த பிழை யாது?

## 77

சேல்வாங்கு கண்ணியர் வண்ணப் பயோதரஞ் சேரவெண்ணி
மால்வாங்கி யேங்கி மயங்காமல் வெள்ளி மலையெனவே
கால்வாங்கி நிற்குங் களிற்றான் கிழத்தி கழுத்திற்கட்டு
நூல்வாங்கிடாதன்று வேல்வாங்கிபூங்கழல் நோக்குநெஞ்சே.

## பதவுரை

நெஞ்சே=மனமே! சேல் வாங்கு கண்ணியர்=சேல் என்னும் மீனை வெல்லுகின்ற கண்களுடைய பெண்களின், வண்ண பயோதரம்=அழகிய தனங்களை, சேர எண்ணி=தழுவுவதற்கு உள்ளத்தில் கருதி, மால் வாங்கி ஏங்கி=ஆசைகொண்டு ஏக்கமுற்று, மயங்காமல்=மயக்கத்தை யடையாமல், வெள்ளி மலையெனவே=வெள்ளியங்கிரி போல், கால் வாங்கி நிற்கும்=காலை நாட்டி நிற்கும், களிற்றான் =வெள்ளையானையை யுடைய இந்திரனது, கிழத்தி=மனைவியாகிய இந்திராணியின், கழுத்தில் கட்டும்=கழுத்திலே அணிந்துள்ள, நூல் வாங்கிடாது = மங்கல நாணை அறுத்து வாங்காதபடி, அன்று வேல் வாங்கி=அந் நாளில் அவ் விந்திரன் பகைவர்களாகிய சூராதியசுரர்கள் மீது வேலாயுதத்தை விடுத்தருளிய முருகப்பெருமானுடைய, பூ கழல்=மலர் போன்ற திருவடியை, நோக்கு=கண்டு மகிழ்வாயாக.

## விரிவுரை

**சேல்வாங்கு கண்ணியர்:—**

சேல் என்பது மீன் இனத்தில் ஒன்று; அது நடு பருத்தும் இரு நுனிகள் சிறுத்தும் இருக்கும். தண்ணீரில் பிறழ்ந்து இனிது ஓடும். அதுபோல் கண்கள் பிறழ்ந்து இனிது விளங்குவதால் சேல் கண்ணிற்கு உவமையாயிற்று.

> ''கலக வாள்விழி வேலோ சேலோ
> மதுர வாய்மொழி தேனே பாலோ
> கரிய வார்குழல் காரோ கானே துவரோவாய்''

**பயோதரஞ் சேர எண்ணி:—**

பய தரம்–பயோதரம்; பயம் - பால்; பால் தங்குமிடமாதலால் தனத்திற்குப் 'பயோதரம்' என்ற பேர் உண்டாயிற்று.

அருமையினும் அருமையான உடம்பினுலாகிய பயன் உடம்புக்கு உள் உறையும் உத்தமனை யடைவதே. அதனை மறந்து அவமாயை கொண்டு உலகில் விருதா அலைந்து உழன்று மாதராசையிற் கட்டுண்டு மயங்குதல் கூடாது. ஞானமே வடிவாகிய இறைவன் திருவடியை நினைப்பதால் உண்டாகும் சுகம் வேறு ஒன்றினாலும் உண்டாகாது. அத்தகைய பெரிய சுகத்தை யடைய சிறிதும் முயலாமல், கணப்பொழுதில் சுகம்போல் தோன்றி மறைந்து துக்கத்தையே தரும் உலக சுகத்தை விரும்புவது, கரும்பிருக்க இரும்பை மெல்லுதல் போலும்.

> ''கூர்வேல்விழி மங்கையர் கொங்கையிலே
> சேர்வேனருள் சேரவு மெண்ணுமதோ'' —அநுபூதி.

**மால்வாங்கி ஏங்கி மயங்காமல்:—**

மால்-மயக்கம்; அறிவு அழிந்து ஒன்றை வேறொன்றாக நினைக்கச் செய்வது கள்; அதனையுண்டார் மயங்கி கண்டார் நகைக்க உழல்வது கண்கூடு. அக் கள்ளும் உண்டால் ஒழிய மயக்கந் தராது. மாதர்மேல் வைத்த காமம் காணுந்தொறும்

நினைக்குந்தோறும் மயக்கத்தைத் தரும். ஆதலால் கள்ளினுங் கொடியது காமம்.

> ''உள்ளக் களித்தலும் காண மகிழ்தலும்
> கள்ளுக்கில் காமத்திற் குண்டு.''

என்பார் தெய்வப்புலவர்.

பெண்ணுசையால் பெரிதும் வாடி வருந்தி, தான் விரும்பிய பெண்டிரை யடைவதென்றோ என்று ஏங்கி அதனல் மயங்கித் தியங்கி வறிதே மடிவர்.

> பூமாந்தும் வண்டெனநின் பொன்னருளைப் புண்ணியர்கள்
> தாமாந்தி நின்னடிக்கீழ்ச் சார்ந்து நின்றார் ஐயோநான்
> காமாந்த காரமென்னுங் கள்ளுண்டு கண்மூடி
> ஏமாந்தே னெற்றி எழுத்தறியும் பெருமானே. —அருட்பா.

மாதரிடமுள்ள மாலை மயிலேறுமையனிடம் வைக்க வேண்டும். அங்ஙனம் வைக்கின் அவனருள் அடைதல் திண்ணம்.

> வேலே விளங்கு கையான் செய்ய தாளினில் வீழ்ந்திறைஞ்சி
> மாலே கொளஇங்ஙன் காண்ப தல்லால்மன வாக்குசெய
> லாலே யடைதற் கரிதா யருவுரு வாகியொன்று
> போலே யிருக்கும் பொருளை யெவ்வாறு புகல்வதுவே.

வெள்ளிமலையெனவே......களிற்றன்:—

இந்திரனுடைய யானை ஐராவதமெனப்படும். அது வெண்மையாகத் திகழ்வதால் வெள்ளிமலைக்கு நிகராகும் என்றனர். இது பாற்கடலில் அமிர்தத்துடன் தோன்றியது.

கிழத்தி:—

கிழமை-உரிமை; கணவனுக்கு மிகவும் உரிமையுடையவள் ஆதலின் மனைவிக்கு கிழத்தி என்ற பேர் ஏற்பட்டது. மனைவியினும் சிறந்த துணையில்லை. இம்மைக்கும் மறுமைக்கும் துணை செய்பவள் தருமபத்தினியேயாகும். ஆதலின் இந்திரனுடைய மனைவியாகிய சசிதேவியை 'கிழத்தி' என்று குறிப்பிட்டனர்.

கழுத்தில் கட்டும் நூல் வாங்கிடாது:—

பெண்மக்கள் கணவனையுடையவர்கள் என்ற அடையாளத்திற்காக கழுத்தில் மாங்கல்ய நூலை அணிந்து கொண்டிருப்பர். கணவனை இழந்தவர்கள் அந்நூலை அறுத்தெறிவர். சூரபன்மனுல் இந்திரன் இறந்திருப்பானுயின் இந்திராணி நூல் வாங்கியிருப்பள். அங்ஙனம் அவள் நூல் வாங்காது சுமங்கலியாக விளங்கி மகிழுமாறு முருகவேள் அசுரர்மீது வேல் வாங்கி யருளினுர். 'நூல் வாங்கி' 'வேல்வாங்கி' என்ற எதுகை நயத்தை அறிஞர்கள் சிந்திக்க.

"ஃ ஃ சசிதேவி மங்கல்ய தந்துரக்ஷா
பரணக்ருபாகர ஞானு கரசுர பாஸ்கரனே" —அலங்காரம்.

"இந்த்ராணி மங்கல்ய தந்து ரக்ஷாபரண
இகல்வேல் விநோதன்" —மயில்விருத்தம்

வேல்வாங்கி:—

இந்திராதி இமையவருக்கு இடைவிடாது இடையூறு செய்து மறநெறியில் நின்றதால் சூராதியவுணர்களைச் செவ்வேட்பரமன் வேலாயுதத்தை விடுத்தருளி மாய்த்தருளினுர்.

"... ... ... ... ... ... காங்கெயன்
மகபதி தன்பதி பகைகிழி யும்படி யன்றடல்
வாளோங்கிய வேல்வாங்கவே
... ... ... ... ...
சிறையு ளழுந்திய குறைகளொ ழிந்துசெ யங்கொடு
தேவேந்திரர் சேணுண்டனர்
திரிபுவ னங்களும் ஒருபய மின்றிவ ளங்கெழு
சீர்பூண்டற நேர்பூண்டன
விடவச னஞ்சில பறையும்வி ரிஞ்சன்வி லங்கது
கால்பூண்டுதன் மேறீர்ந்தனன்
விகசித சுந்தர விதரண ஐந்தரு வெந்தெழில்
வீவான் பொழில் பூவாய்ந்தது

விழைவுத ரும்பத சசிதன்வி ளங்கிய மங்கல
நூல்வாங்குகி லாள் வாழ்ந்தனள்''
—வேல்வாங்குவகுப் பு

பூங்கழல் நோக்கு நெஞ்சே:—

ஏ மனமே! அழிகின்றவரையும், அழியச் செய்கின்றவரையும் நோக்கி அழிகின்றனையே; அழிவில்லாதவரும், அழிவற்ற தன்மையை அருளுபவருமாகிய முருகக்கடவுளின் அழகிய திருவடிக் கமலங்களைக் கருத்திலிருத்தி உள்ளக் கண்ணால் நோக்குவாயாக. இந்திராணியின் மங்கல நாணைக் காத்தவராதலின் உன்னையுங் காத்தருளுவர்.

நோக்குவார் நோக்கினுள் நுட்பமாய் நுண்ணுணர்வில் விளங்கித் தோன்றுவன் இறைவன்.

## கருத்துரை

ஏ மனமே! மாதர் மயக்கத்தை யறுத்து, இந்திராணியின் மங்கல நாணைக் காத்த மயிலேறும் பிரான் மலரடியை நோக்கித் திருவருள் பெறுவாயாக.

## 78

கூர்கொண்ட வேலனைப் போற்றும லேற்றங் கொண்டாடு
விர்காள்
போர்கொண்ட கால னுமைக்கொண்டு போமன்று பூண்பனவுந்
தார்கொண்ட மாதந மாளிகை யும்பணச் சாளிகையும்
ஆர்கொண்டு போவரை யோகெடு விர்நும் மறிவின்மையே.

## பதவுரை

கூர்கொண்டவேலனை=கூர்மை பொருந்திய வேலாயுதத்தையுடைய முருகப் பெருமானை, போற்றுமல்=போற்றி செய்யாமல், ஏற்றம் கொண்டாடுவிர்காள்=உங்கள் மனை மாட்சி நிதி பூண் இவைகளின் மிகுதியைக் குறித்து பெருமை பாராட்டிக்கொண்டாடுகின்றவர்களே! போர் கொண்ட காலன்=போர்த் தொழிலையே மேற்கொண்டுள்ள கூற்றுவனுடைய மந்திரியாகிய காலன் என்பவன், உமை கொண்டுபோம் அன்று=உங்களைக் கொண்டு

போகின்ற அந்த மரண யாத்திரையின்போது, பூண்பனவும்= அணிந்துகொள்ளுகின்ற ஆபரணங்களும், தார்கொண்ட மாதரும்=பூமாலையை அணிந்துள்ள பெண்களும், மாளிகையும்= மாடிவீடும், பணசாளிகையும் = பணப்பையும், ஆர்கொண்டு போவர் = எவர் எடுத்துக்கொண்டு போவார்களோ? ஐயோ கெடுவீர்=ஐயோ! வீணே கெட்டுப் போகிறவர்களே! நும் அறிவு இன்மையே = உங்களுடைய மூடத்தனத்தை என்ன என்று சொல்வது?

## விரிவுரை

**கூர்கொண்ட வேல்:—**

முருகவேள் திருக்கரத்தில் நூறுகோடிப் பிரகாசமாக விளங்குவது வேல். அதற்குப் படைக்கல நாயகம் என்று பேர். வேல் என்பது ஞானம். ஞானமாகிய வேலே எல்லாவற்றையும் வெல்லுகின்றது. அறிவு கூர்மையாகத் திகழும். ஆதலினால் அறிவின் சொரூபமாகிய வேலைக் "கூர் கொண்ட வேல்" என்றனர். அவ் வேலை இடையருது வணங்குவோர்க்கு ஞானம் உதயமாகும். வேல் பூஜை சிறந்ததாகும். வேலை உடம்பில் அணிந்துகொள்வதும், "வேல் வேல்" என்று நாவார ஓதுவதும், வேலை இதயத்திலாவது புருவ நடுவிலாவது நிறுவி தியானிப்பதும், வேல் வகுப்பு, வேல் விருத்தம் முதலிய துதிகளைப் பாராயணஞ் செய்வதும் மிகச் சிறப்புடையவாம். வேலை வழிபடுவார்க்கு வினைகள் நீறுபட்டழியும். 'வேலுண்டு வினையில்லை', 'வினையோடவிடுங் கதிர்வேல் மறவேன்', 'வாகை சுமக்கும் வேலை வணங்குவது எமக்கு வேலை' என்பனவாகிய அருள் திருவாக்குகளை உற்று நோக்குமின்கள். 'என்றும் வாய்த்த துணை கிரணக் கலாபியும் வேலுமுண்டே' 'வேலும் திருக்கையுமுண்டே நமக்கு ஒரு மெய்த் துணையே' என்று வீறு பெறக் கூறி வீரமுடன் விழித்திருங்கள்.

**வேலனைப் போற்றுமல் ஏற்றங் கொண்டாடுவீர்காள்:—**

வேலாயுதத்தையுடைய விமலனை மெய்யன்போடு வழிபடுதல் வேண்டும். அப் பரமனது திருவடியே கதி; ஏனைய வீடு மாடு செல்வம் முதலியவைகள் அழிதரும் நீரிற் பொறி

போன்றனவாம். ஆதலின் மனை, மக்கள், சுற்றம் எனும் வலையை யறுத்தெறிந்து, செல்வம் முதலியவற்றின் மீதுள்ள பற்றையும் பற்றறக் களைந்து, இம்மைக்கும் மறுமைக்கும் எழுமைக்கும் துணையாக நிற்கும் எந்தை கந்தவேள் சரண கமலாலயத்தையே பற்றுக்கோடாகக் கொண்டு உய்வு பெற வேண்டும்.

அங்ஙனம் உய்யும் நெறியறியாத உலகினரைக் கண்டு சுவாமிகள் இரங்குகின்றனர்; கூவி யழைக்கின்றனர்; இடித்துரைக்கின்றனர். "அந்தோ! உலகியலீர்! வம்மின்; வாய்ப் பறையாகக் கூறும் என் அறவுரையைக் கேண்மின். சதானந்தத்தைத் தரும் குமரன் குரை கழலைப் போற்றுமல், மனைவி, மக்கள், நிதி, வீடு, நிலம், புலம் ஆகிய இவைகளின் மிகுதியை நோக்கி பெருமை பாராட்டுகின்றீர்களே அவைகள் நிலையற்றவையாம்.

போர்கொண்ட காலன் உமைக் கொண்டுபோம் அன்று:—

"போர் புரிதலையே இயல்பாகக் கொண்ட இயமனுடைய மந்திரி உங்களைக் காலமறிந்து வந்து உடம்பினின்றும் உயிரைப் பிரித்துப் பாசக் கயிற்றல் கட்டிக் கொண்டுபோகும் நாள் ஒன்று உண்டல்லவா? அந்த நாளில்.

பூண்பனவும்......ஆர்கொண்டுபோவர்:—

நீங்கள் அரிதினும் அரிதாகக் கருதிப் பூண்டிருந்த வைர ஆபரணங்களையும், நவரத்தின மயமான அங்கிகளையும், மெல்லிய பட்டாடைகளையும், பூமாலையை முடிக்கும் பெண்களையும், அழகாகப் புதுக்கி வைத்த வீட்டையும், பணப்பையையும் மேலே கூறியவாறு உம்மை நமன் கொண்டுபோகும் போது ஆர்கொண்டு போவார்? எண்ணிப் பாருங்கள். ஒன்றுவது உங்களுடன் வருமோ? நீங்கள் முயன்றலும் கொண்டு போக முடியுமோ? இங்ஙனம் இடையில் விட்டு நீங்கும் இவைகளைப் பொருளாகக் கருதி அழிவது அறிவுடைமையாகுமா? பல்பிணியும் சிலநாளும் உடைய நீங்கள் உள்ளபோதே உள்ள பொருளை யடைய முயற்சித்தல் வேண்டும்.

“எங்கள் செல்வங்களை எமக்குத் தொடர்புடைய சுற்றத்தார் கொண்டுபோவார். அதனால் எமக்கு நன்மை தானே? நாங்கள் அநுபவித்தவைகளை எமது உறவினர் அநுபவிக்கட்டுமே?” என்று கூறுவீராயின் கூறுதும்; சிறிது அமைதியாகச் சிந்தித்துப் பாருங்கள். இப்பொழுது உமது சுற்றத்தார்கள் முற்பிறப்பில் எங்கெங்கோ பிறந்து பல்வேறு இடங்களில் மரபினராக இருந்து பல்வேறு மொழிகளைப் பேசி வேறு வேறு வகையான சுற்றத்தை யுடையவராக இருந்து இப்போது இங்கு உமக்குச் சுற்றமாகக் கூடி வந்துள்ளார்கள். இனி நீங்கள் இறந்து வேறு ஒரு ஊரில் வேறு ஒரு மரபில் பிறந்து வேறு பெயரைத் தாங்கி நிற்கும்போது, இங்கிருந்த சுற்றம் உமக்கு அயலார்தானே? அப்பொழுது வந்துள்ள சுற்றத்தாரை மகிழ்வித்து, இறந்து வேறு இடத்தில் பிறந்தால் இவர் அயலாராவர். ஆதலின் பிறவிதோறும் வரும் சுற்றத்தினருக்காக உழைத்து உழைத்து ஏழையாகின்றீர். இனி உமக்கு என்றுந் துணையாக நிற்கும் இளம்பூரணராகிய கந்த வேளை எந்த வேளையும் போற்றினல் உய்யலாம்.

ஐயோ கெடுவீர் நும் அறிவின்மையே:—

“உலகீர்! ஐயோ! உமது அறிவின்மையால் வீணே கெடுகின்றீர்” என்று சுவாமிகள் மிகவும் கருணையால் இப்படி இரங்கி உலகினரை விளித்து உபதேசிக்கின்றனர். அறிவு மயமாகிய வேலாயுதனைப் போற்றாமையால் அறிவிலிகளாகின்றனர் என்ற குறிப்பும் சிந்திக்கத் தக்கது. இந்தப் பாடலில் உள்ள எதுகையழகு மிகவும் பாராட்டத்தக்கது. “மாளிகையும் பணச் சாளிகையும்” என்ற சொல்லழகும், அதிலுள்ள பொருளழகும் அறிவுக்கு விருந்தாக அமைகின்றன.

இப்பாசுரத்தை அன்பர்கள் பலமுறை படித்து இன்புற வேண்டும். அத்துடன் அமையாது நிலையாப் பொருள்களை நிலையாக நினைக்கும் மாறுபட்ட கருத்தை மாற்றி நிலை பேருக விளங்கும் நெடுஞ்சுடர் வடிவேலண்ணலை நினைந்து நினைந்து நெஞ்சம் உருகி நெடிய இன்பத்தைப் பெற வேண்டும்.

### கருத்துரை

உலகியலீர்! காலன் வரும்போது உமது உடைமைகள் உடன் வரா; ஆதலின் அவைகளின்மீது உள்ள பற்றை யொழித்து பற்றற்ற பரமனாகிய வடிவேலிறையை வணங்கி வாழுமின்.

## 79

பந்தாடு மங்கையர் செங்கயற் பார்வையிற் பட்டுழலுஞ்
சிந்தா குலந்தனைத் தீர்த்தருள் வாய் செய்ய வேன்முருகா
கொந்தார் கடம்பு புடைசூழ் திருத்தணிக் குன்றினிற்குங்
கந்தா இளங்கும ராஅம ராவதி காவலனே.

### பதவுரை

செய்ய வேல் முருகா=செம்மைப் பண்புடைய வேலாயுதத்தைத் தாங்கிய முருகப்பெருமானே! கொந்து ஆர் கடம்பு புடை சூழ்=பூங்கொத்துக்கள் நிறைந்த கடப்ப மரங்கள் பக்கங்களில் சூழ்ந்திருக்கின்ற, திருத்தணி குன்றில் நிற்கும் கந்தா = திருத்தணிகை மாமலைமேல் அடியார்களை ஆட்கொள்ளும் பொருட்டு என்றும் நிலைபெற்றிருக்கும் கந்தக் கடவுளே! இளங் குமரா=என்றும் அகலாத இளம்பருவமுடைய குமார மூர்த்தியே! அமராவதி காவலனே=பொன்னுலகத்தின் தலைநகராகிய அமராவதியைக் காத்தருளுபவரே! பந்து ஆடும் மங்கையர்=பந்தைக் கையில் வைத்து ஆடுபவர்களாகிய பெண்களின், செம் கயல் பார்வையில் பட்டு=சிவந்த கயல்மீன் போன்ற கண்ணோக்கத்தில் அடியேன் அகப்பட்டு, உழலும்=உழல்கின்ற, சிந்தை ஆகுலம் தன்னை= மனோ வியாகூலத்தை, தீர்த்து அருள்வாய்=போக்கி அருள் புரிவீர்.

### விரிவுரை

**பந்தாடு மங்கையர்:—**

பெண்களுக்குப் பந்து விளையாட்டத்தில் அளவற்ற பற்று; அநேக விதங்களாகவும் சமர்த்தாகவும் ஆடுவார்கள். பந்தாடும்போது இனிமையாகப் பாடுவார்கள். அப்போது பாடும் பாட்டு கந்துகவரி எனப்படும். கந்துகம்—பந்து.

இராமர் மிதிலைக்குச் செல்லும்போது அங்கு பெண்டிர் விளையாடும் விசித்திரமான பந்துகளைப் பார்த்தார் என வரும் அழகிய கவியையும் நினைவு கூர்க.

மெய்வரு போக மொக்க வுடனுண்டு விலையுங் கொள்ளும்
பையர வல்கு லார்தம் உள்ளமும் பளிங்கும் போல
மையரி நெடுங்க ணோக்கம் படுதலுங் கருகி வந்து
கையுறச் சிவந்து காட்டுங் கந்துகம் பலவுங் கண்டார்.

செங்கயல் பார்வையிற் பட்டு:—

கயல் - ஒருவகை மீன். அது கண்ணுக்கு உவமை யாகும். அந்த மீன் போல் கண் பிறழ்ச்சியுடையது. உவம ஆகுபெயராகக் கயல் என்பது கண்ணை யுணர்த்துகின்றது. கண் பார்வையினால் பெண்கள் ஆடவரைச் கட்டுண்ணச் செய்வர். அம் மகளிரின் கண்ணிலுள்ள கருமை பட்டவர் கட்கு பெருமையும் அருமையும் தொலையும். ஆதலினாலே தான் 'மைவிழியார் மனையகல்' என்ற திருமொழி எழுந்தது. ஆவி ஈடேறுதற்குரிய நெறிகளைக் கூறி உய்விக்கும் ஆன்றோர்களின் அருட்பார்வையிற் படாது, துன்பத்தையே தரும் மாதர்களின் மருட்பார்வையில் அகப்படுதல் பெருங் கேட்டைத் தரும்.

உழலுஞ் சிந்தா குலந்தனைத் தீர்த்தருள்வாய்:—

'அம் மங்கையர் கண்வலைப் பட்டு அவமே உழன்று துன்புறுதலைத் தீர்த்தருள்' என்று அடிகள் ஆண்டவனை வேண்டுகின்றனர். ஏனெனில் தன்னறிவாலும் முயற்சியாலும் நீங்குதற்கரியது மாதராசை யாதலாலென அறிக. இறைவனுடைய திருவருள் துணை கொண்டே நீக்குதல் வேண்டும்.

கடத்திற் குறத்திப் பிரானரு ளாற்கலங் காதசித்தத்
திடத்திற் புணையென யான்கடந் தேன்சித்ர மாதரல்குற்
படத்திற் கழுத்திற் பழுத்த செவ்வாயிற் பணையிலுந்தித்
தடத்திற் றனத்திற் கிடக்கும் வெங்காம சமுத்திரமே.

என்பார் பிறிதோரிடத்தில்.

செய்ய வேன்முருகா:—

மறத்தை நீக்கி அறத்தை நிலைநாட்டுவது வேற்படையின் தன்மை யாதலினால் "செய்ய வேல்" என்று அருளிச் செய்தனர். செய்ய - செம்மைப் பண்பு.

"சொலற்கரிய திருப்புகழை யுரைத்தவரை அடுத்தபகை
அறுத்தெறிய முறுக்கியெழும் அறத்தை நிலைகாணும்"
—வேல்வகுப்பு.

"நீ அறநெறி நின்று வழுவுவையேல் நம் சக்தி வெல்லும்" என்று முக்கட்பெருமான் சூரபன்மனுக்கு வரமளித்ததும், அவனை வேல் தூய்மையாக்கி நல்வாழ்வு பெற வைத்ததும் அன்பர்கள் உற்று நோக்குக. வேலை யுடையவராதலின் "வேல் முருகா" என்று அழைத்தனர். "வேல் முருகா" என்ற விளி அழகாக அமைந்துளது. அப்படியே பலகாலும் ஆண்டவனை நாமும் அழைப்பது நலம்.

கோந்தார் கடம்பு புடைசூழ் திருத்தணி:—

கடப்பமலர் உருத்திராக்ஷம் போல் உருண்டு அழகாகவும், நறுமணத்துடனும், மகரந்தத்துடனும் விளங்கும். இத்தகைய கடப்ப மரங்கள் பல சூழக் கவின் தருவது தணிகை.

இளங்குமரா:—

என்றும் அகலாத இளமை யுடையவர் முருகவேள். "என்றும் இளையாய்" என்றார் நக்கீரதேவர். அதன் கருத்து இறைவன் என்றும் ஒருபடித்தாக இருக்கின்றார் என்பது போதருகின்றது. முதுமை வருமானால் ஒரு சமயம் மரிப்பும் வரும். "பெம்மான் முருகன் பிறவான் இறவான்" ஆதலினால் முருகன் என்றும் இளம் பூரணராகும்.

உலகில் யாவரும் விரும்புவது இளமையை. "நான் விரைவில் கிழவனாக வேண்டும்" என்று யாரும் நினைப்பதில்லை. கிழப்பருவத்தை எல்லோரும் வெறுக்கின்றனர். இளமை நல முடையவர்களைக் காணவும், இளமை நல முடையவருடன் பழகவும் நாம் அன்பு கொள்ளுகிறோம்.

இளமையை யடைய காயகல்பஞ் செய்பவரும், இளமை யுடனிருக்க மருந்துகளை அருந்துவோரும் பலர். ''சந்ததமு மிளமையோ டிருக்கலாம்'' என்ருர் தாயுமானுர். இளங் குமரராகிய எந்தை கந்தவேளை நாளும் மறவாது சிந்திப்போ மானுல் நாளும் மாருத இளமை நலத்தை நாம் எளிதிற் பெறுவோம் என்பது ஒருதலை.

அமராவதி காவலனே:—

இந்திரனுடைய நகரத்திற்கு ''அமராவதி'' என்று பெயர். அது பொன்னுலகிற்குத் தலைநகரம். இவ்வழகிய நகரைப் பானுகோபன் தீக்கிரையாக்கிப் பாழ்படுத்தினுன். எம்பெரு மான் தேவர்களைச் சிறைமீட்டு அமராவதியைப் பண்டுபோல் புதுப்பித்து அமரர்களை அதில் குடியேற்றினுர்; அத் திரு நகரைப் பாதுகாத்தருளினுர்.

## கருத்துரை

திருத்தணிகேசா! கந்தப்பெருமானே! குமாரக்கட வுளே! பாவையர் பார்வையிற் பட்டுழலுந் துன்பத்தைத் தீர்த்தருள் புரிவீர்!

## 80

மாகத்தை முட்டி வருநெடுங் கூற்றன்வந் தாலென்முன்னே
தோகைப் புரவியிற் ருேன்றிநிற் பாய்சுத்த நித்தமுத்தித்
த்யாகப் பொருப்பைத் த்ரிபுராந் தகனைத் த்ரியம்பகனைப்
பாகத்தில் வைக்கும் பரமகல் யாணிதன் பாலகனே.

## பதவுரை

சுத்தம்=தூய்மையும், நித்தம்=என்றும் அழிவின்மையு முடைய, முத்தி த்யாக பொருப்பை=முக்தியை வழங்கும் கொடைத்தன்மையுடைய மலையை, த்ரிபுர அந்தகனை=முப் புரத்தை எரித்தவரை, த்ரி அம்பகனை=மூன்று கண்களையுடை யவரை, பாகத்தில் வைக்கும்=தனது வலப்புறத்தில் வைத்திருக் கும், பரம கல்யாணிதன்=மேலான கல்யாண குணங்களை யுடைய உமாதேவியாரின், பாலகனே=திருமைந்தரே! மாகத்தை முட்டி

வரும்=ஆகாயத்தை முட்டிவருகின்ற, நெடும் கூற்றன்=நீண்ட இயமன், வந்தால்=இறுதிக் காலத்தில் வருவானாயின், என் முன்னே = அடியேனுக்கு முன்பாக, தோகை புரவியில் = தோகையையுடைய மயிற்பரியின்மீது ஏறிக்கொண்டு, தோன்றி நிற்பாய்=தோன்றி நின்று திருவருள் புரிவீர்.

## விரிவுரை

**மாகத்தை முட்டிவரு நெடுங்கூற்றன்:—**

கூற்றன்-கூறுபடுத்துபவன். உடம்பையும் உயிரையும் வேறு வேறாகக் கூறுபடுத்துந் தொழிலையுடையவனாதலின் இயமனுக்கு இப்பேருண்டாயிற்று. அக் கூற்றுவன் உயிர்களைப் பற்றவரும்போது பெரிய எருமைக் கடாவின் மீது மலை போன்ற மிகப் பெரிய உருவத்துடன் தோன்றி நிற்பன். ஆதலின் "ஆகாயத்தை முட்டிவரும்" என்றார். நெடுமை-நீளம். கண்டார் அஞ்சுந் தன்மையான நீண்ட வடிவும், நெருப்புப் பொறிகள் சிந்தும் சுழல்கின்ற கண்களும், கோரைப் பற்களுடைய வாயும், வடவைத்தீயென மேல் நோக்கிய மயிரையுடைய தலையும், காளகூட விஷம் போன்ற புகை வரும் செவியும், துடிக்கும் உதடும், இடியென வெடி படும் குரலும், பாசம் கதை சூலம் முதலிய ஆயுதங்களை ஏந்திய கரங்களும் உடையவனாய் காலபடர்கள் சூழ பாவிகளுக்கு முன் இயமன் தோன்றுவன்.

புண்ணியம் புரிந்தவர் முன் அறம், அன்பு, அருள், நியாயம் என்ற நாற்குணங்களும் சேர்ந்து ஒருருவெடுத்தாற் போன்ற நல்லுருவும், இன்சொல்லும், இனிய குரலும், அழகிய தோற்றமும், நீலவண்ணமும் உடையவனாய், எழில் மிக்க ஏந்திழையார் கவரி வீச இனிது காட்சி தருவன்.

இனி, வந்தால், என்றதனால் 'வராதொழிவன்' என்பதும், 'ஒருவேளை வருவானாயின்' என்றும் குறிப்பிடுகின்றனர்.

**தோகைப் புரவியிற் றோன்றி நிற்பாய்:—**

தோகை-மயிலின் பின்புறத்துள்ள நீண்ட பகுதி; சினையாகு பெயராக அது மயிலைக் குறிக்கின்றது. புரவி-குதிரை;

குதிரையைப்போல் வாகனமாக ஆவதால் உவம ஆகு பெயராக மயிலைப் புரவி யென்றனர். இனி தோகைப் புரவி என்பது தோகையாகிய புரவி எனப்படும். இருபெயரொட்டுப் பண்புத்தொகை.

எம்பெருமானே! இயமன் எருமைக்கடாவின் மீது வரும் போது தேவரீர் மயில்வாகனத்தின் மீது வருவீர்.

**சுத்த நித்த முத்தி:—**

முத்தி-முக்தி என்பது வடசொல்; அது முக்த-விடுபட்டது என்ற பொருளில் வருகின்றது. பந்தத்தினின்றும் விடுபட்டதுவே முக்தியாகும். உள்ளந் தூய்மையுற்றபோதே அது கைகூடும். மிகவும் தூய்மையுடையது முக்தி; நித்தம்-அழிவில்லாதது முத்தியின்பம் என்றும் பொன்றுதது. கட்டினின்றும் விடுபட்ட ஆன்மாக்கள் அருளுடன் கலந்து குறைவற்றதும், அழிவற்றதும், இன்பமயமானதுமாகிய வீடுபேறு பெற்று இன்புறுவர்.

**த்யாகப் பொருப்பு:—**

இத்தகைய முத்தி நலத்தை பக்குவமுடைய அடியார்க்கு வழங்கும் வள்ளல் ஆதலின் சிவபெருமானை "முத்தித் தியாகன்" என்று அருளிச் செய்தனர். மலைபோன்றவர் ஆதலின் பொருப்பை என்றனர். உவம ஆகு பெயர். இனி இடவாகு பெயராக பொருப்பிலுறைபவர் எனினும் அமையும்.

**த்ரிபுராந்தகன்:—**

மும்மலமாகிய முப்புரத்தை எரித்தவர். சிரித்தார்; புரம் எரித்தார்; அத்தகைய பேராற்றல் படைத்தவர் சிவபெருமான். தியாகப் பொருப்பு என்றதனுல் அநுக்கிரகமும், த்ரிபுராந்தகன் என்றதனுல் நிக்கிரகமும் உடையவர்; ஒரு கடவுள் என்ருல் நிக்கிரக அநுக்கிரக ஆற்றல் இரண்டும் உடையவராக இருத்தல் வேண்டும்.

**த்ரியம்பகன்:—**

அம்பகம்-கண்; சிவமூர்த்தி ஒருவருக்கே மூன்றுகண்கள் உண்டு. அதனுல் அ ப் ப ர ம னே ஒப்புயர்வில்லாத பரம்

பொருளாவர். கதிர் மதி கனல் என்ற ஒளிகள் மூன்றும் அவருக்கு மூன்று கண்களாக அமைந்துள. உலகங்களுக் கெல்லாம் ஒளியைத் தருவது அவருடைய கண்களே.

இனி திரியம்பகம்-சிவன் வில். அவ்வில்லை யுடையவர் எனினும் பொருந்தும்.

**பாகத்தில் வைக்கும் பரமகல்யாணி தன் பாலகனே:—**

சிவபெருமானைத் தனது வலப்பாகத்தில் வைத்திருப் பவரும், சிறந்த குணங்களையுடையவரும் ஆகிய உமா தேவியின் திருப்புதல்வராதலின் "ஆண்டவனே! இயமன் வரும்போது தேவரீர் அடியேன் முன் வந்தருள் புரிவீராக" என்று அடிகள் கூறும் நயம் சிந்தித்தற்குரியது.

*கருத்துரை*

உமாதேவியாரது திருமைந்தரே! காலன் வருங்கால் அடியேன் முன் வர்து ஆட்கொள்ளுவீர்.

## 81

தாரா கணமெனுந் தாய்மா ரறுவர் தருமுலைப்பால்
ஆரா துமைமுலைப் பாலுண்ட பால னரையிற்கட்டுஞ்
சீராவுங் கையிற் சிறுவாளும் வேலுமென் சிந்தையவே
வாரா தகலந்த காவந்த போதுயிர் வாங்குவனே.

*பதவுரை*

அந்தகா=இயமனே! தாரா கணம் என்னும்=நட்சத்திரக் கூட்டம் என்கின்ற, தாய்மார் அறுவர்=அன்னையர்கள் ஆறு பேர்களும், தரும் முலை பால்=தந்த முலைப்பாலை, ஆராது= உண்டு அத்துடன் அமையாமல், உமை முலைப்பால் உண்ட= உமையம்மையாரின் திருமுலைப்பாலையும் உண்டருளிய, பாலன்= திருக்குமாரராகிய முருகக்கடவுள் அரையில் கட்டும்=திருவரை யில் கட்டிக்கொள்ளும், சீராவும்=உடைவாளும், கையில் சிறு வாளும்=திருக்கரத்தில் ஏந்தியுள்ள சிறுவாளும், வேலும்=வேலா யுதமும், என் சிந்தையவே=அடியேனுடைய சிந்தையில் குடி கொண்டிருக்கின்றன; (ஆதலினால்) வாராது அகல்=என்னிடம்

வராது நீங்கிப் போவாயாக; வந்தபோது உயிர் வாங்குவன்=மீறி வந்தால் உனது உயிரை வாங்கிவிடுவேன். (ஏ-அசை)

### விரிவுரை

தாராகணமெனுந் தாய்மார் அறுவர்:—

தேவர்களது வேண்டுகோளுக்கிரங்கி, சிவபெருமானுடைய நெற்றி நாட்டத்தினின்றும், ஆறு அருட்சுடராக எந்தை முருகவேள் தோன்றினர். அங்ஙனந் தோன்றிய ஆறு பொறிகளை சிவாக்ஞையின்படி வாயுதேவனும் தேயுதேவனும் கங்கையில் விடுத்தனர். கங்கை சரவணத்திற் சேர்த்தனள். ஆங்கு அந்தமில் இன்பமருளும் அகிலாண்ட நாயகன் ஆறு திருமுகங்களும், பன்னிரு புயங்களும், பதினெட்டு திருக்கண்களுமாக அருளுருத்தாங்கி தோன்றியருளினர். அவ்வாறு வானந்தழைக்க், வையஞ் செழிக்க, ஞானம் பெருக, அமரரிடர் கெடத் தோன்றிய அறுமுக வள்ளலைக் கண்டு மாலும் பிரமனும் போற்றினர்; இந்திராதி இமையவர் மலர் தூற்றினர். நாரதாதியர் பாடினர்; அரம்பையர் ஆடினர்.

மறைகளின் முடிவால் வாக்கால் மனத்தினு லளக்கொணுமல்
நிறைவுடன் யாண்டு மாகி நின்றிடு நிமல மூர்த்தி
அறுமுக வுருவாய்த் தோன்றி அருளொடு சரவணத்தின்
வெறிகமழ் கமலப் போதின் வீற்றிருந் தருளி னுனே.

இங்ஙனம் எம்பெருமான் குழவி வடிவங் கொண்டு வீற்றிருப்பதைக் கண்ட மாலயனாதி வானவர்கள் பலகாலுந் தவஞ் செய்து நல்வினைப்பயன் பொருந்தப் பெற்ற கார்த்திகைப் பெண்களை அழைத்து, "பெண்மணிகளே! வேதாகமங்களுக்கும் எட்டாத விமலன் எம்பொருட்டு குழந்தை வடிவங்கொண்டு விளங்குகின்றனன். ஆதலின் அப் பரமபதிக்குப் பாலூட்டிப் போற்றுமின்" என்று புகன்றனர். கார்த்திகை மாதர்கள் "நாங்கள் செய்த தவப்பயன் பலித்தது" என்று ஆறுமுகக் குழவியிடம் வந்தார்கள்.

தீர்த்திகைக் கங்கை தன்னிற் றிகழ்சர வணத்தில் வந்த
மூர்த்திகைக் குழவி யேபோன் முதற்புரி யாடல் நோக்கி
ஆர்த்திகை யுருத வுள்ளத் தரிமுத லமரர் யாருங்
கார்த்திகைத் தெரிவை மாரை விளித்திவை கழறலுற்றார்.
சாற்றருஞ் சரவ ணத்திற் சண்முகத் தொருவ னாகி
வீற்றிருந் தருளு கின்ற விமலனோர் குழவி போலத்
தோற்றின னவனுக் குங்கள் துணைமுலை யமுதமூட்டி
போற்றுதிர் நாளு மென்ன நன்றெனப் புகன்று வந்தோர்.

சரவணப் பொய்கையில் ஆயிரத்தெட்டு இதழ்த் தாமரையில் வீற்றிருக்கும் ஐயன் ஒருவன்; பால்கொடுக்க வந்தவர் அறுவர். குழந்தைகளைக் கண்டால் யாருக்கும் விருப்பம் நிகழும்; குழந்தைகளிடம் காமம் குரோதம் முதலிய தீமைகள் இல்லை. அழுக்கற்ற உள்ளம்; அதனால் குழந்தை களைக் கண்டவுடன் அன்பு சுரக்கின்றது.

இந்த அறுமுகக் குழவியிடம் அவ் வறுவர்க்கும் விளைந்த அன்பின் பெருக்கை ஆரே யளவிடமுடியும்? கோடிசந்திரப்ரகாசமும், கருணை யொழுகுந் திருமுகங்களும், புன்முறுவல் பூத்த திருவாய்களும், அருள் வழியுந் திருக் கண்களும், பவப்பிணி யகற்றும் திருவடிகளும் கண்டார் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளுகின்றன; ''நான் பால் தருவேன்'' என்றாள் ஒருத்தி, ''இல்லை; நான் தான் பால் தருவேன்'' என்றாள் மற்றொருத்தி; இவ்வாறு பால் தருங் காரணமாக அறுவரும் போட்டியிட்டு ஆறு பக்கங்களிலே வந்து தெய்வக் குழந்தையை எடுத்தனர். மருவுமடியார்கள் மனக்குறைவை நீக்கி, வேண்டிய வரமளிக்கும் வித்தகன் அம் மாதர் அறுவரும் அகமகிழ ஆறு குழந்தைகளாகப் பிரிந்தனன்.

''உவகையொடு கிர்த்திகைய ரறுவரு மெடுக்கவவ
ரொருவ ரொருவர்க்கவனொ ரோர்புத்ர னானவனும்''—வகுப்பு

மறுவறு மாரலாகு மாதர்மூ விருவர் தாமு
நிறைதரு சரவணத்தின் நிமலனை யடைந்து போற்ற

உறுநர்கள் தமக்கு வேண்டிற் றுதவுவோ னுதலாலே
அறுமுக வொருவன் வேறு யறுசிறு குருவங் கொண்டான்.

என்னே எம்பெருமானது கருணை! வேண்டுவார் வேண்டுவதே ஈவானுதலினாலும், அடியவரிச்சையி லெவை யெவையுற்றன அவைதருவித்தருளும் பெருமாளாதலினாலும் அங்ஙனம் அருள்புரிந்தனன். கார்த்திகைமகளிரறுவரும் தனித்தனியே ஒவ்வொரு குழந்தையை எடுத்து அணைத்தனர்.

அறுவர் தருமுலைப்பால் ஆராது:—

அவ்வாறு அணைத்தலும் அன்பின் மிகுதியால் பால் பெருகியது. உலகிலுள்ள உயிர்களை ஊட்டி வளர்க்கின்ற ஒரு பெருந் தலைவனுக்குப் பாலுட்டினர்; அப்பரம் பொருளும் உண்பார்போல் உண்டனர்.

ஆறுரு வாத லோடு மறுவரு மகிழ்ந்து வேறு
வேறுதா மெடுத்துத் தத்தம் வியத்தகு துணைமென் கொங்கை
ஊறுபா லமுத மன்னோற் குதவலு முறுவல் செய்து
மாறிலா வருளா லாற்ற வருந்தினன் போல உண்டான்.

அன்றியும் ஐயன் பலப்பல அற்புதத் திருவிளையாடல்களை யயர்ந்தனன். அதுகண்டு அவ் வறுவரும் போற்றிப் புகழ்ந்தனர்.

அழலெனு மீன வர்க்கத் தறுவருங் குமர னுடல்
முழுவது நோக்கி நோக்கி முதிருமற் புதநீ ரெய்திக்
குழவிக ளென்றே யுள்ளங் கோடல்விட் டகலா தஞ்சி
வழிபடு கடவு ளோரிற் போற்றினர் மனங்கொ ளன்பால்.

அவ்வாறு ஆறுபேருந் தந்த திருமுலைப்பாலை யுண்பார் போலுண்ட அறுமுகனுர் அத்துடன் அமையாது மேலும் உமையம்மையாருடைய பாலையும் அருந்துதற்கு ஆயத்தமானுர்.

உமைமுலைப்பாலுண்ட பாலன்:—

சிவபெருமான் உமாதேவியாருடன் விடையூர்ந்து கணங்கள் சூழ சரவணம்போந்து “குழந்தையைக்

கொணர்க" என்று பணித்தருளினர். பார்வதியம்மை ஆறுசேய்களையும் எடுத்து அணைக்கப் பண்டுபோல் ஒருரு வாயிற்று. அம்மையார் தன் ஞானக்குழந்தையை உச்சி மோந்து மார்போடணைத்து உருகினர். பால் பெருகியது. சிவமூர்த்தியின் அருள் மயமாயும் நின்மலமாயும், மேலாகிய ஞானவடிவாயும் விளங்கும் அத்திருமுலைப்பாலை அழகிய திருமணிப் பொற்கலசத்தில் ஏற்று குமாரக் கடவுளை உண்பித்தார்.

ஆதி நாயகன் கருணையா யமலமாய்ப் பரம
போத நீரதா யிருந்ததன் கொங்கையிற் பொழிபா
லேதி லாததோர் குருமணி வள்ளமீ தேற்றுக்
காதன் மாமகற் கன்பின லருத்தினள் கவுரி.

அவ்வாறு அம்மையின் பாலையுண்ட பசி தாகமில்லாத பரமன் பசி வந்தது போலவும், அப் பசி சிறிதேயாயினும் பெரிதாக வந்தது போலவும், அழுதும் தொட்டிலுதைத்தும் செய்யும் அருள் ஆடலைப் பகழிக்கூத்தர் கூறுமாறு காண்க.

எள்ளத் தனைவந் துறுபசிக்கு மிரங்கிப் பரந்து சிறுபண்டி
யெக்கிக் குழைந்து மணித்துவர்வா யிதழைக் குவித்து விரித்தழுது
துள்ளித்துடித்துப்புடைபெயர்ந்து தொட்டி லுதைந்து பெருவிரலைச்
சுவைத்துக் கடைவாய் நீரொழுகத் தோளின் மகரக் குழைதவழ
மெள்ளத் தவழ்ந்து குறுமூரல் விளைத்து மடியின் மீதிருந்து
விம்மிப் பொருமி முகம்பார்த்து வேண்டு முமையாள் களபமுலை
வள்ளத் தமுதுண் டகமகிழ்ந்த மழலைச் சிறுவா வருகவே
வளருங் களபக் குரும்பைமுலை வள்ளிகணவா வருகவே.

"இத்தகைய ஞானம்பிகையின் ஞானப்பாலைப் பருகிய ஞானபண்டிதனுடைய ஞானசக்தியும் உடைவாளும் சிறுவாளும் ஆக மூன்றும் என் உள்ளத்தில் இருப்பதால் இயமனே! நீ என்னிடம் வராதொழிக. வந்தால் உன் உயிர் நீங்கும்" என்று அருணையடிகள் இயமனை யழைத்துக் கூறுகின்றனர்.

அரையிற்கட்டுஞ் சீரா:—

சீரா—என்பதற்குக் கச்சை யென்று பலர் பொருள் கொண்டனர். அது பொருந்தாது. சீரா என்பது உடைவாள். இதனைக் கீழ்வரும் திருப்புகழடிகளால் கண்டு தெளிக.

"சேருய சோரி புக்க ளக்கர் திட்டெழ
மாருநி சாச ரக்கு லத்தை யிப்படி
சீராவி னுலறுத்த றுத்தொ துக்கிய பெருமாளே."

'ஒரு ஆயுதமே போதும். உடைவாள், சிறுவாள், ஞான வேல் ஆக மூன்று படைகளிருப்பதால் அந்தகா! எல்லோரையும் போல என்னைக் கருதற்க. எல்லோர் உயிரையும் பிரிக்கும் நீ என்னிடம் வந்தால் உன் உயிர் பிரியும். எச்சரிக்கை' என்று சுவாமிகள் புரியும் வீர கர்ஜனையை ஊன்றி உணருங்கள். அவ் வீர உணர்ச்சி நம் மனத்திலும் உண்டாகும்.

### கருத்துரை

அந்தகனே! ஞானபண்டிதன் உடைவாளும், சிறுவாளும் வடிவேலும் என் சிந்தையில் குடிகொண்டிருப்பதால் என்னிடம் வாராதொழிக.

## 82

தகட்டிற் சிவந்த கடம்பையு நெஞ்சையுந் தாளிணைக்கே
புகட்டிப் பணியப் பணித்தரு ளாய்புண்ட ரிகனண்ட
முகட்டைப் பிளந்து வளர்ந்திந்த்ர லோகத்தை முட்டவெட்டிப்
பகட்டிற் பொருதிட்ட நிட்டுர சூர பயங்கரனே.

### பதவுரை

புண்டரீகன்=தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரம தேவரது, அண்ட முகட்டை பிளந்து=உலகத்தின் வாயிலைப் பிளந்து, வளர்ந்து=அதுவரை ஓங்கி நின்று, இந்த்ரலோகத்தை = அமராவதியை, முட்ட எட்டி=முட்டும்படி எட்டிச் சென்று, பகட்டில்

பொருதிட்ட=ஆண்யானை போல் போர்புரிந்த, நிட்டூர=கொடுங் குணமுடையவனாகிய, சூர பயங்கரனே=சூரபன்மனுக்குப் பயங்க ரத்தை உண்டுபண்ணினவரே! தகட்டின் சிவந்த=இலைகளோடு கூடி சிவந்த நிறமுள்ள, கடம்பையும்=கடம்பமலர் மாலையையும், நெஞ்சையும் அடியேனுடைய மனத்தையும், தாள் இணைக்கே புகட்டி=தேவரீருடைய இரண்டு திருவடிக்கே சேர்த்து, பணிய= வணங்குமாறு, பணித்து அருள்வாய்=கட்டளையிட்டருள்வீர்.

விரிவுரை

தகட்டிற் சிறந்த கடம்பையும்:—

தகடு-மென்மையுந் தட்டையுமான வடிவு; இலை, பூவின் புற இதழ் என்ற பல பொருள்களை யுடையது. மாலை தொடுப் பவர்கள் பூவிற்கு அருகிலுள்ள இலையுடன் எடுத்து அழகுறத் தொடுப்பார்கள். ஆதலின் தகடு என்பது இலை என்று பொருள் செய்யப்பட்டது. தகடு போலே சிவந்த என்ற பொருள் கூறினும் அமையும்.

"காலுக்கு அணிகலம் வானோர் முடியுங் கடம்பும்" என்பார் பிறிதோரிடத்தில்.

இறைவனை வழிபடுவதற்கு பூவும் நீருமே சிறந்த பொருள்களாம்.

"புண்ணியஞ் செய்வார்க்குப் பூவுண்டு நீருண்டு"
அண்ண லதுகண் டருள்புரியா நிற்கும்
எண்ணிலி பாவிகள் எம்மிறை யீசனை
நண்ணறி யாமல் நழுவுகின் றாரே. —திருமூலர்.

நெஞ்சையும்:—

இறைவனுடைய திருவடியில் மலரிட்டு வணங்கும்பொழுது நமது மனத்தையும் அம்மலருடன் சேர்த்துவிட வேண்டும். மனத்துடன் சேராத மலர் வானளவு உயரமிருக்கினும் பயன் படாது.

கானுறு கோடி கடிகமழ் சந்தனம்
வானுறு மாமல ரிட்டு வணங்கினும்

ஊனினை நீக்கி யுண்பவர்க் கல்லது
தேனமர் பூங்கழல் சேர வொண்ணுதே, —திருமூலர்.

ஊனினை நீக்கி – உடம்பில் தாக்கற்றிருத்தல்; மனம் இறந்த நிலை.

"அவனடியிற் சாத்துமனம் நற்பூசனை"

என்ற ஆன்றோர் வாக்குஞ் சிந்தித்தற்குரியது.

இறைவனை வழிபடுவதற்கு, மலர் நீர் சந்தனம் தீபம் தூபம் முதலிய சாதனங்கள் ஒன்றுங் கிடையாதபொழுது நெஞ்சை அர்ப்பணம் புரிதல் வேண்டும்.

போதும் பெருவிடிற் பச்சிலை யுண்டு புனலுண் டெங்கும்
ஏதும் பெருவிடில் நெஞ்சுண் டின்றே யிணையாகச் செப்பும்
சூதும் பெருமுலைப் பங்கர் தென்தோணி புரேசர் வண்டின்
தாதும் பெருத அடித்தாமரை சென்று சார்வதற்கே.
—திருவெண்காடா.

தாளிணைக்கே புகட்டிப் பணியப் பணித்தருளாய்:—

முருகப்பெருமானுடைய திருவடியில் உள்ளத்தைப் புகட்டினுல் முத்திவீடு எளிதில் கிடைக்கும்.

"காட்டிற் குறத்திப் பிரான்பதத்தே கருத்தைப் புகட்டில்
வீட்டிற் புகுத மிகஎளிதே"

என்பார் பிறிதொரு பாடலில்.

"அவனருளாலே அவன்ருள் வணங்கி" என்றபடி "பணிவதற்குத் தேவரீரே பணித்தருளும்" என்று வேண்டுகின்றனர்.

புண்டரிகனண்டமுகட்டை........பயங்கரனே:—

சிறந்த மதங்கொண்ட யானைபோல் எதிர்த்து பிரமாண்டத்தைப் பிளக்குமாறும், தேவலோகத்தை முட்டுமாறும் வளர்ந்து நின்று போர்புரிந்த சூரபன்மனுக்குப் பயங்கரத்தை நல்கியதால் "சூர பயங்கரன்" என்ருர்.

"அதிகா அனகா அபயா அமரா
பதிகா வலசூர பயங் கரனே" —அநுபூதி.

### கருத்துரை

சூரபயங்கரனே! அடியேனது நெஞ்சையும் கடப்பமலரையும் உமது திருவடிக்குச் சூட்ட அருள்புரிவாய்.

## 83

**தேங்கிய வண்டத் திமையோர் சிறைவிடச் சிற்றடிக்கே**
**பூங்கழல் கட்டும் பெருமாள் கலாபப் புரவிமிசை**
**தாங்கி நடப்ப முறிந்தது சூரன் தளந்தனிவேல்**
**வாங்கி யனுப்பிடக் குன்றங்க ளெட்டும் வழிவிட்டவே.**

### பதவுரை

சிற்றடிக்கே=தனது சிறிய திருவடிக்கு, பூ கழல் கட்டும்= பொலிகின்ற வீரக்கழலை அணிந்து கொள்ளும், பெருமாள்= பெருமை மிக்க முருகக்கடவுள், தேங்கிய அண்டத்து=செல்வம் முதலியன நிறைந்துள்ள வானுலகத்தில் வாழும், இமையோர் சிறைவிட=தேவர்களது சிறையை விடுவிக்கும்பொருட்டு, கலாப புரவிமிசை=தோகையுடைய குதிரையாகிய மயிலின் மீது, தாங்கி நடப்ப=ஏறி நடத்தலும், சூரன் தளம் முறிந்தது=சூரபன்மனுடைய சேனையானது முறிபட்டது; தனிவேல் வாங்கி அனுப்பிட= ஒப்பற்ற வேலாயுதத்தை எடுத்து ஏவுதலும், குன்றங்கள் எட்டும்= குலமலைகள் எட்டும், வழிவிட்டவே=விலகி வழிவிட்டன.

### விரிவுரை

**தேங்கிய அண்டம்:—**

*தேங்குதல்-நிறைதல்; அவாய் நிலையாக செல்வத்தைக் குறிக்கின்றது. இந்திரலோகமாகிய அமராவதியில் எல்லா வகையான செல்வங்களும் நிறைந்திருக்கின்றன.*

**இமையோர் சிறைவிட:—**

சூரபன்மன் இட்ட தேவர்களது சிறையை மீட்கும் பொருட்டு முருகப் பெருமான் திருவுளங்கொண்டு.

**சிற்றடிக்கே பூங்கழல் கட்டும் பெருமாள்:—**

இளம் பூரணன் ஆதலின் சிற்றடியென்றார். அழகிய திருவடியில் வீரக்கழலை யணிந்துகொண்டனர். வீரர்கள் அணியுஞ் சிறந்த அணி வீரக்கழல்.

**கலாபப் புரவிமிசை தாங்கிநடப்ப சூரன் தளம் முறிந்தது:—**

தோகையையுடைய மயிற்பரியின் மீது எம்பெருமான் ஏறி நடந்தருளியவுடன் சூரபன்மனது சேனைக்கடல் நிலைகுலைந்து அழிந்தது.

**தனிவேல் வாங்கியனுப்பிட......வழிவிட்டவே:—**

எம்பெருமான் வேலாயுதத்தை எடுத்து ஏவுதலும் குல கிரிகள் எட்டும் விலகி வழிவிட்டன.

''மகபதி தன்பதி பகைகிழியும்படி யன்றடல்
வாளோங்கிய வேல்வாங்கவே
சிகரநெடுங்கிரி குகைகள் திறந்து திகந்தமும்
லோகாந்தமு நீர்தேங்கின'' —வகுப்பு.

*கருத்துரை*

அறுமுகப்பெருமான் அமரர் சிறையை மீட்கும் பொருட்டு திருவடியில் வீரக்கழலையணிந்து மயிலில் புறப்பட்டபொழுது சூரபன்மன் சேனை முறிபட்டது. வேலை ஏவியபொழுது குலமலைகள் எட்டும் விலகி வழி விட்டன.

## 84

மைவருங் கண்டத்தர் மைந்தகந் தாவென்று வாழ்த்துமிந்தக்
கைவருந் தொண்டன்றி மற்றறி யேன்கற்ற கல்வியும்போய்ப்
பைவருங் கேளும் பதியுங் கதறப் பழகி நிற்கும்
ஐவருங் கைவிட்டு மெய்விடும் போதுன் னடைக்கலமே.

*பதவுரை*

மைவரும் கண்டத்தர் மைந்த=ஆலாலவிடத்தை யுண்டதனால் கரிய நிறத்துடன் கூடிய கழுத்தை யுடையவராகிய சிவ

மூர்த்தியினது திருக்குமாரரே! கந்தா=கந்தப்பெருமானே, என்று வாழ்த்தும்=என்று துதித்து வாழ்த்துகின்றதாகிய, இந்த கைவரும் தொண்டு அன்றி=இந்த பழக்கத்திற்கு வந்த தொண்டினை அல்லாமல், மற்று அறியேன்=வேறு ஒன்றையும் அறிந்தேனில்லை, கற்ற கல்வியும் போய்=அடியேன் கற்ற கல்வியும் நீங்கி, பைவரும் கேளும்=துன்பங்கொண்டு வருகின்ற சுற்றத்தினரும், பதியும்=வாழ்கின்ற ஊராரும், கதற=ஓவென்று ஓலமிட்டு அழ, பழகி நிற்கும் ஐவரும் கைவிட்டு=அடியேன் நன்ருகப் பழகியுள்ள ஐம்பொறிகளும் என்னைக் கை நழுவ விட்டு, மெய்விடும்போது=அடியேனும் இந்த உடலை விடுகின்ற காலத்தில், உன் அடைக்கலமே =தேவரீரது அடைக்கலமாவேன்.

## விரிவுரை

**மைவருங் கண்டத்தர்:—**

நீல நிறமுடைய கழுத்தையுடையவர் ஆதலின் சிவபெருமான் "நீலகண்டர்" எனப்படுவார். பெருமானுடைய சிறந்த கருணையைத் தெரிவிப்பது நீலகண்டம். ஆலமுண்டதால் நீலகண்ட ராயினுர். அமிர்தத்தை யருந்திய அமரரெல்லாம் ஒருகாலத்தில் மடிவர்; விடத்தையுண்ட விமலன் என்றும் அழியாது விளங்குவர்.

அமரர்கள் எல்லோருடைய கண்டங்களையும் நீக்கியது எம்பெருமானுடைய கண்டம். உள்ளும் புறமுமுள்ள ஆன்மகோடிகள் அழியாது உய்யும் பொருட்டு ஆலாகல விடத்தை உண்ணுமலும் உமிழாமலும் கண்டத்தில் தரித்து எம்பெருமான் கருமணிகண்டராக விளங்குவர். அறுபத்து மூவரில் ஒருவர் "திருநீலகண்டம்" என்ற மகா மந்திரத்தை இடையருது ஜெபித்தவண்ணமாகவே இருந்து முத்தி பெற்றனர். பவளம் போன்ற திருமேனியில் கண்டம் மட்டும் கரிய நிறத்துடன் விளங்கி மிகமிக அழகு செய்யும்.

**மைந்த:—**

மைந்து-வலிமை; வலிமை யுடையவன் மைந்தன்; பிதாவுடைய சிறந்த வலிமையை யுடையவன் மைந்தன் எனப்

பெறுவான். சிவபெருமான் பிறவாதவர்; இறவாதவர்; சங்கரனே சண்முகனுதலின், "பெம்மான் முருகன் பிறவா னிறவான்" எனப்பட்டனர். ஒன்றே மற்றொன்ருக மாறுகின்றபோது முன்னையினும் சிறந்ததாகவே விளங்கும். பொன் ஆபரணமாக மாறுகின்றபோது விசேட அழகும் ஒளியும் உடையதாக விளங்கும். வெண்ணெய் நெய்யாக மாறுகின்றபோது வெண்ணெயில் மறைந்திருந்த மணமும் குணமும் இனிமையும் வெளிப்படுகின்றன. அதுபோல் சிவபெருமான் முருகப்பெருமானுக வந்தனர். ஆயினும் சிவமூர்த்தியினும் முருகமூர்த்தி விசேட அனுக்ரக மூர்த்தியாவர். இந்தக் கருத்தில் தான் "தகப்பன் சாமி" எனப்படுவர்.

**கந்தா:—**

கந்தன் என்ற சொல்லுக்கு "தனது ஆற்றலினுல் பகைவர்களை வற்றச் செய்பவன்" என்றும், "ஆறு திருமேனிகளும் ஒன்ருகப் பொருந்தினவன்" என்றும், "ஆன்மாக்களுக்குப் பற்றுக்கோடாக விளங்குபவன்" என்றும் பொருள்படும். (கந்து-பற்றுக்கோடு)

**என்று வாழ்த்துமிந்த கைவருந்தொண்டன்றி மற்றறியேன்:—**

"சிவகுமரா! உலகில் அடியார்கள் மனதாலும் நினைக்க முடியாத பெரும் பெருந் தொண்டுகளைப் புரிந்தனர்; புரிகின்றனர். ஒருவர் வாளால் மகவரிந்து ஊட்டினுர். ஒருவர் கண்ணிடந்து அப்பினுர். ஒருவர் வானைத் தொடுகின்ற கோபுரமும் மண்டபமும் கோயிலும் தஞ்சையில் புதுக்கினுர். இன்னும் பலர் திருக்குளம் அமைப்பர். திரு நந்தவனம் வைப்பர். இவ்வாறு பலப்பல அரிய பெரிய திருத்தொண்டுகளைச் செய்யா நிற்பர். சிறியேன் அவைகளைப்போல் யாதொரு தொண்டும் செய்தற்கு ஆற்றலில்லாதவன். என் செய்வேன்? ஆனுல் அடியேனுக்குப் பழக்கமானது உமது திருநாமங்களைக் கூறித் துதித்தல். ஆனபடியால் 'கந்தா' என்று உமது திருநாமத்தைச் சதா கூறி வாழ்த்துவேன்" என்று சுவாமிகள் மிகவும் உருக்கமாக உரைக்கின்றனர்.

கந்தன் என்ற நாமம் மிகவும் சிறந்த நாமம். எல்லோருக்கும் பற்றுக்கோடானவர் என்ற பொருளில் அந்த நாமத்தைச் சிந்திக்குங்கால் அதன் அருமை மிகமிக உயர்வாக உள்ளத்தில் தெள்ளமுதம் போல் தித்திக்கின்றது. எம்பெருமானுடைய புராணம் 'கந்தபுராணம்'; 'கந்தரந்தாதி', 'கந்தரலங்காரம்', 'கந்தரநுபூதி', 'கந்தர் கலிவெண்பா' என்ற பிரபந்தங்கள் கந்த நாமத்துடன் கூடியிருப்பதையும் காண்க. 'கந்தர் சஷ்டி' என வழங்குவதையும் ஈண்டு நினைவு கூர்தற்பாலது.

வாக்கினுல் மட்டும் செய்யும் தொண்டுக்கு வாசா கைங்கரியம் என்று பேர். வாக்கினுல் செய்வதுடன் காயத்தாலும் செய்யவேண்டும். வாக்காலும் மனத்தாலும் காயத்தாலும் தொண்டு புரிந்த அப்பமூர்த்திகளுக்குத் திருவீழிமிழலையில் சிவபெருமான் வாசியில்லாத காசை நல்கியதை உற்று நோக்குமின். ஆதலினுலே மணிவாசகனுர்,

"கோமானின் திருக்கோயில் தூகேன் மெழுகேன்
கூத்தாடேன்"

என்கிருர்.

"வாசா கயிங்கரிய மன்றியொரு சாதன
மனேவாயு நிற்கும் வண்ணம்
வாலாயமாகவும் பழகியறியேன்"

என்பார் தாயுமானுர்.

அங்கங்கள் ஒவ்வொன்றும் இறைவனுடைய திருத்தொண்டுகளைப் புரியவேண்டும் என்றே அப்பமூர்த்திகள் திரு அங்கமாலை பாடியருளினுர். இறைபணியில் ஈடுபடாத உடம்பு எத்துணைச் சிறந்ததாயினும் இழிவுடையதேயாகும். இறைபணியின் மாட்சிமை தெரிந்த ஒருவர் கூறுமாறு காண்க.

தடமான தீதென்று அறியாக் குருடரின் தன்மையைப்போல்
மடமானமோக வலையினிற் பட்டு மயங்குகிறேன்
திடமாகப் பூசுரர் நாடோறு மாட்டுந் திருமஞ்சனக்
குடமாய்ச் சமைந்திலனே அருணபுரிக் கோயிலிலே.

கற்ற கல்வியும் போய்:—

ஆவி பிரியும்போது நெடுங்காலமாக அரிதின் முயன்று கற்ற கல்வியும் விலகிவிடும்.

"கற்கை நன்றே கற்கை நன்றே பிச்சை புகினும்
கற்கை நன்றே"

என்ற நறுந்தொகையின்படி கல்வி மிகமிக இன்றியமையாதது. ஆயினும் அந்தக் கல்வியின் பயன் இறைவனை யடைவதாகும். இந்தக் கருத்தில் வள்ளுவனுர் "கற்றதனுல் ஆய பயன் என்கொல்" என்று வினுவுகின்றனர். ஆனபடியால் இறைவனை யறியும்பொருட்டன்றி கற்றகல்வி பயனற்றதாகும். அக் கல்வியும் கழன்று விடுகின்றது.

கற்றகலை யால்நிலைதான் காணுமோ காண்பதெல்லாம்
அற்றவிடத் தேவெளியாம் அன்றோ பராபரமே. —தாயுமானுர்.

பை வரும் கேளும்:—

பை–துன்பம். துன்பத்தையடைகின்ற சுற்றத்தாரும் உயிர் பிரியும்போது கைவிட்டுவிடுவர். அப்போது தான் செய்த வினையைத் தவிர ஒருவரும் தொடரமாட்டார்கள்.

கட்டியணைத்திடும் பெண்டிரு மக்களுங் காலத்தச்சன்
வெட்டி முருக்கி மரம்போல் சரீரத்தை வீழ்த்திவிட்டால்
கொட்டி முழக்கி யழுவார் மயானங் குறுகியப்பால்
எட்டியடி வைப்பரோ இறைவா கச்சி யேகம்பனே.

பதியும் கதற:—

பதி–ஊர். இடவாகு பெயராக ஊரில் வாழ்பவரைக் குறிக்கின்றது. உயிர் பிரியுங்கால் உறவினரும், நண்பரும், ஊராருங் கூடி ஓவென்று ஓலமிட்டுக் கதறி யழுவர். அழுவரே யன்றி அவ் வுயிரைக் காக்குந் திறனிலராவர்.

என்பெற்ற தாயாரும் என்னைப் பிணமென் றிகழ்ந்து விட்டார்
பொன்பெற்ற மாதரும் போவென்றுசொல்லிப் புலம்பிவிட்டார்
கொன்பெற்ற மைந்தரும் பின்வலம் வந்து குடமுடைத்தார்
உன்பற் றெழிய ஒருபற்றுமில்லை உடையவனே.

—பட்டினத்தடிகள்.

பழகி நிற்கும் ஐவரும் கைவிட்டு:—

மெய், வாய், கண், நாசி, செவி என்ற ஐம்பொறி களும் நன்ருக நெடுங்காலமாகப் பழகியவையாம். தொழில் புரிவோருடைய கரங்கள் எத்துணை விரைவாகவும் நுட்ப மாகவும் செய்கின்றன; நடிப்பவனுடைய கால்கள் எத்துணை நுட்பமான தாளங்களுடன் நடிக்கின்றன; படிப்பவனுடைய கண்கள் எத்துணை வேகமாகச் சுழன்று படிக்கின்றன; நாசி மோப்பத்தாலேயே இன்ன பொருள் என்று நுணுகி யறி கின்றது; காது சத்தத்தைக் கேட்டவுடன் இன்னவன் குரல், இன்னவன் பாடுகின்ருன், இன்ன கருவியை வாசிக்கின்ருன் என்றெல்லாம் அறிகின்றது. இங்ஙனம் நெடிது காலம் பழகிய ஐம்பொறிகளும் ஆவி பிரியும்போது தத்தம் செயல்களை மறந்து அசைவற்று விடுகின்றன.

மெய் விடும்போது உன் அடைக்கலமே:—

மெய்ப்பொருளாக விளங்கும் இறை தங்கும் இடம் இவ்வுடம்பு ஆதலின் இடவாகு பெயராக மெய்யெனப்பட் டது. விளக்கெரியும் தம்பத்தையும் விளக்கென்பது போல் என்றறிக. இறுதியில் எல்லோரும் கைவிட்டது மன்றி உயிருடன் ஒட்டிப் பிறந்த உடம்பும் கைநழுவி விட்டு விடு கின்றது. மெய் நழுவும் அக்காலத்தில் கை நழுவாது காப் பாற்றுபவர் கந்தப்பெருமானேயாதலின் அப் பரமபதியின் திருவடிக்கு அடைக்கலம் புகுகின்றனர்.

அடைக்கலம் புகுந்தவரை ஆதரிப்பதைவிடப் பெருஞ் செயல் யாதொன்று மில்லையன்ருே? மணிவாசகப் பெருந் தகை கூறும் அடைக்கலத் திருப்பாடல்களில் ஒன்று ஈண்டு சிந்தித்தற் குரியது.

பிறிவறியா வன்பர் நின்னருட் பெய்கழல் தாளிணைக்கீழ்
மறிவறியாச் செல்வம் வந்துபெற்ருர் உன்னை வந்திப்பதோர்
நெறியறியேன் நின்னை யேயறியேன் நின்னை யேயறியும்
அறிவறியேன் உடையாய் அடியேன் உன் அடைக்கலமே,

கந்தரலங்காரத்துள் இப்பாடல் மிகவும் நனி இனிய அமுதப் பாடலாகும். இதனை அன்பர்கள் நாள்தோறும் பூஜா காலத்தில் பெருமானிடங் கூறி முறையிடவேண்டும்.

## கருத்துரை

ஆலமுண்ட நீலகண்டரது புதல்வரே! தேவரீரைத் துதிக்கும் தொண்டையன்றி வேறு அறியேன்; ஆயினும் ஆவி பிரியும்போது அடைக்கலமாகிய என்னை ஆட்கொள்ளுவீர்.

## 85

காட்டிற் குறத்தி பிரான்பதத்தே கருத்தைப் புகட்டின்
வீட்டிற் புகுத மிகவெளிதே விழி நாசிவைத்து
மூட்டிக் கபால மூலாதார நேரண்ட மூச்சையுள்ளே
ஓட்டிப் பிடித்தெங்கு மோடாமற் சாதிக்கும் யோகிகளே.

## பதவுரை

விழி நாசி வைத்து=கண்பார்வையை நாசி நுனியில் வைத்து, மூட்டி=மூலக்கனலை மூள்வித்து, கபாலம்=கபாலத்திற்கும், மூலாதாரம்=மூலாதாரத்திற்கும், நேர் அண்ட=நேரே பொருந்துமாறு, மூச்சை உள்ளே ஓட்டி=சுவாசத்தை உள்ளிடத்தே உலாவுமாறு செய்து, எங்கும் ஓடாமல் பிடித்து=அப் பிராணவாயு வேறு எங்கும் ஓடவிடாமற்படி பிடித்து, சாதிக்கும் யோகிகளே=சாதிக்கின்ற யோகமார்க்கத்தில் நின்றவர்களே! காட்டில் குறத்தி=கானகத்தில் வாழுகின்ற வள்ளியம்மையாரது, பிரான் பதத்தே=தலைவராகிய முருகப்பெருமானுடைய திருவடிக் கமலங்களிலே, கருத்தை புகட்டி=உள்ளத்தைச் செலுத்தினால், வீட்டில் புகுத மிக எளிது=முத்தியுலகிற் செல்லுதல் மிகவும் சுலபமான காரியமாகும்.

## விரிவுரை

**காட்டில் குறத்தி பிரான்:—**

இத் திருப்பாடலில் யோகமார்க்கத்தின் அருமையையும் அன்பு மார்க்கத்தின் எளிமையையும் சுவாமிகள் விளக்கி

யருளுகின்றனர். அதற்கு ஏற்ப முருகப்பெருமானை வேறு வகைகளால் குறிப்பிடாமலும், வள்ளிபிரான் என்று கூடச் சொல்லாமலும், குறத்தி பிரான் என்றனர். அத்துடனும் அமையாமல் "காட்டிற் குறத்தி பிரான்" என்றுங் கூறியருளினர். அதில் உள்ள நயங்களை அன்பர்கள் சிந்திக்க.

விதி மார்க்கம், அன்பு மார்க்கம் என்று இரு மார்க்கங்கள் உள. அவற்றில் வேதாகம வழி நின்று விதித்தன செய்தும், விலக்கியன தவிர்த்தும் அணுவளவுகூட மாறுபாடின்றி நடப்பது விதிமார்க்கம். அன்பு மார்க்கமாவது, யாதொன்றும் கருத்தில் புகாமல் ஒரே அன்பு மயமாக நிற்பது. விதி மார்க்கத்தில் நிற்போர் இறைவனைத் தேடிச் சென்று திருவடியடைவர். அன்பு மார்க்கத்தில் நிற்போரை இறைவன் தேடிச்சென்று வலிதில் ஆட்கொள்வன்.

விதிமார்க்கத்தில் நின்றவரினும் அன்பு மார்க்கத்தில் நின்றவர் இறைவனை மிகவும் நெருங்குகின்றனர். விதி மார்க்கத்தில் நின்றவர் தெய்வயானையம்மையார். அவர் தாமே முருகனை விரும்பி மணந்து கொண்டனர். அன்பு மார்க்கத்தில் நின்ற வள்ளியம்மையாரை முருகப்பெருமான் தாமே வலிதில் போய் வேண்டி மணந்து கொண்டனர். அன்பு நெறியின் உயர்வைத் தெரிவிப்பதுவே வள்ளியம்மையார் திருமணம். அன்பு செய்வோர் காட்டிலிருப்பினும், இழிகுலத்தாராயினும், கல்லாரேயாயினும் இறைவன் எளிதில் அவர் வயமாகுவர். இவற்றையெல்லாம் சிந்தித்து உணர்தற்பொருட்டு "காட்டிற் குறத்தி பிரான்" என்று சுவாமிகள் அருளிச்செய்தனர்.

இக்காரணம் பற்றியே வள்ளியம்மையாரைக் குறித்துப் பலப்பல இடங்களில் பாராட்டுகின்றனர்.

"மதிவாணுதல் வள்ளியை யல்லதுபின்
துதியா விரதா சுரபூபதியே"
"சுனையோ டருவித் துறையோ டுபசுந்
தினையோ டிதணோடு திரிந்தவனே"
"வள்ளிக்கு வாய்த்த பெருமாளே"

**தத்தே கருத்தைப் புகட்டில்:—**

முருகப் பெருமானுடைய திருவடியிலே உள்ளத்தைச் செலுத்துதல் வேண்டும். உள்ளத்தில் வேறு ஒன்றுக்கும் இடமிருக்கக்கூடாது. அவ்வாறு ஆண்டவன் அடிமலரில் உள்ளத்தைச் செலுத்த வல்லார்க்கு இவ்வுலகில் வேண்டியது யாதொன்றுமில்லை.

**வீட்டிற் புகுத மிகவெளிதே:—**

ஏனைய நெறிகளில் அரிதாகிய வீடு இந்த நெறிக்கு எளிதாகி விடுகின்றது. இறைவன் திருவடிக் கமலத்தில் உள்ளத்தைச் செலுத்தி அன்பு செய்து அகங் குழைவார்க்கு இறைவன் தானே வெளிப்படுவன்.

அன்பு செய்து நெஞ்சம் நெகிழ்ந்து காதலாகிக் கசிந் துருகும் நெறியறியாது, காட்டிலெய்தியும், புற்று மூடியும், காற்றைப் புசித்தும், கனலிடை நின்றும், புனலிடை மூழ்கி யும் பலர் துன்புறுவாராயினர்.

காடே திரிந்தென்ன காற்றே புசித்தென்ன கந்தை சுற்றி
ஓடே யெடுத்தென்ன வுள்ளன் பிலாதவர் ஓங்கு விண்ணோர்
நாடே யிடைமரு தீசர்க்கு மெய்யன்பர் நாரியர்பால்
வீடே யிருப்பினும் மெய்ஞ்ஞான வீட்டின்ப மேவுவரே.
—பட்டினத்தார்.

எளிது என்று மட்டுங் கூருமல், ''மிக எளிது'' என்ற னர். கற்பகோடிகாலந் தவம் புரியினும் கிட்டாத பரகதி என்புருக அன்பு செய்வார்க்கு மிகமிக எளிதிற் கிட்டும். இறைவனும் எளிதில் வெளிப்படுவன்.

வான்வந்த தேவர்களும் மாலயனோ டிந்திரனும்
கானின்று வற்றியும் புற்றெழுந்துங் காண்பரிய
தான் வந்து நாயேனைத் தாய்போற் றலை யளித்திட்டு
ஊன்வந் துரோமங்க ளுள்ளே யுயிர்ப்பெய்து
தேன்வந் தமுதின் தெளிவி னொளிவந்த
வான்வந்த வார்கழலே பாடுதுங்கா ணம்மானாய்.

திருமால் தேடியுங் காணுத திருவடிகள் சிவப்பேற மதுரையம்பதியில் நடந்துவரச் செய்தது வந்தியம்மையாரது அன்பன்றே? பிரமதேவர் பறந்துபோயுங் காணுத திருமுடி, விறகுக்கட்டைச் சுமக்கச் செய்தது பாணபத்திரருடைய அன்பன்றே? மண் சுமந்ததும், பாண்டியன் பிரம்படியால் புண்சுமந்ததும், கண்ணப்பர் பாதுகையைச் சென்னிமேல் ஏற்றதும், கொப்புளித்து உமிழ்ந்த எச்சில் நீரில் குளிர்ந்ததும் பிறவும் அளவற்ற அன்பின் சிறப்பைக் காட்டுகின்றன.

**விழி நாசி வைத்து:—**

யோக மார்க்கத்தில், நாட்டத்தை நடுமூக்கில் வைத்தல் வேண்டும். "நாசியின்மீது இரண்டு விழிபாய" என்பார் திருப்புகழில்.

**மூட்டி:—**

மூலாதாரத்தில் உள்ள மூலாக்கினியை பிராணுயாமாதி சாதனங்களால் மூள்வித்தல்.

"மூலா தாரத்து மூண்டெழு கனலைக்
காலா லெழுப்புங் கருத்தறி வித்தே" —விநாயகரகவல்.

**கபால மூலாதார நேரண்ட:—**

மூலாதாரத்தினின்றும் எழுந்த வாயுவானது மூலாக்கினியுடன் சேர்ந்து சஹஸ்ராரப் பெருவெளியிற் சென்று பொருந்துதல். அதனுல் மதிமண்டலம் வெதும்பி அமிர்தம் பொழியும். அதனையுண்டு பசிதாகமின்றி அசைவற்றிருப்பர் யோகியர்.

"மதிமண்டலத்திலே கனல்செல்ல அமுதுண்டு
வனமூடிருந்தும்" —தாயுமானுர்.

**மூச்சையுள்ளே ஓட்டி:—**

வெளியே அதோமார்க்கமாகக் கழியும் பிராணவாயுவை அங்ஙனங் கழிய விடாமற்படிக்கு நிறுத்தி, உள்ளே சஞ்சரிக்குமாறு செய்தல்.

பிடித்து எங்கும் ஓடாமல் சாதிக்கும் யோகிகள்:—

பிராணவாயுவை அடக்கிப் பிடித்து எங்கும் ஓடாவண்ணஞ் செய்வது யோகமார்க்கம். அந்த யோகமார்க்கத்தால் காயம் அழிவின்றி நிற்கும். அன்பின்றிச் செய்யும் இந்த யோகத்தால் வீடு கூடுதல் அரிதாகும்.

யோகமார்க்கம் மூன்ருவது படியாயினும் இறை அன்பு என்ற ஒன்று இல்லையாயின் அது பயன் பெருது. வெறும் வைராக்கியமும் சாதனையும் சிறப்படைய மாட்டா. எத்துணை யழகிய மலராயினும் மணமில்லை யாயின் அதனுல் பயன் யாது? அன்பு என்ற மணமில்லையேல் யோகம் என்ற மலர் பயனற்றுப்போகும்.

அன்பு நெறியை இகழ்ந்து, அன்போடுருகி இறை வழி பாடு புரியும் அருளாளரை இகழ்ந்து புறக்கணிக்கும் வரட்டு யோகியர்களைக் குறித்து இப்பாடல் எழுந்தது. ''யோகிகளே! எச்சரிக்கை'' என்று சுவாமிகள் நல்வழிப் படுத்துகின்றனர்.

வீடுபேறு அடைதற்குரிய நெறிகள் நான்கு; அவை யாவன:—சரியை, கிரியை, யோகம், ஞானம் என்பனவாம். இந்த நான்கு நெறிகட்கும் இறையன்பு உயிர் நாடியாம். இறையன்பில்லாத சரியையும், கிரியையும், யோகமும், ஞானமும் பயன்தரா; ''அன்பில்லாதவர் ஞானம் மிகவு நன்றே'' என்பர் பிறிதோரிடத்தில். இதனையே கூர்ம புராணமும் வற்புறுத்துகின்றது.

''இன்னவெங் கலியின்முக்க ணெந்தைதா ளிமைப்போ தேனுந்
தன்னம ருள்ளத் தெண்ணிற் றழலிடை யளப்பிறளின்
துன்னரு யோகந்தன்னி னுறங்கினோர் தமக்கு மெய்தா
மன்னரு முத்தி வீட்டின் மருவிவீற் றிருக்கலாமால்''

கருத்துரை

இறையன்பின்றி மூச்சைப் பிடித்துச் சாதனை செய்யும் யோகிகளே! உங்கள் கருத்தை முருகவேள் திருவடியிற் செலுத்தினுல் மிகவும் எளிதில் வீடுபேறு பெறுவீர்கள்.

## 86

வேலா யுதன்சங்கு சக்ராயுதன் விரிஞ் சன்னறியாச்
சூலா யுதன்தந்த கந்தச் சுவாமி சுடர்க்குடுமிக்
காலா யுதக்கொடி யோனரு ளாய கவசமுண்டென்
பாலா யுதம்வரு மோயம னேடு பகைக்கினுமே.

### பதவுரை

வேலாயுதன்=வேற்படையைத் தாங்கியவர், சங்கு சக்ர ஆயுதன்=சங்கையும் சக்கரத்தையும் ஆயுதமாகக் கொண்டுள்ள திருமாலும், விரிஞ்சன்=பிரமதேவனும், அறியா=அறிந்துகொள்ள முடியாத, சூல ஆயுதன் தந்த=திரிசூலத்தைத் தாங்கிய சிவபெருமான் பெற்றருளிய, கந்தசுவாமி=கந்தப்பெருமான், சுடர்குடுமி=ஒளியையுடைய உச்சிக்கொண்டையை யுடையதும், கால் ஆயுத கொடியோன்=காலையே ஆயுதமாகக்கொண்டதுமான சேவலைக் கொடியாகக் கொண்ட முருகக்கடவுளினது, அருள் ஆய கவசம் உண்டு=திருவருளாகிய கவசம் அடியேனுடைய உடம்பில் இருக்கின்றது, (ஆதலினால்) யமனேடு பகைக்கினும்=கூற்றுவனேடு நான் பகைத்தாலும், என்பால் ஆயுதம் வருமோ=என்னிடத்தில் அவனுடைய ஆயுதம் வருமோ? (வராது).

### விரிவுரை

அருணைநாதர் இப் பாடலை மிகவும் அழகாக அருளிச் செய்தனர். காலனுடைய பயம் கந்தவேள் அடியார்க்கு ஒரு போதும் உண்டாகாது. ஒருவேளை அச்சம் ஏற்படுமாயின் இத்திருப்பாடலினால் தேற்றுகின்றனர். அகிலாண்ட கோடிகட்குந் தனிப்பெருந் தலைவராகிய முருகப் பெருமானுடைய திருவருள் பெற்றவர்களை அவ் வருளரசாட்சியில் சிறிய தொழில் தாங்கும் இயமனால் என் செய்ய முடியும்? இப்பாடலில் 'வேலாயுதன்' 'சூலாயுதன்' 'காலாயுதம்' 'பாலாயுதம்' என்ற எதுகை நயத்தின் அழகு மிகவும் நன்ருக இருப்பதை அன்பர்கள் சிந்திக்க.

சங்கு சக்ராயுதன்:—

திருமாலுடைய பஞ்சாயுதங்களில் சிறந்தவை சங்கமும் சக்கரமுமாகும். இராவண வதத்தின்பொருட்டுப் பெருமான் அவதரித்தபோது ஏனைய ஆயுதங்களும் நீங்க, சங்கமும் சக்கரமும் மட்டுமே சத்ருக்கனராகவும் பரதராகவும் அவதரித்தன. அதனுல் அவைகளின் பெருமை நன்கு விளங்குகின்றது. பஞ்சாயுதங்களாவன: சங்கம், சக்கரம், தண்டு, வில், வாள் என்பனவாம். அந்த சங்கத்திற்குப் பாஞ்சஜன்யம் என்று பேர். மிகச் சிறந்த சங்கமாகும். ஆயிரம் இடம்புரி சங்கங்கட்கு நடுவே வலம்புரி சங்கம் இருக்கும். ஆயிரம் வலம்புரிகட்கு நடுவே பர்ஜன்யம் என்ற சங்கும் இருக்கும். ஆயிரம் பர்ஜன்யங்கட்கு நடுவே பாஞ்சஜன்யம் இருக்கும். திருமால் பாஞ்சஜன்யத்தை முழக்கி உலகங்களை யெல்லாம் உய்விக்கின்ருர். சங்க நாதத்தால் நன்மை உண்டாகும். ‘‘விருப்போடு வெண் சங்கம் ஊதா ஊரும்’’ என்பார் அப்பரடிகள். சக்கரம் மறத்தை அழித்து அறத்தை நிலைநாட்டுவதாகும்.

விரிஞ்சன் அறியா சூலாயுதன்:—

திருமாலும் பிரமனும் அடிமுடி தேடியும் அறிய மாட்டாதவராய் நின்றவர் சிவபெருமான். அதன் கருத்து ஆராய்ச்சி ஞானத்தால் அறியமாட்டாதவர் என்பதாம். இறைவன் அநுபவ ஞானத்தால் காண்டற்குரியவர். இச்சா சக்தி, கிரியாசக்தி, ஞானசக்தி என்ற மூன்று சக்திகளும் சேர்ந்த வடிவமே திரிசூலமாகும்.

சூடர்க்குடுமிக் காலாயுதக் கொடியோன்:—

சேவலின் தலைமேல் நெருப்புக் கொழுந்துபோல் சிவந்த நிறத்துடன் கொண்டை மிகவும் அழகாக விளங்கும். சேவல் ஒரு சிறந்த பறவை; வீரமுடையது. உயிர் துறந்தாலும் பின் வாங்காது; யானையைக்கூட ஒரு சேவல் எதிர்த்தது என்ற வரலாறு உறையூர்ப் புராணத்தில் காணப்படுகின்றது. அன்

றியும் சேவல் உலகிற்கு உபகாரம் புரியும் ஒரு அரிய பிறப்பு. உலகத்திலுள்ள உயிர்கள் யாவும் இரவில் உறங்கி மயங்கிக் கிடக்கும்பொழுது சேவல் கதிரவனுடைய வரவை ஐந்து நாழிகைக்கு முன்னரேயே அறிந்து, சிறகடித்து உலகிலுள்ள எல்லா உயிர்களும் துயிலினின்றும் எழுந்து உய்வுபெறும் பொருட்டு ''கொக்கறுகோ'' என்று கூவுகின்றது. நாடோறும் நம்மை எழுப்பி நன்மை புரிகின்றது. ஒருவருக்கும் இதனால் இடையூறு கிடையாது. இருளை நீக்கி ஒளியை நல்குபவன் சூரியன்; அச் சூரியனை நல்குவது சேவல். இதனை அடிகள் திருப்புகழில் ''ரவியுமிழ் துவஜமும்'' என்று மிகமிக அழகாகக் கூறியருளினர். முருகப்பெருமான் அடியார்களை ஆட்கொள்ளும் பொருட்டு எழுந்தருளி வரும்போது சேவற் கொடியைக் கையில் ஏந்தி வருவர் 'வாரணங் கொடியான பைங்கர' என்று பழநித் திருப்புகழில் கூறியிருப்பதுவுங் காண்க.

''சென்றே யிடங்கள் கந்தா எனும்பொ
செஞ்சேவல் கொண்டு வரவேணும்'' —திருப்புகழ்.

சுவாமிகள் சேவலை மிகவும் பாராட்டும் இடங்கள் பல; 'திக்கது மதிக்கவரு குக்குடமும்', 'வாளகிரியைத் தனது தாளிலிடியப்பொருது வாகைபுனை குக்குடபதாகை', 'அணி சேவல்.'

அருளாய கவசமுண்டு:—

முருகப் பெருமானுடைய திருவருள் கவசம்போல் மெய்த்துணையாகும். பகைவர்கள் விடும் கணைகள் தன் மார்பில் புகாவண்ணம் இருப்புக் கவசம், வஜ்ரக் கவசம் பூண்பார்கள் வீரர்கள். அருணகிரிநாதர் பூண்டது திருவருட் கவசம். இது உடம்பையும் உயிரையும் புரப்பது. இக்கவசம் ஒருபோதும் அழியாதது. அருளாய கவசமும், அவிரோத ஞான வாளும் தாங்கிய அடியார்க்கு, ''அஞ்சுவதுமில்லை அஞ்சவருவது மில்லை'', ''அல்லல் என் செயும்? அருவினை என் செயும்''; அவர்கட்கு எமபயமில்லை. இவர்களைக் கண்டு

கூற்றுவன் தொழுவான். "நாமார்க்குங் குடியல்லோம் நமனை யஞ்சோம்" என்பர் அப்பமூர்த்திகள்.

**என்பா லாயுதம் வருமோ யமனோடு பகைக்கினுமே:—**

எல்லோரையும் அடக்குபவன் ஆதலின் கூற்றுவனுக்கு யமன் என்ற பெயர் உண்டாயிற்று. எல்லோரையும் அடக்கும் அந்த யமனோடு பகைத்துக் கொண்டாலுங்கூட அவனுடைய தண்டு, சூலம், பாசம் முதலிய ஆயுதங்கள் முருகவேளது அடியார்களிடம் எய்தமாட்டா. ஏன்? இங்கு வேலாயுதந் துணை செய்வதனால் என்று அறிக.

*கருத்துரை*

வேலாயுதக் கடவுளாகிய முருகப்பெருமானது திருவருளாய கவசத்தை அணிந்த அடியார்கள் யமனோடு பகைத்துக்கொண்டாலும் அக் காலனுடைய ஆயுதம் அவர்கள் பால் வராது.

## 87

குமரா சரணஞ் சரணமென் றண்டர் குழாந்துதிக்கும்
அமரா வதியிற் பெருமாள் திருமுக மாறுங்கண்ட
தமராகி வைகுந் தனியான ஞான தபோதனர்க்கிங்
கெமராசன் விட்ட கடையேடு வந்தினி யென்செயுமே.

*பதவுரை*

குமரா சரணம் சரணம்என்று="குமாரக் கடவுளே! அடைக்கலம், அடைக்கலம்" என்று கூறி, அண்டர் குழாம் துதிக்கும்= தேவக்கூட்டங்கள் துதி செய்கின்ற, அமராவதியில் பெருமாள் = அமராவதி யென்னும் தேவருலகில் எழுந்தருளியுள்ள முருகப் பெருமானுடைய, திருமுகம் ஆறும் கண்ட = மேன்மை பொருந்திய திருமுகங்கள் ஆறையுந் தெரிசித்த, தமர் ஆகி வைகும்= அவருடைய பரிசனமாகி இனிது வாழ்கின்ற, தனி ஆன ஞான தபோதனர்க்கு=ஒப்பற்ற ஞானவீரர்களாம் தவச்செல்வர்கட்கு, இங்கு= இவ்விடத்தில், எமராஜன் விட்ட=எல்லாவற்றையும் அடக்குபவனாகிய கூற்றுவன் எழுதியனுப்பிய, கடை ஏடு வந்து = இறுதிக்

காலத்தில் வரும் ஓலையானது வந்து, இனி என் செயுமே = அவரை இனிமேல் என்ன செய்ய முடியும்? (ஒன்றுஞ் செய்யமுடியாது.)

## விரிவுரை

குமரா சரணம் சரணம்:—

குமரா என்பது ஒரு சிறந்த மந்திரம். கு–உலகமாயை; மரா-போக்குவது; உலகமாயையை நீக்குவது. இம் மந்திரத்தை இடையருது சிந்திப்பவர்க்கு மலமாயா கன்மங்கள் தொலையும். சிவபெருமான் பிரணவோபதேசங் கேட்கும் போது கூறிய மந்திரமும் இக் குமார மந்திரமேயாம்.

"நாதா குமரா நமவென் றரனுர்
ஓதா யென·ஓதிய தெப்பொருள்தான்" —அநுபூதி.

ஆயிரம் மறைகளுங் கூறும் மந்திரமும் இதுவேயாம்.

"ஃ ஃ ஃ மறையாயிரங்களும்
குமரகுருவென வலிய சேடனஞ்சவந் திடுவோனே"
—திருப்புகழ்.

"குமராசரணம்" என்று அமரர்கள் எம்பெருமானிடம் அடைக்கலம் புகுந்து துதி புரிவர். ஆதலின் அன்பர்கள் "குமரா சரணம்" என்ற இம் மந்திரத்தை அடிக்கடி கூறி உய்வு பெறுவார்களாக. சுவாமிகள் கந்தரந்தாதியில், தும்முகின்றபோது "குமரா சரணம்" என்று கூறுமாறு உபதேசிக்கின்றனர்.

சிறுமிக் குமர நிகர்வீர் பகிரச் சிறையுயிர்த்துச்
சிறுமிக் குமர சரண மென்னீருய்வீர் செந்திணைமேற்
சிறுமிக்குமர புரைத்து நின்றேன்சிலை வேட்டுவனெச்
சிறுமிக்குமர வணிமுடி யான்மகன் சீறடிக்கே.

இதன் உரை.

சிறு உமிக்கு மரம் நிகர்வீர் பகிர = பிறருக்குப் பகிர்ந்து சிறிய குற்றுமியையாயினும் இட்டு உண்ணுதற்கு மனம் இன்றி மரம் போன்று இருப்பவரே! சிறை உயிர் துச்சில் = அழிந்து போவதும் பிராணனுக்கு ஒதுக்கிடமுமாகிய இவ்வுடலின் கண், தும்மி = ஒரு

தும்மலுண்டாகும் போதாவது, குமர சரணம் என்னீர் = "குமரா சரணம்" என்று சொல்லுங்கள்; செம் தினைமேல் சிறுமிக்கு = சிவந்த தினைப்புனத்தில் வாழ்ந்த வள்ளிநாயகிக்கு, மரபு உரைத்து நின்றேன் = தனது மரபின் வழிகளை எடுத்துரைத்து வேண்டி நின்றவரும், சிலைவேடன் எச்சில் = வில்லையுடைய வேட்டுவமணி யாகிய கண்ணப்பர் கடித்துச் சுவை பார்த்த எச்சில் ஊன் அமுதினை, துமிக்கும் = உவப்புடனே யுண்டவரும் மேன்மை தங்கிய வரும் ஆகிய, அரவு அணிமுடியான் = பாம்பை யணிந்த சிவமூர்த்தியின், மகன் சிறு அடிக்கே = திருக்குமாரருமாகிய முருகப்பெருமானது சிறிய திருவடியைக் கருதிக்கொண்டே, உய்வீர் = பிழைப்பீர்கள்.

அண்டர் குழாம் துதிக்கும்:—

அண்டர் - தேவர்; செய்மையிலுள்ளவர் என்பது பொருள். சூராதி யவுணர்களை மாய்த்து தேவர்களைத் துன்பக் கடலினின்றுங் கைதூக்கி இன்பக்கரையில் சேர்த்த பரமகருணாநிதி யாதலின் குமரக்கடவுளை நன்றி பாராட்டு முகத்தால் அமரர்கள் துதிபுரிகின்றனர்.

அமராவதியில் பெருமாள்:—

அமராவதி - தேவருலகிற்குத் தலைநகரம். ஆங்கு எழுந்தருளியுள்ள முருகப்பெருமானைக் குறிக்கின்றது.

திருமுகம் ஆறும் கண்ட தமர்:—

முருகப்பெருமானுடைய ஒரு முகத்தைக் கண்டார்க்கே சித்தியு முத்தியு முண்டாகும். எல்லா உலகங்களும் அவருக்கு அடிமைப்படும். ஆறுமுகங் கண்டார்க்கு உரிய பெருமையை யாரே அளக்க வல்லார்? ஆறு திருமுகங்களை யுந் தெரிசித்து எம்பெருமானுக்குத் தமராக விளங்குபவர். தமர் - பரிசனம், உறவு. "முருகப்பெருமானுடைய தமர்" என்பது ஒரு பெரிய பதவி. அதனினும் மேற்பட்ட பதவி இல்லை. ஒரு பெரிய சக்ரவர்த்தியின் ஆள் என்னும்போது அந்த ஆளுக்கு எத்துணையோ பெரிய மதிப்பு ஏற்படுகின்றது. அகிலாண்ட கோடிகட்குந் தலைவராய ஆண்டவருடைய

ஆள் என்னும்போது அதற்குரிய பெருமை வேறு எதற்குத் தான் வரும்?

> ''கிரிவாய் விடுவிக் ரமவே லிறையோன்
> பரிவா ரமெனும் பதமே வலையே''

என்று அநுபூதியில் மிக அழகாக ஓதுகின்றனர்.

சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருக்கைலாய மலைக்குச் சென்ற போது, முனிவர்கள் ''இவர் யார்'' என்று வினவினார்கள். சிவபெருமான் ''இவன் நமது தமர்'' என்று திருவாய் மலர்ந் தருளினார்.

> ''மந்திர மாமுனிவர் இவன் யார் என்ன
> நந்தமரூர னென்றான் நொடித்தான் மலை உத்தமனே''

தனியான ஞான தபோதனர்:—

தனி ஒப்பின்மை. முருகவேளுடைய பரிசனர்க்குச் சமானமில்லை யென்கின்றனர். தபோதனர் – தவத்தையே செல்வமாகவுடையவர்; தவச் செல்வர்.

மனிதனுக்குத் தவத்தினுஞ் சிறந்த பொருள் யாதொன்று மில்லை; உயிர்க்கு உறுதி செய்வது தவமே. நிக்ரகானுக்ரக சக்தி தவத்தால் வரும். வானவர் நாடு வழி திறப்பதுந் தவத்தாலே.

> ஒன்னார்த் தெறலு முவந்தாரை யாக்கலும்
> எண்ணிற் றவத்தான் வரும்.
> தானமுந் தவமுந் தான் செய்வராயின்
> வானவர் நாடு வழிதிறந் திடுமே.

ஒவ்வொருவரும் நாடோறும் சிறிது நேரமாகிலும் உள்ளத்தை ஒருமுகப்படுத்தித் தவம் புரிதல் வேண்டும்.

தவத்தினால் உயர்வு பெற்றவர் பலர். தவஞ் செய் பவரைக் கூற்றுவனுங் கும்பிடுவான். தவத்தின் ஆற்றலினால் விஸ்வாமித்திரர் மறு உலகத்தைப் படைக்க முயன்றனர். பல பொருள்களையும் படைத்தனர். தவத்தால் சரபங்கர் அழியாத வீடுபேறு பெற்றனர். தபோ பலமுடையவர்க்கு ஐம்பெரும்

பூதங்களும் அடங்கும். ஐந்தொழிலும் ஆற்றும் வன்மை அவர்கட்கு உண்டு. தவத்தால் சாதிக்காதது ஒன்றுமில்லை. ஆதலினால்தான் "தனியான ஞான தபோதனர்" என்றனர்.

எமராஜன் விட்ட கடையேடு வந்திளியென்செயுமே:—

கடையேடு—ஆயுள் முடிவில் கூற்றுவனால் விடப்படுகின்ற இறுதி ஓலை. நமனோலை கொண்டு இயமதூதர் வந்து அச்சுறுத்தி ஆவியைக் கொண்டு செல்வர்.

"வருபவர்க ளோலை கொண்டு நமனுடைய தூத ரென்று
மடிபிடிய தாக நின்று தொடர்போது"
—திருப்புகழ்.

தவம்புரிந்து திருமுருகவேளைத் தெரிசித்த பெரியோர்களிடம் நமனோலை அணுகாது. அணுகினும் காலாவதியான பத்திரம்போல் வேலை செய்யாது. ஆதலினால் இடையறாது முருகப் பெருமானை வந்தித்தும், வாழ்த்தியும், சிந்தித்தும் அன்பு செய்து தெரிசிக்க முயலுதல் வேண்டும்.

கருத்துரை

தேவர்கள் துதிக்குந் திருமுருகேசனைத் தெரிசித்த ஞானிகட்கு எமபயம் ஒருபோதும் இல்லை.

88

வணங்கித் துதிக்க வறியா மனித ருடனிணங்கிக்
குணங்கெட்ட துட்டனை யீடேற்று வாய்கொடி யுங்கழுகும்
பிணங்கத் துணங்கை யலகைகொண்டாடப் பிசிதர்தம்வாய்
நிணங்கக்க விக்ரம வேலா யுதந்தொட்ட நிர்மலனே.

பதவுரை

கொடியும்=காக்கைகளும், கழுகும்=கழுகுகளும், பிணங்க=ஒன்றோடொன்று மாறுபடவும், அலகை=பேய்கள், துணங்கை கொண்டாட=துணங்கைக் கூத்து மகிழ்ந்து ஆடவும், பிசிதர் தம் வாய்=அரக்கர்களுடைய வாயினின்றும், நிணம் கக்க=கொழுப்பை உமிழவும், விக்ரம வேலாயுதம் தொட்ட=வீரம் பொருந்திய வேலா

யுதத்தை விடுத்தருளிய, நிர்மலனே=அநாதியே மலமில்லாதவரே! வணங்கி=தேவரீருடைய திருவடிகளைப் பணிந்து, துதிக்க=உமது திருப்புகழைப் பாடிப் பரவுவதற்கு, அறியா=தெரிந்து கொள்ளாத, மனிதருடன் இணங்கி=மனிதர்களோடு சேர்ந்து, குணம்கெட்ட துட்டனை=நற்குணங்கள் அழிந்த தீயவனுகிய அடியேனை, ஈடேற்றுவாய்=கடைத்தேறச் செய்து அருள் புரிவீர்.

## விரிவுரை

**வணங்கித் துதிக்க அறியா மனிதர்:—**

உணவு உடம்பை வளர்ப்பது; கல்வி அறிவை வளர்ப்பது; சமயமும் தெய்வபக்தியும் உயிரை வளர்ப்பனவாம். உயிரின்றி உடம்பும் உணர்வும் பயன் பெறமாட்டா. உயிரே சிறப்புடையதாகும். உயிரை வளர்க்காது உடம்பை வளர்த்து என்ன பயன்? உயிருக்கு உறுதி பயக்காத உணர்வை வளர்த்துத்தான் என்ன பயன்? எனவே சமய ஞானமுந் தெய்வபக்தியுமே ஒரு மனிதன் பெறத் தக்கவையாகும்; அவையே உயிருக்கு உறுதி பயப்பனவாம்; அவைக்கு அனுகூலமான கல்வியறிவும், அறிவுக்கு அனுகூலஞ் செய்யக்கூடிய உணவும் வேண்டற்பாலனவாம். கேவலம் பசியாற்றுவதற்காக உணவு உட்கொள்ளக் கூடாது. அவ்வுணவு நற்குணங்களைத் தரத்தக்கதாக இருத்தல் வேண்டும்; கல்வி நல்லறிவு தரத்தக்கதாக இருத்தல் வேண்டும்; அறிவின் பயன் இறைவன் திருவடியைச் சார்தலாகும். இதனையே திருவள்ளுவர்,

> "கற்றதனு லாயபயன் என்கொல் வாலறிவன்
> நற்றாள் தொழாஅ ரெனின்."

என்பார்.

> "கற்றும் என்பலன் கற்றிடு நூன்முறை
> சொற்ற சொற்கள் சுகாரம்ப மோநெறி
> நிற்றல் வேண்டும் நிருவிகற்பச் சுகம்
> பெற்றபேர் பெற்ற பேசாப் பெருமையே.
> கற்றதுங் கேட்டதுந் தானே ஏதுக்காகக்
> கடபடமென் றுருட்டுதற்கோ? கல்லால் எம்மான்

குற்றமறக் கைகாட்டுங் கருத்தைக் கண்டு
குணங்குறியற் றின்பநிட்டை கூட அன்றோ?''

என்பார் தாயுமானுர்.

பூவைப் போலே உடம்பு; அதன் நிறம்போல அறிவு; அதன் மணம் போலே உயிர். மணமின்றி மலரும் நிறமும் சிறப்படையமாட்டா. மணத்தினை யொட்டி மலரும் மதிப் புறுகின்றது. மணமில்லாத மலர் வெறுக்கப்படுவது போல் சமயஞானமுந் தெய்வபக்தியும் இல்லாதவருமாவர். இதனைத் திருமூலரும் அழகுபடக் கூறுகின்றனர்.

''பூவினிற் கந்தம் பொருந்திய வாறுபோல்
சீவனுக் குள்ளே சிவமணம் பூத்தது''

ஆதலின் உடம்பினுல் இறைவனை வழிபடுதலும், அறிவினுல் இறைவனை அறிதலுமே ஆவி யீடேறுதற்குரிய நெறிகளாம். இதனை மறந்தவர்கள் உயிரை மறந்தவர்களே என்பது ஒருதலை. இவைகளை யெல்லாம் உய்த்து உணர்தற் பொருட்டு ''வணங்கித்துதிக்க அறியா'' என்றனர் அடிகள். ''வணங்கித் துதிக்காத'' என்று காயத்தின் தொழிலாகவே கூறிவிடாமல், ''அறியா'' என்று அறிவின் தொழிலாகக் கூறும் அழகு நுனித்துணர்வார்க்கு தெள்ளமுதென்ன உள்ளத்தில் மிகமிகத் தித்திக்கும்.

இனி வணங்குதல் தலையைத் தாழ்த்துதலாம். அதற்காகத் தலையைத் தந்தனர். தொழுதல் என்பது கரங்களைக் கூப்பிக் கும்பிடுதலாம்.

''கைகாள் கூப்பித் தொழீர்'' —அப்பர்.

''வந்தெதிரே தொழுதானை வணங்கினுன்'' என்ற கம்பர் திருவாக்கினுலும் வணங்குதலுக்கும் தொழுதலுக்கும் உள்ள வேற்றுமையை உணர்க.

**மனிதருடன் இணங்கி குணங்கெட்ட துட்டன்:—**

மனிதர் என்ற சொல்லுக்கு, மனுவிடமிருந்து வந்தவர் என்பதும், மனத்தையுடையவர் என்பதும், நினைக்கத் தக்கவர்கள் என்பதும் பொருளாகும்.

எத்துணைச் சிறந்த செல்வமும், உயர்ந்த அறிவும், பரந்த நிலபுலமும், உயர்ந்த குலமும் உடையவர்களாயினும் இறைவனை நினைந்து உருகும் தெய்வபக்தியும் திருவருட் சிந்தையும், இல்லாதவர்களாயின் அவர்களுடன் சேர்ந்து உறவாடக் கூடாது.

"கண்ணுவா ரேனுமுனைக் கைகுவியா ராயினந்த
மண்ணுவார் நட்பை மதியேன் பராபரமே"

என்பார் தாயுமானுர்.

"வாளுலா மெரியு மஞ்சேன் வரைபுரண் டிடினு மஞ்சேன்
தோளுலா நீற்ற னேற்றன் சொற்பதங் கடந்த அப்பன்
தாளதா மரைக ளேத்தித் தடமலர் புனைந்து நையும்
ஆளலா தவரைக் கண்டால் அம்மநாம் அஞ்சு மாறே."

என்பார் மணிவாசகனுர்.

இறையன்பில்லாதவர்க்கு தீவினை யச்சமும், நற்குண நன்னடையும் இல்லாதொழியும். ஆதலினுல் அவருடன் இணங்கில் உள்ள குணமும் கெடும். கள்ள குணம் மிகும். இதனை நன்கு சிந்தித்து நமக்கு அறிவிப்பான் வேண்டித் திரு வெண்காடர்,

"அடியா ருறவு மரன்பூசை நேசமு மன்பு மன்றிப்
படிமீதில் வேறு பயனுள தோபங் கயன் வகுத்த
குடியான சுற்றமுந் தாமும் வாழ்வுங் குயக்கலங்கள்
தடியா லடியுண்ட வாறெக்கு மென்றினஞ் சார்ந்திலரே"

என்று அழகாகக் கூறினர். இதில் அரன் பூசைக்கு முன் அடியார் உறவைக் கூறியதை ஊன்றியுணர்க. இவ்வண் ணமே வேறு இடத்திலும்,

"நல்லா ரிணக்கமும் நின்பூசை நேசமும் ஞானமுமே
அல்லாது வேறு பயனுளதோ"

என்ருர்.

ஈடேற்றுவாய்:—

ஆன்மாக்கள் தீயாருடன் கூடி தீ வழிச் செல்லுங்கால் தடுத்து ஆட்கொள்ளுவது பரமபதியின் கருணைக்குக் கடன் ஆதலின் தடுத்தாட்கொண்டு, கடைத்தேறுமாறு அருள் புரிய வேண்டுகின்றனர்.

கொடியுங் கழுகும் பிணங்க:—

கொடி-காகம். முருகப்பெருமான் அசுரர்களைக் கொன்று குவித்தபோது காகங்களும், கழுகுகளும் "நல்ல விருந்து" என்று அசுரர்களுடைய தசைகளையும் நிணங்களையும் தின்று மகிழ்ந்தன. அவ்வாறு அரக்கர் நிணங்களைத் தின்னும் பொருட்டு அவைகள் மாறுபட்டு ஒன்றை யொன்று முந்திக் கொண்டன என்பார். நல்லுணவு படைக்கின்ற இடத்தில் பசியுடன் வந்த வறியவர் ஒருவரை யொருவர் தள்ளிக்கொண்டும் ஒருவரை யொருவர் பகைத்துக்கொண்டும் முந்துவது கண்கூடு.

துணங்கை அலகை கொண்டாட:—

அலகை-பேய். பல்கோடிக் கணக்கான அசுரர்கள் மாண்டது கண்டு பசித்திருந்த பேய்கள் மிக்க மகிழ்ச்சியுடன் ஆடுவதும், பாடுவதும், கரணமிடுவதுமாக ரணக்களத்தில் காணப்பட்டன.

"அலகை கரணமிட"

"பாணிகள் கொட்டும் பேய்கள் பிதற்றும்
பாடலை மெச்சும் கதிர்வேலா"

துணங்கை என்பது ஒருவகைக் கூத்து. அஃது இரு கைகளையும் முடக்கிக்கொண்டு ஆடுவதாகும்.

"முடக்கிய இருகை பழுப்புடை யொற்றித்
துடக்கிய நடையது துணங்கை யாகும்"

பிசிதர்:—

பிசிதம் - ஊன். ஊன் உண்பவர்களாகிய அரக்கர், "பிசிதாசனர்" எனப்படுவர்.

நிர்மலன்:—

இறைவர் அநாதியே மலசம்பந்த மில்லாதவர். அநாதி மலமுத்தர்; தூய்மையானவர். ஆதலின் அடியாருடைய மலங்களையும் நீக்கி அமலமாக்கி யருளுவர்.

கருத்துரை

அசுரர்களை மறக்கருணையாலாண்ட வேலாயுதக் கடவுளே! அடியேனைக் கொடியருடன் இணங்கவிடாது அடியருடன் இணக்கி ஆட்கொள்வீர்.

## 89

பங்கே ருகனெனைப் பட்டோ லையிலிடப் பண்டுதளை
தங்காலி லிட்ட தறிந்தில னேதனி வேலெடுத்துப்
பொங்கோதம் வாய்விடப் பொன்னஞ் சிலம்பு புலம்பவரும்
எங்கோ னறியி னினிநான் முகனுக் கிருவிலங்கே.

பதவுரை

பங்கேருகன்=தாமரை மலரில் வாழும் பிரமதேவன், எனை பட்டு ஓலையில் இட=அடியேனைத் தனது விதி ஏட்டில் எழுத, பண்டு தம் காலில்=முற்காலத்தில் தனது காலில், தளை இட்டது அறிந்திலனே=விலங்கு பூட்டியதை அறியானே, (ஒரு வேளை அதை மறந்து எனக்கு விதிவிலக்கெழுதி இன்னொரு பிறப்பைத் தர நினைவானாயின் அதனை) தனிவேல் எடுத்து = ஒப்பற்ற வேலாயுதத்தை எடுத்து, பொங்கு ஓதம் வாய்விட=பொங்கும்படி யான கடலானது வாய்விட்டலறவும், பொன்னம் சிலம்பு புலம்ப வரும்=பொன்னுருவாய கிரவுஞ்சகிரி கதறவும் வருகின்ற, எம் கோன் அறியின்=எமது இறைவராகிய ஆறுமுகப் பெருமான் அறிவாராயின், இனி=இனிமேல், நான்முகனுக்கு=நான்கு முகங்களை யுடைய பிரமனுக்கு, இரு விலங்கே=இரண்டு விலங்குகள் பூட்டப்படும்.

விரிவுரை

பங்கேருகன் எனைப் பட்டோலையிலிட:—

பங்கேருகம்-தாமரை. தாமரையில் வாழ்வதனால் பிரமதேவன் பங்கேருகன் எனப் பெயர் பெற்றனன். உயிர்களுக்கு

அவ்வுயிர்கள் முற்பிறப்புக்களில் புரிந்த பாவ புண்ணியங் கட்குத் தக்கவாறு, நன்மை தீமைகளைத் துய்க்குமாறு விதிப் பவன் பிரமதேவனும். ஆதலின் ''விதி'' எனப்படுவன். அவ் விதிப்படியே எல்லாம் நடைபெறும்.

''வகுத்தான் வகுத்த வகையல்லால் கோடி
தொகுத்தார்க்குந் துய்த்த லரிது.''

என்பார் திருவள்ளுவர்.

''விதி தலையிலெழுதியும் அணைவயி னுறவிடுவதனாலே''
—திருப்புகழ்.

பாவ கன்மங்களைப் புரிந்தோரையும், புண்ணியங்களைக் காமியமாகப் புரிந்தோரையுமே பிரமன் தனது கணக்கில் குறித்து எழுதவேண்டும். இருவினை யொப்பு எய்தி, மல பரிபாகமுற்று, ஜீவபோதம் நீங்கப் பெற்று, பார்த்தவிடமெல் லாம் பரமாக நோக்கி சிவமயமான ஞானச் செல்வர்களைப் பிரமன் தன் கணக்கில் எழுதக் கூடாது. ஆதலின் அடிகளார் இதனையுணர்த்துவாரானார்.

பண்டுதனை நங்காலிலிட்ட தறிந்திலனோ?:—

பிரமதேவன் இருவினை யொப்பு மலபரிபாகமுற்று முருக வேள் திருவருள் மயமாக இருக்கும் அடியேனை நன்கு தெரிந்து கொள்ளாமல், மீண்டும் பிறப்பு இறப்பில் செல்லுமாறு என்னை விதிக்கக் கருதுவனோ? ஏன்? அவனுடைய காலில் கந்தப் பெருமான் முன்னே விலங்கிட்டு சிறையிலடைத்ததை யறிய மாட்டானோ? என்கின்றார்.

முருகப்பெருமான் தமது இளவல்களாகிய நவ வீரர்கள் புடைசூழ திருக்கைலை மலையின் திருக்கோபுர வாசலில் எழுந்தருளியிருந்தனர். சிவபெருமானை வழிபட வந்த மாலும் இந்திரனும் மற்றை வானவரும் முழுமுதலாம் முருகவேளை அடிபணிந்து அருள்பெற்றுச் சென்றனர். 'நான் படைப்புக் கடவுள்' என்று இறுமாந்து வந்த பிரமதேவன் எம்பெருமானைப் பணியாது சென்றனன். உட்சென்று அம்மையப்பரைத் தொழுது திரும்பினன். அப்போதும் பணியாது கண்டிலன்

போல் சென்றனன். அதுகண்ட ஆறுமுகப் பெருமான் அயனுக்கு அறிவுச்சுடர் தூண்டுவான் கருதி வீரவாகு தேவரை யனுப்பி அழைத்து, 'நீ யாவன்?' என்றனர். பிரமன் 'யான் வேதன்' என்று கூறினன். முருகவேள், 'நீ வேதனுயின் வேதம் வருமோ?' என்று வினுவினுர். வாணி கேள்வன் "வரும்" என்றனன். "அங்ஙனமாயின் வேதம் ஓது" என்ருர். அயன் "ஓம்" என்று கூறி வேதம் ஓதத் தொடங்கினன். கந்தவேள் முறுவலித்து, "பிரமனே! நில். முன்னே கூறிய பிரணவ மொழிக்குப் பொருள் கூறிப் பின்னே வேதத்தை ஓதுக" என்றனர்.

தாமரைத்தலை யிருந்தவன் குடிலைமுன் சாற்றி
மாமறைத்தலை யெடுத்தனன் பகர்தலும் வரம்பில்
காமர் பெற்றுடைக் குமரவேள் நிற்றிமுன் கழறும்
ஓமெனப்படு மொழிப்பொரு ளியம்புகென் றுரைத்தான்.

"ஓமெனப்படும் குடிலையே ஒப்பிலா முருகன் மாமுகத்துள் ஒன்றும்" ஆதலின் முருகப்பெருமான் நகைத்துக் கேட்டலும், நான்முகன் பொருள் அறியானுய் மருள் கொண்டு, எட்டுக் கண்களையும் மேலுங் கீழுமாக விழித்தனன்; வெட்கமுற்றனன்; விக்கினன்; தியங்கினன்; மயங்கினன்; என் செய்வது என்று ஏங்கினன். சிவமூர்த்தியிடம் ஆதிகாலையில் தான் வேதத்தை யுணர்ந்த பொழுது ஓம் என்ற முதல் எழுத்து வெறுமையாக உள்ள எழுத்து என்று பொருள் கேளாது விட்ட தன் அறியாமை குறித்து வருந்தினன்.

முகத்தி லொன்றதா அவ்வெழுத் துடையதோர் முருகன்
நகைத்து முன்னெழுத் தினுக்குரை பொருளென நவில
மிகைத்த கண்களை விழித்தனன் வெள்கினன் விக்கித்
திகைத் திருந்தனன் கண்டிலன் அப்பொருள் திறனே.

பிரணவமானது சிவபெருமானுக்குப் பீடமாகும்; ஏனைய தேவர்கட்குப் பிறப்பிடமாகும்; எல்லா எழுத்துக்கும் வேதங்கட்கும் ஆதியாகும்; காசியம்பதியிலே இறந்தவர்கட்கு விஸ்வேஸ்வரன் கூறுவதும் தாரகம் ஆகிய இப்பிரணவ மொழியேயாகும். தாரகம்—தாண்டச் செய்வது; பிறவிக் கடலினின்றுங் கடக்கச் செய்வதனுல் பிரணவ மந்திரம்

''தாரகம்'' எனப்படும். காசியிலே இறந்தார்க்குச் சிவபெருமான் உபதேசிப்பது இத்தாரகமேயாகும்.

ஈசன் மேவரு பீடமாய் ஏனையோர் தோற்றும்
வாசமா யெலா எழுத்திற்கு மறைகட்கு முதலாய்க்
காசி தன்னிடை முடிபவர்க் கெம்பிரான் கழறும்
மாசில் தாரகப் பிரமமாம் அதன்பயன் ஆய்ந்தான்.

வேதங்களை ஓதுவதற்கு முன்னும் பின்னும் கூறுவது பிரணவமேயாம். அதன் உண்மைப் பொருளை யுணராது படைப்புத் தொழிலையாற்றும் பெருங்கடவுளாகிய பிரமதேவன் மயங்கினுன் என்ருல் சிற்றறிவும் சிறு தொழிலும் படைத்த நம் போன்ருர் அதனை யறிந்தோம் என்பது நகைப்புக் கிடமாகும்.

தூமறைக் கெலா மாதியு மந்தமுஞ் சொல்லும்
ஓமெனப் படு மோரெழுத் துண்மையை யுணரான்
மாமலர்ப் பெருங் கடவுளு மயங்கிறு னென்ருல்
நாமினிச் சில அறிந்தன மென்பது நகையே.

இங்ஙனம் மயங்கிநின்ற பிரமதேவனைக் குமரவேள் தமது திருக்கரத்தாற் குட்டி கந்தவெற்பிற் கொண்டுபோய் சிறைக்கூடத்தில் காலில் தளைபூட்டிக் காவலில் இருத்தினர்.

எங்கோனறியின் இனி நான்முகனுக் கிருவிலங்கே.—

பிரமதேவன் எனக்கு மீண்டும் பிறப்பினை யுண்டாக்கக் கருதி விதிவிலக்கு எழுத நினைப்பானுயின், முன் முருகவேள் அவனது காலில் இட்டது ஒரு விலங்கு; இப்போது எம் பெருமான் இரு விலங்கு இடுவான்.

தன்பால் செய்யும் அபராதத்தினும் தன் அடியார் பால் செய்யும் அபராதம் மிகவும் கொடியது. ஆதலின் தன்பால் தவறியபோது பிரமனுக்கு ஒரு விலங்கிட்டனர். தன் அடிமையாகிய என்பால் தவறும் நான்முகனுக்கு இருவிலங்கிடுவார் என்று சுவாமிகள் குறிப்பிடுகின்றனர்.

இதனுல் ஆறுமுகப் பெருமானை மெய்யன்புடன் வழிபடும் அடியார்க்குப் பிறவாமை தானே வரும்.

"அநுபவ சித்த பவக்கடலிற் புகாதெனை
வினவி யெடுத்தருள் வைத்த கழற்க்ருபாகரன்"

பெறுதற்கரிய மனிதப் பிறப்பினுல் பெறும் பேறு பிற வாமை யொன்றேயாம். அதுவே பெரியோர்கள் அனைவரும் வேண்டுவது.

இப்பாடலில் பிரமனைப் படர்க்கையில் வைத்துக் கூறு கின்றனர். கந்தரந்தாதியில் முன்னிலைப்படுத்தி மிக அழ காகக் கூறுமாறு காண்க.

தீட்டப் படாவினி யுன்ருலென் சென்னி கறைப்பிறப்பில்
தீட்டப் படாவி யவரல்லன் யான்றிக்கு நான்மருப்புத்
தீட்டப் படாவி தமுகா சலன்சிறை விட்டவன்ருள்
தீட்டப் படாவி வனையே நினைவன் றிசாமுகனே.

(பொருள்) திசாமுகனே=ஏ பிரமதேவனே! என் சென்னி இனி உன்ருல் தீட்டப்படா=எனது தலையில் விதியை இனிமேல் உன்ருலே எழுதப்படாது; கறை பிறப்பில் தீட்டப்படு ஆவியவர் அல்லன் யான்=உதிரம் முதலியவற்ருல் நிறைந்த கருவில் பிறத் தலினுல் அசுசியடைகின்ற உயிர்களையுடையவரைப் போல யான் ஆக மாட்டேன்; திக்கு நான் மருப்பு தீட்டு அ படா வித முகா சலன்=எட்டுதிசைகளிற்போய் தனது நான்கு கொம்புகளையும் கூர்மையிடுகின்றதும் அந்த பட்டமும் சித்திர விதங்களும் பொருந் தியதும் முகத்தையுடையதுமாகிய மலைபோன்ற ஐராவதத்தின் மீது வருகின்ற இந்திரனுடைய, சிறை விட்டவன் தாள்=சிறையை யகற்றிய திருமுருகனுடைய திருவடியை, தீட்ட=அடைய, படா= ஒரு போதும் அழிவில்லாத, இவனையே நினைவன்=இந்த குமரக் கடவுளைச் சிந்திப்பன். (ஆதலினுல் பிரமனே! இனி உன்ருல் என் தலை எழுதப்படாது)

### கருத்துரை

பிரமதேவன் மீட்டும் என்னைப் பிறப்பிக்கக் கருதுவா ருயின் அதனை முருகவேளறிந்தால் அப் பிரமனுக்கு இரு விலங்கிடுவர்.

## 90

மாலோன் மருகனை மன்றுடி மைந்தனை வானவர்க்கு
மேலான தேவனை மெய்ஞ்ஞான தெய்வத்தை மேதினியிற்
சேலார் வயற்பொழிற் செங்கோடனைச் சென்று கண்டுதொழ
நாலா யிரங்கண் படைத்தில னேயந்த நான்முகனே.

*பதவுரை*

மாலோன் மருகனை=திருமாலின் திருமருகரை, மன்று ஆடி மைந்தனை=சபையில் திரு நடனம் புரியும் சிவபெருமானுடைய புதல்வரை, வானவர்க்கும் மேலான தேவனை=தேவர்கட்கும் உயர்வாகிய தேவதேவரை, மெய்ஞ்ஞான தெய்வத்தை=உண்மை யறிவின் வடிவாகிய கடவுளை, மேதினியில்=மண்ணுலகில், சேல் ஆர்வயல்=கெண்டை மீன்கள் நிறைந்த வயல்களும், பொழில்= சோலைகளும் சூழ்ந்த, செங்கோடனை=திருச்செங்கோட்டில் எழுந் தருளியிருக்கும் முருகக் கடவுளை, சென்று கண்டு தொழ= அவருடைய திருக்கோயிலிற் போய் கண் குளிரக் கண்டு வணங்க, அந்த நான்முகன்=அந்த பிரமதேவன், நாலாயிரம் கண் படைத் திலனே=அடியேனுக்கு நாலாயிரங் கண்களைப் படைத்தா னில்லையே?

*விரிவுரை*

மாலோன் மருகனை:—

மால்-பெருமை, அன்பு; பெருமையுடையவர் என்றும், அன்பின் வடிவினரென்றும் பொருள்படும். இனி மால் என்பதற்கு மேகம் என்ற ஒரு பொருளும் இருப்பதால் உவமையாகுபெயராக மேகம் போன்றவர் எனினும் அமை யும். உமாதேவியாரது சகோதரர் திருமால்; ஆதலின் முருகன் மால்மருகன் எனப்படுவர்; அன்றியும் திருமாலினது புதல்வியர்களாகிய அமுதவல்லி சுந்தரவல்லி யென்னும் இருவருமே தெய்வயானை யாகவும், வள்ளியாகவும் அவதரித்து பெருமானை மணந்துகொண்டனர்.

"உலகீன்ற பச்சை யுமையணன்
வடவேங் கடத்தி லுறைபவன்
உயர் சாரங்க சக்ர கரதலன் மருகோனே"—திருப்புகழ்.

திருமால் மிகவும் அழகிய திருமேனி யுடையவர்; பச்சைமாமலை போன்ற மேனியில் பவளம் போன்ற அதரமும், தாமரை போன்ற கண்களும் காண்பார்க்கு மிகமிக இனிமை யுடையதாக விளங்கும். அப் பெருமானுடைய பவளவாயைப் பார்க்குங் காதலினால் குலசேகர மன்னர் கூறுமாறு காண்க.

செடியாய வல்வினைகள் தீர்க்குந் திருமாலே
நெடியானே வேங்கடவா நின்கோயிலின் வாசல்
அடியாரும் வானவரும் அரம்பையருங் கிடந்தியங்கும்
படியாய்க் கிடந்துன் பவளவாய்ப் பாரேனோ.

இத்தகைய பேரழகுடைய திருமாலுங் கண்டு வியந்து நயந்து காமுறும் சிறந்த கட்டழகுடையவர் கந்தப் பெருமான்.

"பத்தர்க் கிரதத்தைக் கடவிய
பச்சைப் புயல் மெச்சத் தகுபொருள்"
"அரிமுகுந்தன் மெச்சுற்ற பண்பின் மருகோனே"

**மன்றாடி மைந்தனை:—**

மன்று—சபை. கனக சபையில், அருள்ஞான வெளியில், மாதொரு பாகம் நோக்கி, ஆதியும் முடிவும் இல்லாத அற்புத ஆனந்தத் தாண்டவத்தைச் சிவபெருமான் புரிந்தருளுவர். அதனாலேயே அகிலாண்டங்களெல்லாம் அசைந்தாடுவன வாயின.

நடராஜமூர்த்தியின் திருக்கரத்தில் உள்ள உடுக்கையில் படைப்பும், அபய திருக்கரத்தில் காப்பும், மழுவேந்திய திருக் கரத்தில் அழிப்பும், ஊன்றிய திருவடியில் மறைப்பும், தூக்கிய திருவடியில் அருளும் ஆக ஐம்பெருந் தொழிலுக்கும் ஆதாரம் சிற்சபையில் பெருமான் புரியும் அற்புதத் திருக்கூத்தே யாகும்.

அத்தகைய அருள் மயமாகிய நடராஜமூர்த்தியைக் காண்பார்க்குப் பெருங் களிப்பு எய்தும். அவருடைய அழகு அகிலாண்டடங்களையும் வசப்படுத்தும்.

அத்தனை முப்பத்து முக்கோடி தேவர்க் கதிபதியை
நித்தனை யம்மை சிவகாம சுந்தரி நேசனை யெம்
கத்தனைப் பொன்னம் பலத்தாடு மையனைக் காணக்கண்கள்
எத்தனைக் கோடி யுகமோ தவஞ்செய் திருக்கின்றவே.

இங்ஙனம், ''குனித்த புருவமும், கொவ்வைச் செவ்வாயிற் குமிண் சிரிப்பும், பனித்த சடையும், பவளம்போல் மேனியிற் பால் வெண்ணீறும் இனித்தமுடைய எடுத்த பொற்பாதமும்'' உடைய எம்பெருமானும் கண்டு காமுறத் தக்க பெருங் கவினுடையவர் முருகக் கடவுள்.

''மன்றுதோ ருடிய வள்ளல் காமுறக்
குன்றுதோ ருடிய குமரற் போற்றுவாம்'' —கச்சியப்பர்.

''கனகசபை மேவு மெனது குருநாத
கருணை முருகேசப் பெருமாள்காண்'' —திருப்புகழ்.

வானவர்க்கு மேலான தேவனை:—

தேவர்கள் யாவருக்கும் சிறந்தவர் முருகக் கடவுள்; மூவர் தேவாதிகள் தம்பிரான்; தேவர் சிறை தீர்த்த தேவதேவர்.

''தீரதீர தீராதி தீரப் பெரியோனே
தேவ தேவ தேவாதி தேவப் பெருமாளே''

மெய்ஞ்ஞான தெய்வத்தை:—

ஞானபண்டிதனும் திருவேலிறைவன் மெய்ஞ்ஞான மூர்த்தியாகும். ஞானகர சுரபாஸ்கரன்; ஞான பூரணன்; ஞான தாதா; ஞானம் பெற விரும்புவோர் ஞானபண்டிதனை உபாசிக்க வேண்டும்.

''மேதகு புராண வேதாங்குரன்
ஓதரிய மோன ஞானங்குரன்'' —வகுப்பு.

சேலர் வயற்பொழில் செங்கோடன்:—

திருச்செங்கோடு வயல்களில் சேல்மீன்கள் உலாவுவதால் நீர்வளம் மிக்கது. அன்றியும் வயலில் உழவுத் தொழில் புரிவோர் உயிர்களிடத்தில் கருணை யுடையவர். திருச்செந்தூரின் பெருமையைக் கூறவந்தவிடத்தும் இங்ஙனமே கூறுகின்றனர்.

''சேலொடு வாளை வரால்கள் கிளம்பித்
தாறுகொள் பூகமளாவிய இன்பச்
சீரலை வாய்நகர் மேவிய கந்தப் பெருமாளே''

''சேல்பட் டழிந்தது செந்தூர் வயற்பொழில்''

திருச்செங்கோடு மிகவும் சிறந்த திருத்தலம். அருணகிரிநாதர் அத்தலத்தைப் பலப்பல இடங்களில் பாராட்டுகின்றனர். ஒரு தலத்தையுங் குறிக்காது பாடியருளிய மந்திர நூலாகிய கந்தரநுபூதியில் ''நாகாசல வேலவ'' என்று திருச்செங்கோட்டை மட்டும் சிறப்பித்துக் கூறுகின்றனர்.

மேலும் திருச்செங்கோட்டு முருகவேளைக் குறித்து 23வது பாடலில் கல்லுங் கனியக் கூறுமாறு காண்க.

திருச்செங்கோட்டில் எழுந்தருளியுள்ள முருக மூர்த்தம் மிகவும் அழகுடையது. சிலையினாலாகிய வடிவமன்று. பழநியாண்டவரைப் போலே நவபாஷாணங்களாலாயது. பழநி மூர்த்தி கிருஷ்ணம் (கருநிறமுடையது); செங்கோட்டு மூர்த்தி சுவேதம். (வெண்ணிறமுடையது)

வாயுதேவனுக்கும் ஆதிசேடனுக்கும் வலிமை விஷயமாக வந்த விவாதத்தின் காரணமாக, ஆதிசேடன் மேருகிரியின் சிகரங்களைத் தனது பணமகுடங்களால் மறைத்து உறைத்து நின்றனன். வாயு அம் மேருகிரியின் மூன்று சிகரங்களைப் பறித்து எறிந்தனன். அவை கொங்கு நாட்டில் வந்து வீழ்ந்தன. ஒன்று திருச்செங்கோடு; ஒன்று கொடுமுடி; ஒன்று சென்னிமலை. இது முந்திய கற்பத்தில் நிகழ்ந்தது. திருச்செங்கோடு பாப்பு படமெடுத்து ஆடுவது போன்ற வடிவத்தில்

விளங்கும். அங்கு அர்த்தநாரீச்சுரர் எழுந்தருளியுள்ளனர். திருச் செங்குன்றூர் என்றும் அதற்கு ஒரு பேருண்டு. திருஞான சம்பந்த சுவாமிகள் அங்கு எழுந்தருளியிருந்த போது உண்டாகிய விஷ சுரப்பிணியகலத் தேவாரம் பாடியருளினர்.

**கண்டுதொழ நாலாயிரங்கண் படைத்திலனே...நான்முகனே:—**

கண்பெற்றதன் பயனுக, "ஐந்து பேரறிவுங் கண்களே கொள்ள" செங்கோட்டு வேலவரைச் சென்று கண் குளிரக் கண்டு தொழுவதற்கு இவ்விரு கண் போதாது. முழுதுமழகிய முருகனைக் காண நாலாயிரங் கண்கள் அடியேனுக்குப் பிரம தேவன் படைத்தானில்லையே?

"முருகா! கோடாத வேதனுக்கு யான் என்ன குற்றம் செய்தேன்? அடியார்கள் எல்லாம் உனது திருவடியைச் சென்னியிற் சூடுகின்ருர்கள்; தொழுகின்ருர்கள்; உனது அழகினை நாடுகின்ருர்கள்; உனது புகழைப் பாடுகின்ருர்கள்; அடியேனுக்கு அந்த நான்முகன் நின் திருவடியைச் சூடாத சென்னியும், நாடாத கண்ணும், தொழாத கையும், பாடாத நாவும் படைத்தனன். பெருமானே! நாயினேன் என் செய்வேன்" என்று அடிகள் 76-வது பாடலில் இரங்கிக் கூறுகின்றனர்.

## கருத்துரை

திருச்செங்கோட்டில் எழுந்தருளிய செவ்வேட் பெருமானைச் சேவிப்பதற்குப் பல்லாயிரங் கண்கள் வேண்டும்.

## 91

**கருமான் மருகனைச் செம்மான் மகளைக் களவுகொண்டு
வருமா குலவனைச் சேவற்கைக் கோளனை வானமுய்யப்
பொருமா வினைச்செற்ற போர்வேல னைக்கன்னிப் பூகமுடன்
தருமா மருவுசெங் கோடனை வாழ்த்துகை சாலநன்றே.**

## பதவுரை

கரு மால் மருகனை=கரிய நிறமுடைய திருமாலுக்கு மருமகனாக விளங்குபவரை, செம்மான் மகளை=செம்மையான மானின் புதல்வியாகிய வள்ளியம்மையாரை, களவுகொண்டு வரும்=களவினால் மணந்து கொண்டுவந்த, ஆகுலவனை=வேட மூர்த்தியை, சேவல் கை கோளனை = சேவலைக் கொடியாகத் திருக்கரத்தில் கொண்டவரை, வானம் உய்ய = விண்ணுலகத்தோர் பிழைக்குமாறு, பொரும் மாவினை செற்ற=போர் செய்து மாமரமாகி நின்ற சூரபன்மனைச் சிதைத்த, போர்வேலனை = போரிற் சிறந்த வேலாயுதத்தையுடைய வீரமூர்த்தியை, கன்னி பூகம் உடன் = இளமையாகிய பாக்கு மரங்களோடு, தருமா மருவு = மாமரங்களும் பொருந்தியுள்ள, செங்கோடனை = திருச்செங்கோட்டு மலையில் எழுந்தருளியிருப்பவரை, வாழ்த்துகை சால நன்றே = வாயார வாழ்த்துதல் மிகவும் நல்லது.

## விரிவுரை

**கருமான் மருகனை:—**

திருமால் கரிய நிறம் உடையவர். கரிய மேகம் மழை பொழிவதுபோல் திருமாலுங் கருணை பொழிபவர். கரிய மாணிக்க மலைபோன்ற அழகிய திருமேனி யுடையவர்.

கருமாணிக்க மலைமேல் மணித்தடந் தாமரைக்
காடுகள் போல்
திருமார்பு வாய்கண் கையுந்தி காலுடை யாடைகள்
செய்யபிரான்
திருமாலெம்மான் செழுநீர் வயல்குட்ட நாட்டுத் திருப்புலியூர்
அருமாயன் பேரன்றிப்பேச்சிலள் அன்னை மீரிதற்கென் செய்கேனோ.
—நம்மாழ்வார்.

திருமாலும் சிவபெருமானுடைய சத்தியாகும். சிவ சக்திகள் நான்கு எனப்படுவர். போர்சக்தி, கோபசக்தி, இன்ப சக்தி, புருஷசக்தி.

போர் சக்தி—ஐயை (துர்க்கை); கோப சக்தி—காளி; இன்ப சக்தி—உமை; புருஷ சக்தி—திருமால். இதனைத் திருமாலே உணர்த்துமாறு காண்க.

இறுதிசெய் திடலே சீற்றம் இன்பமே யாண்மை யென்று
அறைதரு சக்தி நான்காம் அரன்றனக் கையை காளி
முறைதரு கௌரி யின்னோர் மும்மையும் பெற்றோர் ஏனைப்
பெறலருஞ் சக்தி யான்இப் பெற்றியு மறைகள் பேசும்.

—கந்தபுராணம்.

ஆதலின் திருமால் உமையம்மையாருக்கு உடன் பிறந்தவர் என்று கூறுவது மரபு.

"அச்சுத சகோதரி அனைத்து வேதத் தலைவி
அற்புத புராதனி வரப்ரகாசப் ரக்ருதி" —வகுப்பு.

திருமாலுடைய தங்கையாகிய பார்வதி தேவியின் குமாரர் முருகக் கடவுள் ஆதலினாலும், திருமாலுடைய குமாரிகளாகிய அமுதவல்லியும் சுந்தரவல்லியுமே தேவயானை வள்ளியம்மையாக அவதரித்து முருகவேளை மணந்து கொண்டனர் ஆதலினாலும் முருகன் மால்மருகன் ஆயினார்.

**செம்மான் மகளைக் களவுகொண்டு வருமாகுலவனை:—**

செம்மைப் பண்புடைய மான் வயிற்றில் அவதரித்த வள்ளியம்மையாரை வேலாயுதக்கடவுள் களவியலில் வேட வடிவுதாங்கி நள்ளிருளில் கவர்ந்து கொண்டு சென்றனர்.

'செம்மான் மகளைத் திருடுந் திருடன்" —அநுபூதி.

பொறி புலன்களாதி கருவிகரணங்கள் யாவும் ஒய்ந்து ஒடுங்கியபோது இறைவன் வெளிப்படுவன்.

ஆன்மாவை வளர்த்த திரோதமலமாகிய தாயும், பொறி புலன்களாகிய தமரும், ஒருபோதுந் தூங்காத மூலமலமாகிய நாயும், தேகபுத்தியாகிய நகரமும், போதுமென்ற திருப்தியின்றி சதா அலைகின்ற பற்று என்ற பேயும் துயில்கின்ற வேளையில் திருவருளாகிய பாங்கி தர ஆன்மாவாகிய வள்ளியம்மையைப் பதியாகிய முருகவேள் கவர்ந்துகொண்டு சென்றனர்.

தாய்துயி லறிந்து தங்கள் தமர்துயி லறிந்து துஞ்சா
நாய்துயி லறிந்து மற்றந் நகர்துயி லறிந்து வெய்ய
பேய்துயில் கொள்ளும் யாமப் பெரும்பொழு ததனிற் பாங்கி
வாய்தலிற் கதவை நீக்கி வள்ளியைக் கொடுசென்றுய்த்தாள்.

உள்ளங்கவர் கள்வனாகிய கண்ணுதற் கடவுளது மைந்தராகிய கந்தவேள் வள்ளியைக் கவர்வது நியாயந் தானே.

ஆகுலவனை:—

ஆகுலம்-துன்பம். துன்பத்தைச் செய்கின்ற வேடருக்கு அப்பெயர் தொழிலாகுபெயராக வந்தது. இறைவன் ஆறுமுகத்தினை மறைத்து மாறுமுகங் கொண்டு வள்ளி தேவிக்கு முன் வந்தனர். ஆன்மா பக்குவமெய்து முன் மாறுவடிவத்துடன் தோன்றி, பக்குவம் வருவித்து பின் தனது சொருபத்தைக் காட்டியருள்புரிவன்.

சேவற்கைக் கோளனை:—

ஒளியின் வருகையை யுணர்த்துவது சேவல். ஆனை வருமுன் மணியோசை வந்து தெரிவிப்பதுபோலும். கதிரவன் வரவறிந்து தெரிவிப்பது சேவல். எண்பத்து நான்கு நூறுயிர யோனி பேதங்களுள் சேவல் ஒன்றே சூரியோதயத்தை உணர்ந்து உலகிற்கு உணர்வித்து துயிலுணர்த்துகின்றது. சேவலுக்கு ஒளியினிடம் அளவிறந்த மகிழ்ச்சியுண்டு.

யாமங்கள் தொறுந்துயிலு மனிதர்கள் தம் வாணாள் வீணாயிற்றென்று
சேமங்கொள் சிறையடித்துக் குக்கூகூ கூவென்னுஞ் சேவலே கேள்
காமங்கை மிக்கொருநாள் விடியளவும் விழிதுயிலாக் கணக்கீதென்னே
கோமங்கை வள்ளிபுணர் தணிகையான் இங்குவரக் கூவுவாயே.

—தணிகைச் சந்நிதிமுறை.

ஆதலின் ஞானசூரியனாகிய ஞானபண்டிதன், பக்குவான்மாக்கள் தனது வரவை உணர்ந்து உய்யும் பொருட்டு சேவலைத் திருக்கரத்தில் ஏந்தியிருப்பர்.

''ஆரணம் பயில் ஞான புங்கவ
சேவலங் கொடி யான பைங்கர'' —திருப்புகழ்.

வானமுய்ய பொரு மாவினைச் செற்ற போர்வேலனே:—

சூரபன்மனால் பலயுகங்களாகத் துன்பமுற்ற விண்ணுலகத்தார் உய்வுபெற கடல்நடுவில் மாமரமாகி நின்ற சூரபன்மனை வேலாயுதத்தால் பிளந்து முருகவேள் அருள் புரிந்தனர்.

''மறியு மாழ்கட லூடுபோய்க் கரந்து
கவடு கோடியின் மேலுமாய்ப் பரந்து
வளரு மாவிரு கூறதாய்த் தடிந்த வடிவேலா''—திருப்புகழ்.

கன்னி பூகமுடன் தருமா மருவு:—

முருகவேள் தன்னுருவினைக் கொண்டு நின்ற சூரனைத் தடிந்ததனால், மேலும் தன்னைத் தடிவரோ என்று அஞ்சி மாமரங்கள் இளம்பாக்குமரங்களைத் துணைபற்றிக்கொண்டு முருகவேள் எழுந்தருளிய திருச்செங்கோட்டினைச் சூழ்ந்து தஞ்சம் புகுந்ததுபோல் மருவியிருக்கின்றன. குற்றஞ் செய்த ஒருவன் குற்றஞ் செய்யாதவனைத் துணைபற்றிப் போவதுபோல் என்று அறிக. இக்கருத்து குறிப்பெச்சமாக நுனித்துணரக் கிடக்கின்றது. ''பொருமாவினைச் செற்ற'' என்று கூறி அதனையடுத்து ''தருமாமருவு'' என்று கூறும் நயத்தினை உற்றுநோக்குக.

செங்கோடனை வாழ்த்துகை சால நன்றே:—

எல்லா உயிர்களுக்கும் இறைவன் வாயை உணவு உண்பதற்கு மட்டுமே அமைத்தனன். மனிதனுக்கு மட்டும் பேசுவதற்கு வாய்ப்புளதாக அமைத்தனன். ஆதலினால் அவன் தந்த வாயினால் அவனை வாழ்த்த வேண்டும். ''வாழ்த்த வாயும்'', ''வார்கழல் வாய் வாழ்த்த வைத்து'' என்ற அருள் வாக்குகளையெல்லாம் ஈண்டு சிந்தியுங்கள்.

"வாயே வாழ்த்து கண்டாய்-மத
யானையுரி போர்த்து
பேய்வாழ் காட்டகத் தாடும் பிரான் றன்னை
வாயே வாழ்த்து கண்டாய்"

என்பார் நமது அப்பர் சுவாமிகள்.

இறைவனை வாழ்த்திய வாய் பாலுந் தெளிதேனும் பாகும் அமுதமும் உண்டு இன்புறும். வாழ்த்தாத வாய் பழங்கஞ்சியும் இன்றி உலர்ந்து வாடித் துன்புறும்.

"ஐயநின் சீர்பேசு செல்வர்வாய் நல்லதெள்
ளமுதுண் டுவந்த திருவாய்"

"எந்தைநினை வாழ்த்தாத பேயர்வாய் கூழுக்கும்
ஏக்கற் றிருக்கும் வெறுவாய்" —திருஅருட்பா.

இத்திருப் பாடலில் "கருமான்" "செம்மான்" என்று முரண் தொடையாகத் தொடுத்த அழகும், பல ஜாதிப் பெயர்களை அமைத்த அருமையும் அறிவுக்கு விருந்தாக அமைந்துளது.

கருமான் — கொல்லன்; செம்மான் — சக்கிலியன்; ஆகுலவன்—வேடன்; கைக்கோளன்—நெய்வோன்; வேலன்—வெறியாட்டயர்வோன்.

கருத்துரை

செவ்வேளை எவ்வேளையும் வாயார வாழ்த்த வேண்டும்.

**92**

தொண்டர்கண்டண்டி மொண்டுண்டிருக்குஞ்சுத்தஞானநுத்
தண்டையம் புண்டரி கந்தரு வாய்சண்ட தண்டவெஞ்சூர்
மண்டலங் கொண்டுபண் டண்டரண்டங்கொண்டு
மண்டிமிண்டக்
கண்டுருண் டண்டர்வின் டோடாமல் வேல்தொட்ட காவலனே.

*பதவுரை*

சண்ட=வேகத்தை யுடையவனும், தண்ட=தண்டாயுதத்தைக் கொண்டவனுமாகிய, வெம் சூர்=வெய்ய சூரபன்மனுனவன், பண்டு=முற்காலத்திலே, மண்டலம் கொண்டு=மண்ணுலகைக் கைப்பற்றியும், அண்டர் அண்டங்கொண்டு=தேவருலகைக் கவர்ந்தும், மண்டி மிண்ட கண்டு=மிகவும் நெருக்கியதைப் பார்த்தருளி, அண்டர் உருண்டு விண்டு ஓடாமல்=தேவர்கள் (அச்சத்தினுல்) கீழே விழுந்து உருண்டு தமது உலகை விட்டு ஓடாதபடிக்கு, வேல் தொட்டகாவலனே=வேலாயுதத்தை விடுத்தருளிய இரட்சக மூர்த்தியே! தொண்டர்=அடியார்கள், கண்டு அண்டி=ஞானக் கண்ணுல் பார்த்து ஞான நெறியால் நெருங்கி, மொண்டு உண்டு இருக்கும்=முகந்து பருகி இன்புற்றிருக்கின்ற, சுத்த ஞான நரு=மெய்ஞ்ஞானமாகிய தேனை யுடைய, தண்டை அம் புண்டரிகம் தருவாய்=தண்டையணிந்த அழகிய தாமரைபோன்ற திருவடியை அடியேனுக்குத் தந்தருளுவீர்.

*விரிவுரை*

**தொண்டர்:—**

இறைவனைக் கூடும் அன்பினில் கும்பிட்டு, வீடும் வேண்டா விறலின் விளங்குவர் தொண்டர். தொண்டர்கள் பெருமையை யாராலும் அளக்கலாகாது. தேவர்களும் தொண்டர்களைக் கண்டால் ஒதுங்கி நிற்பர். "தேவரொதுங்கத் திருத்தொண்டர் மிடையுஞ் செல்வத் திருவாரூர்" என்பர் சேக்கிழாரடிகள்.

"துரும்பனேன் என்னினுங் கைவிடுதல் நீதியோ
  தொண்டரொடு கூட்டுகண்டாய்
சுத்தநிர்க் குணமான பரதெய்வமே பரஞ்
  சோதியே சுகவாரியே"

என்பர் தாயுமானுர்.

இறைவனிடம் யாதொரு பலனுங் கருதாது மனத்தாலும் வாக்காலும் காயத்தாலும் திருத்தொண்டு செய்யும் தொண்டருள்ளத்தில் இறைவன் தானே விளங்குகின்ரு

ருதலின் தொண்டர்க்குச் சமானம் யாதொன்றுமில்லை. தொண்டர்க்குச் சமானம் தொண்டரே. அதனாலன்றோ திருத்தொண்டர் பெருமையை உலகெலா முணர்ந்துய்யும் பொருட்டு, திருக்கைலாய மலையிலிருந்து தமக்கு அணுக்கத் தொண்டு செய்திருந்த ஆலாலசுந்தரரை மண்மிசையனுப்பிச் சிவபெருமான் திருத்தொண்டத் தொகையைப் பாடுவித்தார். ஆனபடியால் எல்லோரும் இறைவனுக்குக் கூடுமளவில் திருத்தொண்டு செய்தல் வேண்டும்.

கண்டு அண்டி:—

இறைவனை மூவருந் தேவரு முயன்றாலுங் காண்பதற் கரிது. ஆனால் தொண்டர்க்கு எளிது.

"தொடுத்த மலரொடு தூபமுஞ் சாந்துங் கொண்டு எப்பொழுதும் அடுத்து வணங்கும் அயனொடு மாலுக்குங் காண்பரியான்" என்பார் அப்பமூர்த்திகள். அத்தகைய பரம்பொருளைத் தொண்டர் நெருங்கிக் கண்டு 'கண்களிப்பர்.

மொண்டு உண்டு இருக்கும்:—

இறைவனிடம் நெருங்கி இறைவனுடைய அருளமுதத்தை நிரம்ப அள்ளி மொண்டு பருகி இன்புற்று செம்மாந்திருப்பர் திருத் தொண்டர். "வழங்குகின்றாய்க்குன் அருளாரமுதத்தை வாரிக்கொண்டு விழுங்குகின்றேன்" என்றார் மணிவாசகர். அங்ஙனம் தாம் உண்டதோடு அமையாது, அருளமுதை உண்ணாது பவப்பிணியால் வாடி உறங்கிக்கிடக்கும் உயிர்களையெல்லாம் தட்டி எழுப்பி, "அகண்டாகார சிவபோகமெனும் பேரின்பவெள்ளம் பொங்கித் ததும்பிப் பூரணமாய் ஏக உருவாய்க் கிடக்குது; ஐயோ! இன்புற்றிட நாம் இனியெடுத்த தேகம் விழுமுன் புசிப்பதற்குச் சேரவாரும்" என்று அறைகூவி அழைப்பர். "நான் பெற்ற இன்பம் பெறுக இவ் வையகம்" என்பது திருத்தொண்டர் மரபு. தன்னல நீக்கமும் பொதுநல ஆக்கமும் பூண்டவர்.

சுத்த ஞான நரு தண்டையம் புண்டரிகம்:—

தாமரையில் தேன் துளிக்கும்; இறைவனுடைய திருவடியாகிய தாமரையில் ஞானமாகிய தேன் துளிக்கும்.

"உருவிலாத பாழில் வெட்ட வெளியிலாடு நாத நிர்த்த
உனது ஞான பாதபத்ம முறுவேனோ"

என்ற திருப்புகழடியை ஈண்டு சிந்தித்துணர்க. ஞானமாகிய திருவடியை ஞானத்தினாலேயே பெறுதல் கூடும். அதனாலேயே, "ஞானமலது கதி கூடுமோ" என்பார் தாயுமானார்.

ஞானத்தின் மிக்க வறநெறி நாட்டில்லை
ஞானத்தின் மிக்க சமயமு நன்றன்று
ஞானத்தின் மிக்கவை நன்முத்தி நல்காவா
ஞானத்தின் மிக்கார் நரரின் மிக்காரே. —திருமந்திரம்.

"ஞானமே வடிவாய் தேடுவார் தேடும் நாட்டமே" என்றும் அழகுபெறக் கூறினார் அனுபவஞானியாகிய தாயுமானார்.

ஞானத்தேன் ஊற்றெடுக்கும் இடம் இறைவன் திருவடியாகலின் அத் திருவடியைப்பற்றி சுவாமிகள் பிறிதோரிடத்தில் கூறுமாறு காண்க.

"வரிய பதத்தினின் அருவி இருப்பிடம்
அமையு மெனக்கிட முனது பதச்சரண்" —திருப்புகழ்.

திருவடியின் பெருமையை மிக நன்றாகக் கூறுவர் திருமூலர்.

திருவடியை சிவமாவது தேரில்
திருவடியே சிவலோகஞ் சிந்திக்கில்
திருவடியே செல்கதியது செப்பில்
திருவடியே தஞ்சமுட் டெளிவார்க்கே.

திருவடி ஞானஞ் சிவமாக்கு விக்கும்
திருவடி ஞானஞ் சிவலோகஞ் சேர்க்கும்
திருவடி ஞானஞ் சிறைமல மீட்கும்
திருவடி ஞானமே திண்சித்தி முத்தியே.

முருகவேள் திருவடியில் பிரணவ நாத ஒலியுடன் கூடிய மணித்தண்டை விளங்கும். "அணிமணித் தண்டை யார்க்கும் செழுமல ரடியுங் கண்டான்" எனவரும் கந்த புராணத்தில்.

**சண்ட தண்ட வெஞ்சூர்:—**

சண்டம்-வேகம்; தண்டம்-தண்டாயுதம்; அன்றியும் தண்டிப்பு எனினும் அமையும். இமையவரை சூரன் அனவரதமும் தண்டித்துத் துன்புறுத்தினன். கொடுமை பல புரிந்தானாதலின் "வெஞ்சூர்" என்றார். அவன் மண் ணுலகையும் விண்ணுலகையும் கைக்கொண்டு அதிக்ரமித் தான்.

**வேல் தொட்ட காவலனே:—**

அண்டர்கள் அஞ்சி ஓடாமல், அவுணர் உயிர் ஓட எம்பெருமான் வேலை விட்டருளினர். காவலன்-காப் பாற்றுபவன்.

இந்தப் பாடல் மெல்லினத்தொற்று மிக்கு வந்த சந் தத்தாலாகியது. மிகவும் அழகிய இனிய ஓசையுடையது.

கருத்துரை

வேலாயுதக் கடவுளே! திருத்தொண்டருக்குத் தந்த திருவடியை அடியேனுக்குத் தந்தருள்வீர்.

## 93

**மண்கம ழுந்தித் திருமால் வலம்புரி யோசையந்த**
**விண்கமழ் சோலையும் வாவியும் கேட்டது வேலெடுத்துத்**
**திண்கிரி சிந்த விளையாடும் பிள்ளைத் திருவரையிற்**
**கிண்கிணி யோசை பதினா லுலகமும் கேட்டதுவே.**

பதவுரை

மண்கமழ் உந்தி=மண்ணின் வாசனை வீசுகின்ற வயிற்றை யுடையவராகிய, திருமால்=சிறந்த பெருமையுடைய நாராயண மூர்த்தியின், வலம்புரி ஓசை=வலம்புரிச் சங்கின் ஒலி, அந்த

விண்கமழ் சோலையும்=அந்த விண்ணுலகில் பரிமளம் வீசும் பூங்காவிலும், வாவியும் கேட்டது=தடாகத்திலும் கேட்டது; வேல் எடுத்து=வேலாயுதத்தைத் திருக்கரத்தில் வைத்துக்கொண்டு, திண்கிரி சிந்த=திட்பமான மலைகள் பொடிபட்டு உதிருமாறு, விளையாடும் பிள்ளை=விளையாடுகின்ற குழந்தையாகிய குமாரக் கடவுளின், திரு அரையில் கிண்கிணி ஓசை=அழகிய இடையில் விளங்கும் கிண்கிணியின் நாதமானது, பதினால் உலகமும் கேட்டது=பதினான்கு உலகங்களிலும் கேட்டது.

## விரிவுரை

**மண்கமழ் உந்தித் திருமால்:—**

திருமால் உலகம் உண்டவர். ஆதலின் "மண்கமழ் உந்தி" என்றனர். "செகத்தையகத்திடு நெடியவர்" என்றனர் பிறிதொரு திருப்புகழில்.

> பள்ளியாலிலை யேழுலகுங் கொள்ளும்
> வள்ளல்வல் வயிற்றுப் பெருமான்
> உள்ளுளா ரறிவார் அவன் றன்
> கள்ளமாய மனக் கருத்தே. —திருவாய்மொழி.

**வலம்புரி யோசை:—**

திருமாலுடைய திருக்கரத்தில் விளங்கும் சங்கம் பாஞ்சஜன்யம்; அதை இனம் பற்றி வலம்புரி என்றார். அது பிரணவாகாரமாய ஓங்கார நாதஞ் செய்யும். அந்த நாதத்தால் பக்குவான்மாக்கள் உய்வு பெறுவர். அந்தச் சங்கம் திருமாலுடைய பவளவாயில் பொருந்தும் பேறு பெற்றது. பெரிய நாதத்தையுடையது. அந்தச் சங்கை நோக்கி ஆண்டாளம்மையார் உள்ளம் உருகி வினவுகின்றனர்.

> கருப்பூரம் நாறுமோ கமலப்பூ நாறுமோ
> திருப்பவளச் செவ்வாய் தான் தித்தித் திருக்குமோ
> மருப்பொசித்த மாதவன்றன் வாய்ச்சுவையும் நாற்றமும்
> விருப்புற்றுக் கேட்கின்றேன் சொல்லாழி வெண்சங்கே.

இத்தகைய பாஞ்சஜன்யத்தை திருமால் எடுத்து முழக்கினால் அருகே விண்ணுலகிலுள்ள கற்பகச் சோலைக்கும் தடாகத்திற்கும் மட்டுமே கேட்கும்.

வேலெடுத்துந் திண்கிரி சிந்த விளையாடும் பிள்ளை:—

முருகன் என்றும் மாறாத குழந்தைக் கடவுள். படிக்காசுப்புலவர் கூறும் அழகு ஈண்டு சிந்தித்தற் குரியது.

சின்னஞ் சிறுபிள்ளை செங்கோட்டுப் பிள்ளை சிவந்த பிள்ளை
பொன்னன் மணிப்பிள்ளை பூலோக மெங்கும் புகழும் பிள்ளை
சொன்னெஞ் சுழல்கின்ற சூரனைக்கொன்ற சொக்கேசர்பிள்ளை
வன்னக் கிளிப்பிள்ளை செந்தில் குறத்திக்கு மாப்பிள்ளையே.

குழந்தை வேலப்பன் தளர்நடையிட்டபோது நிகழ்ந்த நிகழ்ச்சியை அடிகள் சீர்பாத வகுப்பில் கூறுகின்றனர்.

"இமையவர்கள் நகரிலிறை குடிபுகுத நிருதர்வயி
றெரிபுகுத உரகர்பதி அபிஷேக மாயிரமும்
எழுபிலமு நெறுநெறென முறியவட குவடிடிய
இளையதளர் நடைபழகி விளையாடல் கூருவதும்"

எந்தை கந்தவேள் வேலெடுத்துச் சிறிது காலெடுத்து நடந்தவுடன், கடல் வற்றி வறண்டது; அத்தகிரி இடிந்து துகள்பட்டது; தேவரு முனிவரும் ஓலமிட்டு இசை பாடினர்.

"வேலைவற்றி வறண்டு சுறீல் சுறீலென
மாலைவெற்பு மிடிந்து திடீல் திடீலென
மேன்மைபெற்ற சனங்கள் ஐயா ஐயாவென இசைகள்கூற
வேலெடுத்து நடந்த திவாகராசல" —திருப்புகழ்.

திருவரையிற் கிண்கிணியோசை......கேட்டதுவே:—

முருகப் பெருமானுடைய திருவரையில் நவரத்தினங்கள் இழைத்த மணிக்கிண்கிணி விளங்கும். அந்தக் கிண்கிணி அருள் நாத ஒலியாக "ஓம்" என்ற பிரணவ நாதத்தை யுண்டாக்கும். அவ்வொலி பதினாலு உலகமும் கேட்கும். அதனால் பதினாலு உலகில் உள்ள ஆன்மாக்களும் உய்யும்.

திருமால் பாஞ்சஜன்யத்தைத் தானே வாயில் வைத்து முயன்று ஊதினுலும் அருகிலுள்ள சோலைக்கும் வாவிக்கும் மட்டுமே அது கேட்கும். குழந்தை வேலப்பன் திருவரையின் கிண்கிணி தானே சிறிது அசைதலால் உண்டாகும் ஒலி பதினுலு உலகங்கட்கும் கேட்கும். மூவர்க்கும் தேவர்க்கும் முழுமுதல் முருகவேள் எனக் குறிப்பிடுகின்றனர்.

### கருத்துரை

திருமாலின் சங்கநாதம் விண்ணுலகு மட்டும் கேட்கும். குழந்தைக் குமரேசனது திருவரைக் கிண்கிணி நாதம் எல்லா வுலகங்களுக்கும் கேட்கும்.

## 94

தெள்ளிய வேனலிற் கிள்ளையைக் கள்ளச் சிறுமியெனும்
வள்ளியை வேட்டவன்றாள் வேட்டிலை சிறு வள்ளை தள்ளித்
துள்ளிய கெண்டையைத் தொண்டையைத் தோதகச் சொல்லை நல்ல
வெள்ளிய நித்தில வித்தார மூரலை வேட்ட நெஞ்சே.

### பதவுரை

சிறு வள்ளை தள்ளி=சிறிய வள்ளைக் கொடியைத் தள்ளி துள்ளிய கெண்டையை=துள்ளுகின்ற மீன் போன்ற மாதர்களது கண்களையும், தொண்டையை=கோவைக் கனியொத்த சிவந்த இதழையும், தோதக சொல்லை = (ஆடவரை மயக்கும்) வஞ்சக வார்த்தையையும், நல்ல வெள்ளிய நித்தில=நல்ல வெண்மையான முத்து போன்ற, வித்தார மூரலை=ஒளி விரிந்த பல்லுடன் கூடிய புன்சிரிப்பையும், வேட்ட நெஞ்சே=விரும்பி யலைகின்ற மனமே! தெள்ளிய ஏனலில்=தெளிவு பெற்ற தினைப்புனத்தைக் காவல் புரிந்த, கிள்ளை=கிளியை யொத்தவரும், கள்ள சிறுமி யெனும் வள்ளியை=உள்ளத்தைக் கவரும் இளங் குமரியும் ஆகிய வள்ளி யம்மையை, வேட்டவன்=விரும்பிய முருகப் பெருமானுடைய, தாள் வேட்டிலை=திருவடியை விரும்பினுயில்லை.

## விரிவுரை

**தெள்ளிய ஏனலிற் கிள்ளை:—**

தெள்ளிய என்ற சொல்லை தினைக்கு அடையாக்கி, "தெள்ளிக் கொழிப்பதற்கு உரித்தாகிய தினைப்புனம்" என்றுங் கூறுவர். அது சிறப்புடைத்தன்று. தெள்ளிய என்ற சொல்லை கிள்ளைக்கு அடையாக்குதல் வேண்டும். தெளிவுபெற்ற கிள்ளை போன்ற வள்ளியம்மையார் என்று இனிது பொருள்படும். கிள்ளை என்பது உவமையாகு பெயர். ஏனல்—தினைப்புனம். வள்ளியம்மை ஞானம்பிகை யாதலின் "தெள்ளிய கிள்ளை" என்றனர். சுந்தரஞான மென்குறமாது" என்றும், "ஏடார் மலர்க்குழலி ஞான தனத்திமிகு மேராள் குறத்தி" என்றும், "ஞானகுறமாது" என்றும் அடிகள் ஆங்காங்கு உரைத்தருளி யிருப்பதனை உற்று நோக்குக.

**கள்ளச் சிறுமி:—**

கள்ளம் - கரவு; நாயகன் உள்ளத்தை நாயகியும், நாயகியின் உள்ளத்தை நாயகனும் கவர்வர். அதனால் நாயகனை நாயகி "கள்வன்" என்றும், நாயகியை நாயகன் "கள்ளச்சிறுமி" என்றும் கூறுவது மரபு.

தன் உள்ளத்தைக் கவர்ந்த சிவபெருமானைச் சுட்டி ஞானசம்பந்தப்பெருமான் கூறுமிடத்தில், "உள்ளங் கவர் கள்வன்" என்று நாயகிநாயக பாவத்தில் அருளிச் செய்தனர். ஞானசம்பந்தப் பெருந்தகை தன்னை நாயகியாக வைத்து அருளிச் செய்தார் என்பதனை,

"மறை கலந்தவொலி பாடலோ டாடலராகி மழுவேந்தி
இறை கலந்த இன வெள்வளை சோரவென் னுள்ளங்கவர்
கள்வன்"

என்று அருளிச் செய்தமையால் தெளிக.

அன்றியும் ஸ்ரீராமரும் சீதையும் மிதிலையில் சந்தித்தனர். சீதாதேவி தன் உள்ளங் கவர்ந்த சக்கரவர்த்தித் திருக்குமாரரைக் குறித்துக் கூறுந் திறனும் இத்தன்மைத்தே.

பெண்வழி நலனெடும் பிறந்த நாணொடும்
எண்வழி யுணர்வுநாள் எங்குங் காண்கிலேன்
மண்வழி நடந்தடி வருந்தப் போனவன்
கண்வழி நுழையுமோர் கள்வனே கொலாம்.

சிறுமி - இளம் பெண். என்றும் இளமை யழியாதவர். என்றும் அகலாத இளமைக்காரனாகிய எந்தை கந்தவேளது இன்பசக்தியாம் எம்பிராட்டியும் அங்ஙனமே யென்றறிக.

வள்ளியை வேட்டவன்றாள் வேட்டிலே:—

வள்ளி - வள்ளன்மை யுடையவள்; வள்ளலுடைய மனைவி வள்ளி. உலகிலுள்ள உயிர்களெல்லாம் உய்வு பெறும் பொருட்டு இச்சாசத்தியாகிய வள்ளிநாயகியை முருகவேள் விரும்பினர். அப் பரம கருணாநிதியின் திரு வடியை விரும்புதல் வேண்டும். அறுமுகவள்ளலின் அடி மலரை விரும்புதலே சிறந்த பேருகும். வீரவாகு தேவர் அதனையே வரமாக வேண்டிப் பெற்றனர்.

கோல நீடிய நிதிபதி வாழ்க்கையுங் குறியேன்
மேலை யிந்திரன் அரசினைக் கனவிலும் வெஃகேன்
மாலயன் பெறு பதத்தையும் பொருளென மதியேன்
சால நின்பதத் தன்பையே வேண்டுவன் தமியேன்.

அந்த நல்வர முத்தியி னரியதொன் றதனைச்
சிந்தை செய்திடு தவத்தரும் பெறுகிலர் சிறியேன்
உய்ந்தி டும்வகை யருள்செய வேண்டுமென் றுரைப்ப
எந்தை கந்தவே ளுனக்கது புரிந்தன மென்றான்.

மனக்கவலையை மாற்றுதற்குச் சிறந்த மருந்து திரு முருகன் திருவடியாம்.

தனக்குவமை யில்லாதான் தாள்சேர்ந்தார்க் கல்லால்
மனக்கவலை மாற்ற லரிது. —பொதுமறை

எனக்கவலம் வாராமல் எந்நாளுங் காத்து
மனக்கவலை மாற்று மருந்தாம்—புனச்சிறுமி
முத்துவடக் கோடுமுத முந்நான்கு தோளுடையான்
தத்துபுனற் போரூரன் தாள். —திருப்போரூர்ச் சந்நிதிமுறை

கோளில் பொறியில் குணமிலவே எண் குணத்தான்
தாளை வணங்காத் தலை. —திருக்குறள்

என்ற அருமைத் திருவாக்குகளை ஆழ்ந்து சிந்திப் பார்க்கு நன்கு விளங்கும்.

முருகன் திருவடியில் நாட்டமில்லாதவர், இமயமலை யின் குகையில் கிடந்தால்தான் என்ன பயன்? சிறந்த மருந்துகளைத் தின்ருல் தான் என்ன பயன்? கலைகள் முழு வதையுங் கற்ருல்தான் என்ன பயன்?

மலைமுழையி லுற்ருலென் மாமருந் துண்டாலென்
கலைமுழுதுங் கற்ருலென் காணுர்—இலைநிலவு
வேல்பிடித்த கையான் வியன்போரு ரையனிரு
கால்பிடித்தாற் காண்பார் கதி. —சிதம்பரசுவாமிகள்.

முருகனுடைய திருவடியை வேட்டு சென்னிமேற் புனைந்தார்க்கு அயனுடைய எழுத்தும் அழிந்து போகும். "அவன் கால்பட்டழிந்ததிங் கென்றலை மேலயன் கையெழுத்தே" என்பார் அடிகள். முருகவேளது திருவடி ஞானமேயாதலின் அத் தாளை வேட்டார்க்கு அஞ்ஞானம் தானே தொலையும்.

"சித்தினி லாடலோடு முத்தமிழ் வாணரோடு
சித்திர ஞானபாத மருள்வாயே"
"உருவிலாத பாழில் வெட்ட வெளியிலாடு நாத நிர்த்த
உனதுஞான பாதபத்ம முறுவேனே"

உலகங்களை யெல்லாம் ரட்சிப்பது முருகன் திருவடியே யாதலின், பிறிதோரிடத்தில் "ரட்சை திரு சிற்றடி" என்ற னர். ஆதலின் ஞானபூரணனது ஞானமேயான தாடா மரையை வேட்டு விடுபேறு பெறுதல் வேண்டும்.

**கெண்டையை:—**

பெண்களது கண்களுக்குக் கெண்டை மீனை உவமை யாகக் கூறுதல் கவிமரபு. கெண்டைமீன் துள்ளித் துடித்துப்

புரண்டுகொண்டே யிருக்கும். மாதர் விழிகளும் அத் தன்மைத்தே.

தோதகச் சொல்லே:—

ஆடவரது மனதை மயக்குமாறு வஞ்சனை நிறைந்த உரைகளைக் கூறி தம் வயப்படுத்திப் பாழ்படுத்துவர் பொதுமகளிர்.

வெள்ளிய நித்தில வித்தார மூரல்:—

வெண்மையான முத்தையொத்த பல்வரிசையோடு கூடிய புன்சிரிப்பால் உள்ளத்தைக் கொள்வர் அம் மகளிர்.

வேட்ட நெஞ்சே :—

வேட்டல்-விரும்புதல். அழிந்துபடுகின்றதும், அழியச் செய்வதுமாகிய விலைமகளிரது கண்களையும், இதழையும், சொற்களையும், புன்சிரிப்பையும் விரும்பிய நெஞ்சே! அவை களை விரும்பாது அழியாததும், அழியாமையைத் தருவது மாகிய ஞானமேயான ஞானபண்டிதனுடைய திருவடியை விரும்புவாயாக.

மலமாயாகன்மங்கள் வந்து உயிர்க்கு ஊறு செய்யா திருப்பதற்கு நல்ல அரண் முருகன் பாதாரவிந்தமே.

> ''வேதாகம சித்ர வேலாயுதன் வெட்சி பூத்ததண்டைப்
> பாதார விந்தம் அரண்''.

கருத்துரை

ஏ நெஞ்சே! மாதரை விரும்பி மயங்காது, ஞானபண் டிதனுடைய திருவடியை விரும்பி வீடுபெறுவாய்.

**95**

யான்றானெனுஞ் சொல்லிரண்டுங் கெட்டாலன்றி யாவருக்குந்
தோன்றாது சத்தியந் தொல்லைப் பெருநிலஞ் சூகரமாய்க்
கீன்றான் மருகன் முருகன்க்ரு பாகரன் கேள்வியினாற்
சான்றாரு மற்ற தனிவெளிக் கேவந்து சந்திப்பதே.

## பதவுரை

தொல்லை பெரு நிலம்=பழமையாகிய பெரிய பூமியை, சூகரம் ஆய்=வராகவுருவங் கொண்டு, கீன்றூன்=பிளந்தவனுகிய திருமாலுக்கு, மருகன்=மருகரும், முருகன்=முருகவேளும், க்ருபாகரன்=கருணைக்கு உறைவிடமானவருமாகிய கந்தப் பெருமானது, கேள்வியினுல்=உபதேசக் கேள்வியினுல், சான்று ஆரும் அற்ற=சாட்சி ஒருவரும் இல்லாத, தனிவெளிக்கே= ஒப்பற்ற ஞான வெளியிலே, வந்து சந்திப்பது=அருள் நெறியில் வந்து கூடுவது, யான்தான் = யான் தான், என்னும் சொல் இரண்டும் கெட்டால் அன்றி=என்னும் இரண்டு சொற்களும் கெட்டால் அல்லது, யாவருக்கும் தோன்றுது=எவர்களுக்கும் வெளியாகாது, சத்தியம்=இது உண்மை.

## விரிவுரை

**தொல்லைப் பெருநிலம் சூகரமாய் கீன்றுன்:—**

இரண்யாக்ஷன் பூமியை எடுத்துக் கடலில் எறிவான் முயன்றபோது திருமால் வராக வடிவம் கொண்டு பூமியைத் தனது கொம்பினுல் மீட்டு எடுத்து நிலை நிறுத்தினுர்.

இரண்யாக்ஷன் திதியின் மகன். மிக்க வன்மை பெற்றவன். திருமாலைப் பகைத்து, திருமாலின் மனைவியாகிய பூமியைச் சுருட்டி எடுத்துக் கடலில் இட்டுக் கரைத்துவிடலானுன். அதுகண்ட விண்ணவரும் மண்ணவரும் தவித்து வருந்தி திருமாலிடம் முறையிட்டனர். அத்தருணத்தில் நாராயணர் மிகப்பயங்கரமான மலைபோன்ற பன்றியுருவந் தாங்கி, இராணியாக்ஷனை வதைத்து, பூமியைத் தனது கோட்டினுல் எடுத்து பண்டுபோல் நிலை நிறுத்தியருளினுர்.

**மருகன் முருகன்:—**

திருமால் உமையம்மையாரது அண்ணன் என்பது வழக்காதலினுலும், திருமாலினது புதல்வியர்களை முருகவேள் மணந்துகொண்டதனுலும் முருகப்பெருமானை திருமால் மருகன் என்று அடிக்கடி அருணகிரிநாதர் கூறு

கின்றனர். அன்றியும் முருகனை மால்மருகன் என்பது ஒரு உபசார வழக்கேயாம். முருகவேள் மூவருந் தேவரும் வேதமும் ஆகமங்களுங் காணாத முழுமுதற் பொருளாம்.

"அரிப்பிரம ரளப்பரிய பதக்கமல மருள்வாயே"

என்பர் நம் அருணகிரிநாதர். "மாலயனுக்கரியானே" என்பார் மற்றோரிடத்திலே.

அநாதி மூலமாகிய ஆறுமுகப் பெருமானை, "கங்கா புத்திரன்" என்றும், "கார்த்திகை புதல்வன்" என்றும், "தேவ சேனாபதி" என்றும், "திருமால் மருகன்" என்றும் கூறுவது அத்தனையும் உபசாரமேயாம். உண்மையாகாது. உண்மையென்று ஒருவன் கூறினால் அது அறிவின்மையாகும்.

கங்கையின் புதல்வ னென்றுங் கார்த்திகை மைந்த னென்றும்
செங்கண்மால் மருக னென்றுஞ் சேனையின் செல்வ னென்றும்
பங்கயன் முதலோர் தேருப் பரஞ்சுடர் முதல்வன் றன்னை
இங்கிவை பலவுஞ் சொல்வ தேழைமைப் பால தன்றோ.

க்ருபாகரன் கேள்வியினால்:—

முருகப்பெருமான் அருணகிரிநாதருக்குக் குருமூர்த்தியாக வந்து உபதேசித்தனர். அப்பெருமானுடைய அமுதவாக்கினால் ஞான போதகம் போதிக்கக் கேட்ட பெருந்தவ சீலர்.

"அரிதாகிய மெய்ப் பொருளுக் கடியேன்
உரிதா வுபதேச முணர்த்தியவா"

"அறிவு மறி தத்துவமு மபரிமித வித்தைகளு
மறியென இமைப்பொழுதில் வாழ்வித்த வேதியனும்"

சான்றருமற்ற தனிவெளிக்கே வந்து சந்திப்பதே:—

ஞானவெளியிலே சென்று பதியுடன் கூடும் பரமானந்தத்தை இத்தன்மைத்து என்று எடுத்துக் கூறுதற்குச் சாட்சி யாருமில்லை என்பார். தவிர திருவருள் மயமான தன்மையை எடுத்துரைப்பது யார்க்கும் தரமன்று.

"தன்னந் தனிநின் றதுதா னறிய
இன்னம் மொருவர்க் கிசைவிப் பதுவோ"

"அவ்வா றறிவா ரறிகின் றதலால்
எவ்வா றொருவர்க் கிசைவிப் பதுவே"

அந்த வெளியிலே ஒளித்து உரையுணர்வு அவிழ்ந்து சும்மாயிருக்குமாறு சுவாமிகள் தனது மனதை நோக்கி உபதேசிக்கின்ற அழகும் ஈண்டு நினைத்தற்குரியது.

"..................அல்லும் பகலுமில்லாச்
சூதான தற்ற வெளிக்கே யொளித்துச் சும்மாவிருக்கப்
போதா யினி மனமே தெரியா தொரு பூதர்க்குமே"

அந்த வெளியிலே விளைந்த விளைவைப்பற்றி பிறிதோரிடத்திலும் விளம்புகின்றனர்.

"வெளியில் விளைந்த வெறும்பாழைப் பெற்ற வெறுந்தனியைத்
தெளிய விளம்பியவா முகமாறுடைத் தேசிகனே"

சந்தித்தல்–கூடுதல்; இறைவனுடன் இரண்டறக் கலத்தல். அதுவே அத்துவித சித்தாந்தச் சென்னெறிமுத்தி.

"பூதமுங் கரணமும் பொறிக ளைம்புலனும் பொருந்திய
குணங்களோர் மூன்றும்
நாதமுங் கடந்த வெளியிலே நீயும் நானுமாய்
நிற்குநாள் உளதோ" —பட்டினத்தார்.

யான்றன் எனுஞ்சொல்......தோன்றது சத்தியம்:—

யான் வேறு தான் வேறு என்ற துவிதபாவம் போய் அத்துவிதமாகக் காணும் அநுபவத்தைப்பற்றி அதில் கூறியருளுகின்றனர்.

கண்ணொளியும் கதிரொளியுங்கலந்ததுபோல் ஆன்மாவும் பதியும் கலந்து ஒன்றுபடும்.

"யானாகிய என்னை விழுங்கி வெறுந்
தானாய் நிலைநின்றது தற்பரமே"

என்ற அநுபூதியும் இக் கருத்துப்பற்றி யெழுந்ததே.

"யானெனல் காணேன் பூரண நிறைவில் யாதினும் இருந்தபே
[ரொளி நீ
தானென நிற்குஞ் சமத்துற என்னைத் தன்னவ னுக்கவுந் தகுங்
[காண்"

என்பார் தாயுமானுர்.

இக் கந்தரலங்காரத் திருப்பாடல் மிகவும் அநுபவத்தின் தெளிவாக விளங்குவது. ஞான நிறைவுடையார்க்கே இதன் அருமையும் பெருமையும் நன்கு தெரியும்.

"யான்ருன் எனலறலே இன்பநிட்டை என்றருணைக்
கோன்ருன் உரைத்தமொழி கொள்ளாயோ"

என்று அநுபவ ஞானியாகிய தாயுமானப் பெருந்தகையார் இத் திருப்பாடலைப் பொன்போற் போற்றிப் பாராட்டிக் கூறுவதைக் காண்க.

தோன்ருது சத்தியம் என்பதற்கு உண்மைப்பொருள் விளங்காது எனினும் அமையும்.

கருத்துரை

முருகவேள் உபதேசத்தினுல், ஒருவரும் உணராத ஞான வெளியில் அடையும் அத்துவிதமுத்தி, யான் என்ற தன்மையற்றபோது உண்டாகும்.

## 96

தடக்கொற்ற வேண்மயி லேயிடர் தீரத் தனிவிடினீ
வடக்கிற் கிரிக்கப் புறத்துநின் ரேகையின் வட்டமிட்டுக்
கடற்கப் புறத்துங் கதிர்க்கப் புறத்துங் கனகசக்ரத்
திடர்க்கப் புறத்துந் திசைக்கப் புறத்துந் திரிகுவையே.

பதவுரை

தடம் கொற்ற வேள்=விசாலமான வெற்றியையுடைய முருகப் பெருமானது, மயிலே=மயிலே! இடர் தீர தனி விடில்=உலகத்தின் துன்பம் தீரும்பொருட்டு உன்னைத் தனியே எம்பெருமான் செல்ல விடுவாராயின், வடக்கில் கிரிக்கு அப்புறத்தும்=வடதிசை

யில் உள்ள மேருமலைக்கு அப்பாலும், நின் தோகையின் வட்டம் இட்டு=உனது தோகையினால் சுழன்று பறந்து, கடற்கு அப்புறத்தும்=சமுத்திரத்திற்கு அப்பாலும், கதிர்க்கு அப்புறத்தும்=சூரியனுக்கு அப்பாலும், கனக சக்ர திடர்க்கு அப்புறத்தும்=பொன்மயமான சக்ரவாள கிரிக்கு அப்பாலும், திசைக்கு அப்புறத்தும்=எட்டுத் திசைகளுக்கு அப்பாலும், நீ திரிகுவை=நீ உலாவுவாய்.

## விரிவுரை

**தடக்கொற்றவேள்:—**

தடம்-விசாலம்; கொற்றம்-வெற்றி; வேள்—விரும்பப் படுகின்றவர். சூரபன்மன், தேவரையும் மூவரையும் வென்று, ஒப்பாரு மிக்காருமின்றி, எண்ணில்லாத சேனைகளுடன் 1008 அண்டங்களையும் ஆண்டனன். அத்தகைய சூரபன்மனையும், அவனது இளவல்களையும், அசுரசேனைகளையும் அழித்து முருகவேள் அருள்புரிந்தனர். ஆதலினால் "தடக்கொற்ற வேள்" என்றனர்.

**இடர் தீரத் தனிவிடில்:—**

உலகங்களின் இடர் தீர்ப்பது வேலு மயிலுமே. ஆதலினால் மயிலை முருகவேள் இடர்கெட ஏவுவர். மயிலின் பார்வை விழும் இடங்கள் நன்மையடையும். "துங்க அநுகூல பார்வைத் தீர செம்பொன் மயில்" என்பார் திருப்புகழில்.

**வடக்கில் கிரிக்கப்புறத்தும்......திரிகுவையே:—**

பொன்மேரு கிரிக்கு அப்பாலும், பெரும்புறக்கடலுக்கு அப்பாலும், கதிரவனுக்கு அப்பாலும், சக்ரவாளகிரிக்கு அப்பாலும், எண்திசைக்கு அப்பாலும் பறந்து விளையாடும் பண்புடையது ஐயனுடைய மயில். மயிலினது பெருமையை ஆரே அளக்கவல்லார். தேவரும் மூவருங் காணாத முருக வேளுடைய திருவடியை எப்போதுந் தாங்குவது அம் மயிலேயன்றோ?

"யுககோடி முடிவின் மண்டியசண்ட மாருத
முதித்தெழுந்த யனஞ்சவே

ஒருகோடி யண்டரண் டங்களும் பாதாள
லோகமும் பொற்குவடுறும்
வெகுகோடி மலைகளு மடியினி றகர்ந்திரு
விசும்பிற் பறக்க விரிநீர்
வேலை சுவறச்சுரர் நடுக்கங் கொளச்சிறகை
வீசிப்பறக்கு மயிலாம்''

என்பார் மயில் விருத்தத்தில்.

மயிலுக்கு நீலகண்டம் என்றும் ஒரு பேருண்டு. சிவ பெருமானுக்கும் நீலகண்டம். நீலகண்டத்தை நினைவார்க்கு விஷ பயமில்லை.

கருத்துரை

முருகவேளுடைய மயில் எங்கும் பறந்து எல்லா வுலகங்களுக்கும் நேரும் இடரைத் தீர்க்கும்.

## 97

சேலிற் றிகழ்வயற் செங்கோடை வெற்பன் செழுங்கலபி
ஆலித் தநந்தன் பணாமுடி தாக்க வதிர்ந்ததிர்ந்து
காலிற் கிடப்பன மாணிக்க ராசியுங் காசினியைப்
பாலிக்கு மாயனுஞ் சக்ரா யுதமும் பணிலமுமே.

பதவுரை

சேலில் திகழ் வயல்=சேல் மீன்களினால் விளங்குகின்ற வயல்கள் சூழ்ந்த, செங்கோடை வெற்பன்=திருச்செங்கோடு என்னும் திருமலையின்மீது எழுந்தருளியுள்ள முருகப்பெருமானது, செழும் கலபி=செழுமையாகிய மயிற்பறவையானது, ஆலித்து= இனிது ஒலித்து, அநந்தன் பணாமுடி தாக்க=ஆதிசேடனுடைய பணாமகுடங்களைத் தாக்குதலும், அதிர்ந்து அதிர்ந்து=அதனால் மிகவும் ஒலியுண்டாகி, மாணிக்கராசியும்=அப் பணா மகுடங் களிலுள்ள நாகமாணிக்கக் குவியலும், காசினியை பாலிக்கு மாயனும்=அந்த சேடன்மீது பள்ளிகொண்டு உலகைக் காத்தருளு கின்ற திருமாலும், சக்ராயுதமும்=அவனுடைய திருக்கரத்திலுள்ள திருவாழியும், பணிலமும்=சங்கும், காலில் கிடப்பன=அம்மயி லின் திருவடியில் கிடப்பன ஆகும்.

## விரிவுரை

**சேலிற் றிகழ்வயல்:—**

நீர்வளம் பொருந்திய வயலில் சேல்மீன்கள் வாழும். வளமை தங்கிய ஊர்களைப்பற்றிக் கூறுமிடந்தொறும் இங்ஙனம் கண்டு மகிழலாம்.

வயலில் மீன்கள் நன்ருக மகிழ்ந்து திகழ்கின்றன என்றதனுல், அங்கு வாழுகின்ற மக்கள் ஜீவகாருண்யம் உடையவர்கள் என்பது உணர்த்தப்படுகின்றது.

**கலபி ஆலித் தநந்தன் பணமுடி தாக்கி:—**

கலபி-கலாபத்தையுடைய மயில்; சினையாகுபெயர். மயில் ஆலித்து சேடனுடைய ஆயிரம் பணமகுடங்களையும் சிறிது தாக்கியதால் விளைந்த விளைவை அடிகள் கூறுகின்றனர்.

**காலிற்கிடப்பன.........பணிலமுமே:—**

மயில் சேடனைத் தாக்கியதனுல், ஆயிரம் பணமகுடங்களிலுள்ள மாணிக்கங்களும், அவ்வாதிசேடன்மீது அறிதுயில் செய்யும் அரிமுகுந்தனும், அவர் திருக்கரங்களில் இருந்த சங்கு சக்கிரங்களும், மயிலினது திருவடியில் செயலற்றுக் கிடப்பனவாயின.

அன்றியும் மயில் சேடனைத் தாக்கியபோது, தம்மையெல்லாம் வாழ்வித்த தனிப்பெருந்தகையாகிய திருமுருகன் வாகனமென்று கருதி, திருமால் தமது திருக்கரங்களில் தாங்கியிருந்த சங்கு சக்ராயுதத்தை மயிலின் திருவடியில் வைத்துத் தாமும் பணிந்து பக்தி புரிகின்றனர் என்பதும் போதரும். இதனுல் பெருமானுடைய மயிலின் பெருமை இனிது எடுத்து விளக்கப்பெற்றது.

## கருத்துரை

சேடனும், தவன் மணிமுடியில் உள்ள மாணிக்கங்களும், திருமாலும், சங்கு சக்ராயுதமும் முருகவேளின் மயில் வாகனத்தின் திருவடியில் கிடக்கும்.

## 98

கதிதனை யொன்றையுங் காண்கின் றி லேன்கந்த வேன்முருகா
நதிதனை யன்னபொய் வாழ்விலன் பாய்நரம் பாற் பொதிந்த
பொதிதனை யுங்கொண்டு திண்டாடு மாறெனைப் போதவிட்ட
விதிதனை நொந்துநொந் திங்கேயென் றன்மனம் வேகின்றதே.

*பதவுரை*

கந்த=கந்தப்பெருமானே! வேல் முருகா=வேற்படையை யுடைய முருகப்பெருமானே! கதிதனை ஒன்றையும் காண்கின்றிலேன்=முத்திவீட்டையடைதற்குரிய நெறி ஒன்றையேனும் காண் கின்றேனில்லை; நதிதனை அன்ன=ஆற்று நீர்ப் பெருக்குபோல் நிலையற்ற, பொய்வாழ்வில்=பொய்யான உலகவாழ்க்கையிலே, அன்பு ஆய்=பற்றுடையவனாகி, நரம்பால் பொதிந்த=நரம்புகளி னால் கட்டப்பட்ட, பொதிதனையும் கொண்டு=உடம்பாகிய மூட் டையைச் சுமந்துகொண்டு, திண்டாடுமாறு=துன்பப்படுமாறு, எனைப் போதவிட்ட=அடியேனைப் பிறக்கச்செய்த, விதிதனை நொந்து நொந்து=என் விதியினை நினைத்து உள்ளம் நொந்து நொந்து, இங்கு என் மனம் வேகின்றது=அடியேனுடைய மனம் வேதனைப்படுகின்றது.

*விரிவுரை*

கதிதனை யொன்றையுங் காண்கின்றிலேன்:—

கதி-ஆன்மாக்கள் இறுதியில் பற்றுக்கோடாக அடை யத்தக்க முத்தி; அதனையடைதற்குரிய நெறிகள் நான்கு. இந்த நான்கு நெறிகளே கதியைத் தரும். ஆதலினால் நெறி என்பதனை வருவித்துப் பொருள் கொள்ளப்பட்டது. அந்நெறிகளாவன; சரியை, கிரியை, யோகம், ஞானம் என்பன.

(1) சரியை:- இறைவனைப் புறத்தே வைத்து வழிபாடு செய்வது.

(2) கிரியை:- இறைவனை அகத்தேயும் புறத்தேயும் வைத்து வழிபடுவது.

(3) யோகம்:- இறைவனை அகத்தே கண்டு வழி படுவது.

(4) ஞானம்:- எங்கும் இறைவனது காட்சியைக் கண்டு களிப்பது.

இந்த நான்குநெறிகளும் பரகதிக்குச் சோபானமாக விளங்கு வனவாம்.

இந்தப்படி முறையே சென்ருலொழிய பரகதி கிட்டாது. ஞான மேலிட்டார்க்கு எங்கும் எல்லாம் சிவமாகத் தோன் றும். அவர்கள் சதாகால பூஜையாக அசஞ்சலமாகத் திகழ்வார்.

சிலர் இப்படி முறையில் முதற்படியிற் கூடக் கால் வைக்காமல், தம்மைப் பரம ஞானிகளாகச் சிந்தித்துக் கொண்டு, ஞானநிலை யெய்திவிட்டதாகத் கருதிக் கொண்டு, "ஆலயவழிபாடு, விழாக்காண்டல், அர்ச்சனை, ஆராதனை, வழிபாடு முதலியன வேண்டா. அவையெல்லாம் கீழ்ப் படியில் உள்ளார் செய்யத்தக்கவை. பூஜை ஜபதபங்கள் ஒன்றும் மேல்நிலையில் உள்ள எமக்கு வேண்டா" என்பர். ஆனல் நாவிற்கு உருசியான உணவு வேண்டும். கண்ணிற்கு மகிழ்ச்சியான காட்சி வேண்டும். ஏனைய புலன்களுக்குப் போகம் வேண்டும். என்று ஐம்புலன்களுக்கும் விருந்து வைத்துக்கொண்டு திரிவர். என்னே இவர் தம் பேதைமை. திருவருள் முழுவதும் குருந்தமரத்தின் கீழே வாரி வாரி யுண்ட ஞானப்பெருந்தகையாம் எமது மணி வாசகர்,

"ஆமாறுன் திருவடிக்கே அகங்குழையேன் அன்புருகேன்
பூமாலை புனைந்தேத்தேன் புகழ்ந்துரையேன் புத்தேளிர்
கோமான் நின்திருக்கோயில் தூகேன்மெழுகேன் கூத்தாடேன்
சாமாறே விரைகின்றேன் சதுராலே சார்வானே"

என்பார்.

சிவஞானப்பாலை எம்பிராட்டி தந்தருள உண்ட ஞான போனகராம் எம்பந்த நீக்கும் சம்பந்தப் பெருந்தகை,

"நோளு நன்னெஞ்சே நினைகண்டாய் யாரறிவார்
சாநாளும் வாழ்நாளும் சாய்க்காட்டெம் பெருமாற்கே

பூநாளும் தலைசுமப்பப் புகழ்நாளுஞ் செவிகேட்ப
நாநாளும் நவின்றேத்தப் பெறலாமே நல்வினையே''

என்பார். இங்ஙனமே எல்லாப் பெரியோர்களும் கூறுமாறு காண்க. தேகபுத்தி உள்ள வரை வழிபாடு அவசியம் வேண்டற்பாலதாம். தூங்கினவன் கைப்பொருள் தானே நழுவி விடுவதுபோல், தன்னை மறந்தபோது வழிபாடும் தானே நழுவிவிடும். ஆனபடியால் தங்களை ஞானத்தின் சிகரமாக எண்ணிக்கொண்டு பூசை வேண்டாம் என்பாரது வெற்றுரைகளை அறிஞர் ஏற்றுக் கொள்ளார் என்பதை உற்று நோக்குக.

நதிதனை யன்ன பொய்வாழ்வில் அன்பாய்:—

இந்த உலகவாழ்வு நிலைபேறில்லாதது. விரைவில் அழியுந் தன்மையது. இதனை என்றும் நிலையானதாக எண்ணி அழிதல் கூடாது. ஆற்றுப்பெருக்கு மிகப் பெரிதாக வந்து விரைவில் சுருங்கிவிடும். அத்தன்மைத்தே இவ் வாழ்வு. பொய்-நிலையின்றி யழிவது. இத்தகைய அழியு மியல்பினதாகிய வாழ்வைப் பொருளாகக் கருதாது, எந்தை கந்தவேளது திருவடிப்பேற்றை விரும்பித் தவம் புரிய முயலுதல் வேண்டும்.

''காயமாய வீடு மீறிய கூடு நந்து
புற்பு தந்த னிற்கு ரம்பை கொண்டுநாளும்
காசி லாசை தேடி வாழ்வினை நாடி யிந்த்ரி
யப்ரமந்த டித்தலைந்து சிந்தைவேறாய்''—திருப்புகழ்.

நேற்றிருந்த ஒருவன் இன்றில்லை யென்னும் பெருமையே இவ்வுலகில் உள்ளது.

நெருந லுளனொருவன் இன்றில்லை யென்னும்
பெருமை யுடைத்திவ் வுலகு.

நில்லா தவற்றை நிலையின என்றுணரும்
புல்லறி வாண்மை கடை. —திருவள்ளுவர்.

'நேற்றுளார் இன்று மாளா நின்றனர்' —தாயுமானர்.

நரம்பாற் பொதிந்த பொதி:—

பொதி-சுமை; பொதிமாடு என்னும் வழக்கையும் நோக்குக. எழுபத்திராயிரம் நரம்புகளால் நன்ருகப் பிணித்துக் கட்டிய இந்த உடம்பு பெருஞ்சுமையே யாகும். நான்கு பேர் தூக்கும் சுமையாகிய இவ்வுடலை ஒருவன் தூக்கிச் சுமப்பது என்ருல் அது துன்பந்தானே?

விடக்கே பருந்தின் விருந்தே கமண்டல வீணனிட்ட
முடக்கே புழுவந் துறையிட மேஙல முற்றுமிலாச்
சடக்கே கருவி தளர்ந்து விட்டால்பெற்ற தாயுந்தொடாத்
தொடக்கே யுனேச்சுமந் தேன்நின்னின் ஏது சுகமெனக்கே.

—பட்டினத்தார்.

திண்டாடுமாறெனப் போதவிட்ட:—

முன்செய்த வினை பக்குவப்பட்டு பிராரப்தமாகி இவ்வுடம்பாக வந்தது. "வினைப்போகமே ஒரு தேகங் கண்டாய்" என்பார் திருவெண்காடர். விதியின் வண்ணத்தால் இந்த உடம்பு வந்தது. விதி என்ற சொல்லுக்குப் பிரமனென்றும் பொருள் கொள்ளலாம்.

இறைவனே! அடியேனுக்கு இந்த உடம்பைத் தந்து திண்டாட விட்ட பிரமனை நொந்து மனம் கவல்கின்றேன் என்பார்.

"வேதனை வளர்த்திடச் சதுர்வேதவஞ்சன்
விதித்தானிவ் வல்லலெல்லாம்
வீழும் படிக்குனது மவுன மந்த்ராதிக்ய
வித்தையை வியந்தருள்வையோ" —தாயுமானர்.

என்றன் மனம் வேகின்றதே:—

"விதியை நொந்து உள்ளம் வருந்துகின்றது" என்று அடிகள் கூறும் இந்த சொற்ருெடர் கருங்கல்லேயும் கரையச் செய்யும்; அத்துணை உருக்கமாக விளங்குகின்றது.

*கருத்துரை*

கந்தவேல் முருகா! பரகதிக்குரிய நெறியை நாடாமல், பொய் வாழ்வை நம்பியுழலும் அடியேனைக் காத்தருள்வீர்.

**99**

**காவிக் கமலக் கழலுடன் சேர்த்தெனைக் காத்தருளாய்**
**தூவிக் குலமயில் வாகன னேதுணை யேதுமின்றித்**
**தாவிப் படரக் கொழுகொம் பிலாத தனிக்கொடிபோல்**
**பாவித் தனிமனந் தள்ளாடி வாடிப் பதைக்கின்றதே.**

*பதவுரை*

தூவி குலமயில் வாகனனே=இறகுகளுடன் கூடிய மேன்மையான மயிலை வாகனமாக உடையவரே! துணை ஏதும் இன்றி=உதவி ஒரு சிறிதும் இல்லாமல், தாவி படர=பாய்ந்து படர்வதற்கு, கொழு கொம்பு இலாத=கொள் கொம்பு இல்லாத, தனி கொடி போல்=தனித்த கொடியைப் போல, பாவி தனி மனம்=பாவியேனுடைய துணையற்ற மனமானது, தள்ளாடி வாடி பதைக்கின்றது=தளர்ந்து வாட்டமுற்றுத் துடிக்கின்றது; (ஆதலினால்) காவி கமல கழல் உடன் சேர்த்து=தேவரீருடைய சிறந்த தாமரை போன்ற திருவடியுடன் சேர்த்து, எனை காத்து அருளாய்=அடியேனைக் காப்பாற்றுவீர்.

*விரிவுரை*

**காவிக்கமலக் கழலுடன் சேர்த்தெனைக் காத்தருளாய்:—**

இறுதியில் ஆன்மா இறைவன் திருவடி சேருதலே முத்திப்பேருகும்.

புறச்சமய நெறி நின்று மகச் சமயம் புக்கும்
  புகன் மிருதி வழியுழன்றும் புகலுமாச்சிரம
அறத்துறைக ளவையடைந்து மருந்தவங்கள் புரிந்தும்
  அருங்கலைகள் பல தெரிந்து மாரணங்கள் படித்தும்

சிறப்புடைய புராணங்க ளுணர்ந்தும் வேத
சிரப்பொருளை மிகத் தெளிந்துஞ் சென்றால் சைவத்
திறத்தடைவ ரிதிற் சரியை கிரியா யோகஞ்
செலுத்தியபின் ஞானத்தால் சிவனடியைச் சேர்வர்.
—சிவஞானசித்தியார்.

அருணகிரிநாத சுவாமிகள் அநேக இடங்களில் திருவடிப் பேற்றை இறைவன்பால் வேண்டியுள்ளனர்.

"உந்தியென்கின்ற மடு விழுவேனை
உன்சிலம்புங் கனக தண்டையுங் கிண்கிணியு
மொண் கடம்பும்புனையு மடிசேராய்"

"செறியுமிரு வினைகரண மருவுபுல னெழியவுயர்
திருவடியி லணுகவர மருள்வாயே"

இறைவனுடைய திருவடியின் இன்பத்தை நன்குணர்ந்த சொல்லரசர் நமக்குத் தெரிந்த இன்பங்களை உவமைகாட்டி ஒருவாறு புலப்படுத்துகின்றார்.

மாசில் வீணையு மாலை மதியமும்
வீசு தென்றலும் வீங்கிள வேனிலும்
மூசு வண்டறை பொய்கையும் போன்றதே
ஈச னெந்தை யிணையடி நீழலே.

இறைவன் திருவடி செம்மையுடையது ஆதலின் "காவிக் கமலக் கழல்" என்றனர். "செம்மலர் நோன்றாள்" என்பது மெய்கண்ட சூத்திரம்.

இறைவன் திருவடியில் வீரக்கழல் விளங்கும்; ஆதலின் திருவடியைக் கழல் என்றனர். "அரன் கழல் செலுமே" என்ற மெய்கண்ட சூத்திரத்தையுங் காண்க. "தாப சபலமற வந்து நின்கழல் பெறுவேனோ" என்பார் திருப்புகழில்.

உயிர்கள் எல்லாவற்றையுங் காத்தருள் புரிவதன் பொருட்டு எழுந்தருளிய மூர்த்தம் முருக மூர்த்தம். அநுக்ரகத்திற்கென்றே வந்த அவசரம். ஆதலின் அவரே காக்கக் கடப்பாடுடையவர்.

"உனைத் துணை தேடு மடியேனை சுகப்படவேவை
கடனுகு மிதுக் கனமாகு முருகோனே" —திருப்புகழ்.

"காக்கக் கடவியநீ காவா திருந்தக்கால்
ஆர்க்குப் பரமாம் அறுமுகவா"

ஆனபடியால் "காத்தருள்வாய்" என்று உரிமையுடன் அடிகள் வேண்டி நிற்கின்றனர்.

தூவிக் குலமயில் வாகனனே:—தூவி-பறவைகளின் இறகு.

"தூவிகள் நிற் குஞ்சாலிவளைக் குஞ்சோலை சிறக்கும் புலியூரா"

"அனிச்சமும் அன்னத்தின் தூவியும் மாதர்
அடிக்கு நெருஞ்சிப்பழம்"

என்ற இடங்களிலும் தூவியென்ற சொல் ஆளப்பட்டிருப்பதைக் காண்க. ஏனைய மயில்களினின்றும் வேறு பிரித்தற் பொருட்டு, "குலமயில்" என்றனர்.

துணையேதுமின்றி:—

இறைவனைத் தவிர வேறு ஆன்மாக்களுக்குத் துணையில்லை. துணையிலியைத் துணையாக வுடையார்க்குத் துன்பம் எய்தாது. இறைவன் பொதுவாக எல்லா வுயிர்களுக்கும் துணையாக இருக்கின்றுன். அவ்வாறுள்ள நிலைக்கு "அருந்துணை" யென்று பேர். பற்றறப்பற்றிப் பொது நீக்கித் தொழும் அடியவர்க்குச் சிறப்புத் துணையாக விளங்குவன். அவ்வாறுள்ள நிலைக்கு "பெருந்துணை" யென்று பேர். இதனை அப்பமூர்த்திகள் கூறுமாறு காண்க.

"அருந்துணையை அடியார்தம் அல்லல் தீர்க்கும்
அருமருந்தை அகன் ஞாலத் தகத்துள் தோன்றி
வருந்துணையுஞ் சுற்றமும் பற்றும் விட்டு
வான்புலன்கள் அகத்தடக்கி மடவாரோடும்
பொருந்தணைமேல் வரும்பயனைப் போக மாற்றிப்
பொது நீங்கித் தனைநினைய வல்லார்க் கென்றும்
பெருந்துணையைப் பெரும்பற்றப் புலியூரானைப்
பேசாத நாளெல்லாம் பிறவா நாளே"

மனைவி மக்கள் சுற்றம் நண்பர் முதலியோர் உடம்புக்கு ஓரளவு மட்டுந் துணையாவர். கந்தப் பெருமானே உயிர்க்குயிராய் விளங்கி எப்போதும் உயிர்த்துணையாக நின்று உதவுபவர்.

**தாவிப்படரக் கொழுகொம்பிலாத தனிக்கொடி:—**

கொடி எப்போதும் ஒரு கொழுகொம்பைப் பற்றியே படரும். அதுபோல் இந்த உயிர்க்குக் கொழுகொம்பாக இருப்பவன் இறைவன். இறைவனைப் பற்றிய உயிர்கள் ஒருபோதும் கலங்கமாட்டா. கொழுகொம்பைப் பற்ருத கொடி காற்றினுல் துன்புறுவதுபோல் இறைவனைப் பற்ருத உயிர்கள் பலதுன்பமுழன்று கலங்கும். பரமனைப் பற்றியவர் பேசும் உறுதியுரைகளைக் காண்க.

தப்பில் வானந் தரணி கம்பிக்கிலென்
ஒப்பில் வேந்த ரொருங்குடன் சீறிலென்
செப்பமாஞ் சேறைச் செந்நெறி மேவிய
அப்பனுருளர் அஞ்சுவ தென்னுக்கே.

வானந் துளங்கிலென் மண்கம்ப மாகிலென் மால்வரையும்
தானந்துளங்கித் தலைதடுமாறி லென் தண்கடலும்
மீனம் படிலென் விரிசுடர் வீழிலென் வேலைநஞ்சுண்
டுன மொன்றில்லா ஒருவனுக் காட்பட்ட உத்தமர்க்கே.

**பாவித்தனிமனம் நள்ளாடி வாடிப் பதைக்கின்றதே :—**

ஆன்மாக்களுக்குப் பற்றுக்கோடான பரம் பொருள் முருகன். "எம்பெருமானே! தேவரீரைப் பற்ருமையால் பாவிமனம் துணையின்றி பதைக்கின்றது. ஆதலினுல் உம்மைப் பற்றறப் பற்றலானேன்" என்று மிகமிக உருக்கமாக சுவாமிகள் இந்தத் திருப்பாடலில் உரைக்கின்றனர்.

"கொம்பரில்லாக் கொடிபோல் அலமந்தனன் கோமளமே
வெம்புகின்றேனை விடுதிகண்டாய்" —திருவாசகம்.

கருத்துரை

மயில்வாகனரே! அடியேனுடைய மனம் துணையின்றி தவிக்கின்றது. உமது திருவடியில் சேர்த்துக் காத்தருளல் வேண்டும்.

## 100

இடுதலைச் சற்றுங் கருதேனைப் போதமி லேனையன்பாற்
கெடுதலி லாத்தொண் டரிற்கூட் டியவா கிரௌஞ்ச வெற்பை
அடுதலைச் சாதித்த வேலோன் பிறவி யறவிச்சிறை
விடுதலைப் பட்டது விட்டது பாச வினைவிலங்கே.

### பதவுரை

கிரௌஞ்ச வெற்பை = கிரவுஞ்ச மலையை, அடுதலை சாதித்த வேலோன் = அழித்தலைச் செய்து முடித்த வேலாயுதக் கடவுள், இடுதலை சற்றும் கருதேனை = வறியவர்க்குத் தருவதைச் சிறிதும் எண்ணாதவனும், போதம் இலேனை = அறிவு இல்லாதவனுமாகிய அடியேனை, அன்பால் = மிகுந்த அன்பினாலே, கெடுதல் இலா தொண்டரில் = தீமையில்லாத திருத்தொண்டருடன், கூட்டியவா = சேர்த்தருளிய தன்மை என்ன ஆச்சரியம்! (அவ்வண்ணம் அடியாருடன் சேர்ந்ததனால்) பிறவி அற = பிறவித்துன்பம் அற்றுப்போக, இச்சிறை விடுதலைப்பட்டது = இந்த உடம்பாகிய சிறைவாசம் விடுதலையாயிற்று; பாச வினை விலங்கு = பாசத்தால் வந்த வினையாகிய விலங்கு, விட்டது = துகள்பட்டொழிந்தது.

### விரிவுரை

**இடுதலைச் சற்றும் கருதேனை :—**

இடுதல் – இல்லையென்பார்க்கு இல்லையென்னாது ஈதல். ஈகையே தலையாய குணம். இரக்க முடையவர்க்கே இறைவன் இரங்குவான். இரக்கமும் ஈகையும் இல்லாத வெறும் இறைவழிபாடு மட்டும் இருந்தால் போதாது. அடிகள் கந்தரநுபூதியில், "கெடுவாய் மனனே கதிகேள் கரவா திடுவாய் வடிவேல் இறைதாள் நினைவாய்" என்று அருளிச் செய்கின்றார்.

"இட்டார் பெரியோர் இடாதார் இழிகுலத்தோர்
பட்டாங்கில் உள்ளபடி."

என்பார் ஔவைப் பிராட்டியார்,

முருகனருள் பெறுவதற்கு வழிகள் நான்குள என்று கூறியருளிய 16வது பாடலிலும் நான்கில் ஒன்று "இடுதல்" என்று கூறியருளினர்.

சிறிதளவாவது வறியவர்க்கு ஈந்து அவர்களது இன்னலை நீக்கி மகிழ்வித்து அவர்களது முகமலர்ச்சியைக் கண்டு நாம் மகிழ்தல் வேண்டும்.

ஈத்துவக்கு மின்ப மறியார்கொல் தாமுடைமை
வைத்திழக்கும் வன்கணவர். —திருவள்ளுவர்.

போதமிலேனை :—

போதம் - அறிவு. அறிவின் பண்பு இரக்கம். இரக்க மில்லாதவர் அறிவில்லாதவரே.

அறிவினு ளுகுவ துண்டோ பிறிதினேய்
தன்னேய்போல் போற்ருக் கடை. —திருவள்ளுவர்.

மனிதன் பெறுதற்குரிய பேறுகள் எல்லாவற்றிலும் தலையாயது அறிவுப் பேறு ஒன்றே. அறிவாலேயே அறிவு வடிவாய இறைவனை யறிதல் வேண்டும்.

"அறிவாலறிந்து னிருதாளிறைஞ்சும்
அடியாரிடைஞ்சல் களைவோனே"

"அறிவை யறிபவ ரறியு மின்பந்தனை"

"அறிவினிற் சென்று செருகுந் தடந் தெளிதர"

என்ற திருப்புகழடிகளை யெல்லாம் உய்த்துணர்க.

கேடுதலிலாத் தொண்டரிற் கூட்டியவா : –

தொண்டரிடம் எல்லாம் நிறைந்திருக்கும்; ஆனுல் கெடுதல் என்பது மட்டும் அவர்கள்பாலிராது. தொண்டர் தம் பெருமை சொல்லுதற்கு அரியது.

சிவபெருமானே வாதவூரடிகளை அடியாரிற் கூட்டி வைத்தருளினர்.

"செத்துப் போயரு நரகிடை விழ்வதற் கொருப்படுகின்றேனை
அத்த னுண்டுதன் னடியரிற் கூட்டிய அதிசயங் கண்டாமே"

தொண்டர்களிடத்தில் இறைவன் வீற்றிருப்பன் என்பதும் தொண்டர் இறைவனைக் கண்டு களிப்பர் என்பதும் ஒருதலை.

"தொண்டர்க ளிடத்திலோ நீ வீற்றிருப்பது
தொழுப்பனேற் குளவு புகலாய்" —தாயுமானுர்.

"தொண்டராற் காணப் பெறுவோனே" —திருப்புகழ்

பிறவியற இச்சிறை விடுதலைப்பட்டது :—

பிறவித்துன்பம் நீங்கிவிடுங்கால், மீண்டும் ஒருடம்பு வரப்பெருமையால் இச் சிறை விடுதலையாயிற்று என்ருர். சிறையில் உள்ளார் தம் விருப்பப்படி எங்குஞ் செல்ல இயலாது. அதுபோல் உடம்பில் உள்ளாரும் நினைத்த உலகிற்கு ஏகவொண்ணுது. புண்ணியம் பாவம் என்னும் இரு கயிற்றினுல் கட்டி வைத்துளது.

"அறம்பாவ மென்னும் அருங்கயிற்ருல் கட்டி
புறந்தோல் போர்த்தெங்கும் புழுவழுக்கு மூடி
மலஞ்சோரு மொன்பது வாயிற் குடிலை" —திருவாசகம்.

அருணகிரிநாதருக்கு உடம்பாகிய சிறையை முருகன் விடுவித்தருளினுர்.

"ஏழையி னிரட்டைவினை யாயதொ ருடற்சிறையி
ராமல்விடு வித்தருள் நியாயக்காரனும்" —வகுப்பு.

விட்டது பாச வினை விலங்கே :—

பாசம் - மலம். மலமாயாகன்மங்களால் வந்த வினையாகிய விலங்கு துகள்பட்டது. "ஆசா நிகளந் துகளாயினபின் பேசா அநுபூதி பிறந்ததுவே" என்பார் கந்தரநுபூதியில்.

கந்தரலங்காரத்தின் நூருவது பாடலாகிய இந்த இறுதிப் பாடல் பிறவிநோயையும் உடற்சிறையையும் நீக்கி, வினையாகிய விலங்கையறுத்து, ஆனந்த வீட்டையருளவல்லதாக அமைந்துள்ளது.

### கருத்துரை

முருகவேள் அடியேனை அடியாருடன் கூட்டி, பிறவியை நீக்கி, உடற்சிறையை விலக்கி, வினைவிலங்கை அறுத்தெறிந்து பரகதியை வழங்கினார்.

## 101

சலங்காணும் வேந்தர் தமக்குமஞ்சார்யமன் சண்டைக்கஞ்சார்
துலங்கா நரகக் குழியணு கார்துட்ட நோயணுகார்
கலங்கார் புலிக்குங் கரடிக்கும் யானைக்கும் கந்தனன்னூல்
அலங்கார நூற்று ளொருகவி தான்கற் றறிந்தவரே.

### பதவுரை

கந்தன் நன்னூல்=கந்தப்பெருமானது பெருமையைக் கூறும் நல்ல நூலாகிய, அலங்காரம்=கந்தரலங்காரமாகிய இத் திருமுறையில், நூற்றுள் ஒரு கவிதான்=நூறு திருப்பாடல்களுள் ஒரு திருப்பாடலையேனும், கற்று அறிந்தவர்=படித்து அதன் மெய்ப் பொருளை உணர்ந்தவர்கள், சலம் காணும் வேந்தர் தமக்கும் அஞ்சார்= கோபத்தைக் கொள்கின்ற அரசர்களுக்கும் அஞ்சமாட்டார்கள், யமன் சண்டைக்கு அஞ்சார்=இயமனுடைய போருக்கும் அஞ்சமாட்டார்கள், துலங்கா நரகக்குழி அணுகார்=இருண்ட நரகக் குழியை அடையமாட்டார்கள், துட்டநோய் அணுகார்=கொடிய நோய்களால் துன்பமுறமாட்டார்கள், புலிக்கும் கரடிக்கும் யானைக்கும்=புலி கரடி யானை முதலிய கொடிய விலங்கினங்களுக்கும், கலங்கார்=மனங் கலங்கமாட்டார்கள்.

### விரிவுரை

சலங்காணும் வேந்தர் தமக்கு மஞ்சார்:—

சலம்–கோபம். அரசர்கட்குக் கோபம் விரைவில் வரும். வன்மையும் அதிகாரத் தன்மையும் உடையவராதலின் சீற்றம் வந்தபோது விரைந்து தண்டிப்பர். அதிகமாக அணுகாமலும் அதிகமாக நீங்காமலும் தீக்காய்வார் போல அரசனைச் சேர்ந்து ஒழுகுவோர் இருத்தல் வேண்டும் என்பார் திருவள்ளுவ தேவர்.

அகலா தணுகாது தீக்காய்வார் போல்க
இகல்வேந்தர்ச் சேர்ந்தொழுகு வார்.

"கடிதின் வெகுளுந் தன்மைய ரென்பது தோன்ற, 'இகல் வேந்தர்' என்ருர்" என்று உரை கூறுவர் பரிமேலழகர். அத்தகைய ஆட்சியும் மாட்சியும் படையும் உடைய வேந்தனுக்கும் கந்தவேளடியார் அஞ்சிடார்கள்.

யமன் சண்டைக் கஞ்சார்:—

புவியாளும் பூபாலருக்கு அஞ்சிடார் என்பது சரி. எல்லோரையும் அடக்கும் இயமனுக்கோ எனின், அவனுக்கும் அஞ்சார். யார்? கந்தரலங்காரத்தைப் படித்து மெய்ப் பொருளை யுணர்ந்தவர். "யமனுக்கஞ்சார்" என்று கூருமல் "யமன் சண்டைக் கஞ்சார்" என்றதனுல் யமன் சினந்து தனது திரிசூலம் தண்டு முதலிய ஆயுதங்களுடன் வந்து போர் புரிந்தாலும் அந்தக் கடும் போருக்கும் அஞ்சிடார்.

துலங்கா நரகக் குழியணுகார்:—

துலங்கா நரகம்—இருள் மிக்க நரகம், மிக்க பாவஞ் செய்தவரை யமன் நரகத்தில் வீழ்த்தித் துன்புறுத்துவன். நரகத்தைத் திருவள்ளுவர் இருளென்றே கூறுவர்.

அடக்கம் அமரருள் உய்க்கும் அடங்காமை
ஆரிருள் உய்த்துவிடும்.

கும்பிபாகம், அசிபத்ரம், ரௌரவம் முதலிய நரகங்கள் பல. மிக்க வேதனையுள்ள இடம் ஆதலின் காரைக்காலம்மையார், 'கடுநரகம் கைகழன்ரேம்' என்பர்.

நரக வேதனையைப் பற்றி அருணகிரிநாத சுவாமிகள் ஒரு திருப்புகழில் கூறுகின்றனர்.

"புரியட் டகமிட் டதுகட் டியிறுக்
கடிகுத் தெனஅச் சம்விளைத் தலறப்
புரள்வித் துவருத் திமணற் சொரிவித் தனலூடே

தவனப் படவிட் டுயிர்செக் கிலரைத்
 தணிபற் களுதிர்த் தெரிசெப் புருவைத்
 தழுவப் பணிமுட் களில்கட் டியிசித் திடவாய்கண்
சலனப் படஎற் றியிறைச் சியறுத்
 தயில்வித் துமுரித் துநெரித் துளையத்
 தளையிட்டுவருத் தும்யமப் ரகரத் துயர்தீராய்''

நரகத்திலே விழுவோர் இன்னர் என்பது பற்றியுங் கூறு கின்றனர்.

''அரகரா எனுமூடர் திருவெணீ றிடா மூடர்
 அடிகள் பூசி யாமூடர் கரையேற
அறிவுநூல் கலா மூடர் நெறியிலே நிலா மூடர்
 அறம் விசாரியா மூடர் நரகேழிற்
புரள விழ்வர்''

நரகம் உண்டோ இலயோ என்று ஐயுறுவார்க்கு நம் அடிகள் அறிவுறுத்துவான் கருதி கந்தரந்தாதியில் பின்வரு மாறு கூறுகின்றனர்.

''தியங்காப் பொறியுண் டெனுந் தனுத்தீதலு மேதியையூர்
தியங்காப் பொறியுண் டவமிலியே யென்று செப்பலுஞ்
 சத்தியம்''

பொருள்:—தியங்கா=மயங்காத, பொறி உண்டு எனும்= ஐம்பொறிகளையுடைய, தனு தீதலும்=உடம்பு வேகின்றதும், மேதியை ஊர்தி=எருமைக்கடாவை வாகனமாகவுடைய நமன், அங்கா=வாயைத் திறவென்றும், பொறியுண்=யான் செய்த பாவத்திற்காகத் தீயைத் தின்பாய், தவமிலியே என்று செப்பலும் சத்தியம்=தவஞ் செய்யாத பாவியே என்று கூறுதலும் சத்திய மாகும்.

*கந்தரலங்காரத்தை ஓதி கந்தக் கடவுளைக் கருதி வழி படுவோர் நரகிடை புகுதார்.*

துட்டநோயனுகார்:—

நோய் மூவகைப்படும். 1. உடல்நோய், 2. உளநோய். 3. உயிர்நோய். உடல்நோய்:- தொழுநோய், க்ஷயநோய்,

இருமல், காசம் முதலியன. உளநோய்-காமநோய், ஆசை நோய், கோபநோய் முதலியன. உயிர்நோய்- பிறவிநோய். இந்த நோய்கள் யாவும் கந்தரலங்காரம் ஓதுவார்க்கு உண்டாகா.

**கலங்கார் புலிக்குங் கரடிக்கும் யானைக்கும்:—**

கந்தரலங்காரம் ஓதுவாரைக் கொடிய விலங்குகளும் பணிந்து தணிந்து ஏவல் புரியும்.

**அலங்கார நூற்றுள் ஒரு கவிதான் கற்றறிந்தவரே:—**

கந்தரலங்காரம் மிகவும் விழுமிய நூல்; நாடோறும் பாராயணத்திற்கு ஏற்ற நூல். அன்பர்கள் அனைவரும் பக்தியுடன் ஓதி உய்வு பெறுவார்களாக. இதன் சிறப்புப் பற்றி "ஒரு கவிதான்" என்றனர்.

### கருத்துரை

கந்தரலங்காரத்தை ஓதுவார் அரசனுக்கும் நமனுக்கும் அஞ்சார்; நரகிடையணுகார்; கொடிய விலங்கினால் துன்ப மெய்தார்.

## 102

திருவடி யுந்தண்டை யுஞ்சிலம் புஞ்சிலம் பூடுருவப்
பொருவடி வேலுங் கடம்புந் தடம்புய மாறிரண்டும்
மருவடி வான வதனங்க ளாறு மலர்க்கண்களுங்
குருவடி வாய்வந்தென் னுள்ளங் குளிரக் குதிகொண்டவே.

### பதவுரை

திருவடியும்=முருகப்பெருமானுடைய திருவடிகளும், தண்டையும்=அத் திருவடித்தாமரையில் விளங்கும் மணிகள் பதித்த தண்டையும், சிலம்பும்=உள்ளே மணிகள் ஒலிக்கும் சிலம்பும், சிலம்பு ஊடு உருவ பொரு வடிவேலும்=கிரவுஞ்ச மலையின் நடுவே தொளைத்துப் போர் செய்த கூர்மையான வேலாயுதமும், கடம்பும்=கடப்ப மலர்மாலையும், தடம்புயம் ஆறிரண்டும்=அம் மாலைகளுடன் கூடிய விசாலமான பன்னிரு புயங்களும், மருவடிவு ஆன=பொருந்திய அழகுமிக்க, வதனங்கள் ஆறும்=ஆறு

திருமுகங்களும், குருவடிவாய் வந்து=குருமூர்த்தமாக எழுந் தருளிவந்து, என் உள்ளம் குளிர குதிகொண்டவே=அடியே னுடைய மனங் குளிருமாறு ஆனந்தக் கூத்தாடின.

## விரிவுரை

திருவடியும்:—

பிறவிப் பெருங்கடலைக் கடக்கச் செய்யும் ஓடம் முருக வேளுடைய திருவடியேயாகும். திருவடியே அடியார்க்கு வேண்டியதுமாம்.

"உறவுமுறை மனைவிமக வெனுமலையி லெனதிதய
உருவுடைய மலினபவ ஜலராசி ஏறவிடும்
உறுபுணையும்"

என்பார் சீர்பாத வகுப்பில்.

யான் எனது எனும் இரு பற்றே பிறவிக்குக் காரணம். யான்-அகப்பற்று; எனது-புறப்பற்று. அகங்காரம் மமகாரம் என்பார் வடநூலார். இந்த இரு பற்றுக்களும் தொலைந்தால் பிறவிப்பிணி தொலையும். "அற்றது பற்றெனில் உற்றது வீடு" என்பர் நம்மாழ்வார்.

இந்த இரண்டும் அற்ற இடமே இறைவனுக்கு இரண்டு திருவடி.

"யானெனதென் றற்ற இடமே திருவடியா"
—கந்தர் கலிவெண்பா.

தண்டையும்:—

எம்பிரானுடைய இரண்டு திருவடிகளிலும் நவமணிகள் இழைத்த தண்டைகள் விளங்கும். குழந்தைகட்கே தண்டை யணிவது. முருகவேள் என்றுமகலாத இளம் பூரணன். ஆதலின் அவருடைய திருவடிகளில் தண்டைகள் மறைகளின் ஒலியை ஒலிக்கும்.

"• * அணிமணித் தண்டையார்க்கும்
செழுமல ரடியுங் கண்டான் அவன் தவம் செப்பற் பாற்றே"
—கந்தபுராணம்.

"தண்டை சூழ் கிண்கிணிப் புண்டரீகந் தனைத்
தந்து நீ யன்பு வைத் தருள்வாயே"

என்று திருப்புகழ்ப் பாடல் ஒன்றில் அடிகள் கூறி வேண்டு கின்றனர்.

சிலம்பும் :—

செவ்வேட்பரமனுடைய திருவடிகளில் விளங்கும் திரு வாபரணங்களில் ஒன்று சிலம்பு. சிலம்புக்குள் முத்து, இரத்தினமணி முதலியன இருந்து இனிய நாதத்தை யுண்டு பண்ணும்.

"இனிய நாத சிலம்பு புலம்பிடும்
அருண ஆடக கிண்கிணி தங்கிய அடிதாராய்"
—திருப்புகழ்.

சிலம்பூடுருவப் பொரு வடிவேலும் :—

சிலம்பு—மலை. வீரவாகு தேவர் முதலியோரை மாயையால் மயக்கித் தாரகனுக்குத் துணைபுரிந்த கிரவுஞ்ச மலை. எம் பெருமானுடைய வேலாயுதம் அம் மலையைத் தொளைத்து அழித்து வீரவாகு முதலியோர்க்கு அருள் புரிந்தது. பொரு—போர் புரிந்த; வடி—கூர்மை.

தடம்புயம் ஆறிரண்டும் :—

சிறந்த வீரர்கட்குப் புயம் விசாலமாகத் திகழும். எல்லாவற்றையும் தாங்குவது புயமேயாகும். வலிமையும் தோளிலேதான் உளது; அதனாலன்றோ "தோள்வலி கூறுவோர்க்கே" என்பார் கம்பநாடர்.

மருவடிவான வதனங்களாறும் :—

மருவுதல்-பொருந்துதல்! வடிவு—அழகு; பொருந்திய அழகின் மிக்கது பெருமானுடைய திருமுகம். மரு-மணம், ஞானமணம் வீசுகின்ற திருமுகம் எனினும் அமையும்.

**மலர்க் கண்களும் :—**

தாமரை மலர் போன்ற கண்கள்; தாமரை மலரில் தேன் துளிக்கும்; பெருமானுடைய திருக் கண்களில் அருள் வழியும்.

"மறுவறு கடலென மருவுப னிருவிழி
வழிந்த அருளே பொழிந்த தொருபால்" —திருவகுப்பு.

**குருவடிவாய் வந்தென் னுள்ளங் குளிரக் குதிகொண்டவே :—**

பக்குவ காலத்தில் (இருவினையொப்பு மலபரிபாகம் எய்துவது) இறைவன் குருமூர்த்தமாக வெளிப்படுவான்.

அருணகிரிநாதருக்கு ஆறுமுகப்பெருமான் திருவருணையிலே குருநாதராக எழுந்தருளி மௌனமறையை உபதேசித்து ஆட்கொண்டனர்.

"பரம மாயையி னேர்மையை யாவரு
மறியொணாததை நீ குருவாயிது
பகருமாறு செய்தாய் முதல் நாளுறு பயனேதான்"

"எட்டிரண்டு மறியாத என் செவியி
லெட்டிரண்டு மிதுவா மிலிங்கமென
எட்டிரண்டும் வெளியா மொழிந்தகுரு முருகோனே"

ஆறுமுகப்பெருமான் அருணகிரிநாதருக்குத் திருநடன கோலம் பல தலங்களில் காட்டியருளினர்.

"கொண்ட நடனம் பதஞ் செந்திலிலு மென்றன்முன்
கொஞ்சி நடனங்கொளுங் கந்தவேளே"

அதனால் "குதி கொண்டவே" என்று கூறினர்.

கருத்துரை

முருகப்பெருமானுடைய திருவடி முதலியன குருவடிவாகத் தோன்றி அடியேனுடைய உள்ளத்தைக் குளிர்வித்தன.

## 103

இராப்பக லற்ற இடங்காட்டி யானிருந்தே துதிக்கக்
குராப்புனை தண்டையந் தாளரு ளாய்கரி கூப்பிட்ட நாள்
கராப்படக் கொன்றக் கரிபோற்ற நின்ற கடவுள்மெச்சும்
பாரக்ரம வேல நிருதசங் கார பயங்கரனே.

### பதவுரை

கரி கூப்பிட்டநாள் = கஜேந்திரன் என்னும் யானையானது (ஆதிமூலமே என்று) அழைத்த நாளில், கராபட கொன்று = அந்த யானையைப் பற்றிய முதலை அழியும்படி கொன்று, அ கரிபோற்ற நின்ற கடவுள் = அந்த யானையரசு போற்றி செய்யுமாறு அதன்முன் சென்று நின்று காட்சி தந்தருளிய திருமால், மெச்சும் = பாராட்டுகின்ற, பராக்ரம = ஆற்றலை யுடையவரே! வேல = வேலாயுதரே! நிருத சங்கார = அசுரர்களை அழித்தவரே! பயங்கரனே = அந்த இராக்கதர்களுக்கு அச்சத்தை விளைவிப்பவரே! இராப் பகல் அற்ற இடம் காட்டி = இரவு பகல் என்ற நினைப்பு மறப்பு (கேவல சகலம்) இல்லாத அருள் நிலையைக் காண்பித்து, யான் இருந்தே துதிக்க = அடியேன் அந்த நிருவிகற்பநிலையில் இருந்து தேவரீரைத் துதியாமல் துதிக்க, குரா புனு தண்டை அம் தாள் அருளாய் = குரா மலரையும் தண்டையையும் அணிந்த அழகிய திருவடியை அடியேனுக்குத் தந்தருள்வீர்.

### விரிவுரை

**இராப்பகலற்ற இடங் காட்டி :—**

இரவுபகலற்ற நிலைதான் உயர்ந்த நிலை. இதனை அருணகிரிநாதசுவாமிகள் பற்பல இடங்களிற் பேசுகின்றனர். அந்த நிலையைப் பெறப் பெரிதும் அவாவினர். ஆறுமுகக் கடவுள் அவருக்கு அதனைப் பூரணமாக அருள் புரிந்தனர்.

நினைப்பு மறப்பு மாறி மாறி நமக்கு வந்துகொண்டே இருக்கின்றன. அதனாலேயே எல்லாத் துன்பங்களும் எய்துகின்றன.

இரவுபகலற்ற அந்தப் பெருநிலையை வேலுடை விமலனே தான் அருள் புரியவேணும். அவன் அருளினாலன்றி அடையலாகாது.

"இதமகிதம் விட்டுருகி இரவுபக லற்றவிடம்
எனதற இருக்கைபுரி யோகப்புரா தனனும்"

என்பார் திருவகுப்பில்,

சினந்தனையற்றுப் பிரியமுந் தானற்றுச் செய்கையற்று
நினைந்தது மற்று நினையா மையுமற்று நிர்ச்சிந்தனாய்த்
தனந்தனி யேயிருந் தானந்த நித்திரை தங்குகின்ற
அனந்தலில் என்றிருப்பே னத்தனே கயிலாயத்தனே.

—பட்டினத்தார்.

**யானிருந்தே நுதிக்க:—**

மேற்கூறிய நினைப்பு மறப்பு நீங்கிய நிருவிகற்ப நிலையில் இருந்தபடி இருந்து, சுட்டற்ற பூரணம் எய்தி, தன்மையில் இறைவனை நோக்கித் துதியாமல் துதிப்பது.

**குராப்புனை தண்டையந் தாளருளாய்:—**

முருகப்பெருமானுக்கு உவந்த மலர்களில் குராமலரும் ஒன்று. திருவிடைக்கழியில் முருகவேள் குராவடியில் எழுந்தருளியுள்ளனர். பழநியிலும் இடும்பனுக்கு அருள்புரிந்த மூர்த்தி குராவடிவேலர்.

"குராப்புனை தண்டையந் தாள் தொழல் வேண்டும்" என்பார் கந்தரலங்காரத்திலே பிறிதொரு பாடலில்.

**கரி கூப்பிட்டநாள்......கரி போற்ற நின்ற கடவுள்:—**

அகத்திய முனிவருடைய சாபத்தால் இந்திரத்துய்மனன் என்னும் சந்திரகுலமன்னன் கஜேந்திரனாகப் பிறந்தனன். நீராடி ஒரு தாமரையைத் தும்பிக்கையால் பறித்துப் பரமன் திருவடியில் சாத்துதற்குத் திரும்பும்போது, அம்மடுவில் வாழும் ஆற்றல் மிக்க ஒரு முதலை அதன் தாளைப் பற்றிக் கொண்டது. நெடிதுகாலம் அதனுடன் அமர் செய்து வலிமையிழந்து வருந்தியது. நீரிலே முதலைக்கு வலிமை

யதிகம். தளர்வுற்ற யானை இறைவனை நினைந்து, "எடுத்த மலர் உன் திருவடி மலரில் புனையாமல் வீணாகின்றதே? என் செய்வேன்? மரணத்திற்கு யான் வருந்தவில்லை. கொண்ட கொள்கை அவமாகின்றதே" என்று வருந்தி "ஆதிமூலம்" என்று ஒருமுறை அழைத்தது. திருப்பாற்கடலில், அரவணை மீது, சீதேவியும் பூதேவியுங் கால் வருட அறிதுயில் கொள்ளும் அண்ணல் அம்முறையைக் கேட்டனர்; உள்ளம் உருகி உடனே புறப்பட்டனர். சீதேவியும் பூதேவியும் தொடர்ந்துவர ஓடிவருகின்றார். உடை சரிகின்றது; பூமாலை சரிகின்றது. அவற்றைத் திருத்திக்கொள்ளவும் நேரமில்லை; "காட்டிலே எந்த முதலை எந்த யானையைக் கொன்றால் எனக்கென்ன" என்று வாளா இருந்தாரில்லை. •ஜய விஜயாள் முதலிய பரிசனங்களையும் ஏவினாரில்லை. கருணைமேலீட்டால் தாமே விரைந்து வருகின்றார். தாம் செல்லுவதற்குமுன் "முதலை யானையைக் கொன்று விடுமோ" என்று கருதி சக்ராயுதத்தை முன்னே செலுத்தினார். அத் திகிரி முதலையைக் கொன்றது. நம்பிக்கையுடன் தும்பிக்கையைத் தூக்கி நின்ற கரிமுன் கரிய பெருமாள் வந்து நின்று கரையிலாக் கருணைபுரிந்து ஆட்கொண்டனர்.

"மதசிகரி கதறி முது முதலைகவர் தரநெடிய
மடுநடுவில் வெருவியொரு விசையாதி மூலமென
வருகருணை வரதன்" —வகுப்பு

"வாரணமூலமென்ற போதினி லாழிகொண்டு
வாவியின் மாடிடங்கர் பாழ்படவே யெறிந்த
மாமுகில் போலிருண்ட மேனியனு முகுந்தன் மருகோனே"
—திருப்புகழ்.

தந்தா வளமுன் னழைப்பமனஞ்
சற்றுந் தரியா தெழுந்து குல்லைத்
தாமஞ் சரிய உடைசரியச்
சக்ராயுதத்தை முன்னடத்திச்
செந்தாமரைப்பெண் புவிமடந்தை
திகைப்போ டெழுந்து பின்தொடர

சேடன்முதுகு மவன்மனமுந்
திருப்பாற்கடலும் வெளிறி வெஃகப்
பைந்தார் கருடன் கடைக்க ணருள்
பார்த்து நேரே பறந்துவரப்
பாரக்கொடிய முதலேவதைப்
படவும்பாதந் தரைப்படவும்
வந்தான் மருகா முருகா செம்
மலையே வருக வருகவே
வரதச் சரதத் திருமலையின்
மழலைக்குழவி வருகவே.

—திருமலை முருகன் பிள்ளைத்தமிழ்

கடவுள் மெச்சும் பராக்ரம:—

திருமால் மடுவில் முதலையைக் கொன்று யானையைக் காப்பாற்றியருளினர்.

மருகராகிய முருகர் கடல் நடுவில் சூரை வென்று யானை வாகனனுதி அமரரை ஆட்கொண்டருளினர்.

"குன்றமெறிந்தாய் குரைகடலில் சூர் தடிந்தாய்"

ஆதலினல் கருமாலறுக்கும் மருகரைத் திருமால் எப்போதும் மெச்சி வியந்து பாராட்டுகின்றனர். திருமாலுடைய சக்கரப்படையை மார்பில் பூமாலையாகத் தரித்த யானைமுகமுடைய தாரகனை வேற்படையால் கொன்றவராதலின் அவருடைய பராக்கிரமம் மிக்கதென்று மெச்சுவாராயினர்.

நிருத சங்கார பயங்கரனே:—

அவுணர்களை யெல்லாம் அழித்து அவர்கட்குப் பயங்கரத்தை உண்டாக்கினவர்.

## கருத்துரை

திருமால் மெச்சும் மருகரே! நிருதகுல காலரே நினைப்பு மறப்பற்ற ஞானநிலையில் நிற்குமாறு அருள் புரிவீர்.

## 104

செங்கே ழுடுத்த சினவடி வேலுந் திருமுகமும்
பங்கே நிரைத்தநற் பன்னிரு தோளும் பதுமமலர்க்
கொங்கே தரளஞ் சொரியுஞ்செங் கோடைக் குமரனென
எங்கே நினைப்பினும் அங்கேயென்முன் வந் தெதிர்நிற்பனே.

*பதவுரை*

பதும மலர்=தாமரை மலரானது, கொங்கு=மணத்தினையும், தரளம்=முத்தினையும், சொரியும்=சொரிகின்ற, செங்கோடை குமரன் என=திருச்செங்கோட்டில் எழுந்தருளியுள்ள குமரக் கடவுளே என்று, எங்கே நினைப்பினும்=அடியேன் எவ்விடத்திலே நினைத்தாலும், அங்கே=அவ்விடத்திலே, செம் கேழ் அடுத்த= சிவந்தநிறம் பொருந்திய, சின வடிவேலும்=பகைவர்மீது சினம் பொருந்திய கூர்மை தங்கிய வேலாயுதமும், திருமுகமும்=அழகிய ஆறு திருமுகங்களும், பங்கே நிரைத்த நல் பன்னிரு தோளும்= பக்கங்களிலே வரிசையாக விளங்கி நலங்களைத் தருகின்ற பன்னி ரண்டு புயாசலங்களுங் கொண்டு, என்முன் வந்து எதிர் நிற்பன்= அடியேன் முன் வந்து எதிரிலே நின்று அருள் புரிவர்.

*விரிவுரை*

அருணகிரிநாதர் ஆறுமுகப் பெருமானுடைய திருவருள் முழுதும் பெற்றவர். கனவிலும் நனவிலும் முருகவேளுடைய அருட்காட்சியைக் கண்டனர்.

"கருணை யடியரொ டருணையி லொருவிசை
சுருதி புடைதர வருமிரு பரிபுர
கமல மலரடி கனவிலு நனவிலு மறவேனே"

என்று அருணையிலே தனக்குக் காட்சி தந்தருளியதைக் கூறு கின்றனர். வயலூரில் வழங்கிய காட்சியைக் கூறுமாறுங் காண்க.

"வயலி நகரியி லருள்பெற மயில் மிசை
யுதவு பரிமள மதுகர வெகுவித
வனச மலரடி கனவிலு நனவிலு மறவேனே"

சிவமலையிலே குருமூர்த்தமாக வந்து அருள் புரிந்ததை அடிகள் பாராட்டுகின்றனர்.

"தழைந்த சிவசுடர் தனையென மனதினில்
அழுந்த வுரைசெய வருமுக நகையொளி
தழைந்த நயனமு மிருமலர் சரணமு மறவேனே"

செங்கேழடுத்த சினவடிவேலும்:—

சிவந்த நிறமும், பகைவர் மீது சினமும், கூர்மையும் உடையது வேலாயுதம். "கையோ அயிலோ கழலோ முழுதும் செய்யோய்" என்பார் அநுபூதியில். "வாகை சுமக்கும் வேலை வணங்குவது எமக்கு வேலை" என்று வணங்கும் அடியார்க்கு வேலாயுதம் அருளுருவாகவும், வணங்காது அறநெறிக்கு மாறுபட்டார்க்கு அனலுருவாகவும் அநுக்ரகமும் நிக்ரகமும் புரியும். வேல் ஞானமேயாகும். ஞானம் செம்மைப் பண்புடையது. செம்மையென்பது ஆன்மாக்களுக்கு அருளும் பண்பு.

"பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னுஞ்
செம்பொருள் காண்ப தறிவு"

என்பார் திருவள்ளுவர்.

அறியாமையாகிய இருள் நீங்கும் பொருட்டு ஞானமாகிய ஒளி தோன்றும். வடி-கூர்மை. அறிவு கூர்மையானது.

திருமுகமும்:—

ஆன்மாக்கட்கு அஞ்சுமுகந் தோன்றில் ஆறுமுகந் தோன்றும். ஆறுதலையின்றி யலைவோர் ஆறுதலையடைய வேண்டுமாயின் ஆறுதலையுடைய அரனாரது அருள்மதலையாகிய ஆறுதலை யமலனையடைதல் வேண்டும்.

பங்கே நிரைத்த நற் பன்னிருதோளும்:—

இருபுறத்திலும் வரிசையாக அமைந்துள்ள பன்னிரு தோள்களும் ஆன்மாக்களுடைய எல்லாச் சுமைகளையும் தாங்குவனவாகும்.

**பதுமலர் கொங்கே தரளஞ் சொரியும்:—**

தாமரை முத்து பிறக்குமிடங்களில் ஒன்று.

**எங்கே நினைப்பினும் அங்கே என்முன்வந்து எதிர் நிற்பனே:—**

அருணகிரிநாதரிடம் அறுமுகப்பெருமான் வைத்த கருணைத்திறத்தால் அவர் எங்கே எங்கே எப்போது எப்போது நினைப்பாரோ அங்கே அங்கே அப்போது அப்போது வந்து தோன்றியருளுவர். அருணகிரிநாதரது அன்பின் திறமும் அவருடைய அன்புக்கு இரங்கும் ஐயனது அருட்டிறமும் மிகமிக வியத்தற்குரியன.

இத்தகைய இறைவராம் வேற்பெருமான் அருணையடிகளுக்கு எண்ணியபோதெல்லாம் எண்ணுமிடந்தோறும் வந்து காட்சி தருவர்.

சிவபெருமான் தான் எண்ணுமிடந்தோறும் தோன்றி காட்சியளித்த திறத்தைச் சுந்தரமூர்த்தி சுவாமிகள் கூறுமாறுங் காண்க.

எங்கேனு மிருந்துன் அடியேன் உனை நினைந்தால்
அங்கே வந்தென் னொடும் உடனாகி நின்றருளி
இங்கே என்வினையை அறுத்திட் டெனையாளுங்
கங்கா நாயகனே கழிப்பாலை மேயானே.

கருத்துரை

திருச்செங்கோட்டில் மேவிய திருமுருகப் பெருமான் அடியேன் எண்ணிய இடந்தோறும் தோன்றி யருள் புரிவார்.

**105**

ஆவிக்கு மோசம் வருமாறறிந்து னருட்பதங்கள்
சேவிக்க என்று நினைக்கின்றி லேன்வினை தீர்த்தருளாய்
வாவித் தடவயல் சூழுந் திருத்தணி மாமலைவாழ்
சேவற் கொடியுடை யானே யமர சிகாமணியே.

### பதவுரை

வாவி=குளங்களுடன் கூடிய, தடவயல் சூழும்=பரந்த வயல்கள் சூழ்ந்துள்ள, திருத்தணி மாமலைவாழ்=பெருமை தங்கிய திருத்தணி மலைமீது எழுந்தருளியுள்ள, சேவல் கொடி உடையானே=கோழிக் கொடியை உடையவரே! அமர சிகாமணியே=தேவர்களுக்கு முடி மணியாக விளங்குபவரே! ஆவிக்கு மோசம் வருமாறு அறிந்து=உயிருக்குக் கேடு செய்வதாகிய பிறவி நோய்க்குக் காரணமாக ஆகாமியவினை வந்து சேரும் வகையை அறிந்து, உன் அருள்பதங்கள்=தேவரீருடைய அருளாகிய திருவடிகளை, சேவிக்க என்றும் நினைக்கின்றிலேன்=வழிபாடு செய்வதை எக்காலமும் சிந்திக்கின்றேனில்லை, வினைதீர்த்து அருளாய்=அடியேனுடைய சஞ்சித வினையைத் தீர்த்து அருள்புரிவாய்.

### விரிவுரை

ஆவிக்கு மோசம்:—

உயிர்க்குப் பெருங்கேடாக இருப்பது பிறவிநோயேயாகும். பிறப்பும் இறப்பும் மாறிமாறி வந்து பல்லூழிகளாக உயிர் துன்புறுகின்றது. பிறவிநோய் வினை காரணமாக வருகின்றது. அந்த வினை மூன்று பிரிவுகளாகப் பிரிகின்றது. ஆகாமியம், சஞ்சிதம், பிராரப்தம். (1) ஆகாமியம், செய்யப்படும் வினை, அது நல்வினை தீவினை யென இருவகைப் படும். (2) சஞ்சிதம், பக்குவப்படாமல் இருப்பாக நிற்கும் வினை. (3) பிராரப்தம், இப்போது உடம்பு முகந்துகொண்டு துய்க்கும் வினை. வினை நீங்கினுல் மலம் நீங்கும். மலம் நீங்கப் பிறவி நீங்கும்.

"இருவினைமு மலமுமற இறவியொடு பிறவியற" —திருப்புகழ்.

எனவே உயிர்க்குப்பெருங்கேடான பிறவிநோய் வினை வழி வருகின்றது. அதன் வித்து ஆகாமியம். ஆகாமியத்தை முதலில் ஒழிக்க வேண்டும். ஆகாமிய வினைக்குக் காரணம் விருப்பு வெறுப்பு. விருப்பு வெறுப்பு பிராரத்த வினைகளைத் துய்க்குங்கால் உண்டாகும் உள்ளத்தின் மாறுபாடு ஆதலின் பிறவி நோயை நீக்கும் வழியை மிக மிக நுணுகிக் கூறுகின்ற அருமை மிகவும் சிந்திக்கற்பாலது.

**வருமாறு அறிந்து:—**

வரும் ஆறு-வருகின்ற வழியை அறியவேண்டும் என்கின்ருர். பிறவிநோய்க்குக் காரணம் வினையென்று முன்னே கூறப்பட்டது. அவ்வினையின் விளைவுதான் ஆகாமியம். அந்த ஆகாமியம் விருப்பு வெறுப்புக்களால் வருகின்றது. ஆகவே விருப்பு வெறுப்பே வினை வருவதற்கு வழியாகும். அதனை நுணுகி அறிந்து அறவே களையவேண்டும். எப்பொருளினும் விருப்பும் வெறுப்பும் வைக்கக்கூடாது. மெய்ப்பொருளை அடையும் வழி இதுவே. இறைவன் விருப்பு வெறுப்பு இல்லாதவர். "வேண்டுதல் வேண்டாமையிலான்". அவனுடைய அடியைச் சேர்தலாவது, நாமும் விருப்பு அற்றவர்களாக ஆவதுவே. அப்போது "யாண்டும் இடும்பையில" என்னும் பதம் கிடைக்கின்றது. துன்ப நீக்கமும் இன்ப ஆக்கமும் உண்டாகின்றன.

விருப்பு வெறுப்பு நிகழாமல் இருப்பது என்ருல் அது சாமானியமன்று. நெருப்பும் சந்தனமும் ஒன்று போல் இருப்பது என்ருல் எளிதில் வாய்ப்பதன்று. அதற்கு ஒரு எளிய வழியை அடிகள் உபதேசிக்கின்ருர்.

**அருட்பதங்கள் சேவிக்க என்று நினைக்கின்றிலேன்:—**

இறைவனுடைய திருவடி திருவருள் மயமானது. அத்திருவருளாகிய திருவடியை என்றும் மறவாது சிந்தித்து வழிபடுவதே விருப்பு வெறுப் பைத் தவிர்க்கும் வழியாகும்.

இறைவன் திருவடியைச் சிந்திப்பது சுலபந்தான். ஆனுல் எல்லோருஞ் சிந்திப்பதில்லை. சிலருக்குத்தான் அது தித்திக்கின்றது. ஏன்? பிறவி நோயின் தன்மையே. நோய்வாய்ப்பட்டவனுக்கு கற்கண்டு கசக்கின்றது. ஏழு வயது பெண் குழந்தைக்கு கணவன் தித்திப்பானு? கல்யாணம் செய்து வைத்தாலும் கணவனோடு பழகி இன்புறுவதை விரும்புவாளா? அவளுக்கு அப்போது மணல் வீடு கட்டி பொம்மை வைத்து ஆடுவதிலேயேதான் விருப்பம். பக்குவம் எய்திய ஒருத்தி கணவனேடு தனித்துப் பேசி ஆடி மகிழ்வதையே விரும்புகின்ருள். அவளுக்குப் பிறந்த வீடு,

ஊர், சுற்றம், நண்பர், விளையாட்டுப் பொருள்கள் எல்லாம் கணவன் இன்பத்திற்கு நிகராகாது. எல்லாவற்றையும் உதறித் தள்ளிவிடுகின்றுள். அதுபோல் பக்குவம் வந்த ஆன்மாக்கள் இறைவனேடு பழகுவதையே இன்பமாக எண்ணி சுற்றம், தொடர்பு, ஊர், பேர், செல்வம் எல்லா வற்றையும் உதறித் தள்ளிவிடுகின்ருர்கள். விளையாட்டுச் சிறுமி, பக்குவம் வந்த பெண் தன்னுடன் வந்து கலந்து கொள்ளாதது குறித்துப் பரிகசிப்பாள். அதுபோல் உலகத் தோடு உறையும் ஆன்மாக்கள் இறையோடு உறையும் ஆன்ரேரைக் கண்டு பரிகசிப்பர்.

அவ்வாறு இறையோடு கலந்து திருவருள் மயமாக உள்ளவர்க்கு விருப்பு வெறுப்பு, இன்ப துன்பம், இகழ் புகழ், மதி அவமதி, வெய்யில் மழை, வாழ்வு தாழ்வு, பொன் மண் எல்லாம் ஒன்றுபோலக் காட்சி தரும். "யானுகிய என்னை விழுங்கி வெறுந் தானுய் நிலை நின்றது", "எல்லாமற என்னை யிழந்த நலம்", "செறிவற்று உலகோடு உரை சிந்தையும் அற்று அறிவற்று அறியாமையும் அற்றது" என்பனவாதி அநுபவ அருள் திருவாக்குகளெல்லாம் அந்த அருட் காட்சியில் எழுந்தவையாம்.

"என்றும் நினைக்கின்றிலேன்" என்ற வாக்கு எத்துணை உருக்கமாகவும் அழகாகவும் இருக்கின்றதென்பதை உற்று நோக்குங்கள்.

"இமைப்பொழுதும் என்னெஞ்சில் நீங்காதான்"

"பிரியாது வணங்குவன் எப்பொழுதும்"

"தினைத்தனைப் பொழுதும் மறந்து உய்வனே"

"மறக்கலும் ஆம்!" என்ற தமிழ் மறைகள் யாவும் அழியாத-அணையாத விளக்குகளாக எரிந்துகொண்டிருக் கின்றன.

**வினை தீர்த்தருளாய்:—**

பல பல பிறவிகளில் செய்யப்பட்டுப் பக்குவத்திற்கு வராமல் குவிந்து களஞ்சியம்போல் கிடக்கும் வினை சஞ்சித

வினை. அதனை இறைவனே தீர்க்க வேண்டும். ஆதலின் "வினை தீர்த்தருளாய்" என்று அருளிச் செய்தார். ஆகாமிய வினையைத் தியானுதி தவவொழுக்கத்தால் நாம் நீக்க வேண்டும். பிராரத்தம் அனுபவித்தே தீரவேண்டும். சஞ்சித வினை இறைவனுடைய திருவருளால் பொடிபடும்.

ஆகாமியம் சஞ்சிதமாகி, சஞ்சிதம் பிராரத்தமாகி வருகின்றது.

நன்செய் புன்செய் என்ற இருவிதமான பயிர் விளைவது போலே நல்வினை தீவினையென இருவகையாக விளைவது ஆகாமியம்.

விளைந்த நெல்லைப் பழைமையாக்கும் பொருட்டுக் கொண்டுபோய்க் களஞ்சியத்தில் சேமித்து வைத்திருப்பது போன்றது சஞ்சிதம்.

களஞ்சியத்திலிருந்து சிறிது கொண்டுவந்து சமையலுக்கு வைத்துக்கொண்டது போன்றது பிராரத்தம்.

ஒரு விவசாயி 100 கலம் நெல்லை சாகுபடி செய்தான்; அதில் எழுபது கலம் நெல்லை மேலைக்கு என்று களஞ்சியத்தில் போட்டுவைத்தான். பத்துக் கல நெல்லை வயலிலே கொண்டு போய் விதைத்தான். இருபது கல நெல்லை சாப்பாட்டிற் கென்று மனைவியிடம் ஒப்புவித்தான். வயலிலே விதைத்தது மழை பொழியாமையாலும் தண்ணீர் பாய்ச்சாமையாலும் பயிர் சாவியாகிவிட்டது. மனைவியிடம் தந்தது சாப்பிட்டு முடிந்தது. வீடு தீப்பிடிக்கக் களஞ்சியத்தில் உள்ள நெல் எரிந்து கரிந்துவிட்டது. எனவே எல்லாம் காலியாய்விட்டது. அதுபோல் ஆகாமியம் விளையாமலும், பிராரத்தம் அனுபவித்தும், சஞ்சிதம் திருவருளாலும் காலியாகிவிட்டால் பிறவி நோய் தீர்ந்துவிடுகின்றது.

வானோர் கொடிய வினை தீர்த்தருளும் வேலப்பன் மண்ணுளோரது வினையையுந் தீர்த்தருளுவான்.

**வாவித் தடவயல் சூழுந் திருத்தணி மாமலை :—**

புவிக்கு உயிராகப் பொலிவது திருத்தணி. தரையிடங் களில் சிறந்தது தணிகைமால்வரையே. நந்தியாற்றின்

புடையே, பலப்பல தாமரைக் குளங்களும், நல்ல மரகதக் கம்பளம் விரித்தாற்போன்ற செழும் பயிர்களுடன் கூடிய வயல்களும் சூழ விளங்கும் அழகிய மலே தணிகைமலே.

" அழகு திருத்தணி மலேயினடித்தருள் பெருமாளே "

என்பார் திருப்புகழில்.

அம் மலேமேவும் செம்மலே வழிபடும் பொருட்டுச் செல்லும் அடியார்கள் படியேறுந்தோறும் செடியேறும் வினே தணிவதனுல் அம் மலே தணிமலே, தணிகைமலே, திருத்தணி என்ற திரு நாமங்களேப் பூண்டது. மிகமிக விழுமிய திருத்தலம்.

" தணிகை மலேயைச் சாரேனே சாமியழகைப் பாரேனே "

என்பார் இராமலிங்க அடிகள்.

தணிகை வினேயைத் தணிக்கவல்ல தலம் என்பதை அருட்பிரகாச வள்ளலாருங் கூறுமாறு காண்க.

" வினேயைத் தள்ளவந் தருள்செய் திடுந்தயா நிதியைத்
தணிகையில் கண்டிறைஞ் சுவனே "

வினே தீர்க்கவல்ல திருத்தலம் தணிகையாதலின் வினே தீர்க்குமாறு தணிகாசல முருகனே வேண்டுகின்றனர். இடந் தெரிந்து வாணிபஞ் செய்யவேண்டாமா ?

சொல்லார் மலர்புனே யன்பகத் தோர்க்கருள் சொல்லு மெல்லாம்
வல்லா யென்றேத்த வறிந்தேன் இனியென்றன் வல்வினேகள்
எல்லாம் விடைகொண் டிரியும்என் மேல்இயமன் சினமுஞ்
செல்லாது கான்ஐய னேதணி காசலச் சீரரசே.

## கருத்துரை

திருத்தணிகேசா! தேவசிகாமணியே! அடியேனுடைய சஞ்சிதவினேயை நீக்கி ஆகாமிய வினேயேருதபடி காத்து அருள்புரிவீர்.

## 106

கொள்ளித் தலையி லெறும்பது போலக் குலையுமென்றன்
உள்ளத் துயரை யொழித்தரு ளாயொரு கோடிமுத்தந்
தெள்ளிக் கொழிக்குங் கடற்செந்தின் மேவிய சேவகனே
வள்ளிக்கு வாய்த்தவ னேமயி லேறிய மாணிக்கமே.

### பதவுரை

ஒரு கோடி முத்தம் தெள்ளி கொழிக்கும்=ஒருகோடி முத்துக்களைத் தெள்ளிக் கொழிக்கும்படியான, கடல் செந்தில் மேவிய = கடற்கரையில் விளங்கும் திருச்செந்தூரில் எழுந்தருளிய, சேவகனே = வீரரே! வள்ளிக்கு வாய்த்தவனே = வள்ளிபிராட்டியாருக்கு கணவராக வாய்த்த தலைவரே! மயில் ஏறிய மாணிக்கமே= மயில்வாகனத்தின்மீது ஏறியருளும் மாணிக்கம் போன்றவரே! கொள்ளி தலையில் எறும்பதுபோல = இருதலைக் கொள்ளியின் இடையே அகப்பட்ட எறும்பைப்போல, குலையும்=துன்புறுகின்ற, என்றன் உள்ளத் துயரை ஒழித்து அருளாய் = அடியேனுடைய மனத்துயரை நீக்கியருளுவீர்.

### விரிவுரை

**கொள்ளித்தலையி லெறும்பதுபோலக் குலையும் :—**

ஒரு கொம்பானது இருபுறமுந் தீப்பிடித்து எரிகின்றது; அதன் இடையில் ஒரு எறும்பு அகப்பட்டுக் கொண்டது. எந்தப் புறமும் போக முடியவில்லை. அந்த எறும்பு என் செய்யும்? இருபுறத்தும் தீ இப்படியும் அப்படியுமாகத் தவிக்கின்றது. சில சாமர்த்தியமுள்ள எறும்புகள் குதித்துப் பிழைத்துக்கொள்ளும். ஆனால் எரிவது மூங்கிற்குழாய்; அந்தக் குழாய்க்குள் இருந்தது எறும்பு. அந்த மூங்கிற்குழாய் இருபுறமும் தீப்பிடித்து எரிகின்றது. அதனுள் இருக்கின்ற எறும்பு திகைத்து இருபாலும் சென்று தப்பித்துக்கொள்ள மாட்டாமல் துன்புறுகின்றது. அதுபோல், மனை மக்கள் சுற்றம் எனும் மாயா வலையைக் கடக்க அறியாதே ஆன்மா துன்புறுகின்றது.

இதனை மாணிக்கவாசக சுவாமிகளும் இனிது கூறுகின்றனர்.

இருதலைக் கொள்ளியி னுள்ளெறும் பொத்து நினைப்பிரிந்த
விரிதலை யேனை விடுதிகண் டாய்வியன் மூவுலகுக்
கொருதலை வாமன்னு முத்தர கோசமங் கைக்கரசே
பொருதலை மூவிலை வேல்வல னேந்திப் பொலிபவனே.

முருகன் திருவடி சார்ந்தார்க்கு எவ்வகையாலும் துன்பம் நேராது. அவன் திருவடி மனக்கவலை தீர்க்கும் மருந்து.

என்றன் உள்ளத்துயரை ஒழித்தருளாய் :—

"நினைவார் கின்னங் களையுங் க்ருபைசூழ் சுடர்" முருகவேள் ஆதலின், அக் கருணைநிதியைத் துயர் தீர்க்குமாறு அடிகள் வேண்டுகின்றனர். அயரா அன்புடைத் தொண்டர்களது துயரை எம்பெருமான் விரைவில் நீக்குவன்.

நோவவுரை யானெம்மை நோவக்கண் பார்த்திடான்
சாவ நினையான் தளரவிடான்—பாவனைய
சொல்வாய்க் குறத்தி துணைபிரியாப் போரூர
நல்வாய்ப் பரைய நெஞ்சே நாடு.

சிகரத்தினின்றும் கீழ் விழ்ந்த அருணகிரிநாதருடைய துன்பத்தையும், மலை முழையில் அகப்பட்டுக்கொண்ட நக்கீரரது துன்பத்தையும், அரக்கரால் அலைப்புண்ட அமரரது துன்பத்தையும் நீக்கி அருள்புரிந்த அருட்பெருங் குன்றம் ஆறுமுகப் பெருமானன்றோ? அப் பரமபதியை நோக்கி அன்பு செய்யும் ஆன்மாக்கட்கு ஆதிதைவிகம், ஆதிபௌதிகம், ஆதியான்மிகம் என்ற மூவகைத் துயரங்களும் எய்தா.

ஒருகோடி முத்தந் தெள்ளிக் கொழிக்குங் கடற்செந்தில்:—

முத்து விளைவது பாண்டிநாட்டிலே; முத்தும் முத்தமிழுந் தந்து உபகரிப்பது பாண்டிநாடு. பாண்டியநாட்டின் சிகரமாக விளங்குவது திருச்செந்தூர்; நீலக் கடற்கரையில் கோலத்திருவுடன் இயற்கையழகு மிகப் பொலிகின்றது.

கடற்கரையில் வெண்மையான மணற் பரப்பு. கடலிலிருந்து ஒழியாது வீசும் அலைகளில் முத்துக்கள் கொழித்து வந்து மணல்களை மறைத்துவிடுகின்றன.

''மதலைதவ ழுததியிடை வருதரள மணிபுளின
மறையவுயர் கரையிலுறை பெருமாளே''

உள்ளத்துயரை யொழிக்கும் முருகன், உள்ளத்துயரை ஒரு நொடியில் நீக்கும் கடற்கரையில் எழுந்தருளியிருக்கின்றான். கடற்கரையில் சென்று இயற்கையழகில் ஈடுபடுவோர் உலகை மறந்து ஒருமைப்பாட்டை யடைந்து இன்புறுவர். கடற்காற்றும் பல நலன்களைச் செய்யும்.

சேவகனே:—

சேவகன்-வீரன். சூராதியவுணரை அடக்கிய வீர மூர்த்தி முருகவேள் ஆதலின் சேவகன் என்றார். திருச்செந்தூரிலே சென்று தங்கி வீரவாகு தேவரைத் தூது அனுப்பி வீரச் செயலை நிகழ்த்திய இடம் செந்திலம்பதியாதலின் அந்தத் தலத்தின் மூர்த்தியைச் சேவகன் என்றார்.

வள்ளிக்கு வாய்த்தவனே:—

வள்ளி-பக்குவான்மா. பக்குவப்பட்ட ஆன்மாக்களுக்கு ஆண்டவன் அருள்புரிகின்றான். வாய்த்தவனாக ஆகின்றான். பக்குவம் என்பது இருவினையொப்பு, மலபரிபாகம், சத்திநிபாதம் எய்துவது.

உணக்கிலாததோர் வித்துமேல் விளையாம
லென்வினை யொத்தபின்
கணக்கிலாத் திருக்கோலம் நீவந்து
காட்டினாய் கழுக்குன்றிலே. —திருவாசகம்

மயிலேறிய மாணிக்கம்:—

மயில்—திரோதானசத்தி. ஆன்மாக்களைப் பொருந்திய ஆணவமலம் பரிபாகமாகும்பொருட்டு அவரவர் கன்மங்களை நுகர்விக்கும் தன்மையது திரோதானசத்தி. மயிற் பீலியின் கொத்து சுத்தமாயா தத்துவங்கள்; பீலியின் ஐந்து வர்ணங்களும் ஐந்து சுத்த தத்துவங்கள்.

மாணிக்கம் என்பது உயர்ந்த இரத்தினம். ஒப்புயர்வற்ற இறைவனை மாணிக்கம் என்பது என்னையோ எனின்; நாம் அறிந்த பொருள்களுக்குள் உயர்ந்தது மாணிக்கம். அதனால் அதனை இறைவன்பால் ஏற்றிக் கூறுகின்றனர்.

''பொன்னே மணியே பொருளே யருளே
மன்னேமயிலேறிய வானவனே'' —அநுபூதி.

''மற்றவரறியா மாணிக்கமலையை'' —திருவிசைப்பா.

## கருத்துரை

செந்தில் மேவிய வள்ளிமணாள! மயிலரசே! கொள்ளித்தலையில் எறும்பைப்போல் துன்புறும் சிறியேனுடைய இடரைக் களைந்து அருள்புரிவீர்.

## 107

சூலம் பிடித்தெம பாசஞ் சுழற்றித் தொடர்ந்துவருங்
காலன் றனக்கொரு காலுமஞ் சேன்கடல் மீதெழுந்த
ஆலங் குடித்த பெருமான் குமார னறுமுகவன்
வேலுந் திருக்கையுமுண்டே நமக்கொரு மெய்த்துணையே.

## பதவுரை

கடல்மீது எழுந்த=சமுத்திரத்தில் உண்டாகிய, ஆலம் குடித்த பெருமான் குமாரன்=ஆலாலவிடத்தையுண்ட சிவபெருமானுடைய திருக்குமாரராகிய, அறுமுகவன்=ஆறுமுகப்பெருமானுடைய, வேலும்=வேலாயுதமும், திருக்கையும்=திருக்கரமும், ஒரு மெய்த்துணை நமக்கு உண்டு=ஒப்பற்ற உண்மைத்துணையாக நமக்கு உள்ளன; ஆதலால், சூலம் பிடித்து=சூலாயுதத்தைக் கையிற் பிடித்துக்கொண்டும், எமபாசம் சுழற்றி=இயமனுடைய பாசத்தைச் சுழற்றிக்கொண்டும், தொடர்ந்துவரும்=உயிர்களைத் தொடர்ந்து வருகின்ற, காலன் தனக்கு=காலன் என்பானுக்கு, ஒருகாலும் அஞ்சேன்=அடியேன் ஒருபோதும் அஞ்சமாட்டேன்.

## விரிவுரை

**சூலம் பிடித்து:—**

இயமனுடைய கையில் இருப்பது சூலம்; அது அவனுக்குச் சிவபெருமானால் தரப்பெற்றது. மிகவும் சிறந்த ஆயுதம்.

**எம பாசம்:—**பாசம் என்பது ஆன்மாக்களைக் கட்டிப்பிடிக்கும் ஒரு ஆயுதம். அது இயமனுடைய கையில் இருப்பது. யமன்–அடக்குபவன்.

**காலன்:—**

காலன் என்பவன் இயமனுடைய மந்திரி; அவன் ஆயுள் முடிந்த காலமறிந்து உயிர்களைப் பற்ற வருவான். அதனால் காலன் எனப்பட்டான்.

**ஒருகாலு மஞ்சேன்:—**

முருகப்பெருமானுடைய அடியார்கள் இயமனுக்கும் அவருடைய அமைச்சனாகிய காலனுக்கும் ஒரு சிறிதும் அஞ்சமாட்டார்கள். காலன் அவர்கள் பால் அணுகமாட்டான்.

"வாராதகலந்தகா வந்தபோதுயிர் வாங்குவனே"

"என்பாலாயுதம் வருமோ எமனோடு பகைக்கினுமே"

"காலன் வெம்பி வந்திப் பொழுதென்னை யென் செய்யலாம்"

"எமராசன் விட்ட கடையேடு வந்தினி யென்செயுமே".

என்று அடிகள் பற்பல இடங்களிற் கூறுகின்றனர்.

மறலியையுதைத்த மணிகண்டருடைய குமாரராகிய முருகவேளைத் தொழுது அடிமைப்பட்டவர்கட்கு எம பயம் ஏது?

**கடல்மீதெழுந்த ஆலங்குடித்த பெருமான் குமாரன்:—**

தேவர்கள் தாம் என்றும் இறவாமலிருக்கும்பொருட்டு திருப்பாற்கடலைக் கடைந்தனர். விநாயக வணக்கம் புரியாமையால் ஆலாலவிடந் தோன்றியது. அதனைக் கண்ட அமரர்கள் அனைவரும் அஞ்சி ஓடி சிவபிரானிடம் அடைக்கலம் புகுந்தார்கள். பரமேச்சுரர் அவ் விடத்தைத் தமது கண்டத்தில் தரித்து எல்லோருடைய கண்டங்களையுந் தவிர்த்தனர். அவருடைய திருக்குமாரராகிய முருகவேள் நமக்கு வரும் இயமனுடைய கண்டத்தைத் தவிர்ப்பார்.

**அறுமுகவன்:—**

ஆறு திருமுகங்களும் ஆறு குணங்கள் என்ப. "ஏவர் தம்பாலுமின்றி எல்லை தீர் அமலற்குள்ள மூவிரு குணனுஞ்

சேய்க்கு முகங்களாய் வந்ததென்ன'' என்பார் கச்சியப்ப சிவாச்சாரிய சுவாமிகள். ஆறு சமயங்கட்கும் தலைவர் என்பதும், ஆறு ஆதாரங்களில் அமைந்தவர் என்பதும், ஆறு அத்துவாக்களுக்கு அதிபர் என்பதும், ஆறு சத்திகளும் ஆறுமுகங்கள் என்பதும் விளங்குகின்றது.

**வேலுந் திருக்கையுமுண்டே நமக்கொரு மெய்த்துணையே:—**

உண்மையான துணையாக விளங்குவன, வேலாயுதமும், அவ்வேலை ஏவுகின்ற திருக்கரமும் என்ப. ஏனையவை துணைபோல் காணப்படுவனவே. காலபாசம் வரும்போது யாரே துணை செய்யவல்லார்?

''வெம்புமுயிருக் கோருறவாய் வேளைநமனும் வருவானேல்
தம்பி தமையன் துணையாமோ தநயர்மனைவி வருவாரோ''

என்பார் அருட்பிரகாச வள்ளலார்.

ஐவருங் கைவிட்டு மெய்விட்டு, ஆன்மா புறப்பட்டுச் செல்லும்போது ஒருவரும் உடன் தொடர்ந்து வரமாட்டார். அவ்வழிக்கே தனிவழி என்று பேர். அத் தனி வழியில் வந்து இடத்தும் வலத்தும் முன்னும் பின்னும் இரவும் பகலும் துணை செய்ய வல்லது எம்பிரானுடைய வேலாயுதமாகும்.

''தனித்து வழி நடக்குமென திடத்துமொரு வலத்துமிரு
புறத்து மரு கடுத்திரவு பகற்றுணையதாகும்
... ... ... குகன் வேலே'' —வேல் வகுப்பு.

## கருத்துரை

சிவகுமாரராகிய செவ்வேட் பரமனது வேலாயுதமும் அவரது திருக்கரமும் அடியேனுக்கு உண்மையான துணையாக இருப்பதால் சூலமும் பாசமும் ஏந்திவரும் காலனுக்கு ஒரு சிறிதும் அஞ்சமாட்டேன்.

கந்தரலங்காரம் மூலமும் உரையும் முற்றுப்பெற்றன.



# பாட்டு முதற் குறிப்பகராதி

370







